# திரைக்கதை

விரிவாக்கப்பதிப்பு

(Expanded Edition)

தர்மா



# திரைக்கதை

## விரிவாக்கப்பதிப்பு

## (Expanded Edition)

தர்மா

**RAMYAH PATHIPPAGAM**
#33, RANGAN STREET
T. Nagar, Chennai - 600 017.
Ph. : 24361141 / 9940682929

திரைக்கதை (விரிவாக்கப்பதிப்பு)
THIRAIKADHAI (Expanded Edition)

First Edition : 2016

By
DHARMA
# 44, 5th Lane, III Block, Dhasappa Layout,
Ramamurthy Nagar, Bangalore - 560 016.
Ph. 25655290 / 9845510070

| | | |
|---|---|---|
| பிரதிகள் | : | 1000 |
| தாளின் அளவு | : | 1/8th Size |
| எழுத்தின் அளவு | : | 11 Points |
| தாள் | : | White |
| பக்கங்கள் | : | VIII + 312 |



விலை : ரு. **200/-**

Published :
**RAMYAH PATHIPPAGAM**
33, Rangan Street
T. Nagar,
Chennai - 600 017.
Ph. : 24361141 / 9940682929



Cover Page : Muktha Bai

***Printed at :***
**S.S. PRINT SHOP,**
Royapettah,
Chennai - 600 014

# அர்ப்பணம்

தமிழ் திரைப்பட வளர்ச்சிக்கு
பாடுபட்ட அனைவருக்கும்

- தர்மா



# பொருளடக்கம்


ரசிகப்பெருமக்கள் - Audience ............ 1

திரைக்கதை - Screenplay ............ 5

கதாபாத்திரம் - Character ............ 14

வசனம் - Dialogue ............ 19

நாடகப்படுத்தல் - Dramatization ............ 23

காட்சியை பண்படுத்தல் - Treatment ............ 25

காட்சி - Scene ............ 27

திரைக்கதைக்கு பொதுவான சில விஷயங்கள் ............ 31

கதையும் அதற்கான முக்கியாம்சங்களும் ............ 46

பாக்ஸ் மெதட் - Box Method ............ 51

சில தொழில்நுட்ப (Technical) பதங்கள் ............ 56

'நம்மவள்' கதை உருவான விதம் ............ 61

'நம்மவள்' கதைச் சுருக்கம் Synopsis ............ 65

'நம்மவள்' திரைக்கதை ............ 75

'நம்மவள்' திரைக்கதை விளக்கம் ............ 232
(காட்சிகளை ஆரம்பித்து நடத்தி முடித்தல்)

'ஷூடிங் ஸ்க்ரிப்ட்'க்கான ஓர் உதாரணம் ............ 302

மனம் திறந்து (Personal Note) ............ 311

# முன்னுரை

'வேதாந்தா', இதுதான் என் முதல் படம், கன்னடத்தில் 1977-ல் தயாரித்து வெளியிட்டேன். திரை உலகிற்கு திரைக்கதை எழுதுபவனாக அறிமுகமாக இருந்த நான் தயாரிப்பாளனாகத்தான் அறிமுகமானேன்.

'வேதாந்தா' தோல்வியை தழுவியது. அதன் பின்னர் படங்களுக்கு ஃபைனேன்ஸ் செய்தும் பங்குதாரராகவும் ஐந்து படங்களில் அனுபவம் அடைந்தேன். அந்த அநுபவத்தின் பயனை உங்களுடன் பகிர்ந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

கதையில் கதாபாத்திரங்களின் கடந்த காலம் நிகழ்காலம் தெரிந்திருந்தால்தான் அவர்களின் நடவடிக்கைகளை குழப்ப மில்லாமல் கவனிக்கமுடியும் என்ற விதிப்படி என் பின்னணியும், அனுபவங்களும் உங்களுக்கு தெரிந்திருந்தால்தான் நான் இப்புத்தகத்தில் சொல்லவரும் விஷயங்களை, இப்படிப்பட்டவனால் இது சொல்லப்புடுகிறது என்ற கோணத்தில் அதை கவனிப்பீர்கள்.

நான் சிறுவயதிலேயே அதிக சினிமா பார்த்து வந்ததாலும், சரியாக படிக்காததாலும், எந்த வித 'என்டர்டெய்ன்மெண்ட்'ம் இல்லாத திருவிடைமருதூருக்கு அனுப்பப்பட்டேன். அங்கு T.A. ஹை ஸ்கூலில் படித்து முடித்து பின் கும்பகோணம் அரசு கல்லூரியில் PUC படித்தேன். பிறகு வியாபாரத்தை கவனித்தவாரே படிக்க பெங்களூருக்கே திரும்ப அழைக்கப்பட்டேன்.

பெங்களூரில் மறுபடியும் அதே நண்பர்கள், அதே ஆங்கிலப் படங்கள், அதே 'ப்ரிகேட் ரோட் ரோமிங்' ஆரம்பமானது (கடைசிவரை என்னால் B.A. Degree ஐ கூட முழுமையாக முடிக்க முடியவில்லை).

இந்த காலகட்டத்தில் வயதும் அறிவும் கொஞ்சம் வளர்ந்திருந்தது. அதனால் படங்களை பார்ப்பதோடு நிறுத்திக்கொள்ளாமல் அதைப் பற்றி நண்பர்களுடன் விவாதிக்கவும் ஆரம்பித்தேன். அதன் விளைவு நாமே ஒரு நல்ல 'ஆர்ட்ஃபிலிம்' எடுத்து ஏன் ஒரு 'அவார்ட்' வாங்கக்கூடாது என்பதில் முடிந்தது. அப்பொழுது கன்னட ஆர்ட்ஃபிலிம்கள் நேஷனல் அவார்ட் பெற்றுக்கொண்டிருந்த காலம்.

அந்த கால கட்டத்தில் 'ஹன்டிங்' 'அட்வென்ட்சர்' என்று நண்பர்களுடன் ட்ரிப் அடித்துக்கொண்டிருந்ததால் நாமும்

'மெக்கனாஸ் கோல்ட்' போல ஒரு 'ட்ரெஷர் ஹன்டிங்' கதையை ஏன் எழுதக்கூடாது என்று முதன்முதலாக எழுத ஆரம்பித்தேன். (இந்த எழுதும் நம்பிக்கையும், தைரியமும் எனக்கு வர முக்கிய காரணம், அந்த தஞ்சை மண்ணில் ஆறு வருடங்கள் வாழ்ந்ததால்தான் என்று நம்புகிறேன். ஏன் எனில் எங்கள் குடும்பத்து பெரியவர்களுக்கு வியாபாரம், கோயில், ஆஷ்ரமம் இவைகளில்தான் அதிகமான ஈடுபாடு இருந்தது. எழுத்து பக்கம் யாரும் போயிருக்கவில்லை. எல்லாம் அந்த மஹாலிங்கேஷ்வரர் விட்ட வழிதான்)

மெட்ராஸ் வாசிகளைப்போல் உஷ்ண பூமியில் இல்லாததாலும், பெங்களூர் குளிர் பிரதேசமானதாலும் என் மூளை கொஞ்சம் மந்தமாக செயல்பட்டது. பக்கம் பக்கமாக பேப்பரில் எழுதிக் கொண்டிருக்கும் போது சென்ற காட்சிகளை 'ரெஃபெர்' செய்ய நினைக்க, அதை புரட்டிப்பார்க்க கஷ்டமாக இருக்கும். சோம்பேறித்தனம் என்று சொல்லமுடியாது. ஆனால் தொந்தரவு கொடுக்கும்படியாக இருக்கும் என்பது உண்மை. அதனால் எல்லா காட்சிகளும் என் கண்முன் இருக்கவேண்டும் என்ற காரணத்தால் ஒரு திரைப்படத்திற்கு 70 காட்சிகள் போதும் என்ற கணக்கில் ஒரே விடைத்தாளில் 72 கட்டங்கள் போட்டு ஒரு 'பாக்ஸ் சார்ட்' (Box Chart) தயாரித்துக் கொண்டேன்.

திரைக்கதைக்கான 'ஃபர்ஸ்ட் ட்ரேஃப்ட்'ஐ, காட்சிக்கு தேவையான முக்கிய விஷயங்களோடு இந்த முறையில் எழுத ஆரம்பித்தேன்.

எனக்கு இந்த 'பாக்ஸ்மெதட்' முறை மிகவும் வசதியாக இருந்தது. ஆங்கிலப்படங்களுக்கு திரைக்கதை எழுதி பெயர் பெற்ற ஸிட் ஃபீல்ட் (Syd Field) அவர்களால் எழுதப்பட்ட ஸ்க்ரீன்ப்லே தி ஃபௌன்டேஷன் ஆஃப் ஸ்க்ரீன் ரைட்டிங்' (Screenplay the foundation of screen writing') என்ற புத்தகம் 1979-ல் வெளியிடப்பட்டு பின்பு அதன் இரண்டாம் விரிவாக்கப்பதிப்பு (Expanded Edition) 1982-ல் வெளிவந்திருக்க அதை 1989-ல் நான் படித்தேன். அதில் அவர் நண்பரின் கார்ட் (Card) முறையைப் பற்றி எழுதியிருக்கிறார். அது மிகவும் நல்ல 'மெதட்' ஆக இருந்தாலும் எனக்கு நான் 1976-ல் எழுதிய என் 'மெதட் தான் வசதியாக இருந்தது. காலங்கள் ஓடின. பலவிதமான அனுபவங்கள். இப்படியிருக்க என் தயாரிப்பு பார்ட்னர் காலமாகிவிட்டதாலும் கன்னடத்தில், **திரைக்கதை** புத்தக வடிவில் வந்திராததாலும் நாங்கள் தயாரிக்கவிருந்த படத்தின் திரைக்கதையை அப்படியே புத்தமாக 2002 நவம்பர்-ல் வெளியிட்டேன். இப்புத்தகத்தின் முன்னுரையில் குறிப்பிட்டிருந்தபடி அதற்கான திரைக்கதை

விளக்கத்தை 2004 ஜூலையில் புத்தகமாக வெளியிட்டேன். பத்திரிகைகள் பாராட்டின.

நான் பிறந்து, வாழ்வதும் கர்நாடகம் என்பதால் என் புத்தகங்களை முதலில் கன்னடத்தில் வெளியிடவேண்டும் என்று விரும்பி அப்படியே செய்திருந்தேன். பத்திரிகைகள் பாராட்டிய தைரியத்தில் தமிழிலும் வெளியிட வேண்டும் என்றிருந்த ஆசைக்கு உயிர் வந்தது. அதனால் தமிழில் படிப்பவர்களுக்கு வசதியாக இருக்க இரண்டு புத்தகங்களையும் ஒரே புத்தகமாக்கி 2006ல் வெளியிட்டேன்.

2006ல் இப்புத்தகத்தின் முதல் பதிப்பை வெளியிட்டபோது பெரும் பாலான வாசகர்கள் 'ஏன் ஷூடிங்ஸ்க்ரிப்டை' எழுதாமல் விட்டீர்கள்' என்று கேட்டு (எழுதாமல்) ஃபோன் செய்தார்கள். அதை 2-ம் பதிப்பில் வெளியிட தீர்மானித்திருந்தேன். 2010ல் அப்பதிப்பு முழுதும் விற்று தீர்ந்து விட்டதால், பழைய தீர்மானத் தின்படி 'ஷூடிங்ஸ்க்ரிப்ட்'க் கான ஒரு உதாரணத்துடன், புத்தகம் பெரிதாகிவிடும் என்ற காரணத்தால் ஒரே ஒரு காட்சிக்கான ஷூடிங் ஸ்க்ரிப்ட் (Shooting Script) ஐ மட்டும் உதாரணமாக கொடுத்து இன்னும் சில முக்கிய குறிப்புகளையும் இணைத்து, சில திருத்தங்களையும் செய்து வெளியிட முயற்சித்து, இப்போது 2014ல் தான் அதை 'எக்ஸ்பேண்டட் எடிஷன்' ஆக வெளியிட முடிந்துள்ளது.

இப்புத்தகம் நீங்கள் திரைக்கதை எழுத ஆரம்பிக்க ஏதாவது ஒரு வகையில் உங்களுக்கு உதவியாக இருக்கும் என நம்புகிறேன். உங்கள் கருத்துக்களை எழுதி அனுப்புங்கள். என் அடுத்த புத்தகத்திற்கு உதவியாகவும் ஊட்டமாகவும் இருக்கட்டும்.

நல்ல முறையில் D.T.P.ஐ செய்து கொடுத்த திருமதி முக்தா அவர்களுக்கும் அப்படியே ப்ரூஃப் கர்ரெக்ஷன் செய்த திரு ஜெ.பி.மனோஜ் அவர்களுக்கும், நேர்த்தியாக ப்ரிண்ட் செய்து கொடுத்த திருமதி ஜோதி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி...

தர்மா

# ரசிகப்பெருமக்கள் (Audience)

Audience means, a group of people who have gathered together to learn or watch.

A number of people who watch read or listen to the same thing.

கேட்டு ரசிக்கவும், கண்டு களிக்கவும் கூட்டமாக கூடியிருக்கும் ஜனங்கள்.

கண்டு களித்து, படித்து அனுபவித்து அல்லது கேட்டு ரசிக்கும் ஜனங்கள்.

ஆங்கில அகராதிகள் மேற்கண்ட அர்த்தங்களை கொடுக்கின்றன. தமிழ் அகராதி - பார்வையாளர், பார்த்து கேட்டு ரசிப்பவர்கள் என்ற அர்த்தத்தை கொடுக்கிறது.

பொதுவாக திரைப்படங்கள் வியாபார நோக்கத்துடன்தான் தயாரிக்கப்படுகின்றன. எனவே இது ரசிகர்கள் என்ற வாடிக்கையாளர் (Customer)களை நம்பித்தான் தயாரிக்கப்படுகின்றன. அதனால் திரைக்கதாசிரியர்கள் முதலில் ரசிகர்களின் மனோநிலை மற்றும் விருப்பத்தை அறிந்துகொண்டால்தான் அவர்களுக்கு பிடித்த சிறப்பானவற்றை அவர்களால் கொடுக்கமுடியும்.

இன்று தியேட்டருக்கு வந்து திரைப்படம் பார்ப்பவர்களில் இளைஞர்கள்தான் அதிகம். அதிலும் உழைக்கும் வர்க்கம் அதிகம். அதனால் அவர்களைப்பற்றி 'அதிகம்' தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

ரசிகர்கள் அந்த 2½மணி நேரமும் ஒரு படத்தை பார்த்து ரசித்து விட்டு போகத்தான் ஆசைப்படுகிறார்கள். நாளடைவில், நிறைய படங்கள் அப்படிப்பட்ட முழு திருப்தியையும் கொடுக்க தவறி விட்டதாகத் தெரிகிறது. எனவே அவரவர்களுக்குப் பிடித்த அம்சங்களை கண்டு ரசித்துவிட்டு போகும் ரசிகர்கள் அதிகமாகி யிருக்கிறார்கள்.

ஆனாலும் நல்ல ஒரு முழுப்படம் பார்க்கும் ஏக்கம் அப்படியே இருக்கிறது. ஒவ்வொரு வகையான ரசிகர்களும் ஒவ்வொரு விஷயத்தில் அதிகம் ரசிப்புத்தன்மை (Taste) உள்ளவர்களாக இருக்கிறார்கள்.

- இன்றைய கம்ப்யூட்டர் யுகத்திலும் பல இளைஞர்களுக்கு காதல்தான் முக்கியம்.
- அதிக குடும்பப்பின்னனி உள்ளவர்களுக்கு குடும்ப பாசக் கதைகளில் ஆர்வம். இவர்கள் டி.வி. சீரியல் பார்க்க ஆரம்பித்து விட்டார்கள்.
- சண்டைக்காட்சிகளில் மிகுந்த ஆர்வம் உள்ள ரசிகர்களும் அதிகமாகி இருக்கிறார்கள்.
- வெறும் காமெடிக்காகவே படம் பார்க்க வருபவர்களும் உண்டு.
- இன்றைய இளமனம் கொண்டவர்களுக்கு கதாநாயகி ஒல்லியாக அழகாக, கட்டுடன் இருக்கவேண்டும்.
- இளைஞிகளில் பலருக்கு கம்பீரமான துடுக்கான, மிடுக்கான முகத்திலேயே ஆண்மை தெரியும் ஹீரோக்கள் தேவை. சட்டையை கழட்டினால் பொள பொள என்று கட்டு இல்லாத குழந்தை முகம் உள்ள ஹீரோக்களை இவர்கள் அறவே வெறுக்கிறார்கள்.
- ஹீரோவை விட வில்லன் கட்டு மஸ்தாக, கம்பீரமாக இருந்தால் அவனைப்பற்றியே சிறப்பாக பேசும் இளைஞிகளும் உண்டு.
- ஒரு வில்லன் புத்திசாலித்தனமாக 'பே(அ)ன்க்' லாக்கரை திறக்கிறான் என்றால் அது எப்படிப்பட்ட 'டெக்னிக்' என்பதை அறிய பல ரசிகர்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். அதாவது எல்லா செயல்களிலும் அதற்கான உத்திகளை அறிய ஆசைப் படுகிறார்கள்.
- வில்லனின் கம்பீரமான அடாவடி செயல்களை, அது தவறானதாக இருந்தாலும் பாராட்டி ரசிக்கும் ரசிகர்கள் அதிகமாகி வருகிறார்கள்.
- ஹீரோ விடமே 'லைட்' ஆக வில்லன் தனத்தை எதிர்பார்க்கும் ரசிகர்களின் எண்ணிக்கையும் அதிகரித்து வருகிறது.
- பல ரசிகர்கள் பாட்டு நடனத்திற்காகவே படம்பார்க்க வருகிறார்கள். இன்றைய நடனத்தின் அசைவுகள் அவர்களை அப்படி ஈர்க்கிறது.
- ஆபாசத்தை விரும்புபவர்கள் அதிகமாகிவருகிறார்களோ என்று அப்படிப்பட்ட படங்கள் வெற்றி அடைவதை பார்க்கும்போது சந்தேகம் எழுகிறது.

- வெளி நாடுகளில் பாட்டு நடனம் என்றால் அதை மிகவும் விரும்பிப் பார்க்கிறார்கள். இந்த விஷயத்தில் நடன அசைவுகளை விட பே(அ)க்ரௌன்ட் (Background)ஐ பார்த்து நம்ம ஊர் இப்படி இல்லையே நம் ஜனங்கள் இப்படி ஊரை அழகாக வைத்துக் கொள்வதில்லையே, 'என்றுவரும் அந்த நாள்' என்ற ஏக்கத்தி லேயே அதை மனசார கண்டு களிப்பவர்கள் பலர் இருக்கிறார்கள்.

- ஹீரோவின் 'ஸ்டைல்' ஐ கண்டு களிக்கவே வரும் ரசிகர்களும் உண்டு.

- இது ஐ.டி. (Information Technology) யுகமல்லவா அதனால் ஒவ்வொரு டிபார்ட்மெண்டிலும் நடக்கும் நல்லவை கெட்டவைகளை விவரமாக அறிய விரும்புகிறார்கள்.

- இன்றைய காலகட்டத்தில் ஆண்கள் மத்தியில் செக்ஸ் அதிகமாகி இருக்கிறது. (பெண்களின் சதவிகிதமும் அதிகமாகியிருக்கிறது). செல்போன்களில் காதல் சமாச்சாரங்களே அதிகமாக இருப்பதால் ஒரு வேளை காற்றில் கலந்த காதல் வெப்பம் (Love Radiation) இவர்களை அதிகமாக பாதிக்கிறதோ!

- இன்றைய ரசிகர்கள் எந்த விஷயத்திலும் கொஞ்சம் ஆழம் (deep) ஆக போய் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறார்கள்.

- ரசிகர்கள் கதைக்கு அடுத்து 'ஃபோடோகிரஃபி', 'ம்யூசிக்', 'சௌன்ட இஃபெக்ட்', உடைகள், 'லொகேஷன்'கள், 'வசனம்' என்று எல்லாவற்றிலும் இன்று அதிக கவனம் செலுத்துகிறார்கள்.

- வருவது, போவது, எடுப்பது, கொடுப்பது, பேசுவது என்று எல்லாவற்றிலும் ஒரு 'ஸ்பீட்'' ஐ எதிர்ப்பார்க்கிறார்கள்.

- முதல் வரிசை ரசிகர்களுக்கு வீரம், விவேகம், காதல், அன்பு இவைகள்தான் முக்கியம். இவர்களை ஒரு தாய்ப்பாசம், தங்கை பாசத்தாலும் கட்டிவிடலாம்.

- எதுவும் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்றவாறு இருக்கவேண்டும் எனக்கூறும் ரசிகர்களும் உண்டு. கொஞ்ச இழுவையும் இவர்களுக்குப் பிடிப்பதில்லை.

எனவே எந்த விஷயத்திலும் வெகுஜன விருப்பம் எவை என்பவற்றை அறிந்து நல்லனவற்றை கொடுக்கும் போது தவிர்க்கமுடியாத அதிக கேடுவிளைவிக்காத கெட்டவைகளை, கலை நயத்தோடு கொடுத்தால் அதிக பாதிப்பை ஏற்படுத்தாது என்று ஸீனியர்கள் நம்புகிறார்கள்.

முடிவுகளும், வெகுஜன அபிப்ராயத்தின்படியே இருக்க வேண்டும். இன்றைய சூழ்நிலையில் சோகமான முடிவை பெரும்பாலோர் விரும்புவதில்லை. ஒவ்வொருவரும் 'சர்வைவல்' க்காக போராடும் காலம் இது. அதனால் எதிலும் சாதகமானதையும் வெற்றியையும்தான் எதிர்ப்பார்க்கிறார்கள்.

நம்மை பொறுத்தவரை, ரசிகர்கள் என்பவர்கள் தியேட்டருக்கு வந்து 'காசு' கொடுத்து படம் பார்ப்பவர்கள். எப்படிப்பட்ட நடிகரின் ரசிகர்களாக இருந்தாலும் படம் நன்றாக இல்லை என்றால் அதை ஒதுக்கிவிடுகிறார்கள். அப்படியென்றால் அவர்கள் ஏதோ ஒரு விஷயத்திற்காக மட்டும் படம் பார்க்க வருபவர்கள் அல்ல என்பது தெரிய வருகிறது. 'சப்ஜெக்ட்' எப்படிப்பட்டதாக இருந்தாலும் அந்த 2½ மணிநேரமும் ஈர்க்கும்படியாக இருக்கவேண்டும் என்று எதிர்ப்பார்ப்பவர்கள் இவர்கள். உண்மையில் இந்தவகை ரசிகர்கள் அதிகமாக உள்ளார்கள் என்பது பெருமைக்குரிய விஷயமே.

# திரைக்கதை (Screenplay)

ஒரு கதை அதற்கு தேவையான ட்ரீட்மெண்டுடன் படம் பிடிக்கப்பட்டு, திரையில் காட்டுவதற்காக எழுதப்படுவதைத்தான் **'திரைக்கதை'** என்கிறோம்.

படத்தயாரிப்பு ஆரம்பித்த காலத்தில் திரைக்கதை எழுதியவர்கள் திரைக்கதைக்கு ஒரு இலக்கணம் வகுத்தார்களா என்பது சந்தேகமே. அவரவர்களின் வசதிக்கேற்ப உத்திகள் வளர்ந்து வந்துள்ளன என்றுதான் சொல்லமுடியும்.

- கதை என்று எடுத்துக்கொண்டால் அதற்கு ஆரம்பம், மத்தியம், முடிவு உண்டு. அதேவிதிதான் திரைக்கதைக்கும்.
- கதையிலிருந்து திரைக்கதையின் காட்சிவரைக்கும் எல்லா வற்றுக்கும் ஆரம்பம், மத்தியம், முடிவு உண்டு.
- திரைக்கதையின் ஆரம்பபாகத்தை கதாபாத்திரங்கள் யார், எப்படிப்பட்டவர்கள், என்பதில் ஆரம்பித்து, அவர்கள் எதை அடைய அதை நோக்கி கதை போகிறது என்று ஒரு திருப்பு முனையில் முடித்து, பின் அந்த மத்திய பாகத்தை ஆரம்பித்து, அதை அடைய என்னென்ன செய்கிறார்கள், எவற்றை எதிர்கொள்கிறார்கள் என்பதில் முடித்து. அந்த மத்திய பாகத்தின் முடிவிலிருந்து எப்படி அதை அடையப் போகிறார்கள் என்பதில் ஆரம்பித்து, எப்படி அடைந்தார்கள் என்பதில் முடிவு பாகத்தை முடிக்கிறோம்.
- திரைக்கதையின் அமைப்பு கதையிலிருந்து வித்யாசமாக இருக்கும். அது திரையில் தொடர்ந்து உணர்வுகளோடு பார்த்து முடிப்பதற்காக எழுதப்படுகிறது. இதில் கதையோட்டம் மிக முக்கியம். கண்ணுக்கும், காதுக்கும், உணர்வுக்கும் விருந்தளித்தாவாறே இருக்கும்படி எழுதி முடிக்க வேண்டும்.
- 2½ மணி நேர படத்திற்கு தோராயமாக 75-80 காட்சிகள் என்று வைத்துக் கொண்டு, ஆரம்ப பகுதிக்கு 15-20 காட்சிகள் மத்திய பகுதிக்கு 35-40 காட்சிகள் முடிவு பாகத்திக்கு 15-20 காட்சிகள் என்று எழுதிப் பார்க்கலாம். பெரும்பாலான திரைக்கதைகள் இந்த அடிப்படையில் தான் அமைந்திருக்கின்றன.

⅄ பொதுவாக நம் இந்திய 'ஸ்டே(அ)ன்டர்ட்'' படி ஒரு திரைப்படத்தின் சராசரி கால அளவு 2½ மணிநேரமாகும். அதாவது 150 நிமிடங்கள்.

அனுபவ ரீதியில், ரசிகர்கள் கதைக்கான ஒரு காட்சியை 2 நிமிடத்திற்கு மேல் பார்த்துக் கொண்டிருக்க விரும்புவதில்லை. அதன்படி 150÷2=75. இந்த 75 காட்சிகள் அந்த 2½ மணிநேர படத்துக்காக நமக்கு தேவைப்படுகிறது.

இங்கு நாம் சொல்வதெல்லாம் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பதல்ல, மிகவும் சுவாரஸ்யமான காட்சி 5 நிமிடங்கள் கூட போகலாம். அரை நிமிடத்திலும் ஒரு காட்சி முடிந்துவிடலாம். எல்லாம் ஒரு தோராயம்தான்.

ஒரு படத்திற்காக தேர்ந்தெடுக்கப்பட்ட கதை அல்லது ஸப்ஜெக்டை வைத்துக் கொண்டு, திரையில் அவை எப்படி சுவாரஸ்யம் உள்ளதாக காட்டப்படவேண்டும் என்பதை சிந்தித்து எழுதப்படுவதுதான் திரைக்கதை. அப்படி சிந்தித்து எழுத நமக்கு அதற்கான சில முக்கிய விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டிய அவசியம் உள்ளது. அவை-

1. ஒரு படத்திற்கான அந்த 150 நிமிடங்களில் பாடல் காட்சி, சண்டை காட்சி என்று இருபது நிமிடங்கள் போக 130 நிமிடங்களுக்கு ஒரு கதையை வழங்குகிறோம் என்பதை மனத்தில் கொண்டு எழுத ஆரம்பித்தால்தான் கச்சிதமான திரைக்கதை கிடைக்கும்.
2. ஒரு கதை அல்லது ஸப்ஜெக்டை தேர்ந்தெடுத்தபின் அதன் மூலாதாரத்திற்கு தொடர்புள்ள முக்கிய அம்சங்களை சேகரித்துக் கொள்ள வேண்டும்.
3. கதைக்கு தேவையான வித்யாசமான, வலுவான கதாபாத்திரங் களை உருவாக்கவேண்டும்.
4. 10-15 முக்கிய அம்சங்கள், திருப்பு முனைகள் இருக்கும்படியான சிறு கதையை முதலில் தயார் செய்துகொள்ளவேண்டும்.
5. திருப்புமுனைகளை 'ட்ரமடைஸ்' செய்து 70-80 காட்சிகள் வரும்படியாக ஒருவரிக்கதையை எழுதிக்கொள்ளவேண்டும்.
6. காட்சிக்கு பொருத்தமான 'ட்ரீட்மெண்ட்' இருக்கவேண்டும்.
7. எல்லா விஷயங்களும் கதையின் ஓட்டத்திற்கு கட்டுப்பட்டு சமன் (Balance) செய்யப்பட்டு இருக்கவேண்டும்.
8. வசனங்கள் மிகக் கச்சிதமாகவும் சக்திவாய்ந்ததாகவும் இருக்கவேண்டும்.
9. கண்டிப்பாக மிகையான நடிப்புக்கு நம் எழுத்து வழிவகுக்கக் கூடாது.

10. வலுவான, நம்பக்கூடிய, எதிர்பாராத, சுவாரஸ்யமான திருப்பங்கள் இருக்கவேண்டும்.

11. அது எப்படிப்பட்ட காட்சியாக இருந்தாலும் அதற்கான அளவோடு ட்ரீட்மெண்ட் இருக்கவேண்டும். முடிந்தவரை குறைந்த நேரத்தில் முழுமையுடன் கொடுக்க திட்டமிட்டு எழுதவேண்டும் செட்(set)க்கு நிறைய செலவிடப்பட்டது என்பதற்காக அதிக நேரம் காட்சிகளை வளர்த்துக் கொடுத்து காட்சியின் 'டெம்போ'வை கெடுத்துவிடக்கூடாது.

12. பாடல்களுக்கும், சண்டைக் காட்சிகளுக்கும் பொருத்தமான இடங்களை ஏற்படுத்தி கொடுக்கவேண்டும்.

13. எல்லாவற்றிலும் ஒரு 'டைம்', 'டைமிங்' இருக்கவேண்டும்.

14. சிரிப்பு, மனிதனின் தனித்தன்மை மற்றும் எல்லோராலும் விரும்பப்படுவது என்பதால் மேன்மையான காமெடியை கதையோடு கலந்து இருக்கும்படி எழுதவேண்டும்.

15. படக்கதைக்கு எங்கெல்லாம் 'க்ரே(அ)ஃபிக் ஒர்க்'ஐ பயன் படுத்தலாம் என்று யோசித்து, பயன்படுத்துவதற்கான வாய்ப்பு களை ஏற்படுத்திக்கொடுக்கும் படியாக எழுதவேண்டும். வெறும் மாயாஜாலத்திற்கு மட்டும் 'க்ரேஃபிக்ஸ்' என்ற காலம் போய்விட்டது.

கதாசிரியர் தன் கதையில், ''கமலா, அன்று வெள்ளிக்கிழமை யாதலால் கோவிலுக்கு சென்றுவிட்டு வந்து அவசர அவசரமாக வேலைக்கு கிளம்ப தயாரானாள்'' என்று எழுதியிருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். இதில் அவர் சொல்லவருவது நாயகிக்கு கோயில் செல்லும் பழக்கம், பண்பு உள்ளது என்பது தான். இதை புரிந்துகொண்டு திரைக்கதைக்கு எழுதும் போது, கோவில் காட்சி தேவையா? தேவையில்லையா? அப்படி தேவை யெனில் இன்னும் முன்னே அல்லது பின்னே வந்திருக்க வேண்டுமா? அவள் பின்னணிப் படி, மனநிலைப்படி 'ஸிசுவேஷனு'க்கு தகுந்தபடி எந்த கோயிலை காட்டலாம், கோயிலின் சூழ்நிலை எப்படி இருக்கவேண்டும், சாமி கும்பிடுவதில் ஆரம்பிக்கலாமா? அல்லது வெளியிலிருந்து கோவிலுக்குள் நுழைவதில் ஆரம்பிக்கலாமா? வெறும் 'ஆக்ஷன்' இருந்தால் போதுமா? வசனம் தேவையா? சென்ற காட்சிக்கு தொடர்புள்ள அல்லது வரும் காட்சிக்கு தொடர்புள்ள விஷயத்தை இங்கு காட்ட வேண்டுமா? இந்தக் காட்சிக்கு பொருத்தமான வேறு ஏதாவது 'மெஸ்ஸேஜ்' கொடுக்க இங்கு இடமிருக்கிறதா, சென்ற காட்சி 'ஸ்லோ' என்றால் இந்த

காட்சியில் எந்தவித 'டெம்போ' இருக்க எப்படிப்பட்ட 'மூவ்மென்ட்'களை கொடுக்கவேண்டும், கதையின் ஓட்டத் திற்கு (flow) தகுந்தவாறு இந்த காட்சியை எப்படி, எவ்வளவு நேரத்திற்குள் முடிக்கவேண்டும் என்று இன்னும் பலவற்றை கவனித்து எழுதுவதுதான் திரைக்கதை.

கதையில் திருப்பங்கள் வேண்டும் என்கிறோம். ஒரு சிறிய திருப்பத்தை பார்ப்போம்!

காதலின் ஆரம்பக்கட்டத்தில் உள்ள காதலர்கள் சசின், லதா.

1. சசின் நண்பன் சுதீர், எதேச்சையாக லதாவை ஹோட்டலில் சந்திக்க, அவள் ''உன் நண்பனை இனி நான் காதலிக்க மாட்டேன்'' என்று சொல்லிச் சென்றுவிடுகிறாள்.
2. அதை சுதீர் சசினிடம் வந்து சொல்கிறான்.
3. சசின், லதாவை சந்தித்து காரணம் கேட்க, அவள் அவனிடம் சொல்ல மறுத்துவிட்டு போய்விடுகிறாள்.
4. நண்பர்கள் ஒன்று சேர்ந்து சமரசம் செய்ய லதாவிடம் காரணத்தை கேட்டபோது நேற்று சசின் வேறுபெண்ணுடன் ஹோட்டலுக்கு பைக்கில் சென்றது அவளுக்கு பிடிக்கவில்லை என்பதும், அவன் ஒழுக்கத்தின் மீது அவளுக்கு நம்பிக்கை போய்விட்டது என்பதும் தெரியவருகிறது. பிறகு ஒரு வழியாக சமரசம் ஏற்படுகிறது.

திருப்புமுனைக்கான காரணகர்த்தாவுடன், காரணத்தை காட்ட ஒரு காட்சி, பாதிக்கப் பட்டவரிடம் விஷயம் எப்படி போய்சேர்கிறது என்பதை காட்ட ஒரு காட்சி. பாதிக்கப்பட்டவரின் 'ரியாக்ஷன்' அதாவது என்ன நடவடிக்கை எடுத்தார் என்பதை காட்ட ஒரு காட்சி, எப்படி தீர்வு காணப்பட்டது என்பதை காட்ட ஒரு காட்சி. இந்த சின்ன திருப்பத்துக்கே ஆரம்பித்து நடத்தி முடிக்க, காட்சிகளாக பிரித்து காட்ட, நான்கு காட்சிகள் தேவைப்படுகிறது என்றால் பெரிய திருப்பங்களுக்கு குறைந்தபட்சம் 6-8 காட்சிகள் தேவைப்படும் 2½ மணிநேர படத்துக்கு 75-80 காட்சிகள் என்றால் அதற்கு குறைந்த பட்சம் 10-12 பெரிய திருப்பங்கள் தேவைப்படுகிறது. இப்படி கணக்கிட்டு பார்ப்பதில் தவறேதும் இல்லையே. எதிலும் ஒரு 'கே(அ)ல்குலேஷன்' இருக்க வேண்டும் என்றுதான் அனுபவஸ்தர்கள் அறிவுறுத்தியிருக்கிறார்கள்.

✦ ஒரே கதைக்கு வெவ்வேறு திரைக்கதாசிரியர்கள் திரைக்கதை எழுதினால் கதையின் வடிவம் மாறியிருக்கும், ஏனெனில் ஒவ்வொரு கதாசிரியரின் பாய்ண்ட் ஆஃப் வ்யூ (P.O.V.)ம் 'ட்ரீட்மென்ட்'-ம் அவரவர்களின் சொந்த அறிவு, குணாதிசயம், கற்பனா சக்திக்கு தகுந்தவாறு இருப்பதால் அப்படி நடக்கிறது.

- பொதுவாக திரைக்கதை எழுதுபவர்கள் கதை என்று சொல்லிக் கொள்வதில்லை. 'சப்ஜெக்ட்'' என்றுதான் சொல்கிறார்கள். படிப்பதற்குத்தான் கதை. பார்ப்பதற்கு, அந்த 2½ மணி நேரத்திற்கு ஒரு 'சப்ஜெக்ட்' என்ற கோணத்தில்தான் கற்பனை செய்து எழுதவேண்டும் என்பர். ஸ்டோரி லைன் என்பார்கள் ஸ்டோரி என்று சொல்லமாட்டார்கள். ஏனெனில் அது திரைக்கதையாக விரிவு படுத்தவேண்டியது என்பர்.

- முதல் 10-15 காட்சிகளைத்தான் நாம் மிகவும் கவனம் செலுத்தி உருவாக்குகிறோம். அந்த 10-15 காட்சிகளில்தான் யார்யார் எவற்றை அடைய என்னென்ன செய்ய ஆரம்பிக்கிறார்கள் என்பதை 'எஸ்டே(அ)ப்ளிஷ்' செய்யவேண்டியுள்ளது.

- இன்று இடைவேளையை ரசிகர்கள் முன்புபோல் 'கேர்' செய்வதில்லை. இடைவேளையில் ஒரு திருப்பம் கொண்டுவர வேண்டும் என்று காட்சியில் கஷ்டப்பட்டு சில விஷயங்களை திணித்து காட்டவேண்டிய அவசியம் இல்லை என்றே தோன்றுகிறது.

- அந்த 2½ மணிநேர கதைக்கு தேவையான திருப்பங்களை ஏற்படுத்தி நிகழ்ச்சிகளின் மூலம் பிணக்குகள் (Conflict), வினை (action), எதிர்வினை (reaction)களை வைத்து நடத்தி முடிக்கவேண்டும்.

- படத்திற்கான முடிவை முதலிலேயே நிச்சயிக்கவேண்டும். இந்த நாள் இந்த ஊருக்கு போகப்போகிறோம் என்பது தெரிந்திருந்தால் தானே அதற்கு தகுந்த ஏற்பாடுகள் செய்து கொள்ள முடியும், கதையையும் அதற்காக தேர்ந்தெடுத்த அந்த முடிவை அடையும் நோக்கத்திலேயே கொண்டுபோய் முடிக்கமுடியும். (முடிவில் முடிவுகள் மாறலாம்).

- மூத்த கதாசிரியர்கள் விடைத்தாளின் மூன்றில் ஒரு பாகத்தை மடித்து எடுத்து அந்த மூன்றில் இரண்டு பாகத்தில்தான் திரைக்கதையை எழுதுகிறார்கள். (இப்பொழுது எல்லாம் மாறி வருகிறது) அந்த மூன்றில் ஒரு பாகம் இயக்குனர் குறிப்புகளை எழுதிக் கொள்வதற்காக விடப்பட்டது. அதில்தான் முக்கிய விஷயங்களை அவர் எழுதிக்கொள்வார் மிக முக்கியமானவை களை அவர் மூளையில் வைத்துக்கொள்வார். முடிந்தவரை தொழில் நுணுக்கங்கள் ரகசியமாகவே வைக்கப்பட்டது. அந்த 'ஸ்க்ரிப்ட்'ஐ நாம் தொட்டுக்கூட பார்க்க முடியாது. இன்றைய

புதிய இயக்குனர்கள் ஆங்கில முறைகளை கையாள்வதால் எல்லாம் சற்று தளர்ந்திருக்கிறது. அணுகிப்பாருங்கள்.

- பொதுவாக ஒரு திரைப்படத்திற்கு 150 - 200 பக்கங்கள் கொண்ட திரைக்கதை எழுதப்படுகிறது. ஒரு பக்கம் எழுதியதை படம் பிடித்து 'பார்க்க' ஒரு நிமிடம் ஆகிறது என்ற ஒரு தோராயமான கணக்கு வைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. மூன்று மணி நேரத்தில் 'ரீடிங்' கொடுத்தால் அதாவது பாவனையோடு படித்து முடித்தால் அது 2½ மணி நேரபடமாகும் என்பதும் ஒரு தோராயமான கணக்குதான். நீங்களே 'ஸ்டாப் வாட்ச்'ஐ வைத்துக்கொண்டு, ஆக்ஷன், வசனம் இவைகளுக்கு எவ்வளவு நேரமாகிறது என்பதை கணக்கிட, 'ப்ரே(அ)க்டிகல்' ஆக செய்து பார்த்துக்கொள்ளலாம்.

- ஒரு பயிற்சியாக, உங்களுக்கு பிடித்த நாவலை வைத்துக் கொண்டு அதற்கு திரைக்கதை அமைத்துப்பாருங்கள். இதை சுலபமாக செய்ய முதலில் 'பாக்ஸ் மெதட்'ல் விளக்கப்-பட்டிருப்பதைப்போல் கட்டத்திற்குள் காட்சி வாரியாக எழுதிக்கொண்டு போய் முடித்துவிடுங்கள். இப்பொழுது முழுகதையும் உங்கள் கண்முன் இருக்கிறது. அதை வைத்து கதையோட்டம் சரியாக இருக்கிறதா என்பதை கவனித்து சரிசெய்துகொண்டு திரைக்கதை எழுத ஆரம்பியுங்கள். அந்த 2½ மணிநேரத்திற்காக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. முதலில் எழுதிப்பாருங்கள்.

- காட்சிகளை எழுதும்போது பொதுவாகப்பார்ப்பது (Master Shot) குறிப்பாக பார்ப்பது (Specific Shot), என்ற கண்ணோட்டத்தில் எழுதினால் போதும். இயக்குனர் காட்சியின் தன்மைக்கு ஏற்ப 'ஷாட்'களை பிரித்து படம் பிடித்துக் கொள்வார். நீங்கள்தான் கேமரா, ஒரு இடத்தில் நின்று பார்க்கும் வரை, உங்கள் கேமரா பார்வையில், வருகிறார், போகிறார், கடக்கிறார், வருகிறது - போகிறது, கடக்கிறது என்பதாக நடமாட்ட நடவடிக்கைகளை அதன்படியே எழுதுங்கள்.

- மனதில் தோன்றுவதைப் போலவே எழுதுங்கள். வெறும் கற்பனை செய்துகொண்டே இருந்தால் ஐடியாக்கள் வராது. எழுதிக்கொண்டே இருக்கவேண்டும். ''வீட்டை கட்டிப்பார், கல்யாணம் செஞ்சுப்பார், பரீக்ஷை எழுதிப்பார்'' என்பதைப்போல எதையும் செய்தால்தானே அது நமக்கு சுலபமாகும். இன்று நீங்கள் எழுதும் கதைகள் 10 வருடங்கள் கழித்து உயர்வான பக்குவப்பட்ட

கதையாக உருவாகவேண்டுமானால் நீங்கள் தொடர்ந்து திரைக்கதைகளை எழுதிக்கொண்டே இருக்கவேண்டும்.

- ✦ நம் மனத்திரையில் நல்ல காட்சிகள் உருவாகி வரவேண்டு மென்றால், நம் மூளையில் அழகு, ஒழுங்கு, ரசிப்புத்தன்மை 'ரிதம்', (Rhythm) ''அப்ஸர்வேஷன்' (Observation), உலக அறிவு இன்னபிற நம் மூளைக்குள் ஏற்றப்பட்டிருக்கவேண்டும்.

உங்கள் P.O.V.ல் நிகழ்ச்சியை எப்படி காட்டினால் நன்றாக இருக்கும் என்பதை மனத்திரையில் பார்த்து யோசித்து எழுத வேண்டும். ஒரு விபத்தை பார்த்துவிட்டு வந்து அதைப்பற்றி நண்பர்களிடமோ வீட்டிலோ சொல்லும்போது, எதை எதை பார்த்து எது எது உங்கள் கண்களை ஈர்க்கும்படியாக இருந்ததோ அதை கேட்பவர்கள் சுவாரஸ்யமாக அவர்கள் மனத்திரையில் பார்த்தவாறு 'ஐயோ பாவம்' என்ற பாவனையில் கேட்க எப்படி சொல்லவேண்டும் என்று அதைச் சொல்கிறீர்களோ அப்படியே எழுதுங்கள்.

- ✦ மூன்று நான்கு முக்கிய விஷயங்கள் இருந்தால் ஒரு காட்சியை 2 நிமிடத்திற்கு அப்படியே வளர்க்கலாம். ஆனால் ஒன்றிரண்டு என்றால் அதற்கு துணையாக எப்படிப்பட்ட விஷயங்களை சேர்க்கலாம் என்பதை யோசித்து எழுதவேண்டும். முதலில் 2 நிமிடத்திற்கு ஒரு காட்சியை எழுதிவிடவேண்டும்.

- ✦ ஒரு கதைக்கு வெவ்வேறு 'ட்ரே(அ)க்'ல் சென்று வெவ்வேறு 'டயமென்ஷன்'ல் திரைக்கதை உருவாக்கலாம். அப்படி எழுதிப்பாருங்கள்.

- ✦ திரைப்படத்துறையை சேர்ந்தவர்கள் குறிப்பாக கதைச்சுருக்கத்தை 'ஸினாப்ஸிஸ்' என்றே அழைக்கிறார்கள். மற்ற கதைச்சுருக்கத்திற்கும் இந்த ஸினாப்ஸிஸ்க்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. இதை படித்தமாத்திரத்தில் 2½ மணி நேர திரைப்படத்திற்கு போதுமான சகல அம்சங்களும் இதில் இருக்கிறது என்று தயாரிப்பாளரும் இயக்குனரும் உணரும் அளவுக்கு, அனைத்தும் சுருக்கமாக தெரிவிக்கப்பட்ட, 4 பக்கங்களுக்குள் அடங்கிய கதையாக இது இருக்கவேண்டும்.

- ✦ ஆங்கிலப்படங்களை பார்க்கும்போது நம் கண்களால் இயற்கையாக கவனிக்கும்படி இருக்கிறது. நம்மில் பல படங்கள் ஃபேமிலி ஃபோட்டோக்களை பார்ப்பது போல் இருக்கிறது. நம் கண்கள் ''அட்ஜஸ்டபில் வொய்ட் ஆங்கில் லென்ஸ்'' போலவும் 'ஃஜும் லென்ஸ்' போலவும் வேலை செய்கிறது. லென்ஸ்களை எங்கு எதற்கு பயன்படுத்தவேண்டும் என்பதை

இயக்குனர் ஒளிப்பதிவாளரிடம், கலந்தாலோசித்து பயன் படுத்தவேண்டும். இது மிக மிக முக்கியம். ஏன் எனில் காட்சியின் 75% உன்னதத் தன்மை இதில்தான் இருக்கிறது. இல்லையேல் உணர்ச்சிபூர்வமாக எழுதிய திரைக்கதை பயனற்று போய்விடும்.

✦ லண்டன், அமெரிக்கா போன்ற மேலை நாடுகளில் வெளியான எல்லா வகை காமிக்ஸ்களையும் படித்து 'பார்க்க' வேண்டும். அவை திரைக்கதை எழுதும் ஆர்வம் உள்ளவர்களுக்கு மிகமிக உதவியாய் இருக்கும். எமக்கும் மிக உதவியாய் இருந்தது. டி.வி விளம்பரங்களை பாருங்கள் 5 லிருந்து 15 வினாடிகளுக்குள் ஒரு விஷயத்தை தெரியக்காட்டி அனைவரையும் கவர்ந்து விடுகிறார்கள். அவர்களுடைய நடிகர்கள் தேர்வு, ஒப்பனை, உடை, இடம், செட் பொருட்கள், ஒளியை பயன்படுத்தும் விதம், கலர்காம்பினேஷன்ஸ், வசனம், இசை, க்ரே(அ)ஃபிக் ஒர்க் என்று அதில் இருக்கும் அனைத்தையும் கவனித்து அவற்றை திரைப்படங்களுக்கு எந்த அளவுக்கு பயன் படுத்திக்கொள்ளலாம் என்பதை கூர்ந்து கவனித்தால் திரைக்கதை நன்றாக வரும்.

✦ ஃப்ரேம் பை ஃப்ரேம் பார்க்கும் D.V.D. ப்ளேயர் இருந்தால் நல்லது. அதில் ஒன்று அல்லது இரண்டு நொடிகளில் வரும் ஆங்கிலப் படக்காட்சிகள் மிகமிக 'இஃபக்டிவ்' ஆக தெரியக்காரணம் என்ன என்பதை கண்டறியலாம் இதில் கொஞ்சம் 'எடிட்டிங்' நுட்பத்தையும் அறியலாம். திரைக் கதாசிரியர்களுக்கும் எடிட்டிங் அறிவு மிக முக்கியம். அவர்களின் திரைக்கதை அப்பொழுதுதான் கச்சிதமாக இருக்கும்.

✦ எந்தத் துறையிலும் ஆர்வம் இருந்து அதற்காக கடுமையாக உழைத்தால் அந்தத்துறையில் 'ஞானி' ஆகலாம் என்பது 'தமிழ் மண்ணில்' கண்கூடு.

✦ பலர், 'என்னிடம் ஒரு நல்ல கதையிருக்கிறது, அதை திரைப்படத்திற்காக கொடுக்க ஆசை' என்று வருகிறார்கள், சிறந்த எழுத்தாளர்களின் ஒரிஜினல் கதைகள் பல உள்ளன. திரைப் படத்திற்கு நல்ல 'ட்ரீட்மெண்ட்' உடனான திரைக்கதைதான் முக்கியம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவேண்டும்.

✦ இன்று வரும் படங்களில் இளம் கதா நாயகர்களை முரடர் களாகவும் பாடல் காட்சிகளை அதிகம் 'செக்ஸ்' உள்ளதாகவும் எல்லாமே ரொம்ப 'ஸ்ட்ராங்'காக கொடுக்கப்படுகிறது. ''டூ பெக் ரம் வித் சின்னபேகட் ஊருகாய்''ஐ விட ''அ மினி பியர் வித் அ

சிங்ல் ஆம்லட்'' 'ப்லெஸென்ட்' ஆக இருக்கும் என்கிறார்கள் எங்களவர்கள்.

✦ தமிழப்படங்க்ளிலிருந்து உதாரணங்கள் கொடுக்க வேண்டும் என்று எனக்கும் ஆசைதான். நீங்களும் சுலபமாக புரிந்துகொள்ள முடியும். நான் 'க்ரிடிஸைஸ்' செய்வது அதிகம். அப்படி செய்தால்தான் நீங்களும் நுணுக்கமான விஷயங்களை புரிந்து கொள்ள முடியும் ஆனால் அதற்கென்றே ஒரு கட்சி உருவாகி, இவன் தமிழ்ப்பட துரோகி என்று வம்புக்கு வருவார்களோ என்ற பயம்.

✦ எழுதுங்கள் எழுதுங்கள் 'பெர்ஃபெக்ஷன்' வரும்வரை எழுதிக் கொண்டே இருங்கள்.

திரைக்கதாசிரியர்களின் கையெழுத்து முத்து முத்தாக இருக்க வேண்டும். இது மிக மிக முக்கியம். திரையுலகில் எழுதும் வேலையில் இருக்கும் அனைவருமே அழகாக, தெளிவாக, இடம் விட்டு எழுதவேண்டும். இல்லையேல் இயக்குனரிடம் நன்றாக திட்டு வாங்க வேண்டிவரும், வேலையும் போகலாம்.

✦ உலகின் தலை சிறந்த மற்றும் மதிப்பிற்குரிய தயாரிப்பாளரும் இயக்குனருமான சர் ரிச்சர்ட் அட்டன்பரோ (Sir Richard Attenborough) அவர்கள், ஜான் ப்ரிலே (John Briley) எழுதிய காந்தி தி ஸ்க்ரீன்ப்லே (Gandhi the screenplay) என்ற புத்தகத்தின் மதிப்புரையில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

✦ 'If Gandhi should fail, It will certainly not be the fault of the writer, since I believe it is based on as fine a screenplay as I have ever read' என்று. அதாவது–.

''காந்தி படம் தோல்வி கண்டால் அது கண்டிப்பாக திரைக்கதாசிரியரின் தவறாக இருக்காது. ஏனெனில் இதுவரை இப்படிப்பட்ட ஒரு சிறப்பான திரைக்கதையை நான் படித்ததில்லை என நம்புகிறேன்'' என்று. Sir Richard Attenborough போன்ற உலகம் போற்றும் தயாரிப்பாளர் இயக்குனர் நம்மில் இருக்கிறார்களா என்பது சந்தேகமே. நன்கு அனுபவப்பட்ட ஒரு இயக்குனர் இப்படி பாராட்டும்படியாக, அவருக்கு தேவையான எல்லா விஷயங்களையும் உள்ளடக்கி ஒரு திரைக்கதையை எழுதிக்கொடுத்து படத்தை வெற்றி அடையச்செய்தால் அதுவே ஒரு திரைக்கதை எழுத்தாளனுக்கு கிடைத்த பெரும் வெற்றிதான்.

# கதாபாத்திரம் (Character)

Character is the essential foundation of your screenplay. It is the heart and soul and nervous system of your story என்று Hollywood திரைக்கதாசிரியர் ஸிட்ஃபீல்ட் (Syd field) சொல்கிறார்.

அதாவது, ''கதாபாத்திரம்தான் உன் திரைக்கதைக்கான முக்கிய அடித்தளம். அது கதையின் இதயம், ஆன்மா மற்றும் நரம்பு மண்டலம்'' என்று பொருள் படுகிறது.

கதாபாத்திரம் :

1. ஒரு காரியத்தை செய்ய
2. அவனுடைய பார்வையில் உலகை பார்க்க
3. வித்யாசமான நடவடிக்கைகளை காட்ட
4. வெளித்தோற்றத்தில் ஒருவன் எப்படி என்பதை காட்ட
5. ஒருவனின் நடத்தை சுபாவத்தை காட்ட.

கதாபாத்திரம் இல்லையேல் நடவடிக்கை இல்லை.

யார் அது என்றாலே அது ஒரு கதாபாத்திரம்தானே.

- ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுக்கென்று ஒரு வடிவம், குணம், நடை, உடை, பாவனை, நடத்தை, பேசும் விதம், அசைவுகள் (Body Language) ஈர்ப்பு, விருப்பு, வெறுப்பு இன்னபிற இருக்கின்றன.

- கை ரேகைகள் இந்த உலகில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாக இருக்கும் என்பதைப் போலவே குணாதிசயங்களும் இருக்கும். அந்த குணாதிசயத்திற்கு தகுந்தவாறு அவன் இந்த உலகை பார்க்கிறான். அதைத்தான் கதையில் 'கண்ணோட்டம்' பாய்ண்ட் அஃப் வ்யூ (Point of View) என்பர். ஒரு கதாபாத்திரத்தின் பார்வையில் கேமரா மூலம் ஒரு காட்சியை பார்ப்பதையும் அவன் P.O.V. ல் என்று எழுதப்படுகிறது.

- ஒவ்வொரு கதாபாத்திரத்திற்கும் ஒரு தனித்துவம் இருக்க வேண்டும். அவனிடம் ஏதாவது ஒரு விசேஷம் இருக்கவேண்டும். ஒரு சாதாரண ஆளைப்பற்றி நாம் கதை சொல்லமாட்டோம். அவன் எதையாவது சாதித்திருக்கவேண்டும் அல்லது சாதிக்க வைக்க நாம் அப்படிப்பட்ட ஒரு கதாபாத்திரத்தை தயார் செய்கிறோம்.

அதன்பின் அவனுக்கு ஈடு கொடுக்கும்படியாக கதாபாத்திரங்களை உருவாக்குகிறோம். அவர்களுக்கு துணையாக இருந்து நடவடிக்கைகளை நடத்த வித்தியாசமான உப கதாபாத்திரங்களை உருவாக்குகிறோம்.

- கதாபாத்திரங்களை முக்கியமாக மூன்று வகையாகபிரிக்கிறோம் அதாவது மூல, முக்கிய, உப கதாபாத்திரங்கள் அல்லது, மெய்ன் பெரிய, சின்ன கதாபாத்திரங்கள் என்று.

- பொதுவாக ஒரு கதையை 2½ மணி நேர திரைப்படத்திற்காக திரைக்கதையாக விரிவாக்கம் செய்யும்போது இன்னும் பல முக்கிய உப கதாபாத்திரங்களை உருவாக்கி சேர்க்க வேண்டிய அவசியம் வரும்.

- அந்த 2½ மணிநேரம் ஒரு கதாபாத்திரத்தை முக்கியப் படுத்தி காட்டவே போதுமானதாக உள்ளது. இரண்டு மூன்று கதாபாத்திரங்களுக்கு சம அந்தஸ்து கொடுக்க வேண்டுமென்றால் நேரம் போதாது. யாராவது ஒருவரைத்தான் முக்கியப்படுத்தி, பெரிது படுத்திக்காட்டவேண்டும். எதிலும் விதிவிலக்கு உண்டு.

- நாம் ஒரு கதையை கண்ணால் பார்க்க காட்டும் பொழுது காதாபாத்திரத்தின் கடந்தகால நிகழ்கால பின்னணி என்ன? அதாவது அவர் யார்? எங்கிந்துவந்தவர்? எப்படிப்பட்டவர்? அவரின் இன்றைய நிலை என்ன? என்ன செய்து கொண்டிருக்கிறார்? குடும்பத்தாருடன் எப்படி? நண்பர்களுடன் எப்படி? தனிமையில் எப்படி? என்பனவற்றை தெளிவுபடுத்தி விடவேண்டும். அப்பொழுதுதான் அந்த கதாபாத்திரம் ரசிகர்களின் மனதில் நன்கு பதியும். பின் அவரைப்பற்றி எந்த சந்தேகமும் இல்லாமல் மேற்கொண்டு அவர் நடவடிக்கைகளை கண்டு ரசிப்பர்.

- படத்தில் வரும் ஒவ்வொரு கதாபாத்திரமும் வித்யாசமானதாக விசேஷத்தன்மை உள்ளதாக இருக்கவேண்டும் அந்த வகைப்பட்டவேறுபாடு (Variety) இருந்தால்தான் ரசிகர்களை சுவாரஸ்யத்துடன் கதையில் ஒன்றி திளைக்கச்செய்ய முடியும்.

- சில நல்ல படங்களை பார்த்துவிட்டு வந்து ''அந்த நடிகர் அந்த கதாபாத்திரமாகவே வாழ்ந்தார். அப்படியே பாத்திரத்துடன் ஒன்றிப்போய் நடித்தார்'' என்கிறோம். அப்படிப்பட்ட உன்னதமான கதாபாத்திரங்களை உருவாக்கவேண்டும்.

- திரையில் ஒரு கதாபாத்திரத்தை காட்டும் பொழுது அந்த கதாபாத்திரத்தின் குணாதிசயங்கள் மற்றும் நடவடிக்கைகளை

முழுமையான கற்பனை உருவத்துடன், அவரைப்பற்றிய ஒரு நிச்சயிக்கப்பட்ட உருவநிலையை (Defenite Image) ரசிகர்கள் மனதில் பதியும்படி செய்தல் வேண்டும்.

- ஒரு கதாபாத்திரம் இப்படிப்பட்டது என்றால் அதற்கு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளை சேர்த்து அதன் அடிப்படையிலேயே அதை 'டெவெலப்' செய்யவேண்டும்.

- ஒரு வீட்டில் எல்லோரும் ஒத்தகுணம்படைத்தவர்களாக இருக்கமாட்டார்கள். குறைந்தபட்சம் ஒருவராவது மென்மை யானவராகவோ, வில்லன் குணம் உள்ளவராகவோ, கோணல் புத்தி உள்ளவராகவோ இருப்பார்கள் என்பது இன்றைய மறுக்க முடியாத உண்மை. அதன் படியே கதாபாத்திரங்களை அமைத்தால் தான் ரசிகர்கள் ரசித்து மகிழ்வர்.

- ஒரு கதாபாத்திரத்தை உருவாக்கியபின் அந்த கதா பாத்திரத்திற்குரிய வசனத்தில் மிக கவனமாக இருக்கவேண்டும். அதிக பிரசங்கித்தனமாகவும் இருக்கக் கூடாது, அவர் அறிவிற்கு குறைவாகவும் இருக்கக்கூடாது. எழுதுபவர்கள் அந்த கதாபாத்திரமாகவே வாழ்ந்தால்தான் சரியான வசனங்கள் வரும். கொஞ்சம் விலகினாலும் அதிபுத்திசாலித்தனமான வசனங்க ளெல்லாம் வந்துவிடும்.

- ஒரு விசித்திரமான நடவடிக்கை கொண்ட நபரைப்பார்த்தால் இவனை வைத்தே ஒரு கதை எழுதலாம் என்போம். அப்படிப்பட்ட கதாபாத்திரங்களை அறிமுகப்படுத்தவேண்டும்.

- படங்களில் இரண்டு கதாநாயகன் இரண்டு கதாநாயகி இரண்டு வில்லன் என்று பலர் எதிர்ப்பாக்கிறார்கள் இன்று. இப்படி வந்தாலும் இவர்கள் குறிப்பிட்டு சொல்லும்படி (Distinctively Different) முழுவதும் வித்யாசமானவர்களாக இருக்கவேண்டும்.

- படத்தின் முடிவில் ஒவ்வொரு முக்கிய கதாபாத்திரத்திற்கும் ஒரு முடிவை கொடுக்கவேண்டும். அதாவது அந்த கதாபாத்திரம் ஏதாவது ஒரு வகையில் முழுமை அடையவேண்டும்.

- கதையில் வரும் கதாபாத்திரங்களுக்கு பொருத்தமான நடிகர்களை கற்பனை செய்து கொண்டு எழுதுவதில் தவறில்லை. எதற்கும் இயக்குனரிடம் இந்த விஷயத்தை சொல்லி வைப்பது நல்லது.

- ஒரு சிறந்த நகைச்சுவை நடிகர் வந்தால் ரசிகர்கள் நிமிர்ந்து உட்காருவதைப்போல் ஒவ்வொரு கதாபாத்திரத்திற்குள்ளும்

ஏதாவது ஒரு சிறப்புத்தன்மை இருக்கும்படியாக அமைக்க வேண்டும்.

- கதாபாத்திரங்களைப்பற்றிய விவரத்தை ஸ்க்ரிப்ட்டுடன் இணைக்கும் பொழுது முக்கியமாக, கதாபாத்திரம் யார், அவர் முகலட்சணம், வயது, உடற்கட்டு, ஆரோக்கியம், நிறம், உடை, தலைமுடி அமைப்பு, 'பாடி- லே(அ)ங்வேஜ்', குணம், பொருளாதார நிலை, தொழில், திறமை, என்று இவை போக இன்னும் குறிப்பாக சொல்ல ஏதாவது இருந்தால், உ.ம். தலையில் கட்டி, முகத்தில் வெட்டு, கால் ஊனம், இப்படி என்று மேற்கண்டவற்றை எழுதிவிட்டால் இயக்குனர், கதாபாத்திரங் களை நாம் எந்த கண்ணோட்டத்தில் உருவாக்கியிருக்கிறோம் என்பதை புரிந்து கொண்டு பின் அவர் மூளையை பயன்படுத்தி செயல்படுவார்.

- ஒரு காரியத்தை சாதிக்க அல்லது ஒன்றை அடைய கதாபாத்திரங்களை உருவாக்கி கதையை புனைகிறோம். மற்றொன்று, ஒரு கதாபாத்திரத்திலிருந்தும் கதையை உருவாக்குகிறோம். உதாரணத்திற்கு-

நீங்கள் உங்கள் உறவினர் வீட்டிற்கு போகிறீர்கள். அவர்கள் தனிக்குடித்தனம் வந்து இரண்டு வருடங்கள் ஆகியிருக்கிறது அவர்கள் கணவன், மனைவி, 12 வயது மகள், 8 வயது மகன் என்று நான்குபேர்தான்.

''பையன் எப்படிப் படிக்கிறான்?'' என்று நீங்கள் கேட்க ''ஆறுமாதமாக சரியாக படிப்பதில்லை. யாரிடமும் பேசுவதில்லை. ரொம்ப 'டென்ஷன்' ஆக இருக்கிறான், 'டீச்சரை'யே திருப்பி அடிக்க ஆரம்பித்திருக்கிறான் என்று பள்ளிக்கூடத்திலிருந்து புகார் வந்து, என்னையும் என்மனைவியையும் அழைத்து எச்சரித்தார்கள்'' என்று தந்தை சொல்கிறார்.

இப்பொழுது இந்த பையன்தான் உங்கள் மெய்ன் கதாபாத்திரம். இவன் ஏன் இப்படி ஆனான் என்பதை அறிந்து கொள்ள கொஞ்சம் அவன் பின்னணியை தெரிந்து கொள்ள முற்படுகிறீர்கள்.

தாய், வேலைக்காரி, தந்தையின் அக்காள், பள்ளிக்கூட மாணவர்கள் என்று தனித்தனியாக அவர்களை விசாரிக்க, கிடைத்த தகவல்கள்:

தாய் - அவர் இரவில் வீட்டிலேயே நண்பார்களுடன் குடிக்க ஆரம்பித்துவிட்டார். பையன்தான் அவர்களுக்கு 'க்லாஸ்' முதல் எல்லா

வஸ்துகளையும் சப்ளை செய்யவேண்டும். கொஞ்சம் தவறு நடந்தாலும் அடிதான்.

வேலைக்காரி - சிறுவர்கள் பள்ளிக்குச் சென்றவுடன், 'க்ராஸ் ஸ்டிச்சிங் க்லாஸ்' அந்த 'க்லாஸ்' இந்த 'க்லாஸ்' என்று போய்விட்டு சிறுவர்கள் பள்ளியிலிருந்து வந்துவிட்ட பின் கூட இந்த அம்மா 'லேட்' டாக வருகிறார்கள். சிறுவர்கள் இருவருக்கும் எப்பொழுதும் சண்டைதான்.

தந்தையின் அக்காள் - அந்தப் பெண்ணின் தாய் ஒரு தளுக்கு சுந்தரி. பெண்ணை என் தம்பிக்கு கட்டிக்கொடுத்து விட்டு 'ஃப்ரீ' ஆகிவிட்டதால் அந்த சங்கம் இந்த சங்கம் என்று சுற்றிவருகிறாள். தன் பெண்ணையும் அப்படியே அதைகற்றுக் கொள் இதை கற்றுக்கொள் என்று சுற்ற வைக்கிறாள். என் தம்பி ஃபேக்டரியில் நன்றாக சம்பாதிக்கிறான். இளம் வயதில் எவ்வளவு சொல்லியும் படிக்காததாலும் இன்று கெட்ட நண்பர்கள் சகவாசத்தாலும் குடும்பத்தை பொறுப்புடன் நடத்த தவறிவிட்டான்.

பள்ளி மாணவர்கள் - இரண்டு மூன்று பையன்கள் இவனை அடிக்கடி மிரட்டி நன்றாக பிடுங்கிதின் கிறார்கள். (இந்த காலத்து 4th to 7th Std., மாணவர்கள் 'பஸ்' ஏறி சீட் கிடைக்கா விட்டால் உட்கார்ந்திருக்கும் நம் மடியில் 'அன்க்'ல்' என்று சொல்லியவாரு தொப்பென்று 'பே(அ)க்'கை வைக்கிறார்கள் இரண்டு வருடத்திற்கு முன்பு அன்க்ல் ப்லீஸ் என்றார்கள். இப்பொழுது அந்த 'ப்லீஸ்' இல்லை இவர்களிடம் ஒரு அடாவடித்தனம் மிக வேகமாக வளர்ந்து வருகிறது).

இப்படி ஒரு கதாபாத்திரத்திலிருந்து அவன் பின்னணிக்கு போனால் கதைக்கு தேவையான 'எலிமென்ட்கள்' கிடைத்து கதாபாத்திரத்திலிருந்து கதை உருவாகிறது.

கதைக்கு பொருத்தமான கதாபாத்திரங்களை உருவாக்கிக் கொள்ளும் சுதந்திரம் எழுத்தாளர்களுக்கு இருக்கும்பொழுது கதாபாத்திரங்களுக்கு என்ன பஞ்சம்....?

# வசனம் (Dialogue)

வசனங்கள் இல்லாமலும் படம் எடுக்கலாம். இப்படிப்பட்ட படங்கள் வருடத்திற்கு ஒன்றிரண்டு வந்தாலே ரசிகர்கள் அதை வெறுத்துவிடுவார்கள்.

காதல் காமத்தில் முடிவதால் அந்த அடிப்படையில் வந்த காதல் நெருக்கத்திற்கு வசனம் தேவையில்லை தான்.

அதிகம் பேசாதவர்களை நாம் விரும்புகிறோம். ஆனால் அவர்கள் நம்முடன் வாழும்போது எதற்கெடுத்தாலும் மௌனம் சாதித்தால் அவர்களை வெறுக்கிறோம்.

இது தொடர்புகள் (Communication) அதிகமாகியுள்ள காலம் ஒன்று பேசி தெரிவிக்கவேண்டும் அல்லது எழுதித்தெரிவிக்கவேண்டும் திரைப்படத்திற்கு எழுதித்தெரிவிப்பது ஒத்துவராது, எனவே வசனத்தை நாம் பயன்படுத்திக்கொள்கிறோம். நாடகங்களில் ஒருவரே பேசி நடிப்பதை 'மோனோலாக்' (Monologue) என்பர்.

நாம் என்ன பேசுகிறோமோ அதுவே வசனம்தான். ஆக்ஷன்னோடு ஆக்ரோஷமாக பேசுவது மட்டும் வசனம் அல்ல.

திரைப்படத்தில் வசனத்தின் பயன்பாடுகள் :

- நடந்தது, நடந்துகொண்டிருப்பது, நடக்கவேண்டியது இவற்றை சொல்லி கதையை நகர்த்த
- கதாபாத்திரம் பேசும் வசனத்தின் வழியாக அதன் குணாதிசயங்களை தெரியப்படுத்த
- கதாபத்திரங்களின் உறவுமுறைகளை தெரியப்படுத்த
- கதாபத்திரங்களின் எண்ணங்களையும், மனவேறுபாடுகளையும் தெரியப்படுத்த
- கதாபாத்திரங்களின் உணர்ச்சிகளை வசனத்தோடு தெரியப் படுத்த ஒரு உ.ம் இருபதுவயது இளைஞனுக்கு தாய் மட்டும் இருந்து, அவள் சாகக்கிடக்கும் சூழ்நிலையில், அந்த இளைஞனின் எப்படிப்பட்ட சோக நடிப்பை காட்டினாலும், அந்த இளைஞன், ''உன்னை விட்டால் எனக்கு யாரும் இல்லையே அம்மா'' என்று

உணர்ச்சிபூர்வமாக வாய் திறந்து பேசுவதுதான நம் மனதை ஆழமாக தொடுகிறது. (இங்கு ஏன் வாய்திறந்து பேசுவதுதான் என்று எழுதுகிறேன் என்றால் அவன் வாய்திறந்து வசனம் பேசும் முகத்தை 'க்லோஸ் ஷாடி'ல் காட்டினால்தான் ரசிகர்களும் உணர்ச்சிபூர்வமாக அந்த காட்சியை அனுபவித்து அதில் ஐக்கியமாவார்கள் என்பதற்காக)

- நாம் திரைக்கதை எழுதும்போது காட்சிக்கு தேவையான முக்கியமான வசனங்களை எழுதிக்கொண்டு போகிறோம். கடைசியில் அதை சரிசெய்து எழுதுவது தொழில் ரீதியான (Professional) வசனகர்த்தாதான். அந்த 2½ மணிநேர சினிமாவிற்கு கதாபாத்திரங்களின் வசனங்களை சமன் (Balance) செய்து அந்தந்த கதாபாத்திரங்களுக்கு தகுந்தவாறு அந்தந்த நடையில் எழுதி மெருகேற்றி (Polish) கொடுப்பவர் அவர்தான்.

- ஒரு வேலைக்காரன் தன் முதலாளியை ஒருமுறை ஐயா என்றும் மற்றொருமுறை எஜமான் என்றும் அழைப்பது சகஜமாக இருக்கலாம். ஆனால் திரைப்படத்தில் அப்படி செய்தால் ஒரு ஒழுங்கு கெட்டுப் போகிறது போல் தெரியும். இது போன்ற சின்ன விஷயங்களிலிருந்து பெரிய விஷயங்கள் வரை வசனகர்த்தா சமன் செய்து ஒரு ஒழுங்கு முறையை கடைபிடிப்பார்.

- வார்த்தைகள் 'ரிபீட்' ஆவதை கண்டிப்பாக தவிர்க்கவேண்டும் உ....ம் 'வாங்க வாங்க, சௌக்கியங்களா, நான் சொன்ன இல்ல, ஆமா, ஆமா போன்ற ஆடியன்ஸ் மனதில் தெளிவாக பதியும் வார்த்தைகள். தவிர்க்க முடியாது என்றபட்சத்தில் பரவாயில்லை.

- ஒரு வசனகர்த்தாவுக்கும் இயக்குனரைப்போலவே உலக அறிவு, பொதுஅறிவு, புராணங்கள், காவியங்கள், சரித்திரம், அடிப்படை பூகோளம், அடிப்படை விஞ்ஞானம், சிறந்த உலக நாடகங்கள், சுயசரிதங்கள், நாவல்கள், உலக பண்பாடுகளையும், கலாச்சாரத்தையும் நம் பண்பாட்டுக்கும்கலாச்சாரத்திற்கும் ஒப்பிட்டுபார்க்கும் திறன், பல நாட்டு பழமொழிகள், அந்தந்த மதங்களின் வாழ்க்கைக்கான தத்துவங்கள், கட்டுபாடுகள், நெறிமுறைகள் வேறு மொழிகளில் உள்ள சிறப்புகள், அந்த மொழிகளின் உச்சரிப்புகள், இன்றைய மனிதனின் மனோநிலை, நாகரிகம், கல்வியில் வளர்ச்சி, தொடர்புகள், செய்தித் தலைப்புகள், டிவி நியூஸ், தொகுப்புகள், எல்லா வெற்றிப் படங்களையும் தொடர்ந்து பார்த்து அந்தப்படங்களின் வசனங்களைப்பற்றிய ஒருதீர்வு என்று பலதரப்பட்ட பிரிவுகளிலும் தெளிந்த அறிவு இருக்கவேண்டும். குட்டையில்

ஊறிய மட்டையாக இருந்து கொண்டு வசனம் எழுதினால் இன்றைய காலகட்டத்திற்கு எடுபடாது என்று தயக்கமின்றி சொல்லலாம்.

✦ பொதுவாக எல்லா விஷயங்களின் அடிப்படைகளையும் தெரிந்து வைத்திருந்து அவற்றை ஆங்காங்கே தூவிவிட்டால் ரசிகர்களுக்கு 'செவிக்குணவு' அளித்ததாகவும் இருக்கும் அல்லவா.?

✦ இன்றைய கால கட்டத்தில் ஒருவரிடம் பேசும்போது சுற்றிவளைத்து, திரித்து, அவரை பாராட்டி மடக்கிப்போட எப்படி சாதுர்யமாக பேசினாலும் 'அது இருக்கட்டும் இப்ப நீங்க வந்த விஷயம் என்ன' என்கிறார்கள்.

✦ இது அவசர உலகம். பேச்சுக்கு அதிக இடமில்லை. 'நறுக்காக நாலுவார்த்தையில் சொல்லவேண்டியதை சொல்லிட்டு போ' என்கிறார்கள்.

✦ இலக்கணத்துடன் பேசி, பழமொழிகளை சொல்லி உவமை களுடன் பேசினால் 'வந்துட்டார்ரா பெரியவரு' என்று கத்த கொட்டகையே 'கொல்' என்கிறது.

✦ பொதுவாக கவனிக்கும் பொழுது தொழிலுலகில் அதிகம் தொடர்புள்ளவர்கள் தமிழோடு ஆங்கிலம், கொஞ்சம் இந்தி என்று கலந்துதான் பேசுகிறார்கள் இன்று. இதில்தான் நாட்டின் வளர்ச்சியே உள்ளது.

✦ ஆசிரியர், மாணவர், படித்தவர், படிக்காதவர், நாகரிகத்தின் உச்சியில் இருப்பவர், இதில் அரைகுறையாக இருப்பவர், விவசாயி, முதலாளி, தொழிலாளி, டாக்டர், நர்ஸ், நோயாளி, வெவ்வேறு துறைகளில் உள்ள அதிகாரிகள், அவர்களின் கீழ் உள்ளவர்கள், சுவாமிகள், யோகிகள், வீரர்கள், விவேகிகள், காதலர்கள், ஜாலியானவர்கள், முன்கோபிகள், பயந்தவர்கள், மன நோயாளிகள், முரடர்கள், சாதுவானவர்கள், ரௌடிகள், கயவர்கள், வஞ்சகர்கள், காக்காய் பிடிப்பவர்கள், பிச்சைக்காரன், பைத்தியக்காரன். காமெடியன் என்று இப்படி இன்னும் பலவிதமான கதாபாத்திரங்களுக்கு தகுந்தவாறு மென்மையாக, வன்மையாக, சிரித்து, கோபமாக, மிரட்டி, அதட்டி, பயமுறுத்தி, மட்டம்தட்டி, நிதானமாக, படபடவென்று, மடமடவென்று, உஷாராக, சூக்ஷ்மமாக, திரித்து, மறைத்து பேசுதல் என்று இன்னும் பல வகை யான வசனங்கள் உண்டு.

✦ நவரசத்திற்கான அத்தனை வித வசனங்களும் உண்டு.

✦ மேலும் தஞ்சை தமிழ், மதுரை தமிழ் என்றும் பிராந்திய பேச்சு முறைகளும் இருக்கின்றன. எனவே, இவற்றில் எல்லாம்

தெரிந்தவராக இருப்பவரே சிறந்த வசனகர்த்தாவாக இருக்கமுடியும். அவர்தான் அதை செம்மையாகச் செய்வார்.

- இன்றைய காலகட்டத்தில் பேச்சில் அசத்தும் விஷயம் ஒன்று எதுவென்றால் வீட்டுக்கு வீடு வந்தும், ஸிக்னலிலும், நுகர்வோர் (Consumer Product) பொருட்களை விற்க வரும் இளைஞர், இளைஞிகளின் பேச்சு தான். குறைந்த நேரத்தில் பவர் ஃபுல்லான பேச்சு. நேரம் ஆக ஆக பேச்சின் 'பவர்' இன்னும் அதிகரித்துக் கொண்டேபோய் எப்படியும் 75% வெற்றியடைந்து பொருட்களை விற்றுவிடுகிறார்கள். உண்மையில் அது பேச்சு சாதுர்யம்தான். இவர்களுக்கு 'ட்ரெய்னிங்' கொடுப்பவரிடம் அடாவடித்தனத்தை கற்றுக்கொள்ளாவிட்டாலும் அந்த பேச்சு சாதுர்யத்தை தெரியாத வர்கள் கற்றுத்தான் ஆகவேண்டும் என்று தோன்றுகிறது.

- 'உன்னையே நீ அறிவாய்' என்று புத்தர் சொல்லியிருக்கிறார். இந்த விஷயத்தை பெரிய ஆராய்ச்சிக்குரிய தத்துவமாக எடுத்துக் கொள்ளாமல் 'சிம்ப்ல்'லாக நமக்கு தேவையான அளவுக்கு எடுத்துக்கொண்டு, நம் திரைக்கதைக்கு நாமே முழு வசனமும் எழுதலாம் என்று தீர்மானிப்பதற்கு முன்பு தொழில் ரீதியான (Professional) வசனகர்த்தாக்களுக்கு இணையாக நம்மால் வசனம் எழுதமுடியுமா என்பதை மனசாட்சிக்கு விரோதம் இல்லாமல் அறிந்து, பின் ''ஓகே'' என்றால் எழுதலாம். இல்லை இன்னும் அந்த அளவுக்கு நாம் இல்லை என்பது தெரிந்தவுடன் கதைக்கும் காட்சிக்கும் தேவையான, முக்கியமான வசனங்களை எழுதுவதோடு நிறுத்திக்கொண்டு தொழில் ரீதியானவர் (Profes-sional) களுக்கே விட்டு விடவேண்டும்.

- அந்தந்தத்துறையில் தேர்ந்தவர்கள் அந்தந்த வேலையை செய்தால்தான் அந்த வேலை நிஜமாக முழுமை அடையும். தமிழ், உலகமெல்லாம் இருக்கலாம். ஆனால் உலக அரங்கில் தமிழ்த்திரைப்படம் அங்கீகாரம் பெறவேண்டும் என்றால் இப்படி சிலவற்றை நாம் அறிந்து நடந்து கொள்வது சிறப்பானது. வெறும் பெயருக்காக கலையில் 'கரப்ஷன்' செய்யாமல் இருப்பது நல்லது.

(நீங்கள் இப்புத்தகத்தில் படிக்கவிருக்கும் 'நம்மவள்' திரைக்கதைக்கான வசனம் என் ஒருவனால் எழுதப்பட்டது. இது முதல் ஸ்க்ரிப்ட். இயக்குனர் மற்றும் அவருடைய அஸோஸியேட் களுடன் கலந்து ஆலோசித்து எழுதாதது அப்படி எழுதிய பின் தொழில் ரீதியான வசனகர்த்தாவிடம் கொடுத்து 'பாலிஷ்' செய்யப்படும். அல்லது வசனங்கள் அவர்களைக் கொண்டே எழுதப்படும்.)

# நாடகப்படுத்தல் (Dramatization)

ஒரு சாதாரண நிகழ்ச்சியை, ரசிகர்கள் ரசிக்கும்படியாக பெரிதுபடுத்தி, அதன் மூலம் ஒரு கருத்தையும் தெரியப்படுத்தும் படியாக செய்வதை நாடகப்படுத்தல் (Dramatization) என்று, சினிமா உலகில் சுருக்கமாக சொல்லிக் கொள்கிறோம். மூத்த நாடகாசிரியர்கள் இதற்கு இன்னும் விரிவான விளக்கங்கள் தரலாம்.

இந்த 'ட்ரமடைஸேஷன்' பற்றி அக்காலத்திலிருந்து சிறுவர் களுக்கு சொல்லி வரும் ஒரு சின்ன கதை மூலம் காண்போம்:

ஒரு பாட்டி (கதாபாத்திரம்-Character) ஒரு மரத்தடியில் (இடம் - Location) வடை (காரண கர்த்தா) சுட்டுக் கொண்டு (ஆக்ஷன் Action) இருந்தாள். அந்த மரத்தின் மீது ஒரு காக்கை (கள நாயகன் - Villain) வந்து உட்கார்ந்தது. பாட்டி அந்தப் பக்கம் பார்க்க காக்கை ஒரு வடையை எடுத்து பறந்து வேறு மரத்தில் உட்காருகிறது. இங்கு காக்கை வடை எடுக்கும் 'ஆக்ஷன்'ல் பாட்டி அதை விரட்டும் எதிர்நடவடிக்கை (ரிஆக்ஷன் Reaction) யால் இருவருக்கும் இடையே பிணக்கு (conflict) உண்டாகிறது. இந்த நிகழ்ச்சியை ட்ரமடைஸ் (dramatize) செய்து ஜனங்களுக்கு ஒரு நீதியை சொல்ல சின்ன கதையாக வளர்த்தார்கள்.

அந்த காக்கை உட்கார்ந்திருக்கும் மாத்தடியில் ஒரு நரி வில்லாதிவில்லன் (Counter Villain) வருகிறது. காக்கையிடமிருந்து அந்த வடையை அடைய நரி தந்திரமாக காக்கையைப் பார்த்து ''காக்கையே நீ ரொம்ப அழகாக இருக்கிறாய் உன் குரல் இன்னும் அழகாக இருக்குமே ஒரு பாட்டு பாடேன் (வசனம் - Dialogue) என்று புகழ அந்த வசனத்தில் மயங்கி, காக்கை பாட்டுப் பாட வாயை திறக்க, வடை கீழே விழ, நரி அதை எடுத்துக் கொண்டு ஓடிவிடுகிறது.

இந்த குட்டிக் கதையில் புகழ்ச்சிக்கு மயங்கக் கூடாது. நாம் ஒருவரை ஏமாற்றினால் நாம் ஒருவரால் ஏமாற்றப் படுவோம் என்ற நீதி சொல்லப்படுகிறது. இதை ஒரு 'ஸிங்க்ல் எபிஸோட்' நேரத்திற்கு 20 to 22 நிமிடங்கள் வளர்த்து ட்ரமடைஸ் செய்து கொடுக்க சொல்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம் அந்த கோணத்தில், கதையில் கதாபாத்திரங்களின் குணாதிசயங்கள் மற்றும் நிகழ்ச்சியின் விஷயங்களை கவனிக்கும் பொழுது காக்கை வடையை தூக்கிக் கொண்டு போகும் பொழுது கண்டிப்பாக பாட்டி மனம் நொந்திருப்பாள். அதன் விளைவுதான் விதியின் ரூபமாக அங்கு நரி வந்தது என்றும், நமக்கு தெரியாத ஒரு சக்தி இதையெல்லாம் நடத்தி

வருகிறது என்பதையும் நிகழ்ச்சிகளில் சேர்க்க வேண்டும். பின் நாம் படித்தறிந்த படி நரியின் குணாதிசயங்களை கவனிக்கும் பொழுது நமக்கு தெரிவது நரி மிகவும் தந்திரமானது, எப்படிப்பட்ட மிருகத்தையும் ஏமாற்றிவிடும் என்பது. அப்படியே அதன் பலவீனத்தை (Weakness) கவனிக்க அது பயந்தாங்கொள்ளி என்பதும் தெரியவருகிறது. இங்கு ஸ்வாரஸ்யகரமாக நாடகப்படுத்த, நரியிடமிருந்து வடையைப் பிடுங்க மனித கதாபாத்திரத்தை போட்டால் அது அவ்வளவு பொருத்தமாக தெரியவில்லை! பின் யாரை போட்டால் 'அேக்ஷன்'னுடனும் வசனத்துடனும் 'ட்ரமடைஸ்' செய்ய நன்றாக இருக்கும் என்று யோசித்தால் ஒரு வேதாளம் பொருத்தமாக தெரிகிறது. ஏனெனில் வேதாளத்தை பெரும்பாலான கதைகளில் சிறியவர்கள் முதல் பெரியவர்கள்வரை விரும்புகிறார் போல்தான் சிறப்பித்து காட்டப்பட்டு வருகிறது. வேதாளத்தைப் பற்றிய ஒரு நல்ல உருநிலை (Image) தான் இவர்கள் மனதில் உள்ளது. மேலும் வேதாளம் நரியை பயமுறுத்துவதை தமாஷாக 'க்ரே(அ)ஃபிக் ஒர்க்'ல் காட்டினால் ட்ரமெடிக்காக இருக்கும் என்று வேதாளத்தை அந்த பாத்திரத்திற்கு (Roll) தேர்ந்தெடுக்கிறோம்.

இனி நீதி விஷயத்திற்கு வ்ந்தால், ஒருவன் ஏமாற்றி அடைந்த ஒன்று இன்னொரு ஏமாற்றுக்காரனுக்கு போகக்கூடாது. அது ஒரு நல்லவனுக்கு போகவேண்டும் என்பதால் வேதாளம் நரியை பயமுறுத்தி அடைந்த வடையை அந்தப் பக்கம் மிகவும் பசியோடு வந்த ஏழைச் சிறுவனுக்கு லட்டாக மாற்றி கொடுப்பதாக கதையை முடிக்கிறோம். இப்படி ரசிக்கும்படியாகவும், ஞாயம், தர்மம்தான் ஜெயிக்கும் என்பதையும் அடிப்படையாக வைத்தே ட்ரமடைஸ் செய்து கொண்டு போகலாம் நீங்களே ட்ரமடைஸ் செய்து பாருங்கள்!

(Dramatization) என்ற வார்த்தை ட்ராமா (Drama) என்ற வார்த்தையின் தொடர்பாதலால் காட்சிகளில் உணர்வுபூர்வமான வசனங்களுக்கும், கதாபாத்திரங்களின் அசைவுகளுக்கும்தான் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுவதாக ஆகும். சில சூழ்நிலைகளில் வசனமே இல்லாமல் ஃபோடோகிராஃபி உதவியால் பாவத்தை காட்டியே ஒரு காட்சியை 'ட்ரமடைஸ் செய்யலாம்.

உதாரணத்திற்கு, காதலின் ஆரம்பக்கட்டத்தில் இருக்கும் காதலர்கள் சந்திக்கிறார்கள். அப்பொழுது காதலியின் அண்ணன் அங்கு வந்து காதலனை மிரட்ட காதலனை வசனம் ஏதும் பேச விடாமல் அவன் மனத்தில் உள்ளதை தெரிவிக்க, அவனிடம் ஒரு பந்து வந்து விழ, அதை அவன் எடுத்து குஷியாக சிரித்த முகத்துடன் பந்தை எதிர்பார்த்து நிற்கும் பையனுக்கு வீசுவதை காட்டுகிறோம்.

இந்த பாவனையிலிருந்து 'நீ என்ன மிரட்டினாலும் எங்கள் காதல் தொடரும் எனும்படியான வசனத்தை சொன்னதாக புரிந்து கொள்ளலாம்.

# காட்சியை பண்படுத்தல் (Treatment)

Process or Manner of Dealing with or behaving towards person or thing; medical care or attention என்று ஆங்கில அகராதியில் Treatment என்ற பதத்திற்கு அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது.

அதாவது மனிதனிடமோ அல்லது வேறு ஒன்றிடமோ நடந்து கொள்ளும் முறை; மருந்திட்டு காப்பது அல்லது அக்கறை காட்டுவது, என்பதாகும்.

முறை, நடத்தும் முறை, மருத்துவமுறை, சிகிச்சை முறை என்றுதான் LIFCO ஆங்கில தமிழ் அகராதியில் அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது. திரைக்கதைக்கு சம்மந்தப்பட்ட எந்த அர்த்தமும் 1970-க்கு முன் வந்த அகராதிகளில் கிடைக்கவில்லை. இதன் காரணமாகவோ என்னவோ நம் திரைப்பட உலகில் இந்த வார்த்தையை பயன்படுத்த பலர் அப்போது தயங்கினார்கள், அநேகமாக, திரைப்படம் வளர்ச்சி அடைந்ததும் இந்த பதத்தை அவர்கள் உபயோகத்திற்கு பொருத்தமாக இருக்கிறது என்று பயன்படுத்தியிருக்கலாம்.

- ஒரு நோயாளியோ அல்லது உடல் பரிசோதனைக்காக போகிறவரோ, மருத்துவமனைக்கு சென்றால் அங்கு சுத்தமான படுக்கை, தலையணை, படுக்கை விரிப்பு, போர்வை, மற்றும் நல்ல வெளிச்சம் நல்ல வாசம், நல்லமருந்து, நல்ல உபகரணங்கள் நல்ல சூழ்நிலை, நல்ல ம்யூசிக், நல்ல நர்சுகள், நல்ல டாக்டர்கள் இத்யாதிகள் இருந்தால்தானே நல்ல 'ட்ரீட்மென்ட்,' நல்ல 'ரிசல்ட்', சரியான 'ரிபோர்ட்' கிடைக்கும். அதுபோலவே கதையில் வரும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் எல்லாவிஷயத்திலும் சரியானபடி 'ட்ரீட்' செய்யப்பட்டால்தான் அந்த காட்சி சிறப்பாக இருக்கும்.
- எப்படிப்பட்ட இடத்தில், எப்படிப்பட்ட சூழ்நிலையில் கதாபாத்திரங்களின் எந்தமாதிரியான நடவடிக்கை, எந்த அளவுக்கு வசனம் மற்றும் அசைவுகள் இருக்கவேண்டும் (உட்கார்ந்து கொண்டு, நடந்துகொண்டு, காபிகுடித்தவாறு, ஏதாவது சாப்பிட்டவாறு, வேலை செய்தவாறு இன்னும் பிற) என்பதை, ஒரு நடவடிக்கையில் ஆரம்பித்து, நடத்தி, முடிக்க எழுது கிறோமோ அதை 'ட்ரீட்மென்ட்'ன் 50% வேலை என்கிறோம், அடுத்த 50% வேலையை இயக்குனர் திரைக் கதையில் எழுதி யிருப்பதை எப்படி படப்பிடிப்பு இலக்கணத்திற்கு உட்பட்டு 'ஷாட் அரேன்ஞ்மென்ட்,

லைடிங்ஸ், 'செட்ப்ராபர்டிஸ், பொருத்தமான இடம், பொருத்தமான நடிகர்கள் பொருத்தமான ஒப்பனை, உடை அலங்கரரம், 'காஸ்ட்யூம்ஸ்,' 'எடிடிங்', 'ம்யூசிக்' என்று இன்னும் பல விஷயங்களை கையாண்டு சிறப்பிக்கிறார் என்பதில் உள்ளது. வேலையும் அதிகம், அதனால்தான் அதற்கான சம்பளமும் அதிகம்.

+ ஆங்கிலப் படங்களில், சில காட்சிகளை 'ஃபேக்டரிகளில் அமைத்து அங்கு கதாபாத்திரங்கள் பேசுவதை காட்டியபடியே 'மெஷின்கள் வேலை செய்வதையும் காட்டுவார்கள். அது நம் கண்களை 'என்கேஜ்' செய்வதாகவும் இருந்து அந்த 'மெஷின்' எப்படி வேலை செய்கிறது என்ற டெக்னிகல் அறிவையும் கொடுக்க, அவற்றை 'ட்ரீட்மென்டில்' கலந்து கொடுப்பார்கள். இப்படி 10-15 நொடிகளில் பல நல்ல விஷயங்களையும், ஒழுக்கக் கேடுகளையும் ட்ரீட்மெண்ட் மூலம் சுட்டிக்காட்டி ஜனங்களுக்கு ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தலாம்.

+ பல சிறந்த நாவல்கள் படமாக்கப்பட்டு தோல்விப் படங்களானதற்கு மிக முக்கிய காரணங்களில் 'ட்ரீட்மெண்டும் ஒன்று. கதை எழுதியவரின் கருத்து ஆழத்தை புரிந்து ட்ரீட் செய்யும் திறம் திரைக்கதாசிரியருக்கு இருக்கவேண்டும்.

+ டி.வி ப்ரோக்ராமில் 70 வயதான மிக மதிப்பிற்குரிய சாதனை யாளர் ஒருவரை பேட்டி எடுக்கிறார்கள், அவர் பேசிக் கொண்டிருக்க நாவரண்டு இருமுகிறார். அங்கு 'கட்' செய்து பேட்டி எடுப்பவர் கேள்வி கேட்பதை காட்டி தொடர்கிறார்கள். இங்கு பார்வையாளரின் மனம் பாதிக்கப்படுகிறது. அந்தப் பெரியவர் நாவறண்டு இருமியதில் இவர்களின் நா வறண்டு ''பேட்டி எடுக்கும் மூஞ்சியைபாரு'மேனர்ஸ்' தெரியாதவர்கள்'' என்று திட்டுகிறார்கள். அந்த கோபம் தணியாமல் அந்த டிவி சேனலுக்கு ''ஏன் அவரை தண்ணீர் குடிக்கச் சொல்லவில்லை'' என்று எழுதிக் கேட்கிறார்கள். அதற்கு அவர்கள் ''தண்ணீர் குடிக்கச் செய்தோம் ஆனால் நேரம் போதாத காரணத்தால் அதையெல்லாம் காட்டவில்லை. உங்களுக்கு குறைந்த நேரத்தில் முடிந்த அளவு நிறைய விஷயங்களை கொடுக்க இப்படி செய்தோம்'' என்று பதில் எழுதுகிறார்கள் என்றே வைத்துக்கொள்வோம். ஆனால் இப்படி பார்வையாளர்களின் மனம் 'டிஸ்டர்ப்' ஆகும்படி ஒரு காட்சியை படம் எடுப்பதை கெடுதலான ட்ரீட்மெண்ட் (Bad Treatment) என்று தேர்ந்த திரைக்கதாசிரியர்கள் கண்டிப்பாக சொல்வார்கள்.

''பேப்பர்''ல் படுத்திருக்கும் கதையை திரைக்கதையாக திரையில் 'டைம்' மற்றும் டைமிங்' உடன் நிழலாடவிட நாம் செய்யும் எல்லா செயலுமே 'ட்ரீட்மெண்ட்' தான் என்று சொல்லலாம் அல்லவா?

## காட்சி (Scene)

- பல உறுப்புகள் சேர்ந்து நம் உடல் எப்படியோ அப்படித்தான் பல காட்சிகள் சேர்ந்தது ஒரு திரைக்கதை, திரைப்படம். ஒரு உறுப்பு சரியாக வேலை செய்யாவிட்டாலும் உடல் சோர்ந்து விடுகிறது. அப்படியே, ஒரு காட்சி சரியில்லை என்றாலும் கதையின் ஓட்டம் பாதிக்கப்படும்.
- ஒவ்வொரு காட்சியும் படத்தை சுவாரஸ்யமாக நடத்திச் செல்ல அமைக்கப்பட்டவையாகும். அது நீண்ட (பெரிய) காட்சியாகவும் இருக்கலாம் குறுகிய (சிறிய) காட்சியாகவும் இருக்கலாம். அது காட்சியின் தன்மையைப் பொருத்து அமைவது. மொத்தத்தில் ஒவ்வொரு காட்சியும் ரசிகர்களின் மனதை திருப்திபடுத்து வதாக இருக்கவேண்டும்.
- ஒரு காட்சிக்கு மூன்று விஷயங்கள் மிக முக்கியமானவை
  - a) எந்த இடத்தில் (கோயிலா, வீடா, அலுவலகமா, ஹோட்டலா இ.பிற)
  - b) எந்த நேரம் (காலையா, பகலா, மாலையா, இரவா இ.பிற)
  - c) உள்ளேயா, திறந்த வெளியிலா (கோவிலுக்கு உள்ளா, வெளியிலா, வீட்டின் உள்ளா வெளிப்புறமா, அலுவல கத்தின் உள்ளா வெளியிலா இ. பிற)
- வீட்டின் படுக்கையறையில் ஒரு சம்பவம் நடப்பதைக் காட்டி பின் அதே வீட்டின் சமையலறையில் ஒரு சம்பவம் நடப்பதைக் காட்டினாலும் அதுவேறு வேறு காட்சி என்றுதான் கருதப் படுகிறது. இவற்றுக்கு நாம் வேறு வேறு காட்சி எண்களோ அல்லது உபகாட்சிகளின் எண்களோ கொடுக்கிறோம். இவை எல்லாமே இயக்குனரின் படப்பிடிப்பு (Shooting) வசதிக்காகவும் 'கன்டின்யுடி'க்காகவும் செய்யப்படுபவைதான்.
- ஒவ்வொரு காட்சிக்கும் ஆரம்பம் - மத்தியம் - முடிவு என்று உண்டு (இதை பின்னால் காட்சி விளக்கத்தில் பார்க்கலாம்.)
- காட்சிகள் மொழுக்கை (Flat) ஆக இருக்கக்கூடாது. ரசிகர்களின் கண் மூளை, காது இவற்றில் குறைந்தது ஏதாவது ஒன்றாவது காட்சியில் ஈடுபட்டு (Engage) இருக்கவேண்டும். அதற்கான இறையை போட்டுக்கொண்டே இருக்கவேண்டும்.

✦ ஒரு காட்சியை எழுத ஆரம்பிக்கும் முன் :

* எதற்காக இந்த காட்சி?
* எப்படிப்பட்ட இடத்தில் நடக்கிறது?
* காட்சியின் முக்கிய அம்சம் என்ன?
* கதாபாத்திரங்கள் பேசவேண்டிய விஷயங்கள் என்ன?
* அந்த வசனங்கள் மூலம் தெரியபடுத்தவேண்டியவை எவை?
* கதாபாத்திரங்களின் நடவடிக்கைகளை எப்படி சினிமாக் கலையோடு (Cinematic) காட்டவேண்டும். அப்படி காட்ட இவர்களின் நடவடிக்கைகளை எப்படி அமைப்பது. ஸினிமே(அ)டிக்' என்பதில், பார்ப்பதற்கு அழகான, மனத்தை ஈர்க்கும்படியான, காட்சிக்கு தகுந்த சம்பந்தப்பட்ட பொருட்களுடன் அவர்களின் அசைவுகளில் ஒரு தாளகதி (Rhythm), ஸ்டைல் (Style) இ.பிற அடங்குகின்றன.
* காட்சியை எங்கிருந்து யாரிடமிருந்து அல்லது எதனிட மிருந்து ஆரம்பித்து நடத்தி எங்கு யாரிடம் அல்லது எதனிடம் முடிக்கவேண்டும்?
* முழுக்காட்சியும் பார்வையாளரின் மனதில் பதிய எவற்றை யெல்லாம் கண்ணில் படச்செய்ய வேண்டும்?
* காட்சியின் தன்மையை தெரியபடுத்த எப்படி 'ட்ரீட்' செய்யலாம்?
* ஒலித்தாக்கங்கள் (Sound Effect) ஐ எப்படி எழுதுவது?
* முடிந்த காட்சியின் முடிவை வைத்து அடுத்த காட்சியை எப்படி ஆரம்பிப்பது?
* ஒரு காட்சியில் என்னவெல்லாம் காட்ட முடியும் என்பதை சேகரித்துக் கொண்டு அதில் தேவைப்பட்டதை காட்சியின் நேரம், உணர்வு அலைகளின் (Tempo) அளவுக்கு எப்படி எடுத்துக்கொள்ள வேண்டும்?

ஒவ்வொரு காட்சியிலும் 'லொகேஷன்'க்கு எவ்வளவு 'ஸ்கோப்', கேமிராவுக்கு எவ்வளவு 'ஸ்கோப்', இப்படி 'லைடிங்', 'காஸ்ட்யூம்', 'ப்ராபர்டீஸ்', வசனம், இசை என்று பலவற்றுக்கும் எவ்வளவு 'ஸ்கோப்' இருக்கிறது என்பதை அலசிப்பார்ப்பது.

இத்யாதிகளை யோசித்து பரிசீலித்து எழுதியும் செயல்பட்டால் தான் அந்த காட்சி சிறப்பாக இருக்கும்.

இந்த காட்சிக்கு இவ்வளவு நேரம்தான் என்று கணக்கிட்டு எழுதுகிறோம். அப்பொழுதுதான் அது விறுவிறுப்பாக கச்சிதமாக இருக்கும் என்று தீர்மானித்து அதற்கு தேவையான வசனங்களை எழுதுகிறோம், அல்லது எழுதவைக்கிறார்கள். ஆனால் அந்த காட்சியில் வரும் பல 'ஷாட்' (Shot) களை எவ்வளவு நேரம் காட்ட வேண்டும் என்பதை இயக்குனர்தான் தீர்மானிக்கிறார்.

✦ நான் தேடிப்பார்த்து படித்த 'ஹாலிவுட்' திரைக்கதைகளில் காட்சி எண்கள் கொடுத்து பார்த்ததில்லை வெறும் இடம் (Location) வேளை (Day-Night etc ,) உள்ளா வெளியா (Interior - Exterior) என்பதை மட்டும்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் இங்கு நம் படங்களுக்கு காட்சி எண்கள் போட்டு எழுதுவதைத்தான் பார்த்துள்ளேன். அதைத்தான் நாமும் கடைபிடிக்க வேண்டியுள்ளது, நல்லதுதானே.

✦ எதுவாக இருந்தாலும் அதை படம்பிடிக்க ஆரம்பித்து நடுவில் 'கட்' செய்யாமல் காட்டி முடித்தால் அது ஒரு 'ஷாட்' என்று சொல்லப்படுகிறது. உதாரணத்திற்கு – ஹீரோவும் ஹீரோயினும் பேசும் காட்சி: முதலில் ஹீரோவைமட்டும் காட்டி அவன் ஹீரோயினை நோக்கி பேசுவதாக காட்டுகிறோம், பிறகு ஹீரோயினை மட்டும் காட்டி அவன் சொல்வதை கேட்டுக் கொண்டிருப்பதாக காட்டுகிறோம். மறுபடியும் இரண்டுபேரையும் காட்டி பேசிக்கொண்டு போவதை காட்டுகிறோம் இவை ஒவ்வொன்றும் ஒரு ஷாட் இப்படி ஆக்ஷனோடு காட்டவும் ஒரு காட்சியில் நிறைய ஷாட்கள் வரும். இப்படி ஷாட்களாக பிரித்து பாவங்களோடு காட்டவில்லையென்றால் அது 'ஸ்டேஜ்'ல் நாடகம் பார்ப்பது போல் இருக்கும்.

பல காட்சிகளை கொண்டு ஒரு குட்டி கதை போன்று தொடர்ந்து நடக்கும் மொத்த சம்பவம் 'ஸீக்வென்ஸ்' (Sequence) என்று அழைக்கப்படுகிறது. உ.ம் அந்தமானுக்கு டூர் சென்ற இளைஞன் அங்கு சுனாமியால் பாதிக்கப்பட்டு சென்னை திரும்புகிறான் அவன் அந்தமான் ஏர்போர்டிலிருந்து சென்னையிலுள்ள தன் தந்தையுடன் ஃபோனில் பேசுவது, சென்னையிலிருந்து தந்தை அவனுடன் பேசுவது அப்படியே உறவினர்கள் சென்னையில் பேசிக் கொள்வது, நண்பர்கள் பேசிக்கொள்வது, கஷ்டப்பட்ட அவன் வருகைக்காக அனைவரும் அவனுக்காக சென்னை ஏர்போர்டில் காத்திருப்பது, ப்லேன் தரை இறங்குவது, இளைஞன் ப்லேனிலிருந்து இறங்கி வர அனைவரும் வரவேற்பது, அவனுடைய தங்கை அவனுக்கு ஒரு சாக்லேட்கொடுத்து கட்டி அணைக்க, அவன் சுனாமியில்

பட்டதை ஒரு கணம் ஃப்ளே(அ)ஷ் பே(அ) க்கில் நினைத்து பார்ப்பது என்று இதில் வேறு வேறு காட்சிகள் உள்ளன. இதில் சில வசனத்துடனும் சில வசனமில்லாமலும் இருக்கலாம் ஆனால் இந்த ஒட்டுமொத்த காட்சிகளும் சேர்ந்து ஒரு 'ஸீக்வென்ஸ்' ஆகிறது.

✦ வீட்டில் நிம்மதியாக அமர்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருக்கும் பெண்களும் ஆண்களும், நடனம் போட்டி, 'க்ரே(அ)ஃப்ட் ஒர்க், சமையல், பாட்டுப் போட்டி போன்ற நிகழ்ச்சிகளை பார்த்துக் கொண்டிருக்கும் போது அவர்கள் சில விஷயங்களை க்லோஸ் ஷாட்டில் பார்க்க விரும்புவார்கள் அப்படி அதை காட்டாவிட்டால் கேமரா என்ன எருமை மாட்டைப்போல் நிற்கிறதே என்று திட்டுகிறார்கள். பாட்டு போட்டிகளில் ஜட்ஜ்கள் டம்மியாக தெரியக்கூடாது என்றுஅபத்தமாக அவர்களை தலையாட்டி ரசிக்க, கேமரா ஆபரேடர்கள் சொல்ல, அது 'சின்க்' ஆகாமல் அவர்கள் இமேஜையே கெடுத்துவிடல். ஒருவர் ஸேக்ஸஃபோன் வாசிப்பார், ஆனால் இவர்கள் காட்டுவது கீபோர்டாக இருக்கும். இதைப்பற்றி எத்தனைப்பேர் அந்தந்த சேனலுக்கு எழுதிப்போடுகிறார்களோ நமக்கு தெரியாது. ஆனால் தியேட்டரில் காசுகொடுத்து படம் பார்க்கும்போது இப்படி கதைப் போக்கில் 5-6 ஸீன்கள் ரசிகர்களின் மனதை 'டிஸ்டர்ப்' செய்யும்படியாக இருந்துவிட்டால் 'படம் டப்பா' என்று வெளியே வந்ததும் கேட்பவர்களிடம் சொல்லி விடுவார்கள்.

✦ தெருவில் மேளதாளத்தோடு சாமியோ கல்யாண நிகழ்ச்சியோ வேறு ஏதாவது நிகழ்ச்சியின் ஊர்வலமோ வந்தால் அதை நாம் முதலில் பறவையின் பார்வையில் (Bird Eye View) பார்ப்பதைப் போன்று மாடியிலிருந்து முழுவதையும் பார்க்க ஆசைப் படுகிறோம். பிறகு ஊர்வலம் நம் வீட்டிற்கு முன் வர, விவரமாக (Detail) எல்லாவற்றையும் அருகிலிருந்து பார்க்க மாடியிலிருந்து தெருவிற்கு வந்து பார்க்கிறோம். மேலும் நெருங்க முடியாத போது கண்ணால் நெருங்கி உற்று பார்க்கிறோம். இதையே படத்தில் கேமரா மூலமாக செய்கிறோம். இப்படி செய்வதால் அந்த காட்சி ஒரு தாளகதியோடு (Rhythm) ரசிகர்கள் மனதில் பதியும். இப்படியே சில காட்சிகளில் எப்படி நெருங்கினோமோ அப்படியே விலகினால் அதிலும் ஒரு தாளகதி இருப்ப தென்னவோ உண்மை.

நாம் ஒரு நல்ல படத்தைப்பற்றி நினைக்கும்போது அந்தப்படத்தின் ஒரு நல்ல காட்சிதான் ஞாபகத்திற்கு வருகிறது. அப்படி ஒவ்வொரு காட்சியும் சிறப்பாக அமையும்படி யோசித்து எழுதினால் படம் முழுமை அடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

# திரைக்கதைக்கு பொதுவான சில விஷயங்கள்

ஒரு கதாபாத்திரத்தின் பின்னணி, சரித்திரம் தெரிந்திருந்தால் தான் அந்த கதா பாத்திரத்தின் கதையை ரசிக்க முடியும் என்பதற்கு ஏற்ப இந்த மனிதர்களுக்காக நாம் கதை எழுதுவதால் முதலில் அவர்களைப்பற்றி தெரிந்துகொள்ள வேண்டும். அப்படியென்றால் இந்த உலகின் அடிப்படை விஷயங்களை தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

மனிதன் என்பவன் யார்? இதற்கு சான்றோர்கள்; கல்லாகி, மண்ணாகி, புல்லாகி, பூண்டாகி, புழுவாகி, பூச்சியாகி, பறவையாகி, மிருகமாகி, மனிதனாகினான் என்றார்கள். அதுமட்டுமின்றி பூமியில் பிறந்த மனிதன், ஆகாயம், பூமி, நீர், நெருப்பு காற்று என்றபஞ்ச பூதங்களால் உருவாக்கப்பட்டவன் என்றும் விளக்கினர்.

சரி, பிறப்பு இறப்பு என்று ஒன்றிருக்கிறதே இது என்ன? ஏன்? அந்த உயிர் எங்கிருந்து வந்தது என்ற கேள்வி எழுகிறது. கோடானு கோடி வருட பரிணாமவளர்ச்சியால் படிப்படியாக எல்லாமே ஒன்றுக்கொன்று சம்மந்தப்பட்டு ஒரு நியதியில் நடக்கும்படியாக அமைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இதன்படி இயற்கையின் வினோதங்கள், அழிவுகள், அற்புதங்கள் இவற்றை கண்டு மனிதன் அவனுக்கு அப்பாற்பட்ட, கண்ணுக்கு தெரியாத ஏதோ ஒரு சக்தி இவற்றை செய்வதாக கருதினான்.

அதை சான்றோர்கள் பயன்படுத்திக் கொண்டு மனிதனை நெறிப் படுத்த, பயமுறுத்தி, பக்தியுடன் கொண்டுசெல்ல அந்த சக்திகளை கடவுள் என்று சொல்லி, அதற்கு பயந்து நடக்கும்படியாக விஞ்ஞானத்தோடு வழிமுறைகளை அமைத்தார்கள். அப்படியென்றால் கடவுள் இல்லையா என்ற கேள்வி எழுகிறது. உலகில் எல்லா விஷயங்களும் பரிணாமவளர்ச்சியால் ஏற்பட்ட இயற்கையின் விதிப்படி நடக்கிறது என்கின்றபோது மனிதனின் வாழ்க்கையும் விதிப்படி கர்ம வினைப்படி ஜன்மமாக நடக்கிறது என்று விவரிக்கிறார்கள். அதை நாம் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. ஆனால் பல உண்மை நிகழ்ச்சிகளை படிக்கும்போது அப்படியும் இருக்கலாம் என நினைக்கத்தோன்றுகிறது. படித்தறிந்ததால் அதை நம்பவேண்டியிருக்கிறது.

ஒருவன் ஏழாவது மாடியிலிருந்து கீழே விழுந்து ஹாஸ்பிடலில் சேர்க்கப்பட்டு, இரண்டு நாட்கள் கழித்து கண்திறந்த அவனுக்கு நர்ஸை கண்டதும் அவள் வாழ்க்கை விவரங்கள் அப்படியே தெரிகிறது. அதை அவன் நர்ஸிடம் சொல்ல அவள் அசந்து போகிறாள். இப்படிப்பட்ட அனுபவங்களை படிக்கும்போது நம் மூளையின் சக்தியை பற்றி யோசிக்க வேண்டியிருக்கிறது. இந்த மூளையை சான்றோர்கள் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஆராய்ந்து தலைவிதி என்றும், இந்த தலை விதியை தலையின் நடுவில் இருக்கும் உயிராகிய ஆன்மா (Super Computer) சுமந்து செல்கிறது என்றும் கூறியுள்ளார்கள்.

நாமும், எல்லாவற்றுக்கும் மூலம் (தாய் தந்தை) என்று இருப்பதுபோல் இந்த சக்திவாய்ந்த மூளையோடு இணைந்திருக்கும் உயிருக்கும் (ஆன்மா) ஒரு மூலம் இருக்கலாம் என்று சாதாரண அறிவோடு ஏற்றுக்கொண்டு அதை கடவுள் என்றும் ஏற்றுக் கொள்கிறோம்.

இப்படிப்பட்ட அடிப்படை விஷயங்களில் ஒரு ஸ்திரமான அறிவு இருந்தால்தான் எழுதும் எந்த விஷயத்திலும் ஒரு தெளிவு, ஆழம் இருக்கும். அது நாத்திகமாக இருந்தாலும் சரி என்று விஷயமறிந்தவர்கள் ஆய்ந்து சொல்வதையும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

Law of Karma is cause and effect. For every action there is an equal and opposite reaction.

அதாவது கர்மத்தின் விதி - காரணம், காரியம். ஒவ்வொரு நடவடிக்கைக்கும் அதன் சம அளவுக்கு எதிர் நடவடிக்கை உண்டு.

நாம் ஒருவரை கையால் அடித்தது 'ஆக்ஷன்'. நம் கையில் வலி ஏற்பட்டது, நம் கை பல லட்சத்தில் ஒரு பாகம் தேய்ந்தது, உஷ்ணம் மற்றும் சப்தஅலைகள் உண்டாகி காற்றில் கலந்தது, உடல் அதிர்வு, மன அதிர்வு இப்படி இன்னும் நமக்கு தெரியாத எத்தனையோ அந்த 'ஆக்ஷன்'க்கு சமமாக நடந்த அனைத்தும், 'ஈக்வல் அன்ட் ஆபோஸிட் ரிஆக்ஷன்'ல் அடங்கும்.

இதனை உள்ளடக்கி நம் கர்ம பலனை குறிக்க 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்று அனுபவஸ்தர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

தத்துவத்திலிருந்து இறங்கி, திரைப்படத் தொழில் நுட்பத்தின் படி 'அேக்ஷன்', 'ரிஅேக்ஷன்'ஐ பற்றி அறிய... நாம் தெருவில் நடந்து போய்க்கொண்டிருப்பதை 'அேக்ஷன் என்றும், நமக்கு பின்னால் வந்த ஒருவன் நம் சட்டையை இழுத்தால்', நாம் கோபத்துடன் அல்லது அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்ப்பதை 'ரியேக்ஷன்' என்றும் சொல்லப் படுகிறது.

காரணம்- காரியம், வினை-எதிர்வினை, விளைவு-எதிர்விளைவு, நல்லது-கெட்டது இவற்றால்தான் இந்த உலகம் இயங்குகிறது. என்பது சான்றோர் வாக்கு.

வறுமையின் **காரணத்தால்** திருடும் **காரியத்தில்** ஈடுபட்டான்.

நீ கெட்டிக்காரன் அதனால் உன்னிடம் வேலைக்கு சேர்ந்ததின் **விளைவு** அவன் கெட்டிக்காரன் ஆனான்.

**எதிர்விளைவு**, உன் கடைக்கு பக்கத்திலேயே அவன் கடை திறப்பது.

'சிம்ப்ல்' ஆக சொல்வதென்றால் நாம் பத்து ரூபாய் நல்லது செய்தால் பத்து ரூபாய் நல்லது கிடைக்கிறது பத்து ரூபாய் கெட்டது செய்தால் பத்து ரூபாய் கெட்டது கிடைக்கிறது. இந்த கணக்கை நம் ஆன்மா சுமந்து செல்கிறது. 'நோ எஸ்கேப்' தப்ப முடியாது. இது இயற்கையின் விதி.

சரி, இனி தொழில் விஷயத்திற்கு வருவோம்....

- மனிதனின் வால் எலும்பு இன்னும் மறையவில்லை, அதனால் அவன் முழு மனிதனாகவில்லை, இன்னும் மிருகத்தனம் அவனிடம் ஒட்டிக்கொண்டுதான் இருக்கிறதென்றாகிறது. அதனால்தான் வாய்ருசி விஷயத்திலும் காமப்பசி விஷயத்திலும் மிகுந்த அலைச்சல் பிடித்தவனாக இருக்கிறான் என்பதும் தெரியவருகிறது. என்னதான் அஹிம்சையை போதித்தாலும் வாரத்திற்கு ஒரு நாளாவது 'மட்டன்' வேண்டும் என்கிறான். அப்படியே என்னதான் ஆன்ம சக்தியைப் பற்றி எடுத்து சொன்னாலும், காமம் இயற்கையின் பசி, இயற்கையை என்னால் ஜெயிக்கமுடியாது என்கிறான். காமம் காற்றில் கலந்திருக்கிறது. சுவாசத்திலிருந்து அதை பிரித்து எடுக்க எனக்கு தெரியாது என்கிறான். எனவே இதிலுள்ள உண்மையை தெரிந்துக்கொண்டு எழுதவேண்டும்.

- இன்றைய கால கட்டத்தில் தொடர்ந்து படம் பார்க்க தியேட்டருக்கு வ்ருபவர்களில் முக்கால்பாகத்தவர் நடுத்தர வர்க்கத்திற்கும் கீழ் உள்ள உழைக்கும் வர்க்கம்தான். அவர்களில் பல பேர் கெட்ட பழக்கங்களுக்கு ஆளாகியிருப்பவர்கள். ஆனால் நல்ல ஒழுக்கம் உள்ளவர்களாக வாழவேண்டும், நமக்கும் ஒரு அடையாளம் (Recognition) வேண்டும் என்று எதிர்பார்ப்பவர்கள். இல்லையென்றால் கடவுள் பெயரால் விரதங்கள் இருந்து அந்த நாட்களிலாவது நாம் இந்த கெட்ட பழக்கங்களிலிருந்து விடுபட மாட்டோமா என்று ஏங்குகிறவர் களாக அவர்கள் இருக்கமாட்டார்கள். எனவே உள் மனதில் நல்லவர்களாக வாழவேண்டும் என்ற உணர்வு இவர்களுக்கு

இருந்துகொண்டே இருக்கிறது. அவர்களின் உள் இருக்கும் இப்படிப்பட்ட பல்வேறு உணர்வுகளுக்கு தகுந்தவாறு விஷயங் களை 'ப்ரெஸென்ட்' செய்யவேண்டும் என்பதை அறிந்து கதை, திரைக்கதை எழுதவேண்டும்.

- எல்லோருக்கும் எல்லாம் தெரிந்திருப்பது கடினம். ஆனால் எதை, யாரிடம், எதன் மூலம், எப்படி தெரிந்துகொள்ளவேண்டும் என்ற அறிவுக்கூர்மை இருக்க வேண்டும்.

- உலகளாவிய அத்தனை வகை திரைப்படங்களின் 'ஸப்ஜெக்ட்' களை கொண்டும் சிறு கதைகள் எழுதிப்பாருங்கள், முடியாது என்று நினைக்கவே நினைக்காதீர்கள். அதில் ஏதாவது ஒரு ஸப்ஜெக்ட் உங்கள் கற்பனைக்கு ஒத்து வரும். அது ஜன்ம அடிப்படையிலும் இருக்கலாம். கண்டிப்பாக எழுத்து திறமை வளரும்.

- கதை, திரைக்கதை எழுதுபவர்கள் எந்த ஒரு விஷயத்தையும், நடுநிலையோடும் (Neutral) அதற்கு ஒத்தும் (Positive) விரோதமாகவும் (Negative) கற்பனையில் எண்ணிப்பார்ப்பார்கள், அதில் கதையின் ஓட்டத்திற்கு தேவையானதை மட்டும் எடுத்துக்கொள்வர். (அனுபவம் மிக்க எழுத்தாளர்களுக்கு இந்த மூன்றும் ஒரு நொடியில் தோன்றி மறையும். அதனால்தான் பேட்டியின் போது இந்த மூன்றில் எது அவர்களின் மனதில் பதிந்து விடுகிறதோ அதை சொல்லிவிட்டு சங்கடத்துக்கு ஆளாவர்.)

- உலகிலுள்ள பணக்காரர்கள், ஏழைகள் அனைவருமே சுக துக்கங்களை எதிர்கொண்டு அனுபவிப்பவர்கள் தான். மனிதனின் வாழ்க்கையை இதுதான் நடத்திச் செல்கிறது. எனவே சுகத்தையும் துக்கத்தையும் எந்த ரூபத்தில் உருவாக்கி எந்த 'விகிதத்தில்' கலந்து எந்த 'விதத்தில்' கண்டுகளிக்க 'எப்படி' எழுதவேண்டும் என்பதை திரைக் கதை எழுதுபவர்கள் கண்டிப்பாக கவனத்தில் வைத்திருக்க வேண்டும்.

- ஒரு மனிதனின் வாழ்க்கையில் திருமணம் ஒரு முக்கியமான கட்டம். அது அவர்கள் இருவரின் வாழ்க்கையை நிச்சயிக்கிறது. அப்படிப்பட்ட திருமணத்திற்கு, ஆயிரம் பேரிடம் 'போய்' சொல்லி வரவழைத்து அவர்களின் ஆசீர்வாதத்தை பெற்று நல்வாழ்வு வாழுங்கள் என்று பெரியவர்கள் சொல்லிப் போனார்கள். அதை ஆயிரம் 'பொய்' சொல்லி ஒரு திருமணத்தை செய் என்று தங்கள் வசதிக்காக திரித்ததும் அல்லாமல் இன்னும் அதை ஞாயப்படுத்தி பேசுகிறார்கள்

என்றால் இவர்களைப்பற்றி நன்றாக தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது அவர்கள் மனம் எவ்வளவு கெட்டிருக்கிறது (Corrupt) என்பதை புரிந்துவைத்து எழுதவேண்டும்.

- ரோட்டின் டிஜிடல் ஸிக்னல் கௌன்டிங்கில் இன்னும் 4 வினாடிகள் இருக்கும்போதே கிளம்பிப்போகும் ஓட்டுனரைப் பார்த்து இது தவறில்லையா? இதில்தானே உன் ஒழுக்கமே தெரிகிறது என்று கேட்டால், சிரிக்கிறான் நம்மை கிண்டலாக பார்த்து. எப்படிப்பட்டவன் இவன் இவனுக்கு உலகை புரியவைக்க நாம எப்படி எழுதவேண்டும் யோசியுங்கள்.

- கடவுள் தன்னை கவனித்துக் கொண்டிருக்கிறான் என்ற ஒரு நம்பிக்கை இருந்தாலும், அவன் செய்த தவறுக்கு காரணம் காட்டி தன்னை மன்னிக்க வேண்டும் என்கிறான். காரண கர்த்தாக்களை தண்டியுங்கள் என்கிறான்.

- யாரையும் தன் 'ஸர்வைவல்'க்காக எதிர்பார்த்து இருக்கக்கூடாது தனக்கு என்று ஒரு நிரந்தர வேலை அல்லது தொழில், ஒரு நிரந்தர வருமானம் இருந்தால் போதும் என்ற ஏக்கத்தில் ஸ்திர நிலை இல்லாமல் இருக்கும் இளைஞர்களைப்பற்றி அறியவேண்டும்.

- இன்றைய இளைஞர்கள் தங்கள் கஷ்டங்களை யாரிடமும் சொல்லிக்கொள்ள விரும்புவதில்லை. அவர்களுக்கு அப்படிப் பட்ட நல்லவர்கள் கிடைக்கவில்லை. கூடஇருந்தே குழிபறிக்கிறார்கள். மனம் இறுகிப்போய்விட்டது. அதனால் சினிமாவில் நாயகன் ஒரு நல்ல மனிதரிடம் தன் கஷ்டங்களை சொல்லி வேதனை அடையும் போது இவன் உடைந்து போகிறான். இப்படிப்பட்ட விஷயங்களை தேர்ந்தெடுத்து திரைக்கதையில் புகுத்தலாம்.

- பலருக்கு கெட்டவைகளை செய்து பார்க்க வேண்டும் ஆனால் நல்லவராக வாழவேண்டும் என்பதுதான் ஆசை.

- இன்றைய இளைஞன் தன்னை யாருக்கும் எந்த விதத்திலும் குறைந்தவனாக நினைப்பதில்லை (இளைஞிகளும் இதில் சேர்கிறார்கள்). வெறும் நெனப்புதான் பொழப்பகெடுக்கும். இவனால் எவற்றை சாதிக்க முடியும். வாழ்க்கையில் எங்கெங்கு பணிந்து நடக்கவேண்டி இருக்கிறது என்பதை தெரியப் படுத்தும்படியாக எழுதுவது மிகமுக்கியம்.

- தன் கண்ணெதிரே, ஒரே நபர் தன் தம்பியின் சொத்தை அபகரித்தும், கள்ள நோட்டை மாற்றியும், தான் உத்யோகம்

பார்க்கும் அரசாங்க வேலையில் லஞ்சம் வாங்கி சம்பாதித்தும் செல்வாக்குடன் வாழ்வதை இவன் காண்கிறான். அவனைக் கண்டு இவன் ஆச்சர்யப்பட்டு ஏங்குகிறான், குழம்புகிறான். அந்த மனிதனால் எப்படி செல்வாக்குடன் வாழமுடிகிறது? இதற்கான காரண காரியங்கள் எவை? போனஜென்ம பலனா? இல்லை அந்த மனிதனின் கில்லாடித்தனமா? சிறிய தவறிழைத்தவர்களெல்லாம் சிறைச்சாலைக்கு போகும் போது இப்படிப்பட்டவர்கள் தப்பித்துக்கொண்டு எப்படி செல்வாக் குடன் வாழமுடிகிறது. அது எப்படிப்பட்ட கில்லாடித்தனம். ரௌடிகளும் செல்வாக்குடன் வாழ்கிறார்கள் ஆனால் அவர்கள் குறுகிய காலத்தில் அழிந்து போகிறார்கள். அப்படியென்றால் வீரத்தை, உடல்வலிமையை காட்டுவதை விட பொறுமையை கடைபிடித்து மொட்டை அடிப்பவன்தான் வெற்றிகரமாக வாழமுடியுமா என்ற அவன் P.O.V.ல் இன்னும் யோசித்து திரைக்கதையை எழுதிப்பாருங்கள்.

✦ ஒரு சாதாரண கெட்ட பழக்கங்கள் உள்ள ரசிகன், படத்தில் வரும் உயர்ந்த கதாபாத்திரமாக மாற, இவனிடம் உள்ள ஏதாவது ஒரு குறையை (weakness) கதாநாயகனிடம் இருப்பதாக காட்டினாலே போதும் இவன் கதாநாயகனாக மாறிவிடுகிறான்.

✦ உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவை மூன்றும் போதுமான அளவு கிடைத்துவிட்டால் எல்லோருமே நல்ல வர்கள் தான். அது அதிகமாகிவிட்டால் ஆணவம் தலை தூக்குகிறது. குறைந்துவிட்டால் அடாவடித்தனம் ஆரம்பம் ஆகிறது.

✦ ''உன் கணக்கும் சரிதான் அவன் கணக்கும் சரிதான் ஆனால் மேல் இருப்பவன் போட்டு வச்ச கணக்குதான் வேற. பாவம் நீங்க என்ன பண்ணுவீங்க. பதில் சொல்லிட்டு ஆண்டவன் குடுத்ததை சந்தோஷமா வாங்கிட்டு போற தைரியம் உங்ககிட்ட இருக்கப்ப இன்னும் என்ன கவலை,'' என்பதாக திரைக் கதைகளை அமைக்கவேண்டியிருக்கிறது.

✦ இது சரி இது தவறு என்று எதையும் சுட்டிக்காட்டாமல், இது இப்படி வேலை செய்கிறது அது அப்படி வேலை செய்கிறது என்று காட்டினால் நல்லது. நல்லது கெட்டது இவை இரண்டும் சேர்ந்துதான் இந்த உலகத்தை நடத்துகிறது. 'கே(அ)ட்ச் இட்' (Catch it.)

✦ ''அது சரியில்ல இது சரியில்ல நாமதான் மொதலு நமக்கு பின்னால வந்தவன் அவன், நம்மைப் போல் உலகத்தில யாரும்

இல்ல'' என்று பிறர்சொல்லால் கெட்டு வாழ்ந்துவிட்டவர்கள் ஏராளம். கலாச்சாரம் 50-100 வருடங்களில் வந்து விடுவதில்லை பரிணாமவளர்ச்சி (Evolution) ஐ நினைத்துப்பாருங்கள், ஒரு சிலையை உடைப்பதற்கு ஒரு நொடிபோதும். அதை உருவாக்க பல நாட்கள் தேவை. அப்படித்தான் காலாச்சாரமும். இவர்களை நடுநிலை (Neutral) -க்கு கொண்டுவர 'லைட்' ஆக திரைக் கதையில் விஷயங்களை புகுத்துங்கள்.

- இன்று படத்தில் வீரம், விவேகம், அன்பு, காதல், இவற்றுக்குத் தான் அதிக முக்யத்துவம் கொடுக்கிறார்கள். நியாயம், தர்மம், பண்பு, பாசம் இவையெல்லாம் 'மாரதான்' ஓடும்போது வழியில் எங்காவது கொஞ்சம் தண்ணீர் குடித்து தலைக்கு ஊற்றிக் கொண்டு ஓடுவதுபோல்தான் வரவேண்டும்.
- 'களவும் கற்று மற' என்பதற்கு இணங்க சகலத்தையும் நாம் கொஞ்சமாவது தெரிந்து வைத்திருக்க வேண்டும். இன்றைய நிலையில் முக்கியமாக கெட்டவைகளை தெரிந்து வைத்திருக்க வேண்டிய சூழ்நிலை அதிகம்.
- 100 நாட்கள் ஓடிய படத்தை டி.வி.டி (DVD) இல் போட்டு பார்த்து ஒவ்வொரு காட்சியாக பாக்ஸ் சார்ட் (Box Chart) ல் எழுதிமுடித்து ஸப்ஜெக்ட் (Subject) என்ன? அதைக்கொண்டு திரைக்கதையை எப்படி அமைத்திருக்கிறார்கள், அதை எந்த கோணத்தில் எடுத்துக்கொண்டு போயிருக்கிறார்கள் என்பதை கவனியுங்கள். இதில் சிலபடங்கள் 100 இன்னும் சில 150 நாட்கள் ஓடி யிருக்கும். அதனால் 150 நாட்கள் ஓடிய படத்தில் நாயகனின் 'இமேஜ்'ஐ விட சிறப்பு அம்சங்கள் அதிகமாக இருக்கும் அவற்றை நுணுக்கமாக கவனித்து ஒன்றுவிடாமல் எழுதிக் கொள்ள வேண்டும். எந்தெந்த அம்சங்கள் ரசிகனை 4-5 முறை பார்க்க வைக்கிறது, ஈர்க்கும் விஷயங்கள் எவை, என்று சகல விஷயங்களையும் குறித்து வைத்துக்கொண்டு அதை அலசிப்பார்த்தாலே திரைக்கதை எழுத ஒரு அடிப்படை அறிவை பெறலாம்.
- திரைக்கதை எழுதுவதற்கு முன் எல்லா பொதுவான பாட 'ஸப்ஜெக்ட்'களிலும் குறைந்தபட்ச அடிப்படை அறிவாவது இருக்கவேண்டும். அப்பொழுதுதான் புதிய விஷயங்களை புகுத்தி புதுத்தோற்றத்தில் திரைக்கதை எழுத முடியும். சினிமாவில் எல்லா விதமான விஷயங்களையும் 'கவர்' செய்ய வேண்டியுள்ளது என்பதை அறிந்திருக்கவேண்டும்.
- இன்றைய கால கட்டத்தில், பாதிப்புகளை மையமாக வைத்து அவற்றை 'ஸ்போர்டிவ்' ஆக எடுத்துக் கொண்டு வெற்றி அடைவதாக திரைக்கதை அமைப்பது உத்தமமானது.

- ஒரு சாதாரண இளைஞன் (இளைஞன் என்று மட்டும் எழுதுவதால் இளைஞிகளுக்கு அல்ல என்று அர்த்தமல்ல. அவர்களுக்கும் சேர்த்துத்தான் என்பதை கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்) எப்படி விஷயங்களை எதிர்கொள்கிறான் எப்படி எதிர் கொண்டால் அது வழி நடத்துவதாகவும் ரசிக்கும் படியாகவும் இருக்கும் என்பதை யோசித்து எழுதவேண்டும்.

- ஒருவன் எப்படி கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தான் என்பதை விட 'எப்படி கில்லாடிவேலைகள் செய்து முன்னுக்குவந்தான் என்பதை ஜாலியாக பார்த்து ரசித்துவிட்டுபோக இன்றைய ரசிகர்கள் ஆசைப்படுகிறார்கள்.

- ஒருவன் கொஞ்சம் 'மே(அ)ஜிக்' கொஞ்சம் 'ஹிப்னாடிசம்' கொஞ்சம் மாந்திரீகம், கொஞ்சம் மனோதத்துவம் என்று தெரிந்து வைத்துக்கொண்டு சாமியாராக வேஷம் போட்டு லிங்கம், புஷ்பம், விபூதி என்று எடுத்து கொடுத்தால் அவன் காலில் விழுந்து வணங்குகிறார்கள். ஆனால் அவற்றை முறையாக முழுமையாக படித்து ஆராய்ந்து அறிந்து தொழில் ரீதியாக நடத்தும் மனநோய் மருத்துவரிடம் ஜனங்கள் சென்று தங்கள் மன நோயை சுலபமாக சரிசெய்துகொள்வதில்லை. இங்கு முழுப்பலன் சீக்கிரத்தில் கிடைத்தாலும் இவரிடம் யாரும் செல்வதில்லை. இதற்கு கல்வி அறிவுமட்டும்தானா காரணம்? எந்த அடிப்படையில் எந்த 'எலிமெண்ட்ஸ்' மூலம் இவர்களுக்கு அந்த அறிவு வரும்படியாக திரைக்கதையில் 'ட்ரீட்' செய்வது என்று யோசித்து புதுக்கோணத்தில் பகுத்தறிவை வளர்க்க முயற்சி செய்யுங்கள், காதல் கதைகளில் கூட இந்த 'டச்' கொஞ்சம் இருக்கட்டும்.

- இன்றும்கூட நாயகன் ஆங்கிலத்தில் பேசினால் ரசிகர்கள் கைதட்டுகிறார்கள். வெறும் ஆங்கிலம் பேசும் ஓட்டலில் தட்டு கழுவினாலே ஆங்கிலம் பேசக்கற்றுக் கொள்ளலாம் என்ற பாணியில் இந்த விஷயத்தை தயவுசெய்து சாதாரணமாக்கும்படி திரைக்கதை எழுதுங்கள்.

- பின்னால் துரத்தி, கண்ணீர்விட்டு சோகத்தை காட்டும் ஹீரோக்களை இனி பெண்கள் விரும்பமாட்டார்கள். முக்கியமாக உழைப்பு, உடற்கட்டு, ஒழுக்கம், ஆண்மை, ஆஸ்தி சேர்க்கும் அறிவு இ...பிற. உள்ளர்வர்களைத் தான் விரும்புவார்கள், விரும்புகிறார்கள் என்பதாக இருக்கட்டும் கதையின் அம்சங்கள் அதேபோல் பெண்களிடம் அழகைவிட 'ஸ்மார்ட்னெஸ்', அறிவு, நேர்மை, அமைதி, திறமை, சுத்தம் இ.பிற இருக்க வேண்டும் என்ற ஆண்கள் எதிர்பார்ப்பையும் எழுதுங்கள்.

ஆணோ, பெண்ணோ, கெடாமலிருந்து லைஃப் பார்ட்னர் ஆக கிடைத்தால் அதை தங்களின் அதிர்ஷ்டம் என்று கூறுபவர்களும் உண்டு.

- 'சாஃப்ட்வேர்' கம்பெனிகளுக்கும் ஏனைய கம்பெனிகளுக்கும் இடையே சம்பள விஷயத்தில் ஒரு பெரிய இடைவெளி உருவாகிவருகிறது. பணத்தால், நாகரிகத்தால் பல விஷயங்கள் நடக்கின்றன, நிகழ்கால வருங்கால சமூக அமைப்பு (Social Structure) க்கான ஏகப்பட்ட விஷயங்கள் இதில் கிடைக்கும்.

- ஒரு சிறிய கம்பெனியில் குமாஸ்தாவாக வேலை செய்து ஒரு தொகையை சம்பளமாக வாங்கி வந்த பெண் மேலும் படித்து 'கம்ப்யூட்டர் ட்ரெய்னிங்' முடித்துவிட்டு சாஃப்ட்வேர் கம்பெனியில் வேலைக்கு சேர்ந்து இன்று பத்து மடங்கு அதிகம் சம்பளம் வாங்குகிறாள். 10 பேரை வேலைக்கு வைத்து வியாபாரம் செய்பவனுக்கு சமமாக நான் ஒருத்தி சம்பாதிக் கிறேன் என்கிறாள். ஒரு SSLC படித்தவன் அந்த பெண்ணை விட 10 மடங்கு உடல் உழைப்பில் தொழில் நுட்பத்தில் வல்லுனனாக இருந்தாலும் அவள் பெறுவதில் 1/10 க்கு மேல் அவனால் இங்கு சம்பாதிக்க முடிவதில்லை. இப்படி இருக்க அவளை பார்க்கும் இவன் மனதில்ஏற்படும் எண்ணம் எப்படிப்பட்டதாக இருக்கும் 'சாஃப்ட்வேர்' கம்பெனிகளின் பெருக்கத்தால், உயர்ந்த சம்பளத்தால் விலைவாசி ஏறிவருகிறது. இதனால் அந்த உழைக்கும் வர்க்கத்தவர் படும் அவஸ்தைகள் என்ன என்பனவற்றை ட்ரீட்மெண்டில் புகுத்துங்கள். ஒரு பொருளாதார சமூக ஏற்றத்தாழ்வு ஏற்பட்டுவருகிறது. அதை சமாளிக்க நீங்களும் உங்கள் எழுத்தின் மூலம் தொழில் ரீதியாகவே உதவலாமே.

- படித்தவர்கள் உடல் வளைந்து வேலை செய்ய மாட்டார்கள் என்கிறார்கள், இதை பயன்படுத்தி படிக்காதவர்கள் எப்படி அவர்களுடன் போட்டி போட்டு உழைத்து முன்னுக்கு வரு கிறார்கள் என்பதற்கான 'எலிமெண்ட்ஸ்' களை தேர்ந்தெடுக்க வேண்டும்.

- பையன் 'பிஸினஸ் மே(அ)னேஜ்மெண்ட்' படிக்கிறான். அதில் வரும் 'மே(அ)னேஜ்மெண்ட் இன் க்ரைஸிஸ்' என்பதைப்பற்றி தந்தையிடம் சொல்லப்போக அவர் ''டேய் எனக்கே பிஸினஸ் பத்தி சொல்லித்தறியா, 2000 வருஷத்துக்கு முன்னமே திருவள்ளுவர் பிஸினஸ்ஸை பற்றி சொல்லிட்டு போயிட்டார்'' என்று சொல்லும் பெரியவர்கள் இன்னும் உண்டு, இவர்கள்

காலத்தின் வளர்ச்சியை அறிந்து கொள்ள சற்று ஐ.டி. விஷயங்களை புகுத்துங்கள்.

- இன்றைய காலகட்டத்தில் சிறுவர் முதல் இளைஞர்வரை முதியவர்களை வெறுக்கிறார்கள். இதனால் ஏற்படும் விபரீத விளைவுகளை சந்தர்ப்பம் கிடைக்கும் இடத்தில், உங்கள் திரைக்கதையில் கொஞ்சம் 'டச்'செய்யுங்கள், ஒவ்வொரு படத்திலும் ஒரு 'டச்' இருக்கட்டும்.
- முதல் வரிசை ரசிகர்களை கவர 'வயலென்ஸ்' கதைகளை எடுக்கட்டும், ஆனால் போலீஸாரால் பிடிக்கப்பட்டு ஒருவன் போலிஸ் ஸ்டேஷனில் ரெஜிஸ்டர் ஆகி, தண்டிக்கப்பட்டவன் என்றாகிவிட்டால் அவன் கெட்டுப்போனவன் என்ற முத்திரை குத்தப்படுகிறது. அது அவன் வாழ்க்கையின் எதிர்காலத்தை சாதாராண 'அப்பாய்ன்ட்மெண்ட்'லிருந்து 'பாஸ்போர்ட்' வரை எந்தெந்த வகையில் பாதிக்கிறது என்பதை புதுக்கோணங்களில் காட்டவேண்டும். நம் படங்களில் 'ரியாலிடி'யை கொஞ்சம் கொஞ்சமாக புகுத்தினால் புண்ணியம் உண்டாகும்.
- ஃபிஸிக்ஸ் ஒரு ஸப்ஜெக்ட். கெமிஸ்ட்ரி ஒரு ஸப்ஜெக்ட். இவற்றில் ஒன்றில் ஒன்று அதிகமாக கலந்தால் குழப்பம்தான் மிஞ்சும். சரியாக புரிந்து கொள்ள முடியாது. படத்திற்கு ஒரு 'சப்ஜெக்ட்' என்றால் அதற்கு சம்பந்தப்பட்ட விஷயங்களையே எழுதவேண்டும். 2½ மணி நேரத்திற்கு அதுதான் ஒத்துவரும். இல்லையேல் குழப்பத்தில் தான் கொண்டுபோய் விடும்.
- நல்லது கெட்டது இதில்தான் எல்லாமே ஆரம்பமாகி நடந்து முடிகிறது. கடைசியில் ஜெயிப்பது நல்லது. எனவே நாமும் நல்ல முறையில் எழுதுவது நல்லது. கேவலமான கீழ்த்தரமான எழுத்து ஜெயித்தாலும் நிரந்தரமாக இருக்காது என்பதை இந்த பட உலகில் விலாசம் தெரியாமல் போனவர்களை வைத்தே அறியலாம்.
- திரைக்கதாசிரியர்கள் சில நல்ல ஒழுங்கு முறை (Discipline)களை கடைபிடிக்கவேண்டும். உதாரணத்திற்கு நல்ல குணமுடைய பள்ளி பிள்ளைகளிலிருந்து பெரியவர்கள் வரை சந்தோஷத்தில் புத்தகங்களை மேலே வீசி எறிவதாக, நற்பண்புள்ள கதாநாயகன் கொஞ்சம் மாறிப்போய், சிகரெட் துண்டை அணைக்காமல் வீதியில் எறிந்து செல்வது, தெருவில் எச்சில் துப்புவது போன்ற தகாதவற்றை எழுதக்கூடாது (மேன்மையான சமூகத்தின் ஒழுக்கத்தை கெடுக்கக்கூடாது)
- ஒரு கதைக்கு பொருத்தமான பெயர் வைக்க வேண்டும் என்றால் நம் மனதில் வரும் பெயர்களையெல்லாம், முட்டாள்தனமாக இருந்தாலும், பொருந்தாததாக இருந்தாலும் எழுதிக் கொண்டே

போவதில்லையா அப்படித்தான் திரைக்கதை எழுத உட்கார்ந்ததும் மனதில் தோன்றும் ஐடியாக்களையெல்லாம் எழுதிக் கொண்டே போகவேண்டும்.

- ஒவ்வொரு எழுத்தாளரும் ஒவ்வொரு சூழ்நிலையில் வாழ்பவர்தான். அவரவர்கள் அவரவர் சூழ்நிலை தாக்கத்தால் அந்த P.O.V.ல்-தான் அதிகமாக எதையும் பார்ப்பார்கள். அதை குழப்பம் இல்லாமல் எழுதினால் போதும்.
- முன்பு குடும்பத்துக்கு முதல் இடம் கொடுத்து அவர்கள் செய்யும் தொழிலுக்கு அடுத்த இடம் கொடுத்தார்கள். இப்பொழுது, செய்யும் தொழிலுக்கு முதல் இடமும் குடும்பத்துக்கு அடுத்த இடமும் கொடுக்கவேண்டும். பிழைக்கவேண்டும் என்றால் குடும்பத்தில் எல்லோரும் கஷ்டப்பட்டுத்தான் ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தம் அதிகமாகிவிட்டகாரணத்தால் உழைப்புக்குத் தான் முதலிடம். எனவே தொழிலில் அவர்களுக்குள்ள தொடர்புகள், நல்லவை கெட்டவைகளை காட்டி என்டர்டெய்ன் செய்வதை ரசிகர்கள் வெகுவாக ரசிக்கிறார்கள்.
- சினிமாவுக்கு என்று எழுதுவதால் 'விஷுவல்' ஆக ஒவ்வொன்றையும் மனத்திரையில் பார்த்து, பின், பார்ப்போரை கவரவேண்டும் என்ற எண்ணத்திலேயே எழுதவேண்டும். இது ஒரு 'கமர்ஷியல் தின்க்கிங்' என்று கூட சொல்லலாம். பல பெரிய நிறுவனங்கள் தங்கள் பொருட்களை விற்க பல வியாபார யுக்திகளை கையாள்கிறார்கள். அவை வாடிக்கையாளரை முட்டாள்களாக்குவதாகவே தெரியும். ஆனால் அவர்கள், வாடிக்கையாளரை நாங்கள் ஏமாற்றுவதில்லை, எங்கள் ஸ்தாபனத்தை நிலை நிறுத்திக்கொள்ளவும், வியாபாரத்தை பெருக்கிக்கொண்டு போகவும்தான் அந்த வழி முறைகள்' என்கிறார்கள். அப்படித்தான் திரைக்கதையிலும் தொழில் நுணுக்கங்களை கையாள வேண்டியிருக்கிறது.
- யாரையும் திருத்துவதற்காக யாரும் படம் எடுப்பதில்லை. சந்தர்ப்பம் கிடைக்கும் இடத்தில் நல்லதை சொல்ல முயற்சிக்கலாம், ஏனெனில் வீட்டில் தந்தை புத்திமதி சொல்ல ஆரம்பித்து அடுத்த நிமிஷம் பிள்ளைகளின் வெறுப்பை அவர்கள் முகத்தில் காணமுடிகிறது. நிலைமை இப்படி இருக்க, பணம் கொடுத்து படத்தை கண்டு மகிழ்வதற்காக வந்தவர்களுக்கு புத்தி சொல்ல முடியாது. இது அப்பட்டமான வியாபாரம், (It is Purely business) இந்த காலத்து டாக்டர்கள் பலர் அவர்கள் தொழிலை ஆரோக்கியமான (சேவை கலந்த) (Healthy business) வியாபாரமாக நடத்திவருகிறார்களே.

- தயாரிப்பாளர்களை பொறுத்த வரையில், முதலில் அவர்கள் முதலீடு செய்த பணம் லாபத்தோடு திரும்பவரவேண்டும். எனவே ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிப்பதுபோல் நாம் உழைக்கும் வர்க்கத்திற்காக எழுதினாலும் அது பரிசு (award) வாங்கும் தகுதி உடையதான தரத்தில் (Standard) இருக்கும் படியாக எழுதினால் வெற்றி நிச்சயம் !
- கடந்த 30 வருடங்களாக நம் தமிழ் படங்களில் 'ட்ரீட்மென்ட்' எப்படி இருந்தது, மலையாளம் வங்கப்படங்களில் ட்ரீட்மென்ட் எப்படி இருந்தன என்பதை கவனியுங்கள். அவைகளின் தாக்கம் அந்தந்த மக்களை எந்த அளவுக்கு உயர்த்தியிருக்கிறது. என்பதை கவனித்துப்பாருங்கள். இன்றும் உலக அளவிலான செய்திகளை ஏஷியநெட் (Asianet) கொடுப்பதைப் போல் தமிழ் சேனல்கள் ஏன் கொடுப்பதில்லை. ஒருவன் உயர வேண்டு மானால் அவனுக்கு உலக அறிவை ஊட்டவேண்டும். இல்லையென்றால் 'என்னை போன்று யாரும் இல்லை' என்று வீட்டோடு இருக்க வேண்டியதுதான்.
- திரைப்பட வியாபாரத்தில் 'A' சென்டர் எனும் நகரத்தை விட டௌன், கிராமம் ஆகிய 'B', 'C' சென்டரை நம்பித்தான் படம் எடுக்கிறார்கள். நகரத்தில் வாழும் பலரின் தந்தை, பாட்டன், முப்பாட்டன் கிராமத்திலிருந்து வந்தவர்கள்தானே, எனவே அவர்களுக்கும் அந்த கிராமத்து 'டச்', 'சென்டிமென்ட' இருக்கும் அல்லவா. அதனால் எல்லோரையும் வளைக்கும், கிராமத்தி லிருந்து நகரத்துக்கு வந்தவர்களின் கதைகள் அனைவருக்கும் பிடித்ததாக இருக்கும். இதை எப்படி கலந்து (blend) செய்யவேண்டும் என்பது திரைக்கதை ஆசிரியரின் திறமையில் உள்ளது. அதன் மூலம் A, B, C மூன்றையும் கவர் செய்ததாகும்.
- சினிமா உலகில் யாருக்கும் எந்தவித கெட்ட பாதிப்பும் ஏற்படாத வண்ணம் பொய்யை நிஜமாக்கி (முட்டாள்களாக்க முனையாமல்) 'என்டர்டெய்ன்' செய்கிறோம். இன்று நிறைய 'இன்ஸ்பிரேஷன்' கதைகள் வருகின்றன, ராமாயணம், மகாபாரதத்தை 'இன்ஸ்பிரேஷன்' ஆக வைத்து பல கதைகள் வந்து விட்டன. கன்னடத்தில் ஒரு பழமொழி சொல்கிறார்கள். அதாவது ''ஒவ்வொரு எழுத்தாளனின் கையும் இன்னொரு எழுத்தாளனின் ஜேபியில் இருக்கிறது'' என்று. இது எழுத்தாளர் களை இழிவு படுத்துவதற்காக அல்ல. சீனியர் எழுத்தாளரின் விஷயம் ஜுனியர் எழுத்தாளரின் விஷயத்தில் கொஞ்சம் சேர்ந்து வந்துவிடும் என்பதாகும். எனவே தயாரிப்பளர்கள் எந்த 'இன்ஸ்பயர்ட்' கதையை சொன்னாலும் அதை நம் பாணியில் சுவாரஸ்யமான தாக, புது விஷயங்களுடன் எழுதித்தர

வேண்டும். நான் அந்த வம்சத்தில் பிறந்தவன் இந்த வம்சத்தில் பிறந்தவன் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுபவர்கள் சினிமாவுக்கு திரைக் கதை எழுதிக் கொடுப்பதை கிட்டத்தட்ட மறந்துவிட வேண்டியதுதான். உலகம் தெரியத் தெரிய ரசிகர்கள் ரசனையும் விரிந்துவிட்டது. 'கலக்கு கண்ணா கலக்கு' என்கிறார்கள்.

✦ எவ்வளவோ பெரிய நடிகர்கள், தயாரிப்பாளர்கள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டும் பலர் பலவாறு 'பைரஸி' படங்களை பார்க்கிறார்கள். அதை ஒரு குற்றமாகவே நினைப்பதில்லை நம் ஜனங்கள். இந்திய அரசாங்கமும் இதை ஒரு பெரிய குற்றமாக எடுத்துக்கொண்டுள்ளதா என்பதுசந்தேகம்தான், உலக அதிசயங்- களில் இதுவும் ஒன்று என்று கூறலாம். ஒரு வீட்டை அழித்தவனுக்கு ஒரு செங்கல் அபராதம் என்றால் அவன் அந்த தவறை செய்ய பயந்துவிடுவானா என்ன!?

✦ மக்களுக்கு திரைப்படத்தின் மூலம் அறிவூட்ட முயற்சிக்கா விட்டாலும், மகிழ்வித்து சம்பாதிக்கலாம். ஆனால் முட்டாளாக்கி சம்பாதிக்க, நினைப்பதே, பெரிய துரோகம் ஆகும். 'காட் ஈஸ் வாட்சிங் தெம்'.

✦ திரையுலக ஜாம்பவான்களின் புத்திரர்கள் பலர் புதிதாக அறிமுகமாகி தொடர்ந்து 3,4 படங்கள் தோல்வியைக் கண்டால், ''பாவம், அவர் பையனின் எல்லா படங்களும் தோல்வியை தழுவுகின்றனவே'' என்று பச்சாதாபப்படுகிறார்கள் ரசிகர்கள். ஆனால் அதற்காக இரண்டாம் முறை வந்து பார்க்கமாட்டார்கள். அந்த இளம் ஹீரோக்களுக்காக எழுதுபவர்கள் அந்த ஜனங்களின் பச்சாதாபத்தை பயன்படுத்திக்கொண்டு அதற்குதகுந்த ஸப்ஜெக்டுக்காக ஒரு உ.ம் ஒரு தந்தையின் உழைப்பில் சொகுசாக வாழ்ந்த இளைஞன் வீட்டை விட்டு வெளியேறி தமாஷாக அல்லது சீரியஸ்ஸாக படும் கஷ்டங்கள் போன்றவை. இப்படி தேர்ந்தெடுத்து மறுபடியும் அந்த ஹீரோ எழுந்துநிற்க வாய்ப்பை ஏற்படுத்தலாம். ரசிகர்கள் மனதில் அவர்களைப்பற்றி எப்படிப்பட்ட பின்னணிக்கான 'இமேஜ்' இருக்கிறது என்பதை முதலில் ஆய்வு செய்யவேண்டும்.

✦ வியாபார ரீதியில் தயாரிக்கப்படும் திரைப்படங்களுக்கு வாடிக்கையாளர்கள் 'ஆடியன்ஸ்' தான். இவர்களை திருப்திப் படுத்தி பணம் சம்பாதிப்பதுதான் தயாரிப்பாளரின் முக்கியக் குறிக்கோள். என் ஆத்ம திருப்திக்காக படம் எடுத்தேன் என்பவர்கள் ஒன்று பெரிய பணக்காரர்களாக இருக்கவேண்டும், அல்லது மற்றவர் பணத்தில் படம் எடுத்தவராக இருக்கவேண்டும்.

✦ மனவேறுபாடுகள், தடைகள், சோதனைகள், ஏமாற்றங்கள், வஞ்சனைகள் இ...பிற இவற்றை மிக 'ஸ்ட்ராங்' காக கொடுத்தாலும் 'டேக் இட் ஈஸி' என்ற வகையில் கொடுக்கவேண்டும். ஜனங்கள் ரொம்ப 'ஃபாஸ்ட்' ஆக நிறைய விஷயங்களை 'ஃபேஸ்' செய்யவேண்டியிருப்பதால், எதையும் சிரித்தவாறு ஏற்றுக் கொள்வதாக இருந்தால்தான் அது வெகு ஜன பிரியமாக இருக்கும். எல்லா 'ஜேம்ஸ்பாண்ட' படங்களையும் பாருங்கள். ஹீரோ எதையும் 'கூல்' ஆக சிரித்தவாறு ஏற்றுக்கொண்டு 'ஃபேஸ்' செய்வார். முழுப்படத்திலும் ஒன்று அல்லது இரண்டு காட்சிகளில் மட்டும் சீரியஸ்ஸாக இருப்பார். ஒன்றிரண்டைத் தவிர எல்லாமே 'சூப்பர் ஹிட்' படங்கள்தான். நம்மில் சில முன்னணி கதா நாயகர்கள் இந்த 'ஃபார்முலா' வைத்தான் 'ஃபாலோ' செய்கிறார்கள்.

✦ திரைப்படத்திற்காக திரைக்கதை எழுதுபவர்களுக்கு எல்லாவற்றையும் ரசிக்கும் தன்மை மற்றும் 'க்விக் அப்ஸர்வேஷன்' இருக்கவேண்டும். நம் 'மூவ்மென்ட்', 'அப்ரோச்' லிருந்து, எதையும் ஆத்திரத்தோடு செய்கிறோமா, நிதானத்தோடு ஒரு 'ரிதம்' மோடு செய்கிறோமா என்பதில், நாம் யார் என்பது தெரிந்துவிடும். இதைப் பொறுத்துத்தான் நம் எழுத்தும் இருக்கும். எனவே முதலில் நம் 'மூவ்மென்ட்' 'அப்ரோச்' ஐ 'டெவலப்' செய்து கொள்ள வேண்டும்.

✦ சினிமா பார்க்கவரும் பெரும்பாலானவர்கள் உழைக்கும் வர்க்கம் தானே. அவர்களைப்பற்றி அவர்களின் அன்றாட கஷ்டங்களை புரிந்துகொண்டு கதை எழுத நாம் நம்மை ஒரு 'ஒர்கிங் கிலாஸ்' ஆக மாற்றிக்கொண்டு, கதையை ரசித்துக்கொண்டே எழுத, எமக்குத்தெரிந்த ஒரே வழி, நாமும், ஒரு இரண்டு மணிநேரம் ஏதாவது உடல்வளைய (Physical) வேலை செய்துவிட்டு வந்து எழுத துவங்கினால் அவனுக்கு தகுந்த எழுத்து வியர்வைத் துளிகள் போல் வெளியே வருகிறது. முயற்சித்துப் பாருங்கள். அந்த எழுத்தில் உயிர் இருக்கும் என்பர்.

✦ ஒரு கதையை வித்தியாசமான முறையில் படம் பிடித்து காட்ட, பல முறைகளில் திரைக்கதை எழுதுகிறார்கள். நிறைய உலகப் படங்களை பார்த்தாலே போதும் அவற்றை தெரிந்துகொள்ளலாம். இப்பொழுதுதான் விரல் நுனியில் உலக படங்கள் கிடைக்கின்றனவே.

✦ முதலில், உங்களுக்கு படங்களை 'ஸ்டடி' செய்து அறிவு பூர்வமாக 'க்ரிடிஸைஸ்' செய்யும் திறமை இருக்கிறதா என்பதை நீங்களே சோதித்து பார்த்துக்கொள்ளுங்கள். அதில் வல்லவராகி விட்டால் திரைக்கதை எழுதுவது சுலபமாகிவிடும்.

சினிமாவுக்கு கதை, திரைக்கதை எழுதுவதுவேறு சினிமா படம் தயாரிப்பது வேறு. இதை ஏன் இங்கு சொல்கிறேன் என்றால் திரைக்கதை எழுதத் தெரிந்துவிட்ட தைரியத்தில் (ஆத்திரத்தில்) தயாரிப்பைப்பற்றி மேலோட்டமாக தெரிந்துகொண்டு படத் தயாரிப்பில் இறங்கி தோல்வியை கண்டவன் நான் என்பதை தெரிவிக்கத்தான். அப்படியே ஆர்வக்கோளாறு உள்ளவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாகவும் இருக்குமல்லவா. மிக அனுபவம் வாய்ந்த ஒரு கன்னட தயாரிப்பாளர் சொல்கிறார், ''சினிமா படம் தயாரிக்க ஒரு இதயம் போதாது இரண்டு இதயங்கள் தேவைப்படுகிறது'' என்று.

சினிமா என்பது ஒரு பிரம்மாண்டமான தொழில் × வியாபாரம். ஷூடிங்கின் போது நிறைய நம் கண்களுக்கு தெரியும். அவை எல்லாம் நமக்கு சொந்தம் என்ற மாயத்தோற்றத்தை ஏற்படுத்தும். வேறு வியாபாரத்தில் நாம் தோற்றுவிட்டால் விற்று சமாளிக்க ஏதாவது கொஞ்சம் மிஞ்சும். ஆனால் சினிமா வியாபாரத்தில் நம் கையில் மிஞ்சுவது அந்த 14 ரீல் அடங்கிய பெட்டிதான். அந்த 14 ரீல் பெட்டி கூட படம் நன்றாக இருந்தால்தான் பெட்டி. இல்லையேல் அதுவும் ஒரு 'டப்பா'தான், காஸ்ட்யூம், ப்ராபர்டீஸ் N.G. கட்டிங்ஸிலிருந்து 5% கூட தேராது. அது எந்த மூலைக்கு. இன்றைய நிலை இன்னும் மோசம்

இந்தத்துறையில் தயாரிப்பாளராக நிலைத்து நிற்க அதிர்ஷ்டம், உழைப்பு, தொழில் அறிவு, வியாபார நுணுக்கம் என்பன 100% தேவைப்படுகிறது. ஒரு மட்டத்திற்கு ஒழுக்கமும் கண்டிப்பாக தேவைப்படுகிறது என்பதுதான் முற்றிலும் உண்மை.

பலருக்கு தங்கள் கதையை சினிமா கம்பெனிக்கு அனுப்ப வேண்டும் என்று ஆசை இருக்கும். ஆனால் நம் கதையை திருடி விடுவார்களோ என்ற சந்தேகத்தில் குழம்பி மன உளைச்சலுடன் இருப்பார்கள். அப்படிப்பட்டவர்களும் அவர்கள் திரைக்கதையை பின் வரும் அத்தியாயத்தில் விளக்கியுள்ளபடி 'பாக்ஸ் சார்ட்' மெதட்டில் ஒரு இரட்டை விடைத்தாள் அளவில் எழுதிவிட்டு நான்கு பக்கத்திற்குள் 'ஸினாப்ஸிஸ்'ஐ எழுதி இந்த இரண்டையும் ஸெராக்ஸ் செய்து வைத்துக்கொண்டு, தங்கள் கைப்பட எழுதியதை (Manuscript ஐ) வேறு போஸ்டல் ஏரியாவிலிருந்து அவர்கள் விலாசத்திற்கே 'ரெஜிஸ்டர் போஸ்ட்' செய்து, கவரை, திறக்காமல் அப்படியே வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு 'ஸெராக்ஸ்' காபிகளை படக்கம் பெனிகளுக்கு அனுப்பலாம். திரைக்கதையை கூட அதாவது ட்ரீட்மென்டோடு வசனத்துடன் எழுதியதையும் இப்படி ரெஜிஸ்டர் செய்துகொண்டு ஸெராக்ஸ் காபிகளை அனுப்பலாம்.

இந்த 'ரெஜிஸ்டர்ட் போஸ்ட்' விஷயத்தை 'ஸிட் ஃபீல்ட் அவருடைய புத்தகத்தில் எழுதியிருக்கிறார்.

# கதையும் அதற்கான முக்கியாம்சங்களும்

கர்நாடகத்தில் விவசாயிகள் தற்கொலை செய்து கொள்வதைப் பற்றி பத்திரிகைகளில் செய்திகள் வந்த வண்ணம் இருந்த நிலையில், அந்த ஸப்ஜெக்ட்டில் ஒரு கதை எழுதிதரும்படி ஒரு படக்கப்பெனியார் என்னை கேட்டுக் கொண்டார்கள், அதற்கான விஷயங்கள் எப்படி சேகரிக்கப்பட்டன என்பதை இங்கு காணலாம். முதலில் ஒரு பொது கண்ணோட்டம்-

விவசாயி இந்த நாட்டின் உயிர்நாடி. அவன் இல்லாவிட்டால் இந்நாடு இல்லை. ஆனால் அவன் உயிருக்கு போராடிக் கொண்டிருக்கிறான். உதவ யாருமில்லை, விட்டுக் கொடுக்கவும் யாரும் தயார் இல்லை. இவற்றுக்கெல்லாம் ஒரு நல்ல முடிவைக் கொண்டு வர கல்வி அறிவுதான் முக்கியம். ஆனால் கல்வியின் அவசியத்தை ஏன் அவன் இன்னும் உணரவில்லை? அவனுடைய கல்விக்காக அரசாங்கம் எவ்வளவோ உதவியும், கல்வியை வெறுக்கிறான் ஏன்......?

சில அறிவற்ற மூடர்கள், ஊர் பெரியவர்கள், ஊர்க் கட்டுப்பாடு என்று இவர்களை கெடுத்து குட்டிச் சுவர்களாக்குகிறார்கள் (அதுவும் சாராயக் கடை பக்கமாக இருக்கும் குட்டிச்சுவர்). போதாததற்கு பேங்கிலிருந்து வாங்கிய கடனை திருப்பி கொடுக்காதே என்று சொல்லிக் கொடுக்கும் இவர்கள் பெரிய மனிதர்களா....?

விவசாயி எப்படிப்பட்டவன்? அவன் கடனைத் திருப்பித்தர முடியாததால் தூக்கு மாட்டிக் கொண்டு சாகிறான் என்றால் எல்லாவற்றுக்கும் முதலாக அவன் மானஸ்த்தன், நேர்மையானவன், மனசாட்சி உள்ளவன். அவனை தைரியமில்லாதவன், கோழை என்று சொல்ல முடியாது. ஏனெனில் பல வழிகளில் பித்தலாட்டம் (Fraud) செய்ய அவனுக்கு சொல்லிக் கொடுத்து கூடவே இருக்கவும் ஆட்கள் ஏராளமாக உள்ளனர், நாம் சுதந்திரமடைந்து 66 ஆண்டுகளுக்கு மேல் ஆகியும் எல்லாம் கொஞ்சமாவது மாறியிருக்கிறது. ஆனால் அவன்

அடிப்படையில் அப்படியே இருக்கிறான், மாறவே இல்லை. அதனால் அவனை 'கடவுள்தான்' காப்பாற்ற வேண்டும் 'காட் இட்' (Got it) கதையின் முடிவும் அதுதான். இப்படி நியாயமான நிஜ நிலையில் நின்று யோசித்து முடிவை தீர்மானித்தப்பின் கதைக்கு தேவையான தொடர்புள்ள முக்யாம்சங்கள் சேகரிக்கப்பட்டன.

அவை பின் வருமாறு -

✦ விவசாயி என்பவன் யார்.....?

✦ சமூகத்தில் அவனுக்குள்ள மதிப்பு என்ன......?

✦ அவன், அவனைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான் எது அவனை அப்படி நினைக்க வைக்கிறது?

✦ விவசாயி இந்திய தேசத்தின் உயிர் நாடி என்று அரசியல்வாதிகளால் புகழப்பட்டும், நகரவளர்ச்சியை ஒப்பிட்டு பார்க்கையில் இது வரை அரசாங்கம் இவர்களுக்காக என்ன செய்துள்ளது?

✦ ஏன் இவர்கள் படிக்க ஆர்வம் காட்டுவதில்லை?

✦ யார் இவர்களை படிக்க வைக்க வேண்டிய முயற்சிகளை மேற் கொள்ள வேண்டும்?

✦ படிப்பில் ஆர்வம் காட்ட முடியாத அளவிற்கு இவர்கள் அப்படி எந்த விஷயத்தில் மும்முரமாக இருக்கிறார்கள்?

✦ படிப்பில் ஆர்வம் காட்ட முடியாத அளவுக்கு அவன் எந்த அளவுக்கு சோம்பேறியாக இருக்கிறான்....?

✦ அவனின் சோம்பேறித்தனத்திற்கு காரணம் என்ன....?

✦ கிராமங்களில் வயதான பெரியவர்களின் நடத்தை மற்றும் குணாதிசயங்கள் எப்படி?

✦ அன்றிலிருந்து இன்றுவரை இந்த பெரியவர்கள்தான் படிக்கும் ஆர்வத்தை கெடுத்து வருகிறார்களா? ஏன் அப்படி?

✦ இவர்களுக்கு படிப்பில் நம்பிக்கையில்லையா? எதிர்காலம் இல்லையென்று நினைக்கிறார்களா?

- இந்த பெரியவர்களின் சோம்பேறித்தனத்தால் படிக்கும் சிறிய பிள்ளைகளின் படிப்பு பாதிக்கப்படுகிறதா?

- மழை, வெய்யில், காற்று, விதை, உரம், உழவு, நிலம், மிருகம், உற்றார் உறவினர், கடவுள் இவை அனைத்தும் ஒரு விவசாயிக்கு ரொம்பவே சம்பந்தப்பட்டவை.

- இவர்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கை எப்படி எந்த விதமான நிகழ்ச்சிகளால் குறைந்துக்கொண்டே வருகிறது.....?

- இவர்கள் உபயோகப்படுத்தும் உரத்தால் (Manures) மூளைக்கு ஏதாவது பாதிப்பு ஏற்படுகிறதா....? ஆரோக்யத்தைப்பற்றி எந்த அளவுக்கு தெளிவிருக்கிறது?

- குடி இவர்களை எந்த அளவுக்கு பாதித்து இருக்கிறது?

- ஒன்றைப் போட்டு பத்தைப் பார்ப்பவன் இவன் (அதாவது ஒரு நெல்லை விதைத்து கொத்து நெல்லை அறுப்பவன்) அதனால் சூதாட்டம் எந்த அளவுக்கு இவனை பாதித்து இருக்கிறது?

- இவனுக்கு நேரம் மிகுதியாக கிடைப்பதால் ஏழ்மையின் காரணமாக இவனின் மனதில் சூழ்ச்சியான எண்ணங்கள் உருவாக வாய்ப்புகள் இருக்கின்றனவா....?

- இவன் கண்ணெதிரில் ஒருவனுக்கு அதிகம் விளைச்சல் ஒருவனுக்கு ஒன்றும் இல்லாமல் போய்விடுகிறது.

- ஒருவனுக்கு தண்ணீர் வசதி அதிகம் மற்றவனுக்கு தண்ணீர் மிகவும் குறைவு...

- இவனுக்கு பிறர்பொருளை அழிக்கும் குணம் வரும் வாய்ப்பு அதிகம் இருக்கிறதா....?

- இவர்களுக்குள் ஜாதிமத பாகுபாடுகள் எந்த நிலையில் உள்ளன....?

- கண்மூடித்தனமான நம்பிக்கைகள் எந்த மட்டில் உள்ளது. மந்திர மாயம், சூனியம் வைத்தல் பிற.

- கோவிலில் சாமி வந்து சொல்லுவதை இவன் இன்னும் நம்புகிறான்.

- பலி கொடுத்தால் காரியம் நடக்குமென்று நம்புகிறான்.
- 'ஸெக்ஸ்'க்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். 'ஸெக்ஸ்' பற்றி இவர்கள் அதிகம் பேசிக் கொள்ளுவதாக இருந்தால் அதன் காரணம் என்ன?
- கிராமங்களில் பெண்களின் பங்கு என்ன? அவர்கள் அதிக குழந்தைகள் பெற்றுக்கொள்ள இன்று கூட ஆசைப் படுகிறார்களா?
- ஆண்களை விட பெண்கள் அதிகம் வேலை செய்தும் இவர்கள் கொத்தடிமைகள் போல் வாழ காரணம் என்ன....?
- பெண்களும் குழந்தைகளின் படிப்பில் ஆர்வம் காட்டாததன் காரணம் எவை...?
- இவர்களின் சம்பிரதாய வாழ்க்கை நெறி முறையில் உள்ள முக்கிய குறைபாடுகள் என்னென்ன....?
- இவர்களுக்கு தாழ்வு மனப்பான்மை அதிகம் உள்ளதா? இதற்கு எவை, யார் காரணம்....? எப்படி களைவது?
- இவனை எப்பொழுதும் சுறு சுறுப்பாக இருக்க வைக்க என்னென்ன வழிகள் உள்ளன.....?
- சுறுசுறுப்பாக இருப்பவனால்தான் ஒளிமயமான எதிர் காலத்தை காண முடிகிறது என்பதை இவனுக்கு எப்படி உணர்த்துவது....?
- கஷ்ட நஷ்டங்களை எப்படி எதிர்கொள்வது என்பதை இவனுக்கு சொல்லிக் கொடுக்க வேண்டியவர் யார்....?
- அரசியல்வாதிகள், பே(அ)ங்க் அதிகாரிகள், வன மற்றும் கிராம நல அதிகாரிகள், விவசாயம் சம்பந்தப்பட்ட ஆய்வாளர்கள், கால் நடை மருத்துவர்கள் போன்ற இவர்களின் உறவு முறை இவர்களுடன் எப்படி? இவர்களின் அரசியல் அறிவு எப்படி?
- ஊரில் நடக்கும் பஞ்சாயத்துக்கள் சரியாக இருக்கின்றனவா...? இவர்களின் சிலரால் நியாயம் பங்கப்படுகிறதா...?
- நியாய அநியாயத்தை பார்க்காமல் ஊர் தலைவர்களுக்கு இவர்கள் தலை வணங்கியே போக காரணம் என்ன....?
- கிராமத்தில் சுயநலம் அதிகமாகிவிட்டதா....? ஒருவருக்கு ஒருவர் உதவும் மனப்பான்மை குறைந்து விட்டதா....?

- இவர்களில் எத்தனை பேருக்கு அரசாங்கத்திற்கு கொடுக்கும் கடனை நேர்மையான முறையில் திருப்பி கொடுத்துவிட வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது.....?

- இவர்களின் எல்லாவற்றிற்குமே பொருளாதாரம் ஒன்று தான் காரணமா.....?

- கிராமங்களில், அடிக்கடி நகர்புறத்திற்கு சென்று வருபவர்களின் எண்ணிக்கை அதிகமாகி அவர்களின் அரைகுறை அறிவால் கிராமவாசிகள் திசை திருப்பப்படுகிறார்களா...?

மேலும் மழையின்மை, விளையும் பொருட்களின் விலைகளில் ஸ்திரத்தன்மை இல்லாமை, டி.வி. சினிமாவின் பாதிப்பு, வேறு தொழில் செய்யும் ஆர்வம் என்று இன்னும் பல உண்டு, 'பாய்ன்ட்ஸ் எடுக்க.

இப்படி அவனுக்கு சம்பந்தப்பட்ட எல்லா அம்சங்களையும் சேகரித்துக்கொண்டால் கதைக்கு தேவையான நிகழ்வுகளை, 'சீரியஸ்'ஸாகவும், சுவாரஸ்யமாகவும் எடுத்துக்கொண்டுபோக, இதிலிருந்து எடுத்துக் கொண்டே போகலாம்.

சுதந்திரம் கிடைத்து 69 வருடங்களுக்கு மேலாகியும் எந்த மாற்றமும் அடையாத 'பெரிய' அறிவாளிகளாலும் மாற்ற முடியாமற் போன இந்த விவசாயியை, இன்னும் இவனிடம் நேர்மை இருக்கிறது என்ற ஒரே நல்ல காரணத்திற்காக கடவுளே வந்து காப்பாற்றுவதாக கதைக்கு ஒரு முடிவை வைத்துக்கொண்டு திரைக்கதை எழுத ஆரம்பிக்கப் பட்டது.

# பாக்ஸ் மெதட் (Box Method)

ஒரு சித்திரக் கலைஞன் எப்படி தான் வரைய நினைக்கும் சித்திரத்திற்கு தேவையான அளவில் வரைதாளை தேர்ந்தெடுத்துக் கொள்கிறானோ அதே போல் ஒரு செவ்வக கட்டம் போன்ற திரையில் பார்க்கும் திரைப்படத்திற்காக திரைக்கதை எழுதும் நாம் அந்த திரையைப் போலவே கட்டங்களை போட்டுக்கொண்டு, அந்த கட்டத்தை பார்த்தவாறே நம் சிறுகதையை காட்சிவாரியாக யோசித்தால், படம் பார்ப்பது போலவே மனத்திரையில் நம் அறிவுக்கு ஏற்ப காட்சிகள் வருகின்றன. சரிதானே!?

எப்படி ஆரம்பிப்பது - (ஒரு முறை கடைசி பக்கத்தில் ஒட்டியிருக்கும் அட்டவணையை பார்க்கவும்) உங்கள் கதையை முதலில் 7-8 முக்கிய நிகழ்ச்சிகள், திருப்பங்களுடன் சிறுகதையாக - விடைத்தாளில் எழுதி முடியுங்கள்.

பிறகு ஒரு விடைத்தாளை சம அளவுள்ள 72 கட்டங்களாக அமைத்துக்கொள்ளுங்கள். அவற்றுக்கு 1 லிருந்து 72 எண்களை ஒரு மூலையில் எழுதிவிடுங்கள். டிஜிடல் முறையில் போனால்தான் எவ்வளவு தூரம் போயிருக்கிறோம். இன்னும் எவ்வளவு தூரம் போகவேண்டும் என்பது கனக்கச்சிதமாகத் தெரியும். (சார்டை பெரிதாகவும் அமைக்கலாம்)

இனி ஒவ்வொரு கட்டத்திலும், உங்கள் கதைக்கான ஒவ்வொரு காட்சியை, நிகழ்ச்சி எங்கு நடக்கிறது, காட்சியின் முக்கிய அம்சங்கள் என்ன என்பதை மட்டும் மிகச் சுருக்கமாக எழுதிக் கொண்டே போய், கதையை முடியுங்கள். 25 லிருந்து 30 கட்டங்களில் முடிந்தாலும் பரவாயில்லை. இப்பொழுது நீங்கள் எழுதியிருக்கும் முழுக்கதையும் உங்கள் கண்முன் இருக்க, மனத்திரையில் சினிமா பார்ப்பதுபோல் அட்டவணையின் மீது 'சூபர் இம்போஸ்' ஆகும்.

இனி நீங்கள் எழுதியிருக்கும் கதையோட்டத்தை படித்துவிட்டு கதைக்கான முக்கிய அம்சங்களுடன் கதையை இன்னும் விரிவுபடுத்துங்கள். விரிவுபடுத்த கிடைக்கும் காட்சிகளை எந்தெந்த காட்சிகளுக்கு மத்தியில், எண்களோடு, தாளின் கீழ்வரிசையில் காலியாக உள்ள கட்டங்களில் எழுதி முடியுங்கள். பிறகு புதிய சார்ட்

தயார் செய்துகொண்டு கீழே எழுதிக் கொண்ட காட்சிகளை எந்தெந்த காட்சிகளுக்கு மத்தியில் சேர்க்க வேண்டுமோ அங்கு சேர்த்து எழுதி மொத்தம் எத்தனை காட்சிகள் வந்திருக்கின்றன என்று பாருங்கள். இப்படியே ஏறக்குறைய 72 காட்சிகள் வரும்வரை விரிவாக்கி எழுத 4 அல்லது 5 சார்ட்கள் அல்லது இன்னும் அதிகமாகவும் தேவைப்படலாம். கதையை முடிக்க 72 காட்சிகளுக்கு மேலும் போய்விடலாம். அப்பொழுது பெரியதாளில் 90 கட்டங்கள் போட்டு எழுதி முடியுங்கள். பிறகு காட்சிகளை சுருக்கிக் கொள்ளலாம்.

இந்த 70-80 காட்சிகளில் முடிவடைந்துள்ள கதையின் 'சார்ட்'ஐ வைத்துக்கொண்டு கதையோட்டம் சரியாக இருக்கிறதா காட்சிகளை மாற்றிப்போட வேண்டுமா, காலக்கழிவுகள் சரியாக கணக்கிடப் பட்டுள்ளதா போன்ற இன்னும் பல முதல் நடவடிக்கைக்கான விஷயங்களை சுலபமாக நீங்கள் சரிபார்த்துவிடலாம். பிறகு ஒவ்வொரு காட்சியாக 'ஸ்டடி' செய்து திரைக்கதையை நல்ல 'ட்ரீட்மெண்ட்'டுடன் சுவாரஸ்யமாக விடைத்தாளில் எழுத ஆரம்பிக்கலாம்.

இதையே நீங்கள் பக்கம் பக்கமாக பேப்பரில் எழுத ஆரம்பித்தால் கதையின் முடிவு வெகு தூரத்தில் இருப்பதுபோல தெரியும். ஆனால் கட்டத்தில் எழுதும்போது காட்சிகள் நம் கண்முன் கண்ணுக்கு எட்டிய தூரத்தில் இருந்து, முடிவும் பக்கத்திலேயே இருப்பதாக தெரிந்து, முடிக்கும் ஆர்வத்தையும் தைரியத்தையும் கொடுக்கும்.

## '☐' கட்டத்தின் உபயோகங்கள் :

1. கட்டத்தில் எழுதிப்பார்க்கும்போது நமக்கு திரையில் அந்த காட்சியை பார்ப்பது போன்ற உணர்வு.
2. நாம் எழுதி முடித்த காட்சிகள் முழுதும் நம் கண்ணுக்கு எட்டிய தூரத்தில் இருப்பது.
3. ஒரு காட்சியைப்பற்றி விவாதித்துக்கொண்டிருக்கும்போது அதற்கு முன்பின் காட்சி எது என்பதை உடனே பார்த்தறிய.,
4. புதிதாக காட்சிகளை சேர்க்க எந்த காட்சிகளுக்கு இடையில் இடமிருக்கிறது என்பதை உடனே கண்டறிய,
5. முழு கதையும் காட்சிக்கு காட்சி நம் கண்முன் ஒரேசார்ட்டில் இருப்பதால் காட்சிகளை இடம்மாற்றி அமைத்து சமன் (Balance) செய்ய.

6. கதையோட்டம் சரியாக இருக்கிறதா என்பதை கவனிக்க.

7. ஒரு கதாபாத்திரத்தை முதன் முறையாக எந்த காட்சியில் அறிமுகம் செய்திருக்கிறோம் என்பதையும் சரியான காட்சியில் அறிமுகம் செய்திருக்கிறோமா என்பதையும் கவனிக்க.

8. எந்த காட்சியில் எந்தெந்த ஆர்டிஸ்ட்கள் இருக்கிறார்கள் என்பதை பார்க்க....

9. ஒரு குறிப்பிட்ட கதாபாத்திரம் எத்தனை காட்சிகளில், வருகிறது என்பதை கணக்கெடுக்க.

10. நாயகன் மற்றும் நாயகிமட்டும் எத்தனை காட்சிகளில், வேறு கதாபாத்திரங்களுடன் எத்தனை காட்சிகளில், இப்படியே வேறு கதாபாத்திரங்களின் காட்சி கணக்குகளை பார்க்க.

11. 'ஸீன்ஸ்', 'ஸீக்வென்ஸ்' களை மாற்றிப் போட்டு பார்க்க.

12. சம்பவங்களின் காலக் கழிவை கண்டுபிடிக்க. ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு காரியம் முடிவதாக இருக்க அதை சரியாக முடித்து அடுத்த காரியத்தை ஆரம்பித்திருக்கிறோமா என்பதை சரிபார்க்க.

13. ஒரு குறிப்பிட்ட விஷயம் அதிகமாக வளர்ந்துகொண்டே போகிறதா என்பதை கண்டறிய.

14. காதல், பாசம், அன்பு, விரோதம் இன்னும் இவைபோன்றவை வளர்வதாக இருந்தாலும் குறைவதாக இருந்தாலும் படிப்படியாக எந்தெந்த காட்சிகளில் என்பதை கண்டுபிடிக்க மற்றும் அதிக தூரமும் இல்லாமல் மிக அருகிலும் இல்லாமல் சமன் (Balance ) செய்து அமைத்திருக்கிறோமா என்பதையும், இவற்றை எத்தனை காட்சிகளில் அமைத்திருக்கிறோம் என்பதையும் கணக்கிட.

15. கதாபாத்திரங்களின் வசனங்கள். 'ஸீன் பை ஸீன்' சரிவர சமனாகி வருகிறதா என்பதை சரிபார்க்க, மற்றும் எந்தெந்த கதாபாத்திரங் களுடன் எப்படிப்பட்ட வசனம் என்பதை சரிபார்க்க. குறிப்பிட்ட அந்த கதாபாத்திரங்கள் எந்தெந்த காட்சிகளில் வருகிறார்கள் என்பதை குறித்துக் கொள்ள.

16. காட்சிகளை பார்த்து, உடல் நடவடிக்கைகள் (Physical Action) உள்ளத்தால் ஏற்படும் நடவடிக்கைகள் (Emotional Action) எத்தனை என்பதை கணக்கிட.

17. எந்தெந்த காட்சிகளில் பிணக்குகள் (Conflicts) உருவாகின்றன என்பதை கண்டறிய.

18. எந்த காட்சியில் பாட்டு, சண்டை அவை எத்தனை என்பதை உடனே பார்த்து சொல்ல.

19. டிஸ்கஷனுக்கு இந்த 'சார்ட்'ஐ சிறிய கம்ப்யூடர் ப்ரொஜெக்டர் மூலம் திரையிட்டுவிட்டு, தொழில் வல்லுனர்களோடு ஸ்க்ரிப்ட்டுடன் உட்கார்ந்து, குறை நிறைகளை சுலபமாக சரி செய்ய உதவியாக இருக்கும்.

20. பல கதாநாயகர்கள் தங்கள் படங்கள் தோல்வி அடைகின்றனவே என்று வேதனையடைந்து இருப்பார்கள். ஒரு படத்தின் வெற்றிக்கு திரைக்கதை மிகவும் முக்கியம் என்பது அவர்களுக்கு தெரிந்திருக்கலாம். ஆனால் அவர்களால் அந்த 150 லிருந்து 200 பக்கங்கள் கொண்ட திரைக்கதையை படித்து ஜீரணித்துக் கொள்ள முடிவதில்லை. இந்த சார்ட் ஐ வைத்துக்கொண்டு டைரக்டருடன் 'டிஸ்கஸ்' செய்து அவருக்கு தேவையானதை சுலபமாக புரிந்துகொள்ள முடியும்.

21. படத்தயாரிப்பாளர்களுக்கு 'ஸினாப்ஸிஸ்' ஐ சொல்லிவிட்டு இந்த 'சார்ட்'ஐ கம்ப்யூட்டர் ப்ரொஜெக்டர் மூலம் குட்டித்திரையில் (4' x 6') இட்டு காட்சிகளை விளக்கிவந்தால் அவர்களும் படம் பார்ப்பதுபோலவே ஃபாலோ செய்வார்கள். அப்படியே சந்தேகங்கள் வந்தாலும் காட்சிகளை காட்டி விளக்கம் கேட்டு அங்கேயே அப்பொழுதே தீர்த்துக் கொள்ளலாம்.

22. இந்த 'சார்ட்' நம் பாக்கெட்டில் இருந்து நாம் வெளியே இருக்கும் போது ஏதாவது ஒரு சந்தேகமோ ஐடியாவோ வந்தால் உடனே ரெஃபெர் செய்துபார்க்க உதவும். சினிமா எடுக்க ஆரம்பித்துவிட்டாலே 24 மணி நேரமும் அதே நினைப்புதானே.

23. பல தயாரிப்பாளர்கள் கண் மூடித்தனமாக சிலரின் கவர்ச்சியான கதை விளக்கத்தில் மயங்கி படமெடுக்க ஆரம்பித்து தோல்வியில் முடிகிறார்கள். நாம் ஒரு பொருளை தயாரித்து விற்பனையில் விடுகிறோம் என்றால் கண்டிப்பாக அப்பொருள் தயாரிப்பின் அடிப்படை விஷயங்களை தெரிந்து வைத்திருக்க வேண்டும். பொதுவாக தயாரிப்பாளர்கள் எந்தெந்த ஏரியாவை எந்தெந்த டிஸ்ட்ரிப்யூடருக்கு என்னென்ன விலைக்கு விற்கலாம் என்பதைப்பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பார்களே தவிர திரைக்கதையை படிப்பது என்றாலே அது டைரக்டரின் வேலை என்று ஓடிவிடுவார்கள். உண்மையில் தயாரிப்பாளர்களுக்கு இது ஒரு அலுப்பூட்டும் அனுபவமாக (Boring Experience) இருக்கிறது.

இந்த 'சார்ட்' இவர்களை கண்டிப்பாக கதையை அறிந்து கொள்ள தூண்டும்.

கட்டத்தில் எழுதும்போது கற்பனா சக்தி சுருக்கப்படுகிறது என்று சொல்லலாம். நாம் படிப்பவர்களுக்காக எழுதாமல் பார்ப்பவர்களுக்காக எழுதுவதால் இப்படி இந்த ஃப்ரேமுக்குள் கற்பனை செய்து பார்த்தவாறு மனக்கண்ணால் விரிந்து பார்க்கலாம் அல்லவா....?

ஆறுவித சக்திகளை வைத்துக் கொண்டு 64 கட்டத்திற்குள் இரு நாடுகள் நடத்தும் பலவிதமான தாக்குதல்களை, (Attacks) போராட்டங்களை நம் கண்முன்னே 'செஸ்' விளையாட்டில் நாம் காண்கிறோம். அதே போல் 75 லிருந்து 80 கட்டங்களில் நாம் ஒரு கதையை எழுதிவிட்டு முழுக்கதையையும் நம் கண்முன்னே வைத்துக் கொண்டு நடப்பவைகளை கண்டு ரசித்து தவறுகளை தள்ளிவிட்டு பின் ஒரு நல்ல திரைக்கதையை தயார் செய்வதில் ஜெயித்து காட்டலாம் அல்லவா? (தயவுசெய்து டெக்னீஷியன்கள் இந்த ஒப்பீட்டை சீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ளக்கூடாது.)

# சில தொழில்நுட்ப (Technical) பதங்கள்

| | |
|---|---|
| Panaromic View (பே(அ)னோரமிக் வ்யூ) | – வெகு தூரத்திலிருந்து அழகாக ஒரு காட்சியை பார்ப்பது, காட்டுவது. |
| Bird's Eye view or Ariel View (பர்ட்ஸ் ஐ வ்யூ அல்லது ஏரியல் வ்யூ) | - மேலிருந்து பறவையின் பார்வையில் பார்த்தல், அசையும் உருவங்கள் சிறியதாக தெரிவது. |
| High or Top Angle (ஹை அல்லது டாப் ஆங்கல்) | - மேலிருந்துபார்த்தல், அசையும் உருவங்கள் சற்று தெளிவாக தெரிவது. |
| Low Angle (லோ ஆங்க்ல்) | - கேமரா 1 to ½ அடிக்கும் அதற்கு கீழ் இருந்தும் படம் பிடிப்பது. |
| Extreme long Shot (எக்ஸ்ட்ரீம் லாங் ஷாட்) | - தூரத்தில் கதாபாத்திரங்கள் சுற்றுப்புற சூழ் நிலையோடு முழுமையாக தெரிவது. |
| Long Shot (லாங் ஷாட்) | - தூரத்தில் மனிதன் or மனிதர்கள் சுற்றுப்புறச் சூழ்நிலையோடு முழுவதும் சற்று தெளிவாக தெரிவது. |
| Mid-Long Shot (மிட் லாங் ஷாட்) | - மனிதன் or மனிதர்கள் முழுவதும் தெரிவது. |
| Mid Shot (மிட் ஷாட்) | - மனிதன் or மனிதர்கள் இடுப்புவரை தெரிவது. |
| Close shot (க்லோஸ் ஷாட்) | - மனிதன் or மனிதர்கள் தோளுக்கு மேல் தெரிவது. |
| Close – up (க்லோஸ் அப்) | - முகம் மட்டும் தெரிவது. |
| Big Close – up or Tight Close (பிக் க்லோஸ் அப் அல்லது டைட் க்லோஸ்) | - கண், மட்டும் தெரிவது. |
| Flash Shot (ஃப்ளேஷ் ஷாட்) | - இடங்கள் அல்லது ஆக்ஷனுக்கு முன், ஒருவரின் முகம், கை, உபயோகிக்க விருக்கும் பொருள் or ஆயுதம் என்று அவற்றை டக் டக் டக் என்று ஒருவொரு Sec காட்டுவது. |

| | |
|---|---|
| Master Shot (மாஸ்டர் ஷாட்) | - பொதுவாக ஒரு இடத்தில் or ஒரு அறையில் எல்லோரையும், எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாக பார்த்தல். |
| Specific Shot (ஸ்பெஸிஃபிக் ஷாட்) | - ஒரு இடத்தில் or அறையில் குறிப்பாக ஒன்றை பார்த்தல் |
| Suggession shot (ஸஜ்ஜஷன் ஷாட்) | - கேமராவுக்கு முன் (மிக அருகில்) ஒரு கதாபாத்திரம் or வேறு வஸ்துவோ இருக்க, அதன் பின்னால் தெரியும் க.பா., or வஸ்துக்களை முக்கியப்படுத்தி காட்டுதல் |
| Cut to (கட் டு) | - காட்சியை அத்தோடு நிறுத்தி அல்லது வளராமல் வெட்டி அடுத்த காட்சிக்கு செல்ல. |
| Panning (பே(அ)னிங்) | - கேமரா ஸ்திர நிலையில் நிற்க அதை பக்கவாட்டில் திருப்புதல். |
| Tilting (டில்டிங்) | - கேமரா ஸ்திர நிலையில் நிற்க அதை மேலும் கீழும் அசைத்தல். |
| Zoom (zoom – in) ஃஜூம் (ஃஜூம் இன் ஃஜூம் பே(அ)க்) | - இருந்த இடத்திலிருந்தே தூரத்தில் தெளிவாக தெரியாத ஒன்றை, கேமராவுக்கு ஃஜூம் லென்ஸ் (Zoom lens) ஐ பொருத்தி நெருங்கி பார்ப்பது. இதற்கு எதிர்ப்பதம் (Zoom Back) ஃஜூம் பே(அ)க். |
| Passing Shot (பாஸிங் ஷாட்) | - பொதுவாக 3-6 வினாடிகள், வாகனங்கள் கடந்து செல்வதைத்தான் பாஸிங்ஷாட் (Passing Shot) என்று சொல்லப் படுகிறது (இதில் வசனத்தை 'ஓவர்த்ரோ' செய்யலாம்) |
| Chasing Shot (சேஸிங் ஷாட்) | - துரத்திச்செல்லும் எவற்றையும் காமிரா அதன் உடன் சென்று படம் பிடித்தல். |
| Crane Shot (க்ரேன் ஷாட்) | - க்ரேன் இயந்திரத்தில் மேடை அமைத்து அதில் காமிராவை வைத்து, இடம், வலம், மேல், கீழ் என்று அந்தரத்திலிருந்து படம் பிடித்தல். |
| Trolley Shot (ட்ராலி ஷாட்) | - சிறிய தண்டவாளங்களில் அமைக்கப்பட்ட மேடையில், காமிராவை இருத்தி, படம் பிடிக்கப்பட வேண்டியவற்றுக்கு பக்க வாட்டில் கூடவே சென்று அல்லது முன்னும் பின்னும் நகர்த்தி படம் பிடித்தல். |

| | |
|---|---|
| Dissolve (டிஸால்வ்) | - ஒரு காட்சி மறைய மறைய or கரைய கரைய இன்னொரு காட்சி அப்படியே தோன்றுவது. |
| Fade out (ஃபேட் அவ்ட்) | - ஒரு காட்சி முழுவதுமாக மறைந்து இருட்டாதல். |
| Fade in (ஃபேட் இன்) | - 'ஃபேட் அவ்ட்' ஆன இருட்டிலிருந்து வேறு காட்சி தோன்றுவது. |
| Superimposition (சூபர் இம்போஸிஷன்) | - ஒரு காட்சி அப்படியே இருக்க அதன் மீதே வேறு காட்சிகளை காட்டுவது. |
| Frame (ஃப்ரேம்) | - கேமராவின் மூலமாக ஒரு காட்சியை எந்த கட்டத்திற்குள் பார்க்கிறோமோ அந்த கட்டம் ஃபரேம் என்று அழைக்கப்படுகிறது |
| Exit (எக்சிட்) | - கேமரா நிலைத்து இருக்க, 'ஃப்ரேம்' க்குள் நடந்து கொண்டிருக்கும் ஒரு காட்சி யிலிருந்து கதாபாத்திரம் or கதா பாத்திரங்கள் வெளியேறுவது. |
| Frame - out (ஃப்ரேம் அவுட்) | - கேமராவை நகர்த்தி கதா பாத்திரங்களை வெளி யேற்றுவது. ('எக்ஸிட்'க்கும் இப்பதம் பயன்படுத்தப்படுகிறது.) |
| Include (இன்க்லூட்) | - நாம் பார்த்துக்கொண்டிருக்கும் காட்சியின் ஃப்ரேமினுள், யாரையேனும், எதையேனும், கேமராவை செலுத்தி சேர்த்துக்கொள்வது |
| Entry (என்ட்ரி) | - ஃப்ரேம்க்குள் நடந்துகொண்டிருக்கும் காட்சியில் கதா பாத்திரம் or கதாபாத்திரங்கள் வந்து சேர்வது. |
| P.O.V. (பி.ஒ.வி) | - பாய்ன்ட் ஆஃப் வ்யூ (Point of view). அவரவர் களின் கருத்துக் கண்ணோட்டம், மற்றும் ஒரு கதாபாத்திரம் பார்க்கும் கோணத்தில் கேமரா பார்ப்பது. |
| H.W.O. (ஹெச்.டப்ல்யு.ஓ) | - ஹாஃப் வே ஓபனிங், (Half Way opening) ஒரு வேலையோ, சம்பவமோ வசனமோ ஆரம்பமாகி சற்றுமுடிந்த நிலையில் காட்சியை ஆரம்பிப்பது. |
| Continuity (கன்டிநியுடி) | - கதையோட்டம் (Flow) கெடாத தொடர்ச்சி. இதில் இடம், 'காஸ்ட்யூம், ப்ராபர்டீஸ்' |

வசனம், பாவம், ஆக்ஷன், ஒலி, ஒளி, இ.பிற அடக்கம்.

**Action (ஆக்ஷன்)** - பாவனை உள்ள or பாவனை அற்ற நடவடிக்கை (செயல்)

**Reaction (ரிஆக்ஷன்)** - கதையில் எதிர்விளைவு, காட்சியில் பாவனையோடு கூடிய எதிர்வினை

**Out-Door (அவ்ட் டோர்)** - பொதுவாக வெளியூர் படப்பிடிப்பு இப்படி அழைக்கப்படுகிறது வெளி படப்பிடிப்பு.

**Flash back (ஃப்லேஷ் பே(அ)க்)** - நடந்த ஒன்றை ஒருவர் தன் கண்ணால் பார்த்ததின்படியே கூற ஆரம்பிக்க அதை நம் கண்ணால் நாம் திரையில் காண்பது.

**Freeze (ஃப்ரீஃஜ்)** - அசைவுடன் இருக்கும் காட்சியை அசைவற்றதாக்குதல்.

**Time Lapse (டைம் லே(அ)ப்ஸ்)** - காலக்கழிவு. இதுகாட்சியின் மத்தியிலும் வரும் காட்சிகளுக்கு இடையிலும் வரும் அதாவது 5 நிமிடம் முதல் எவ்வளவு காலத்தையும் கழிந்ததாக காட்டுவது.

**Pre Establishment (ப்ரீ எஸ்டே(அ)ப்ளிஷ்மென்ட்)** - பின் வரும் காட்சிக்கான ஒரு விஷயத்தை ஸ்வாரஸ்யகரமாக்க, தேவையான கால அளவோடு, முன் வரும் காட்சியில் அதற்கு சம்பந்தப்பட்ட விஷயத்தை சற்றே தெரியபடுத்தி, ஆடியன்ஸ் மனதில் அதை பதிய வைத்தல்

**Clap Board (க்லே(அ)ப் போர்ட்)** - இது படப்பிடிப்பு தொழிலில் மிக முக்கிய மான உபகரணம். இதில் படத்தின் பெயர், படக்கம்பெனியின் பெயர், படப்பிடிப்பு தேதி, சமயம், காட்சி எண், ஷாட் எண் மற்றும் டேக் எண் (ஒரே ஷாட் எத்தனை முறை எடுக்கப்பட்டது) என்று அனைத்தும் அவ்வப்பொழுது எழுதப்படும், மேல் பாகம் தட்டி சத்தம் ஏற்படுத்தும் (வசன பதிவு வசதிக்காக) அமைப்புள்ள சிறிய

கரும்பலகை. தற்பொழுது எலக்ட்ரானிக் க்லேப் போர்டை பலர் பயன் படுத்து கிறார்கள். இது படத்தொகுப்பின் ஜீவநாடி!

Breaking Down (ப்ரேகிங் டௌன்) - ஒரு முழுப்படத்திற்கான திரைக்கதையை படப்பிடிப்பு வசதிக்காக, காட்சி களுக்கான இடம் (Location) வாரியாக பிரித்து (உடைத்து) எழுதிக் கொள்ளுவதைத்தான் 'ப்ரேகிங் டௌன்' அல்லது 'ப்ரேக்டௌன்' என்பர். அதாவது ஒவ்வொரு லொகேஷனில் உள்ள அனைத்து காட்சிகளையும் ஒரே நேரத்தில் படம் பிடித்து முடித்தவாறு சென்று, படப் பிடிப்பை முடித்து பின் எடிடர் உதவியுடன் வரிசைப் படுத்தி ஒட்டிக்கொள்வர்.

மேற்கண்டவை பொதுவாக சொல்லப்படும் அர்த்தங்கள்.

# ‘நம்மவள்’ கதை உருவான விதம்

முன்னணியில் உள்ள ஹீரோ ஹீரோயின்களை வைத்து படம் எடுத்தல், நல்ல கதை இருந்தால் போதும் என்று படம் எடுத்தல், வேறு மொழிகளில் ஹிட் ஆன படம் என்று அதை அப்படியே கன்னடத்தில் தயாரித்தல் என்று பல வகையில் படமெடுத்து நஷ்டத்தையே கண்டிருந்த என் பங்குதாரர்களிடம் கடைசியான என் படத்தைப்பற்றி பேசியபோது அவர்களும் ஒப்புக்கொண்டு, ஒரு கதைக்காக, இரண்டு, 35 வருட ஹிட் படங்களின் கதைச் சுருக்கங்களையும், அப்போதுதான் வெளிவந்து சூபர் ஹிட் ஆகியிருந்த படக்கதையின் கருவையும் சொன்னார்கள். (உடனே, என்னிடம் ஒரு கதை இருக்கிறது என்று சொல்லாமல், கதை எதுவாக இருந்தாலும் திரைக்கதையை நன்றாக அமைத்தால் போதும் என்று அதை ஏற்றுக்கொண்டேன்)

அவர்கள் சொன்ன ஒருவரிக்கதை:

1. ஜமீன்தார் வீட்டில் சிறுவயதிலேயே நிச்சயதார்த்தம் செய்யப்பட்ட சிறுவர்களின் குடும்பங்கள் பிரிந்துபோய் பின் எப்படி ஒன்று சேர்கிறார்கள்.

2. சிறுவயதில் காணாமல்போன ஒரு இந்து பெண் எப்படி ஒரு கிருஸ்தவ பெண்ணாக வாழ்ந்து பின் பிறந்த வீட்டை சேர்கிறாள்.

3. நாயகன் நாயகி பலமுறை சந்தித்துக் கொண்டாலும் கடைசியில்தான் ஒருவரை ஒருவர் அறிந்து, ஒன்று சேரவேண்டும் என்பன.

இதன் அடிப்படையில் இரண்டு ‘ஸினாப்ஸிஸ்’களை என் பங்குதாரர்களுக்கு கொடுத்தேன். அவற்றில் ஒன்று கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## இரண்டு கதைகளில் ஒன்று

### ‘நம்மவள்’

பெயர் காரணம் : காணாமல் போன ஒரு இந்து பெண், சிறு வயதிலிருந்தே ஒரு ‘க்ரிஸ்டியன்’ வீட்டில் வளர்ந்ததால் பெரியவள் ஆனதும் உண்மை அறிந்தபின் இருவீட்டாரும் ஒன்று சேர்ந்து அவளை ‘நம்மவள்’ என்கிறார்கள். அதனாலேயே ‘நம்மவள்’ என்று பெயர் சூட்டப்பட்டது (இந்த டைடில் 2000ல் வைக்கப்பட்டது.)

ஜமீன்தார் குடும்பத்தில் நாத்தனார்களின் ஒற்றுமையால், தங்கள் பிள்ளைகள் எக்காலத்திலும் பிரிந்துவிடக்கூடாது என்ற ஆசையால்,

அவ்விருவருக்காக வெற்றிலை பாக்கு மாற்றி கல்யாணம் நிச்சயம் செய்து கொள்கிறார்கள்.

நிச்சயிக்கப்பட்ட சிறுவர்கள் நகைக்காக திருடர்களால் கடத்தப் படுகிறார்கள். பிறகு சிறுமி ஒரு ஊரிலும் சிறுவன் வேறு ஊரிலும் விற்கப்படுகிறார்கள். 17 வருடங்கள் கழிகின்றன.

சிறுவன் இளைஞனாகி இந்து நாயகனாகவும், சிறுமி பருவ மங்கையாகி க்ரிஸ்டியன் நாயகியாகவும் ஒரே கல்லூரியில் B.sc படித்துவருகிறார்கள். ஒருவரை ஒருவர் உண்மையாக காதலித்தாலும் வெளியே காட்டிக்கொள்வதில்லை.

ஜமீன்தார் வீட்டார் 17 வருடங்களுக்கு முன் காணாமல் போன சிறுவர்களைப்பற்றி விளம்பரம் கொடுத்து நகைகளின் படங்கள், உடலில் உள்ள அடையாளங்களையும், கூடவே, நிச்சயம் செய்யப்பட்ட அன்றே சிறுவர்கள் காணாமல் போன செய்தியையும் வெளியிடுகிறார்கள்.

விளம்பரத்தை நாயகன் நாயகி தனித்தனியாக பத்திரிகையில் பார்க்கிறார்கள். இருவர் வீட்டிலும் ஒரு கால கட்டத்தில் சிறுவயதில் இவர்களின் இடுப்பில் இருந்த குடும்ப அடையாளம் பதித்த, வெள்ளி இடுப்பு 'கயிறை' காட்டி, இவர்கள் கண்டெடுத்த பிள்ளைகள் என்பதை அவர்களுக்கு தெரிவித்திருப்பார்கள். அதனால் விளம்பரத்தில் உள்ளவர்கள் தாங்கள்தான் என்பதை தனித்தனியாக அறிகிறார்கள்.

''சிறுவயதிலேயே நிச்சயிக்கப்பட்டவர்கள் என்று எழுதியிருக்கே நான் அங்கே போக அந்த நிச்சயிக்கப்பட்ட பெண் அங்கு வந்துவிட்டால் என் காதல் என்னாவது'' என நாயகனும், ''நான் அங்கே போக அந்த நிச்சயிக்கப்பட்ட பையன் அங்கு வந்துவிட்டால் என் காதல் என்னாவது'' என்று நாயகியும் யோசிக்கிறார்கள். ஆனால் இருவர் மனத்திலும் தன் தாய் தந்தையரை பார்க்கவேண்டும் என்ற ஆசை தலைதூக்குகிறது. அவர்களிடம் கொஞ்சநாள் இருந்து கவனிக்க தனித்தனியே திட்டமிடுகிறார்கள்.

நாயகிக்கு தெரியாமல் நாயகன் ஜமீன்தார் வீட்டிற்கு சென்று அவர்கள் ஹாஸ்பிடலில் வேலைக்கு சேர்ந்துவிடுகிறான்.

நாயகியும் ஜமீன்தார் வீட்டிற்கு வர நாயகனை பார்த்து திடுக்கிட்டு 'நீ ஏன் இங்கு வந்தாய்' என்கிறாள்.

நாயகிக்கும் ஜமீன்தார் ஹாஸ்பிடலில், கெஞ்சி கூத்தாட வேலை கிடைத்து விடுகிறது.

நாயகன் மற்றும் நாயகி தனித்தனியே வீட்டின் நிலைமையை கவனிக்க, அங்கு தாத்தா பாட்டி இருவரும் ''என் பேரன் பேத்திகள் கண்டிப்பாக கிடைத்துவிடுவார்கள்' என்று யாகம் வளர்த்து வருகிறார்கள்.

நாயகன் மற்றும் நாயகி, குழம்பியிருக்கும்போது நாயகனின் நண்பர்கள் மூன்று பேரும் நாயகியின் நண்பிகள் மூன்று பேரும் வந்து சேர்கிறார்கள். இவர்களிடம் உண்மைகளை நாயகனும் நாயகியும் தனித்தனியாக விளக்குகிறார்கள்.

நாயகனின் ஒரு அங்க அடையாளத்தை சொல்லி நண்பர்கள் தாத்தாவையும், நாயகியின் ஒரு அங்க அடையாளத்தை சொல்லி நண்பிகள் பாட்டியையும், மாய மந்திரத்தை காட்டி பழையனவற்றை மறக்கச்செய்ய அடாவடித்தனத்தில் ஈடுபடுகிறார்கள்.

நாயகன்-நாயகி, உள்ளூர காதலிப்பதை அறிந்துகொண்ட ஜமீன்தார்வீட்டார், ''முன்பே ஒருவரை ஒருவர் அறிந்திருந்து, தனித்தனியாக இங்கு வந்து காதல் செய்ய நம் வீட்டை ஏன் தேர்ந்தெடுத்தார்கள்? இதில் ஏதோ மர்மம் இருக்கிறது'' என்று சந்தேகித்து நாயகி பெட்டியை திறந்து பார்க்க அதில் அவள் இடுப்பு 'கயிறு' இருப்பதை கண்டு, அவள் தங்கள் பெண்தான் என்பதை அறிந்து அவளுக்கு தெரியாமல் அவள் மச்சத்தை பார்த்து ஊர்ஜிதம் செய்து கொள்கிறார்கள். ஆனால் நாயகன் பெட்டியில் ஏதும் இல்லாததால் அவனை வேற்றான் என்று எண்ணி மெதுவாக அவனை ஒதுக்கிவிட்டு தங்கள் பெண்ணுக்கு சொந்தத்தில் மாப்பிள்ளை பார்த்து கட்டிவிட ரகசியமாக ஏற்பாடு செய்கிறார்கள். முதலில் நாயகி நாயகனை வெறுக்க என்ன செய்யலாம் என்று திட்டமிடுகிறார்கள்.

இவர்களின் திட்டம் நாயகிக்கு தெரிந்து போக நாயகனை அழைத்துக் கொண்டு நாயகி 'சர்ச்'சுக்கு போக அங்கு 'ரூல்ஸ்' அதிகம் இருப்பதை கண்டு கோயிலுக்கு போகிறார்கள். ''எல்லோர் முன்னிலையிலும் பகிரங்கமாக திருமணம் செய்துகொள்ளாமல் ஏன் இந்த அவசரம்'' என நாயகன் கேட்க, அவள் அவனுக்காக பெரிய தியாகம் (பணக்கார தாய்தந்தையருக்கு தான் யார் என்று சொல்லாமல் இருப்பது) செய்திருப்பதாக சொல்ல அவனும் அப்படியே சொல்ல ஜமீன்வீட்டார் இவர்களை தேடி அங்கு வர நாயகன் அவன் இடுப்பு கயிறை காட்ட ஒரே சந்தோஷம்தான். சுபம். முற்றிற்று.

இரண்டு கதைச் சுருக்கத்தையும் படித்துவிட்டு, ''இவை ரொம்ப 'மாடர்ன்' ஆக உள்ளது. நாம் முக்கியமாக B&C சென்டர் ஜனங்களை கவரவேண்டும். மேலும் நாம் எடுப்பது 'பட்ஜெட்' படம். எனவே 70%

கிராமத்திலேயே நடப்பதாக இருந்து குறைவான கதாபாத்திரங்களுடன் நிறைவான கதையை கொடுங்கள்'' என்று சொல்லி விட்டார்கள். அவர்களின் உள்நோக்கத்தை புரிந்து கொண்டு அவர்களின் எதிர்பார்ப்பின்படி மூன்றாவது 'நம்மவளு நம்மவளு' ('நம்மவள்') 'ஸினாப்ஸிஸ்' ஐ எழுதிக்கொண்டுபோய் சொன்னதும் அவர்களுக்கு பிடித்துவிட்டது.

உடனே திரைக்கதையை எழுதும்படிச் சொன்னார்கள். முதலில் அந்த சிறுகதை (ஸினாப்ஸிஸ்) உருவான விதத்தை பார்ப்போம்.

பொதுவாக ஒரு சிறுகதையாக எழுதிக்கொள்வதற்கு முன் அதற்கான கதைக்கருவை வைத்து ஒரு 'ஃப்லே(அ)ட் ஸ்டோரி' ஐ தயாரித்துக் கொள்வது நல்லது. அதன்படியே.

1. ஜமீன்தார் வீட்டில் நாத்தனார் ஒற்றுமையால் அவர்களின் சிறுவர்களுக்கு இளம் வயதிலேயே திருமணம் நிச்சயம் செய்யப்படுகிறது.

2. சிறுவர்கள் நகைகளுக்காக திருடர்களால் திருடப்பட்டு, சிறுவன் மீனவகுடும்பத்துக்கும் சிறுமி ஒரு கிருஸ்தவகுடும்பத்துக்கும் விற்கப்படுகிறார்கள்.

3. 17 வருடங்கள் ஆனதும், நாயகனும் நாயகியும் ஒருவரை ஒருவர் அறியாமல் ஒரே இடத்தில் வேலை செய்கிறார்கள்.

4. ஜமீன்தார் வீட்டில், ''இந்த வருடம் காணாமல் போன உங்கள் பிள்ளைகள் கிடைத்துவிடுவார்கள்'' என்று ஐயர் சொல்ல சிறுவர்களின் எல்லா விவரங்களையும் அடக்கி ஒரு விளம்பரம் கொடுக்கிறார்கள்.

5. பத்திரிகையில் விளம்பரத்தை தனித்தனியாக படித்த, நாயகி வளர்ப்புவீட்டார் மற்றும் நாயகன் வளர்ப்பு வீட்டார் பெற்றவர்களிடம் பிள்ளைகளை ஒப்படைக்கிறார்கள்.

இனி இந்த 'ஃப்ளே(அ)ட்ஸ்டோரி' ஐ வைத்து சிறுகதை 'ஸினாப்ஸிஸ்' தயாரிக்க 10-12 சுவாரஸ்யமான திருப்பங்களை உருவாக்க வேண்டும் ஒன்றை அடைய எப்படிப்பட்ட தடைகள் கஷ்டங்களெல்லாம் வரும் என்பதை கண்டுபிடிக்கும் அறிவிருந்தால் போதும் அதிலிருந்து சுவாரஸ்யமான திருப்பு முனைகளை தேர்வுசெய்து கொள்ளலாம். நம் கதைக்கான அடிப்படை திருப்புமுனைகளை காண்போம்.

1. 17 வருடங்களுக்கு முன்பு சிறுவர்கள் காணாமல் போயிருக்கிறார்கள்.

2. சிறுவர்கள் காணாமல் போன தினத்தன்றே ஜமீன்தாரிணி அதிர்ச்சியில் புத்தி சுவாதீனம் அற்றவளாகிறாள்.

3. சிறுவயது ஞாபகம் ஏதுமின்றி 17 வருடங்களுக்கு பிறகு நாயகன் நாயகி சந்திக்கிறார்கள்.

4. நாயகன், நாயகி வசிக்கும் வீட்டின் வட்டாரத்திலேயே குடி புகுகிறான்.

5. ஜமீன் வீட்டார், காணாமல் போன சிறுவர்களைப்பற்றி விவரங்களுடன் விளம்பரம் கொடுக்கிறார்கள்

6. நாயகன், நாயகி வேலை நிமித்தம் பிறந்த ஊருக்கே வருகிறார்கள்

7. ஜமீன்தாரிணி புத்தி சுவாதீனம் அடைகிறாள்.

8. வில்லன் மூலமாக நாயகியின் அடையாளத்தை வைத்து 2-3 திருப்பங்கள்.

9. நாயகனின் அடையாளத்தை வைத்து 2-3 திருப்பங்கள்.

இப்படியாக இக்கதைக்கு போதுமான திருப்பங்களை அதாவது 'ஸீக்வென்ஸ்' களை உருவாக்கிக்கொள்கிறோம்.

திருப்பங்களை நிர்ணயித்ததும் (சிறுகதையை எழுதுவதற்கு முன்பே மனத்தில் ஒரு மேலோட்டமான சிறுகதை உருவாகியிருக்கும்). அதன் அடிப்படையில் கதாபாத்திரங்கள், அவர்களின் குணாதிசயங்கள், கதையில் தெரியப்படுத்த வேண்டிய 'மெஸ்ஸேஜ்'கள், கதைக்கான மூலாம்சங்கள் முதலியனவற்றை வைத்து அதன்படி சிறுகதை - 'ஸினாப்ஸிஸ்' பின்வருமாறு.

## 'நம்மவள்'

### (கதைச்சுருக்கம் - ஸினாப்ஸிஸ்)

பெரிய ஜமீன்தார் வீட்டில் மிக ஒற்றுமையாக இருக்கும் நாத்தனார்களின் பிள்ளைகள் சிறுவர்களாக இருக்கும் பொழுதே 'என் பெண்ணுக்கு உன் பையன்தான் உன் பையனுக்கு என்பெண்தான்' என்று தாம்பூலம் மாற்றிக்கொள்கிறார்கள். (நிச்சயதார்த்தம்). துரதிருஷ்டவசமாக அன்றைக்கே சிறுவர்களை திருடர்கள் ஊர்த்திருவிழாவில் திருடிக்கொண்டு போய்விடுகிறார்கள். (சிறுவர்கள் வீட்டைவிட்டு பிரிகிறார்கள். விதியால் வந்த விளைவு.) அந்த அதிர்ச்சியில் பெண்ணின் தாய் சித்தபிரமை பிடித்தவளாகிறாள். (எதிர்விளைவு).

திருடர்கள் கண்களுக்கு பட்ட நகைகளை கழட்டிக்கொண்டு பெண்ணை ஒரு கிருஸ்தவர் குடும்பத்துக்கும் பையனை மீனவ குடும்பத்துக்கும் விற்றுவிடுகிறார்கள். (நிச்சயிக்கப்பட்டவர்கள் பிரிகிறார்கள்) இருவர் இடுப்பில் உள்ள வெள்ளி இடுப்புக்கயிறு இவர்களிடமே நின்றுவிடுகிறது. (ஆதாரங்கள்).

சிறுமி கிருஸ்தவர் வீட்டில் 'ஸ்டெல்லா' என்ற பெயரிலும், சிறுவன் அதே பெயரில் 'ரமேஷ்' என்று மீனவர் வீட்டிலும் வளர்ந்து தன் சிறுவயதிலேயே பல வளர்ப்பு குடும்பங்கள் மாறி கடைசியில் ஒரு அனாதை ஆஸ்ரமத்திலுமாக, வளர்கிறார்கள். சிறுமி ஸ்டெல்லாவின் வெள்ளி இடுப்புக்கயிறு வளரும் கிருஸ்தவர் வீட்டிலும், சிறுவன் ரமேஷின் வெள்ளி இடுப்புகயிறு மீனவர் வீட்டிலும் நின்றுவிடுகிறது. (கதை வளர).

17 வருடங்கள் கழிகின்றன. (கதையை இளமையாக ஆரம்பிக்க) காணாமல் போன சிறுவர்களுக்கு பழையன எதுவும் ஞாபகம் இருப்பதில்லை. (கதை வளர)

ஸ்டெல்லா பி.எஸ்ஸி முடித்து 'நர்ஸ் ட்ரெய்னிங்'ம் முடித்திருக்கிறாள். கிருஸ்தவ அமைப்பிலேயே நல்ல வேலைக்கு காத்து இருக்கிறாள். தற்பொழுது 'பியானோ' சொல்லிக்கொடுக்கிறாள். 'கிரிஸ்டியானிடி'தான் பெரிது என்பவள். துடுக்கானவள். ஆண்கள் 'ஜொள்ளு பார்ட்டிகள்' என்ற அபிப்ராயம் உள்ளவள்.

ரமேஷ் பி.எஸ்ஸி முடித்து 'பி ஃபார்மா' வும் முடித்திருக்கிறான். 'கார் ட்ரைவிங் லைஸன்ஸ்' வைத்திருக்கிறான். வாழ்க்கையில் அடிபட்டு அனாதையாக வளர்ந்தவன். காலை வேலை செய்தால் மாலை உணவு, கடவுள் அப்புறம்தான் என்பவன். சாதுவானவன். விவேகி. (குணாதிசயங்கள் அடிப்படையில் ஸ்டெல்லாவுடன் உறவை ஏற்படுத்த).

ரமேஷ் வேலை தேடி சென்னை வருகிறான். (சந்திப்பின் ஆரம்பம்). ஸ்டெல்லா ஒரு கல்யாண மண்டபத்திலிருந்து தாம்பூல பையுடன் தெருவுக்கு வர, துரத்தப்பட்ட திருடன் ஒருவன் அவளை இடித்துவிட்டு ஓட, தாம்பூலப்பை கீழே விழுந்து சிதறுகிறது. அதே தெருவில் வந்து கொண்டிருந்த ரமேஷ் சிதறிக்கிடந்த வெற்றிலை பாக்கு தேங்காய் தாம்பூலபையில் போட்டு ஸ்டெல்லாவிடம் கொடுக்கிறான். தாம்பூலம் மாற்றிக் கொண்ட தினம் பிரிந்தவர்கள் தாம்பூலம் மூலமே 17 வருடங்கள் கழித்து முதன்முறையாக சந்திக்கிறார்கள், ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாதவர்களாக. (தாம்பூலத்தில் முதல் சந்திப்பு, ஸெண்டிமெண்ட்)

எதிர்பாராதவிதமாக அல்லது கடவுள் செயலால் அல்லது விதிவசத்தால் ரமேஷ், ஸ்டெல்லா வசிக்கும் வீட்டு வட்டாரத்திலேயே வாடகைக்கு தங்குகிறான், (உறவை நெருக்கமாக்க). ஸ்டெல்லா போகும் சர்ச் ஃபாதருக்கு ஒரு விபத்தில் ரமேஷ் ரத்தம் கொடுத்து உதவ அவனுக்கு அவர் சர்ச்சிலேயே தற்காலிகமாக 'ட்ரைவர் கம் க்லர்க்' வேலை கிடைக்கிறது. (ஸ்டெல்லாவுக்கு ரமேஷ் மீது ஒரு நல்ல அபிப்ராயம் வர, உறவை இன்னும் நெருக்க.)

இப்படி இருக்க, ஸ்டெல்லா வாழும் வீட்டு வட்டாரத்திலேயே சிறுவயது முதல் வாழ்ந்த ஜேம்ஸ் க்கு, ஸ்டெல்லா படித்தவள், தான் படிக்காதவன், தனக்கும் ஸ்டெல்லாவுக்கும் எந்த பொருத்தமும் இல்லை என்பது தெரிந்தும் சிறுவயது முதல் அவளை மனதில் வைத்திருந்ததால் அவளை சொந்தம் கொண்டாடுகிறான். இவன் ஒரு ரௌடி. (வில்லன்). இவனுக்கு ஸ்டெல்லா வீட்டு வட்டாரத்தில் வசிக்கும் லட்சுமி என்ற நேர்மையான அனாதைப்பெண் 'கீப்'.

(வில்லன் கதாநாயகியை அடைய முடியாது எனவே அவனுக்கு ஒரு உறவு. மற்றும் கதையில் மிகவும் சீரியஸ் வில்லனாக காட்டக்கூடாது என்ற கதை - செட்அப்)

இது இப்படியிருக்க, ஒருநாள் ஜமீன் வீட்டிற்கு ஐயர் வந்து ''குடும்ப ஜாதகப்படி இந்த வருடம் கண்டிப்பாக காணாமல்போன உங்கள் பிள்ளைகள் கிடைத்துவிடுவார்கள்'' என, காணாமல்போன தங்கள் பிள்ளைகளைப்பற்றிய முழு விவரங்களையும் கொடுத்து பத்திரிகைகளில் ஜமீன் வீட்டார் ஒரு விளம்பரம் கொடுக்கிறார்கள். (விதி விளையாட ஆரம்பிக்கிறது).

ஜேம்ஸ் இந்த விளம்பரத்தை பார்க்கிறான். ஸ்டெல்லா கேட்டுக்கொண்டதின் பேரில், ஸ்டெல்லாவின் தாய் மேரியின் அனுமதியோடு வெள்ளி இடுப்பு கயிறை அடமானம் வைத்தவனாதலால், ஸ்டெல்லா மேரியம்மாவின் சொந்த மகள் அல்ல என்பதை அறிந்துகொண்டு, ஸ்டெல்லா எங்கு தனக்குக் கிடைக்காமல் போய்விடுவாளோ என்று அவள் இடுப்புக்கயிறுடன் ஜமீன் வீட்டிற்கு வருகிறான். ''10 வயது இருக்கும்போதே உங்கள் பெண் இறந்து விட்டாள்'' என்று சொல்லி இந்த இ.கயிற்றை காட்டிவிட்டால் ஸ்டெல்லா 'சேப்டர்' 'க்ளோஸ்' ஆகிவிடும் என்று திட்டமிடுகிறான். (வில்லனின் நடவடிக்கை எதிர்பார்ப்பு) ஆனால் இ. கயிற்றை கிராமத்தில் தவறவிட்டுவிடுகிறான். ஒரே ஆதாரமாக இருந்த இ. கயிறு போய் விட்டது நல்லதுதான் என்று ஊர் திரும்புகிறான். (கடவுளின் சக்தி, விதியின் விளையாட்டு). ஸ்டெல்லாவின் இ. கயிறு கடவுள் செயலால் ஜமீன் வீட்டுக்கே கிடைக்கிறது. (சந்தோஷம், சங்கடம்)

ஸ்டெல்லா, ரமேஷ் பிறந்த கிராமத்துக்கு பக்கத்தில் உள்ள மலைப்பிரதேசத்தில் ஏழை மக்கள், கிருஸ்தவர்களாக மதம் மாறிய காரணத்தால் தாக்கப்பட்டு, அவர்களுக்கு உதவ மதருடன் ஸ்டெல்லாவும் ரமேஷும் பிறந்த ஊருக்கே அனுப்பப்படுகிறார்கள். (பிறந்த ஊர் போய்ச்சேர), (இன்னும் நெருங்க, கதை வளர) அங்கு உள்ளூர் சர்ச் ஃபாதரால் ஜமீன்தார் வீட்டின் (பிறந்த வீட்டின்) 'கெஸ்ட் ஹௌஸ்'ஸிலேயே தங்க ஏற்பாடு செய்து தரப்படுகிறது. (இனி ஈர்ப்பு சக்திகள் வேலை செய்ய.)

ஜமீன்தாருக்கு ஸ்டெல்லாவை பார்க்கும் போதெல்லாம் தன் காணாமல்போன மகள் கவனத்துக்குவர, ஸ்டெல்லாவிடம் அதிக பிரியமாக நடந்து கொள்கிறார். இவர்களுக்கு தங்க 'கெஸ்ட் ஹௌஸ்'ல் இடம் கொடுத்த காரணத்தால் ஜமீன் வீட்டில் சித்த பிரமை பிடித்திருக்கும் ஜமீன்தாரிணியை (தாயை) சென்னை ஹாஸ்பிடலுக்கு கூட்டிபோக வர ஸ்டெல்லா ஒப்புக்கொள்கிறாள். (பிறந்த வீட்டோடு சேரவிட்டு அது அவர்களுக்கு தெரியாமல், ரசிகர்களுக்கு தெரிந்து இவர்கள், தந்தை, தாய், மகள் உறவை கண்டு ரசிக்க).

ரமேஷ், சாது, சைவம், உழைப்பில் கடவுளை பார் என்பவன். ஸ்டெல்லாவோ, துடுக்கு, அசைவம், பேச்சுக்கு பேச்சு 'ஜீஸஸ்' என்பவள். இருவருக்கும் ஒத்துப்போவதே இல்லை. எப்பவும் கலாட்டாதான். (கலகலப்பாக இருக்க, இன்னும் நெருங்க).

ஸ்டெல்லா 'சர்வீஸ்', செய்வதில் ஜமீன்தாரிணி (தாய்) லேசாக குணமடைந்து வருகிறாள். (தாய் மகள் பாசத்தை ரசிகர்கள் ரசிக்க கதை வளர)

ஒருநாள் ஜமீன்தாரிணி வாசற்படி தடுக்கி கீழே விழ சித்த பிரமை தெளிந்துவிடும். (விதியின் விளையாட்டு. கடவுள் செயல்) நாத்தனாரிடம் ஜமீன்தாரிணி சொல்வாள் ''இந்த ஸ்டெல்லா பொண்ண பாத்தா நம்ம காணாமபோன கஸ்தூரி மாதிரியே தெரியுது. இவளுக்கு தொடையில் அந்த தழும்பும் மார்புல மச்சமும் இருக்கான்னு பாத்துடணுமே'' என்று, அதற்கான ஒரு திட்டம் தீட்டி தொடை தழும்பை மட்டும் பார்த்துவிடுகிறார்கள். (இந்த கண்டுபிடிப்பும் முழு காமெடிதான். பாதி ஆதாரம் கிடைத்தல்).

இப்படி இருக்க, பழைய பேப்பரில் ஜமீன்தார் வீட்டு விளம்பரத்தை பார்த்த மீனவ தம்பதியர் ரமேஷின் வெள்ளி இடுப்பு கயிற்றை எடுத்துக்கொண்டு அவன் கைமாறிய விலாசங்களில் விசாரித்து கிராமம் வந்து சேருகிறார்கள். ஆனால் ஜமீன் வீட்டில் முழு சொத்தையும் அடிக்க திட்டம் தீட்டிக்கொண்டிருக்கும் இன்னொரு அத்தை பையன் கிரண்னிடம் சிக்கிக் கொள்கிறார்கள். கிரண் இவர்களிடம் நைசாக

பேசி இடுப்புக்கயிற்றை வாங்கிக் கொண்டு, அவர்களை தன் தந்தையின் அறிவுரைப்படி பெப்ஸியில் மருந்தை கலக்கி குடிக்கவைத்து, பைத்தியமாக்க நினைத்து, அப்படியே செய்கிறான். ஆனால் ஆரம்பத்திலேயே தெரிந்து கொண்ட தம்பதியர் அவர்களை முட்டாள்களாக்கி வெளியேறுகிறார்கள். (ரமேஷ் இ. கயிறு கிரணிடம் சேர, நீண்ட காமெடி.) பின் ரமேஷை சந்தித்து கிரணிடம் இருக்கும் இகயிறை எடுக்க திட்டம் தீட்டுகிறார்கள். இப்பொழுதுதான் ரமேஷ் அவன் ஜமீன் வீட்டு கௌரியின் பிள்ளை என்பதற்கான ஆதாரம் கைக்கு எட்டிய தூரத்தில் இருக்க ரமேஷ் கிரணிடம் இருக்கும் தன் இ.கயிற்றை எடுக்க செல்ல விபத்துக்குள்ளாகிறான். ஹாஸ்பிடலில் ஜமீன் குடும்பத்தார் வந்து அவனை பார்க்க, கௌரி தன் மகனென்று தெரியாமல் ரமேஷ் தலையை தடவி விட ஸ்டெல்லாவும் அதிர்ச்சியோடு வந்து காதல் உணர்வோடு ரமேஷ் கையை தொடுகிறாள் (ஸெண்டிமெண்ட், காதல் பரவசம்)

அங்கு சென்னையில் ஜேம்ஸ், அவனுக்காக தன் கற்பை இழந்த லட்சுமியையே மணமுடிப்பதாக வாக்களித்து கற்பை பறித்தவர்களை பழிவாங்க கிளம்புகிறான். (ஸ்டெல்லா விஷயத்தில் ஜேம்சுக்கு ஒரு முடிவு, லட்சுமிக்கு ஜேம்ஸின் கைபிடிக்க கடவுளின் அருள், கோயிலுக்கு போகாமலே).

இங்கு, நாத்தனார்கள் ஸ்டெல்லாவின் மார்பு மச்சத்தை கண்டுபிடித்துவிட்டு ஸ்டெல்லாவிடம் 'நீ என் மகள்தான்' என. ஜமீன்தாரிணி (தாய்) சொல்ல, ஸ்டெல்லா 'இல்லை நான் ஒரு கிருஸ்தவள்' என்று வாதாட, ஜமீன்தார் குடும்பம் மேரி ஐ அழைத்துவர கிரணை அனுப்புகிறது. (ஸஸ்பென்ஸ்)

இந்த சமயத்தில் கிரண் பங்களாவிலிருந்து ரமேஷ் இ. கயிற்றை எடுத்து வர கிளம்புகிறார்கள் மீனவ தம்பதியர். (எதிர்பார்ப்பு)

'ரமேஷின் ஆதாரம் தன் கையில், இனி ஸ்டெல்லாவை வளர்த்த மேரிதான் ஒரே சாட்சி ஆதாரம். அவளை தீர்த்துக் கட்டிவிட்டால் முழு சொத்தையும் அடைய எந்த தடையும் இருக்காது' என்று திட்டம் தீட்டியபடி கிரண்காரில் போய்க்கொண்டிருக்கிறான். அவன் தந்தையின் எதிரிகளிடம் மாட்டிக்கொள்கிறான். மேரி அம்மா வந்து, ஸ்டெல்லா ஜமீன்வீட்டு பெண் என்ற உண்மையை சொல்ல, மீனவ தம்பதியர் ரமேஷின் இ. கயிறை ஒப்படைக்கிறார்கள்.

கடைசியாக, பிறரை பைத்தியமாக்கும் கிரணின் தந்தை செய்த தவறுக்காக மகன் கிரண் பைத்தியமாகி வீடு வந்து சேருகிறான். (நீதி)(முடிவு 'அப் எண்டிங்' சுபம்).

இந்த சிறுகதையை வைத்து திரைக்கதை மூலமாக என்னென்ன 'மெஸ்ஸேஜ்'களை புகுத்தலாம் என்று யோசிக்கப்பட்டது. 'மெஸ்ஸேஜ்' இல்லாத கதைகள் சிறப்பாக எடுபடுவதில்லை என்பதை நாம் ஏற்பது நல்லது.

மெஸ்ஸேஜ்:

1. விதி வலியது. நம்மை அறியாமல் நம்மை ஒரு சக்தி ஆட்டுவிக்கிறது.
2. ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்.
3. ஒரு மதம் சிறந்தது என்றால், அதை கடை பிடிப்பவர்கள் உயர்வாக நடந்துகொண்டால்தான் அந்த மதத்துக்கு பெருமை.
4. நம் பெரியவர்கள் வெற்றிலை பாக்கை மாற்றிக்கொள்வதில் ஏதோ ஒரு சக்தி உள்ளது.
5. இறைவனை நாம் வணங்காவிட்டாலும் நேர்மையாக நடந்துகொண்டால் போதும்,

என்பன முக்கியமாக கிடைத்த மெஸ்ஸேஜ்கள். கதையில் மதங்கள் வருவதால் அதையே திரைக்கதைக்கு 'அடிப்படை இழை' 'பேஸிக் லைன்'ஆக எடுத்துக்கொள்ளப்பட்டது. பின் திரைக்கதையை எப்படி எடுத்துச்செல்வது? சீரியஸ்ஸாகவா அல்லது காமெடியாகவா அல்லது இரண்டும் கலந்தா என்று யோசிக்க, மறுபடியும், மதங்கள் என்பதால் மனக்குறைகள் வராமல் இருக்க, அடிப்படையில் காமெடி என்று தீர்மானிக்கப்பட்டது.

பிறகு கதைக்கான முக்கிய அம்சங்கள் (Elements) சேகரிக்கப்பட்டன. அவை:

1. மதம் என்று வருவதால் அந்தந்த கடவுள்கள், நேரடியாக இல்லாமல் உள்ளுக்குள் எப்படி இயங்குகிறார்கள்.
2. பொதுவாக இந்து மக்கள்: கிருஸ்தவர்கள் மக்களின் ஏழ்மையை பயன்படுத்தி கிருஸ்தவர்களாக மாற்ற முயல்கிறார்கள் என்றும், மாமிசம் சாப்பிடுவது தவறு இல்லை என்பவர் என்றும், ஆங்கிலமோகம் அதிகம் உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்றும் குறை கூறுகிறார்கள்.
3. பொதுவாக கிருஸ்தவர்கள் : இந்துக்கள் 108 சாமிகளை கும்பிடுகிறார்கள், பயங்கரமான சாமிகளை கும்பிடுகிறார்கள், ஒரு பக்கம் அஹிம்ஸை என்றும் இன்னொரு பக்கம் கடவுளுக்கு உயிர் பலி கொடுக்கிறார்கள் என்றும் குறை கூறுகிறார்கள்.

4. இந்தியாவில் அதிகமாக இன்னும் கிருஸ்தவ அமைப்புக்கள்தான் கல்வி ஸ்தாபனங்களை நிறுவி கல்விக்காக பணியாற்றுகின்றன.

5. நாம் இன்னும் பல விஷயங்களில் ஆங்கிலேயர்கள் விட்டுச்சென்ற முறைகளைத்தான் கடைபிடிக்கிறோம்.

6. நம்மில் இன்னும் பல பெரியவர்கள் ஆங்கிலேயர்களின் ஒழுக்கத்தை (Discipline) பாராட்டுகிறார்கள்.

7. கிருஸ்தவர்கள் பொதுவாக மதக்கலவரங்களை தூண்ட விரும்புவதில்லை.

8. இந்துக்கள், சாத்வீகம்தான் பெரிது, விட்டுக்கொடுத்து நடப்பது இந்து தர்மம், நாத்திகத்தையும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்கிறார்கள்.

9. இந்துக்கள் பொதுவாக யாரையும் மதமாற்றம் செய்ய விரும்புவதில்லை என்கிறார்கள்.

10. கடவுளை அடைய பிற மதங்களை விட பல நிலைகளை உள்ளடக்கியது இந்துமதம்.

11. இன்னும் நாம் பல விஷயங்களில் மேலை நாட்டவரின் (கிருஸ்தவ மதத்தை பின்பற்றும் மேலை நாட்டவர்) தொழில் நுட்பங்களைத்தான் பெற்று வருகிறோம்.

இவை எல்லாமே ஒரு பொதுஜன மதிப்பீடு என்று கதைக்காக எடுத்துக் கொள்ளப்பட்டவை.

மேற்கண்ட 'மெஸ்ஸேஜ்', 'எலிமெண்ட்' களை வைத்துக்கொண்டு இப்பொழுது கதாபாத்திரங்களையும் அவர்கள் குணாதிசயங்களையும் முழுமையாக நிர்ணயிக்கப்பட்டது. இப்படி இவர்களின் குணாதிசயங் களை நிர்ணயித்தால்தான் அதை வைத்து கதையை 'ட்ரீட்' செய்யும்போது நிகழ்ச்சிகளை உருவாக்க வசதியாக இருக்கும்.

கதாபாத்திரங்கள்:

1. நாயகி ஸ்டெல்லா : செந்தில்வராய கவுண்டர் - பார்வதியின் மகள் ஆனால் மேரிதான் தன்தாய் என்று வாழ்பவள். நல்லவள். துடுக்கானவள். ஆண்களை ஜொள்ளு பார்டிகள் என்று கருதுபவள். கிருஸ்தவ மதம்தான் உயர்ந்தது என்பவள். சர்ச்சில், பியானோ சொல்லிக்கொடுக்கிறாள். பி.எஸ்ஸி முடித்து நர்ஸ் பயிற்சியும் முடித்திருப்பவள். கிருஸ்தவ அமைப்பிலேயே நல்ல வேலை தேடிவருபவள். வயது 22.

2. நாயகன் ரமேஷ்: மகேஷ் - கௌரியின் மகன். பலரிடம் வாழ்ந்தும் அனாதையாகவே வாழ்பவன். கடவுள் நம்பிக்கை இல்லாதவன்.

ஆனால் கடவுளை வெறுப்பவன் அல்ல. காலை உழைத்தால் மாலை சோறு என்பவன். விவேகமுள்ளவன். வாழ்க்கையை அறிந்தவன். நேர்மையானவன். பி.எஸ்ஸி முடித்து பிஃபார்மாவும் முடித்துள்ளான். கார் ட்ரைவிங் லைசென்ஸ் உள்ளவன். வேலை தேடிவருபவன். வயது 25.

3. செந்தில்வராய கவுண்டர் : நாயகியின் தந்தை. ஊர் போற்றும் உத்தமர். மதபேதமின்றி தான தர்மங்கள் செய்து வருபவர். உலகை அறிந்தவர். தங்கள் காணாமல் போன சிறுவர்கள் எப்படியும் கிடைத்துவிடுவார்கள் என்று நம்பி இருப்பவர். வயது 52.

4. பார்வதி : நாயகியின் தாய் : 17 வருடங்களுக்கு முன் தன் மகள் காணாமல்போன அன்றிலிருந்து புத்தி சுவாதீனம் அற்றவளாக இருந்து சுவாதீனம் அடைபவள். வயது 45

5. கௌரி : நாயகனின் தாய். கணவன் வெளி நாட்டில் இருக்கிறார். தன் நாத்தனார் பார்வதியை கண்ணும் கருத்துமாக கவனித்து அவளுடனே வாழ்பவள். தெய்வ நம்பிக்கை அதிகம் உள்ளவள். நல்ல குணம் உடையவள். வயது 42.

6. ரேகா : பார்வதியின் தங்கை மகள். நல்லவள். டாக்டருக்கு படிக்கிறாள். வயது - 19.

7. கிரண் :- நாயகியின் 2-ம் அத்தை மகன். தாய் இல்லாதவன். தந்தையை கழித்துவிட்ட கவுண்டரால், அவர் வீட்டிலேயே வளர்க்கப்படுபவன். யாருக்கும் தெரியாமல் தந்தையுடன் தொடர்புகொண்டுள்ளவன். தந்தையால் கெட்டவன். காணாமல் போன சிறுவர்கள் கிடைக்கக்கூடாது என்று ஆசைப்படுபவன், ஆஸ்தியை அடைய. வயது 28.

8. நாகேந்திரன் : கிரணின் தந்தை. கேடிகள் கூட்டத்திற்கு தலைவன். மகனுக்கு கெட்டபுத்தியை ஊட்டி கெடுப்பவன். வயது 55.

9. லட்சுமி நாராயணன் : கவுண்டர் வீட்டில் பரம்பரையாக வேலை செய்து வருபவன். நல்லவன். நபும்சகன் (அலி). வயது 35.

10. மேரி : நாயகியின் வளர்ப்பு தாய். மிலிடரி கணவன் இறந்து, வளர்ப்புமகள் ஸ்டெல்லாவுடன் வாழ்பவள். ஸ்டெல்லாவிடம் தன் சொந்த மகள் என்றே சொல்லி வளர்ப்பவள். நல்லவள் நோயுற்றவள். வயது 45.

11. ஜேம்ஸ் : நாயகி வாழும் வீட்டுவட்டாரத்தில் சிறு வயது முதல் அவளின் குடும்பத்துடன் பழகி வாழ்பவன். தாய் தந்தையர் இல்லாதவன். ரௌடி, திருடன். ஸ்டெல்லா தனக்குத்தான் என்று

சொந்தம் கொண்டாடுபவன். தனியாக வாழ்பவன். லட்சுமியுடன் தொடர்பு உள்ளவன். வயது 26

12. லட்சுமி : மேரியம்மா வட்டாரத்தில் சிறுவயது முதல் வாழ்பவள். தாய், தந்தையர் இல்லை. சிறுவயது முதல் மேரி வீட்டோடு பழகியவள், ஜேம்ஸ் ஐ உண்மையாக காதலிப்பவள். நேர்மையானவள். வீட்டுவேலை செய்து பிழைத்துவருகிறாள். வயது 24.

13. மீனவ தம்பதியர் : திருடர்கள் ரமேஷை முதன் முதலாக இவர்களுக்குத்தான் விற்றார்கள். நேர்மையானவர்கள். தமாஷான வர்கள். ரமேஷின் வெள்ளி இடுப்புகயிறு இவர்களிடம்தான் உள்ளது. வயது 45 & 40.

மேலே சொல்லப்பட்ட அனைத்தையும் வைத்து திரைக்கதைக் கான ஃபர்ஸ்ட் ட்ரே(அ)ஃப்ட்' எழுதப்பட்டது. 'ஃபர்ஸ்ட் ட்ரே(அ)ஃப்ட்' (First Draft) என்பது திரைக்கதைக்கு (2 ½ மணிநேரத்திற்கு) தேவையான காட்சிகள், இடம், வேளை, மற்றும் காட்சிகளுக்கு தேவையான முக்கிய விஷயங்களை முக்கிய வசனத்தோடு எழுதிமுடிப்பது. இதையும் பலர் பல முறைகளில் எழுதுகிறார்கள்.

நான் என் முறைப்படி காட்சிகள், இடம், வேளை, வெகுசுருக்கமான முக்கிய விஷயங்கள் ஆகிய இவற்றை கட்டங்களில் எழுதிக்கொண்டு, நோட்டு புத்தகத்தில் பக்கத்திற்கு ஒரு காட்சி என்று அதில் முக்கிய வசனங்களோடு, வேறு மனதுக்கு தோன்றும் 'பாய்ன்ட்'களையும், குறித்துக் கொண்டேன். அப்படி எழுதிமுடித்தபின் 'பாக்ஸ் சார்ட்' ஐ வைத்துக்கொண்டு அதை விரிவாக்கி விடைத்தாளில் எழுதி ஸ்க்ரிப்ட் I தயாரிக்கப்பட்டது. அதைத்தான் அடுத்து நீங்கள் படிக்கப் போகிறீர்கள்.

ஒரு முழுமையான 'ஸ்க்ரிப்ட்' தயாராக வேண்டு மென்றால் 'ஸ்க்ரிப்ட்' I திருத்தப்பட்டு ஸ்க்ரிப்ட் II தயாராகி, அதை சம்பந்தப்பட்ட புத்திசாலிகளுடன் 'டிஸ்கஸ்' செய்து 'ஸ்க்ரிப்ட்' III தயாராகி மறுபடியும் போதிய நேரம் எடுத்துக்கொண்டு சரிபார்த்து தயாரான 'ஸ்க்ரிப்ட்' IV தான் 98% சரியானதாக இருக்கும். நாம் ஒருவரே தவறில்லாத ஒரு 'ஸ்க்ரிப்ட்' ஐ தயாரிக்கவேண்டுமானால் குறைந்தது 50 முறையாவது அந்த 'ஸ்க்ரிப்ட்' ஐ படித்து திருத்தம் செய்யவேண்டியிருக்கும். சம்பந்தப்பட்டவர்களிடம் கேட்டுப்பார்த்தால் உண்மை தெரியும்.

குறிப்பு : திரைக்கதையை இயக்குனர் படிப்பதற்காக எழுதுவதால் பொதுவாக ஆங்கில வார்த்தைகளை ஆங்கிலத்தில் அப்படியே எழுதுகிறோம். அநேகமாக எல்லா இயக்குனர்களுக்கும் ஆங்கிலம் தெரிந்திருக்கும். ஆங்கிலத்தில் படிக்கவில்லை யென்றாலும் திரையுலகுக்கு வந்தபின்பு குறைந்தப்பட்சம் இத்தொழிலுக்கு தேவையான அளவுக்கு ஆங்கிலத்தை கற்றுக்கொள்கிறார்கள் ஆங்கிலமே தெரியாமல், சிறந்த படங்களை தந்துள்ள திரைப்பட இயக்குனர்கள் எவரேனும் இருக்கிறார்களா என்பது சந்தேகம்தான். இது தமிழ் புத்தகம், எனவே ஞாயமாக, இங்கு தமிழ் வாசகர்கள் வசதிக்காக ஆங்கில வார்த்தைகள், முடிந்தவரை, அப்படியே தமிழில் கொடுக்கப்பட்டுள்ளன.

(ஆங்கிலம் போன்ற வேறு மொழிகளை தமிழில் சுலபமாக எழுத நம் தமிழ் அறிஞர்கள் தமிழில் Ga, Da, Dha, Ba வுக்கு வகை செய்வார்களேயானால் தமிழை 'டெவெலப்' செய்த புண்ணியம் அவர்களைப்போய் சேரும்.)

# 'நம்மவள்' திரைக்கதை

SC. No. 1 **சிடி ஔட்ஸ்கர்ட்** Day / Ext

(சர்ச்சின் உச்சியிலுள்ள சிலுவையை 'டைட் க்லோஸ்'ல் காட்டி பின் 'ஃஜூம்பே(அ)க்' செய்ததும், 'டில்ட்டௌன்' செய்து, 'சர்ச்' முன் பார்க்க, தெருவில் மிதமான ஜன நடமாட்டத்தை காண்கிறோம்.

பிறகு அதே தெருவில் வந்து கொண்டிருக்கும் கதாநாயகன் ரமேஷ் கையில் ஒரு சூட்கேஸ், தோளில் தொங்குப்பை மற்றும் முதுகில் ஒரு முதுகுப்பை (Back Pack) யுடன் செல்வதை காண்கிறோம்.

அப்போது தோளில் ஒரு பெரிய பையுடன் ஒருவன் ரமேஷிடம் வந்து, ஒரு சீட்டை காட்டி)

ஒருவன் : ஏங்க இந்த அட்ரஸ் எங்க வருதுன்னு சொல்றீங்களா..?

ரமேஷ் : (சிரித்தவாறு) நானும் உங்கள மாதிரியே ஒரு அட்ரஸ்ஸ தேடிவந்திருப்பவன்தான். ஒரு அட்ரஸ்ஸ சுலபமா கண்டுபிடிக்கணும்னா, அந்த ஏரியால இருக்கிற பழைய சில்லரை கடைக்கோ பழைய ஸ்டோருங்களுக்கோ, இல்ல, பழைய ஷேவிங் ஷாப்புக்கோ போய் விசாரிக்கணும். ஏன்னா அவங் களுக்குதான அந்த ஏரியாவ பத்தி அங்க இருக்கிற ஜனங்கள பத்தி கொஞ்சமாவது தெரிஞ்சிருக்கும்.

ஒருவன் : ஓ... இப்ப தெரிஞ்சிக்கிட்டங்க. ரொம்ப டேங்ஸ். வரங்க. (என்று சொல்லி புறப்பட அங்கிருந்து சுமார் 60-80 அடி தூரத்திலிருந்த கல்யாண சத்திரத்தி லிருந்து கதாநாயகி ஸ்டெல்லா (சல்வார் கமீஸ் அணிந்து) கையில் தாம்பூல பையை பிடித்தவாறு தோழியுடன் வெராண்டாவுக்கு வர)

தோழி : மறக்காம என் தங்கை கல்யாணத்துக்கு வந்ததுக்கு ரொம்ப தேங்க்ஸ் டி

ஸ்டெல்லா : உன் தங்கை கல்யாணமாச்சே.. வராம இருந்தா சும்மா விடுவியா... சரி அப்ப நான் வரட்டா...

தோழி : சரி... ஸ்டெல்லா

ஸ்டெல்லா : வரேன்.. 'பாய்' (என்று சொல்லி, படி இறங்கி தெருவுக்கு வந்து ரமேஷின் எதிர் திசையில் வர, ரமேஷ் வந்து கொண்டிருக்க, பின்னால் திருடன் ஒருவன் கையில் ஒரு வேனிடி பே(அ)க் ஐ பிடித்தவாறு ரமேஷை தாண்டி ஓட அவனை பின் தொடர்ந்து ஒரு சிறிய கும்பல் 'திருடன் திருடன்' என்று கத்தியவாறு வேகமாக துரத்திச் செல்ல, திருடன் ஓடிவரும் வேகத்தில் எதிரில் வந்த ஸ்டெல்லா தோளுக்கு இடித்து முன்னே ஓட, ஸ்டெல்லா நிலை தடுமாறினாலும் சமாளித்துக் கொள்ள, கையிலிருந்த தாம்பூல பை திருடன் இடித்த வேகத்தில் கீழே விழுந்து அதிலிருந்த தேங்காய் வெற்றிலை பாக்கு வெளியே கொட்ட)

ஸ்டெல்லா : (ஓடிக்கொண்டிருந்த திருடனை பார்த்து) யூ ஸ்டுபிட் ஃபெலோ (என்று திட்டிக் கொண்டிருக்கும் போது அங்கு வந்த ரமேஷ் கீழே விழுந்திருக்கும் தேங்காய் மற்றும் வெற்றிலை பாக்கை சேகரித்து தாம்பூல பையில் போட்டு ஸ்டெல்லாவிடம் கொடுக்க ஸ்டெல்லா அதை வாங்கி தன் சல்வார் கமீஸை சரி செய்து)

ஸ்டெல்லா: இல்லீங்க மிஸ்டர்... எல்லாரும் திருடன பிடிக்க ஓடிக்கிட்டிருக்கப்ப.. அவனை போய் பிடிக்கிறத விட்டுட்டு பொண்ண பாத்தவொடனே ஹெல்ப் செய்ய வந்துட்டீங்களா...?

ரமேஷ் : அத்தன பேர் அவன பிடிக்க ஓட்றப்ப இன்னும் நான் வேற எதுக்குங்க... இந்த காலத்துல யாரு நல்லவங்க யாரு கெட்டவங்கன்னு கண்டுபிடிக்கிறதே கஷ்டங்க... அதுவுமில்லாம, புதுசா ஒரு ஊருக்குன்னு வந்துட்டா அனாவசியமா அதுல இதுலன்னு தலயிடக்கூடாதுங்க மேடம்.....!

ஸ்டெல்லா : ம்... நீங்கள்ளாம் ஒரு ஆம்பளைங்க...

ரமேஷ் : என்னங்க அப்பிடி சொல்லிட்டீங்க. அந்த தாம்பூல பைய குடுங்க...

(என்றவன், ஸ்டெல்லா கையிலிருந்த தாம்பூல பையை கையில் வாங்கி அதிலிருந்து தேங்காயை எடுத்து வலது கையில் பிடித்தவாறு)

இந்த தேங்காயை ஒரே கையில் ஒடச்சி காமிக்கிறேன் பார்க்கிறீங்களா...

ஸ்டெல்லா : நீங்க என்ன பெரிய கராட்டே எக்ஸ்பர்ட்டா.... எங்க ஒடைங்க பாக்கலாம். (என்றதும், ரமேஷ் தேங்காயுடன் கையை மேலே உயர்த்த, 'டமார்' என்ற 'பாம்' வெடித்த சப்தம் கேட்க, சப்தம் வந்த திசையை பார்த்த ஸ்டெல்லா சர்ச்சிலிருந்து புகை வந்துகொண்டிருப்பதை கண்டு)

ஸ்டெல்லா : (பதற்றத்துடனும், ஆவேசத்துடனும்) ''அய்யோ யாரோ சர்ச்சுல 'பாம்' வச்சிட்டிருங்காங்களே'' (என்று சர்ச்சை நோக்கி ஓட), (ரமேஷ் தன் கையிலிருந்த தேங்காயை தாம்பூல பையில் போட்டு அதை தன் தொங்கு பையில் போட்டு ஸ்டெல்லாவை பின் தொடர)

-Cut to

SC. No. 2 நகர 'சர்ச்' Day / Ext

(இப்பொழுது 'சர்ச்' ஐ காண்கிறோம். 'சர்ச்' முன் வாசலில் புகை வந்துகொண்டிருக்கிறது. ஜன்னல்களில் ஒட்டிக்கொண்டிருந்த கண்ணாடித்துண்டுகள் ஒன்றிரண்டாக விழுந்த வண்ணம் இருக்கின்றன. புகையும் அதிகமாக வெளியே வந்தவாறு இருக்கிறது.)

('சர்ச்'ன் அக்கம் பக்கம் நடமாடிக் கொண்டிருந்தவர்கள் இப்போது 'சர்ச்' உள்ளே ஓடுகிறார்கள். ஸ்டெல்லா, ரமேஷும் உள்ளே ஓட)

-Cut to

SC. No. 2.A நகர 'சர்ச்' Day / Int

(சிறியவர்களிலிருந்து பெரியவர்கள் வரை ஆண்களுக்கும் பெண்களுக்கும் அடிபட்டு பலர் ரத்தக்காயங்களுடன் காணப் படுகிறார்கள். சிலர் வலியால் துடித்துக்கொண்டிருக்க பென்ச்சுகள் கலைந்து விழுந்து கிடக்கின்றன.) (ஆனால், பின் சுவற்றிலிருந்த, சிலுவையில் அறையப்பட்ட 'ஜீஸஸ் க்ராஸ்' ஒன்றும் ஆகாமல் அப்படியே உள்ளது.) (ஃபாதர் ஒருவருக்கு அதிகமான காயம் ஏற்பட்டு 'ப்ரீச்' செய்யும் மேடையில் விழுந்திருக்கிறார்.) (வெளியி லிருந்து வந்தவர்கள் தம் கண்ணுக்கு பட்ட காயமடைந்தவர்களை தூக்கிக் கொண்டிருக்கையில் ஃபாதரை பார்த்த ஸ்டெல்லா)

ஸ்டெல்லா : ஃபாதர்....... (என்று கத்திக்கொண்டே ஃபாதரை நோக்கி மேடையிடம்ஓட)

(ரமேஷும் அடிபட்ட ஒரு குழந்தையை தூக்கியவாறு வெளியே ஓடி. மறுபடியும் உள்ளே வரும்போது

ஸ்டெல்லா கண்ணீருடன் ஃபாதரை தூக்க கஷ்டப்பட்டுக்கொண்டிருக்க, அப்போது ரமேஷ் வந்து உதவ, இருவரும் சேர்ந்து ஃபாதரை வெளியே கொண்டு செல்ல)

-Cut to

SC. No. 2.B **நகர 'சர்ச்'** Day / Ext

(ஸ்டெல்லா, ரமேஷ், ஃபாதரை வெளியே கொண்டு வந்து படுக்க வைக்க, அப்போது ஃபாதர் நிதானமாக கண்திறந்து ரமேஷை பார்க்கிறார்.)

ரமேஷ் : தைரியமா இருங்க ஃபாதர்.. ஹாஸ்பிடலுக்கு போனதும் எல்லாம் சரியாயிடும் (என்று சொல்லிவிட்டு சர்ச்சுள் போக, ஸ்டெல்லா மட்டும் அங்கேயே இருக்க.)

(உதவுவதற்கு வந்த ஆண்களும் பெண்களும் அடிபட்டவர்களை தோளில் சுமந்தவாறும் தோளில் சாய்த்தவாறும் வெளியே வந்துகொண்டிருக்கும்போது 2-3 'ஆம்புலன்ஸ் வேன்' கள் வந்து நிற்கின்றன. உள்ளிருந்து ஒருவரை தூக்கி வந்த ரமேஷ் நேராக 'ஆம்புலன்ஸ்'ஸிடம் வந்து அவரை அதில் கிடத்தி விட்டு ஃபாதரிடம் வந்து அவரை தூக்கியவாறே ஸ்டெல்லாவை பார்த்து)

ரமேஷ் : மேடம்... கொஞ்சம் ஹெல்ப் செய்யுங்க..

(என, இருவரும் ஃபாதரை பிடித்து தூக்க, ஹாஸ்பிடல் சிப்பந்திகள் 'ஸ்ட்ரெச்சர்' ஐ அங்கு எடுத்துவர ஃபாதரை அதில் படுக்கவைத்ததும் 'ஆம்புலன்ஸ்'க்கு எடுத்து செல்கிறார்கள். ஸ்டெல்லா அவர்களை பின் தொடர)

(ரமேஷ் வெளியே படுக்க வைத்திருந்த வேறொருவரை, டேவிட் என்பவரின் உதவியுடன் தூக்கி வந்து வேறு 'ஆம்புலன்ஸ்'ல் உட்கார வைக்க)

(Ambulance கள் புறப்பட்டு போக எதிரில் போலீஸ் ஜீப்கள் ஸைரன் சத்தத்துடன் வந்து கொண்டிருக்க)

-Cut to

SC. No. 3 **நகர ஹாஸ்பிடல்** Day / Int

(ஹாஸ்பிடலின் ஹாலில் இன்ஸ்பெக்டர், எஸ். ஐ, 3-4 பொலிஸ்கள் நின்று கொண்டிருக்க, இன்ஸ்பெக்டர் டாக்டரிடம் ஏதோ

கேட்டுக்கொண்டிருக்க. இது ஒரு 'க்ரிஸ்டியன் ஹாஸ்பிடல்' என்ற சூழலோடு சுவற்றில் மாட்டியிருக்கும் 'க்ராஸ்' ஐ காண்கிறோம்)

('வெராண்டா', 'காரிடார்' பெஞ்சுகளிலெல்லாம் அடிபட்டவர் களை காண்கிறோம்)

(நர்ஸ்களும், வார்ட்பாய்களும் தம் தம் காரியங்களை செய்து கொண்டிருக்க, தலையில் அடிபட்ட ஒருவருக்கு நர்ஸ் பேன்டேஜ் கட்டிக் கொண்டிருக்க, ரமேஷ் ரத்தக்கறை படிந்த சட்டையை கழட்டி விட்டு தன் சூட்கேஸை திறந்து டீ ஷர்ட்ஐ எடுத்து அணிந்துகொள்ள. ரூமிலிருந்து வெளியே வந்த ஒரு டாக்டர், நர்ஸிடம்)

டாக்டர் : என்ன ரோஸி... 'ப்ளட்' க்காக ஃபோன் செஞ்சிட்டீங் களா..?

(என்று அவசரத்தில் கேட்க, அதை கவனித்த ரமேஷ் டாக்டரிடம் வந்து)

ரமேஷ் : டாக்டர் நான் ஹெல்தியா இருக்கேன்.... என் ரத்தத்தையும் எடுத்துக்க சொல்லுங்க... யாருக்காவது உதவும் இல்லீங்களா..

டாக்டர் : அஃப் கோர்ஸ், தேங்க்யூ ஜென்டில்மன் (என்று, ஒரு நர்ஸிடம்) நர்ஸ் இவர் 'ப்ளட்' ஐ டெஸ்ட் செஞ்சி எடுத்துக்குங்க... (என்று சொல்ல, ரமேஷ் அந்த நர்சுடன் போக) (அப்போது ஸ்டெல்லா ஒரு வார்டிலிருந்து வெளியே சோகத்துடன் வர எதிரே வந்த டாக்டரிடம்)

ஸ்டெல்லா: டாக்டர்.. ஃபாதர் சீக்கிரம் குணமாகிவிடுவார்தானே? (அதே சமயத்திற்கு அங்கு வந்த ஒரு வயதான நர்ஸ் ஸ்டெல்லாவை பார்த்து)

வயதான நர்ஸ் : இந்த மாதிரியான சமயத்தில் டாக்டருக்கு சும்மா தொந்தரவு குடுக்ககூடாதும்மா... நீ உள்ளே போய் ஃபாதர் கிட்டயே உக்காந்துக்க... அவருக்காக 'ப்ரே' பண்ணும்மா ஜீஸஸ் அருள் புரிவார்...!

(என்று சொல்ல, ஸ்டெல்லா வார்டினுள் செல்லும் போது ஒரு எஸ்.ஐ அவளிடம் வந்து)

எஸ்.ஐ : மே(அ)டம் ஒரு நிமிஷம்...

ஸ்டெல்லா : ம்... இப்ப உங்க கிட்ட எதுவும் பேச முடியாது (என்று அவரை பார்த்து சொல்லிவிட்டு உள்ளே போக)

எஸ்.ஐ : (தன் தோளை உயர்த்தி, உதடுகளை பிதுக்கியவாறு) இது 'மூட் அவ்ட் கேஸ்' என்று சொல்ல)

-Cut to

SC. No. 3 A **ஹாஸ்பிடல் ஹால்** Day / Int

(டேவிட்டிடம் இன்ஸ்பெக்டர் பேசிக் கொண்டிருக்கும்போது ரமேஷ் தன் லக்கேஜ்களுடன் வெளியேறுவதை கண்ட டேவிட் ரமேஷிடம் வந்து)

டேவிட் : எக்ஸ்க்யூஸ் மி ஜென்ட்ல்மன் (ரமேஷ் திரும்பி நிற்க)

டேவிட் : என் பேர் டேவிட்.. சர்ச்சில் நீங்க செஞ்ச அளவுக்கு என்னால் ஸெர்வீஸ் செய்ய முடியலங்கறத நான் ஒத்துக்கறேன். உங்கபெயரை நான் தெரிஞ்சிக்கலாமா?

(க்ரிஸ்டியன் பெயராகத்தான் இருக்கும் என்று யூகித்து நிற்க)

ரமேஷ் : (புன்சிரிப்புடன்) ரமேஷ் (என)

டேவிட் : (தன் ஆச்சர்யம் மற்றும் ஏமாற்றத்தை காட்டிக் கொள்ளாமல்) இப்பதான் ரத்ததானம் செஞ்சிட்டு வந்திருக்கீங்க... டயர்ட்ஆ இருக்கலாம்... ஒரு சின்ன ரிக்வெஸ்ட்...

ரமேஷ் : என்ன சொல்லுங்க...?

டேவிட் : இப்ப நீங்க என் கூட வந்து.. எங்க வீட்ல சாப்டுட்டு போகணும்... தயவு செய்து முடியாதுன்னு சொல்லிடாதீங்க...

ரமேஷ் : நான் இன்னிக்குதான் சென்னை வந்தேன்... முக்யமா ஒரு அட்ரஸ்ஸ தேடி கண்டுபிடிச்சாகணும்...

டேவிட் : உங்களை.. நீங்க தேடுற அட்ரஸ்ல கொண்டுபோய் விட்றது என் பொறுப்பு.... இப்ப நீங்க என் கூடவறீங்க... (என்று ரமேஷின் கையைபிடித்து அழைத்து போக)

- Fade out

SC. No. 4 **நரசிம்மன் வீட்டு வட்டாரம்** Night / Ext

(ஒரு பெரிய காம்பவுண்டுக்குள் 'மிட்ல் க்ளாஸ்' ஜனங்களுக்கும் சற்று கீழ் நிலையில் உள்ளவர்களுக்காகவும் கட்டிய 5-6 வீடுகள் உள்ள வட்டாரம். பழைய கட்டிடம். ஆனாலும் வீடுகள், வீட்டுமுன், சுத்தமாக காணப்படுகிறது.)

(அப்போது அங்கு, வட்டாரத்திற்கு வெளியே டேவிட் ஸ்கூட்டர் வந்து நிற்கிறது. அதிலிருந்து ரமேஷ், தன் லக்கேஜ்களுடன் இறங்க டேவிட் தன் ஸ்கூட்டருக்கு ஸ்டே(அ)ன்ட் போட்டதும் இருவரும் காம்பவுண்டுக்குள் நுழைகிறார்கள். அப்போது அந்த வட்டாரத்தார் மற்றும் அக்கம் பக்கத்தார் 5-6 ஆண் பெண்கள் திண்ணைகளில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். அந்த கும்பலில் ஸ்டெல்லாவின் தாய் மேரியும் உட்கார்ந்திருக்கிறாள். ரமேஷ், டேவிட் வருவதை கண்ட அந்த வட்டாரத்து ஓனர் நரசிம்மன் எழுந்து வர ரமேஷ் தன் கையிலிருந்த சிறிய சீட்டை நரசிம்மனிடம் கொடுத்தவாறு)

ரமேஷ் : இது இந்த வீட்டோட அட்ரஸ்தானே சார்..?

நரசிம்மன் : (சீட்டை பார்த்ததும்) உங்க பேர் ரமேஷா?

ரமேஷ் : ஆமாங்க சார்...!

நரசிம்மன் : மத்யானம் வருவீங்கன்னு என் ஃப்ரண்ட் கிருஷ்ணன் சொல்லியிருந்தாரு. நீங்க இப்ப ராத்திரி 8.00 மணிக்கு வர்றீங்களே...!?

டேவிட் : (குறுக்கிட்டு) அது ஒரு பெரிய கதைங்க... மத்யானம் சர்ச்ல ஒரு பாம் ப்லாஸ்ட் ஆயிடிச்சு... (என்று சொல்ல உட்கார்ந் திருந்தவர்கள் அனைவரும் எழுந்து வர, அதில் x)

x : யாரோ 'டெர்ரரிஸ்ட்' தான் சர்ச்ல பாம் வச்சிட்டானாமே...

டேவிட் : ஓ போச்சுடா.... சர்ச்ல பாம் வச்சது யார்ன்னு இன்னும் தெரியலீங்க போலீஸ் இன்வெஸ்டிகேட் பண்ணிக் கிட்டிருங்காங்க... சர்ச்சுல அடிபட்டவங்களுக் கெல்லாம் மிஸ்டர் ரமேஷ் மனிதாபிமானத்தோட ரொம்ப சுறுசுறுப்பா உதவி செஞ்சாரு. இப்படி ஒருத்தர் ஃப்ரெண்டா கெடைக்கிறது இந்த காலத்தில் ஒரு அதிர்ஷ்டம்னுதான் சொல்லணும்...!

மேரி : (ரமேஷின் முதுகை தடவி) அந்த கர்த்தரின் ஆசீர்வாதம் உனக்கு எப்பவும் இருக்கும்பா...

நரசிம்மன் : (ரமேஷிடம்) அப்ப நாம ரூமுக்கு போகலாமா..? (என்று கேட்க)

டேவிட் : (ரமேஷிடம்) நானும் கிளம்பறேன் மிஸ்டர் ரமேஷ்... நீங்க எப்ப ஃப்ரீயா இருங்கீங்களோ அப்ப எல்லாம் நம்ம வீட்டுக்கு வந்துட்டு போகலாம். யு ஆர் ஆல்வேஸ் வெல்கம் (என்று கை குலுக்கி கிளம்ப)

-Cut to

SC. No.4A. **நரசிம்மன் வீட்டு வட்டாரம்** Night / Int

**(ரமேஷ் அறை)**

**(நரசிம்மன், ரமேஷ் அறைக்குள் நுழைந்ததும் நரசிம்மன் கதவை சார்த்தி)**

நரசிம்மன் : இதுதான் உங்க ரூமு. கிச்சன் பாத்ரூம் இருக்குது... ஆனா காமன் 'டாய்லட்'...! இங்கேயே வேணும்னா உங்க பணத்திலியே கட்டிக்கலாம்... 2-3 வீட்டு காரங்க அப்பிடித்தான் கட்டிக்கிட்டிருக்காங்க... ரொம்ப வருஷமா இருக்காங்க. பழைய வாடகைதான்.... என்ன பண்றது...? (என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே ரமேஷ் தன் முதுகுப்பைலிருந்து ஒரு சிறிய ஸ்டவ் மற்றும் இதர சாமான்களை சமையலறையி லிருந்த டேபிள் போன்ற மேடையில் வைத்தவாறு)

ரமேஷ் : என்னப்பத்தி மிஸ்டர் கிருஷ்ணன் சொல்லியிருப் பார்னு நெனக்கிறேன். நான் வேலை தேடி வந்திருக் கிறவன். என்கிட்ட இருக்கிற 8000/- ரூபாய்ல 1,000 ரூபாய எடுத்துக்கிட்டு மிச்சத்த உங்க கிட்டயே குடுத்துடறேன்... எனக்கு வேலை கெடக்கற வரைக்கும் என்ன ஒண்ணும் கேக்காதீங்க... எப்படி யாச்சும் ஒரு வேலைல சேர்ந்துடுவேன்... வேலைய கேவலமா நெனக்கிறவங்களுக்கு தான் வேலை கெடைக்கிறது கஷ்டம்.. எந்த வேலையும் நல்லபடியா, ஞாயமானதா இருந்தா அந்த வேலைய செய்ய நான் எப்பவும் ரெடிசார்...

நரசிம்மன் : சரிய்யா சொன்னீங்க ரமேஷ்.. இன்னிக்கு நீங்கதான் எனக்கு கம்பெனி (என்று சொல்லியவாறு தன் பே(அ)ன்ட் பாக்கட்டிலிருந்து ஒரு க்வார்ட்டர் பாட்டிலை எடுத்து தரையில் உட்கார்ந்துகொள்ள)

நரசிம்மன்: அப்பா.. ரமேஷ் அங்க தண்ணி பாட்லும் டம்ளரும் இருக்குது. கொஞ்சம் எடுத்துட்டு வர்றீங்களா... (என, ரமேஷ் அங்கிருந்த தண்ணீர் உள்ள பெட் பாட்டில், டம்ளரை எடுத்து வந்து க்வார்ட்டர் பாட்டிலை பார்த்து)

ரமேஷ் : இதென்ன சார்... ஏன் இப்பிடி குடிச்சி உடம்ப கெடுத்துக்குறீங்க..?!

(நரசிம்மன் டம்பளர், தண்ணீர் பெட் பாட்டிலை வாங்கி கீழே வைத்து. டம்ப்ளரில் சிறிது பிராந்தியை ஊற்றி பின் சிறிது தண்ணீரை ஊற்றி ஒரு 'கல்ப்' (Gulp) அடித்ததும்)

நரசிம்மன்: மனுஷன் ஒவ்வொண்ணுக்கும் ஒவ்வொரு காரணம் சொல்லலாம். உதாரணத்துக்கு இன்னிக்கி நீ... சாரிப்பா ஒத்தையில் பேசிட்டேன்...

ரமேஷ் : பரவாயில்லை விடுங்க சார்...

நரசிம்மன் : நீ இன்னிக்கி மத்யானமே வரவேண்டிய ஆளு.. இப்ப.. அதாவது ராத்திரி வந்திருக்க... கேட்டா அதுக்கு ஒரு காரணம் சொல்லுவே... அப்படித்தான் நானும் இந்த குடிக்கு ஒரு காரணம் சொல்லலாம்.. என் பொண்டாட்டி யார்பின்னாலயோ ஓடிப்போயிட்டான்னு. செல காரணங்கள் செலருக்கு பிடிக்கும்... செலருக்கு பிடிக்காம... போகலாம் ஆனா அதுதான் விதியின் விளையாட்டு, உன் விஷயத்தில் விதியின் ஆட்டம் என்னான்னா... இன்னிக்கி ராத்திரியிலிருந்து உன் புது வாழ்க்கையை இந்த ரூம்ல வச்சி ஆரம்பிக்கப்போற.. ஆரம்பி....

ரமேஷ் : அப்ப எல்லாமே விதிதான்னு சொல்றீங்களா?

நரசிம்மன் : இந்த உலகத்தில ஒவ்வொரு நொடியும் நிச்சயிக்கப் பட்டிருக்கிறதுதாம்பா ரமேஷ். உன் கர்மத்தை நீ செஞ்சி முடிக்கணும்னு சொல்லியிருக்காங்க. இப்ப என் கர்மம் என்னான்னா இன்னொரு 'கல்ப்' அடிக்கிறது... (என்று கூறி, டம்ளரில் ப்ரே(அ)ன்டி தண்ணீரை ஊற்றி இன்னொரு 'கல்ப்' அடிக்க)

ரமேஷ் : சார் ஸ்டவ் பத்த வக்கணும். கொஞ்சம் மேட்ச் பாக்ஸ் இருந்தா குடுக்கறீங்களா?

நரசிம்மன் : எனக்கு இந்த ட்ரின்க்ஸ் அடிக்கறத விட்டா வேற எந்த கெட்ட பழக்கமும் கெடயாதுப்பா... எதிர் வீட்டு மேரியம்மா கிட்ட வாங்கிக்க... அவங்க ரொம்ப நல்லவங்க... குடுப்பாங்க போப்பா. (ஆனாலும், ரமேஷ் தயங்கி நிற்பதை பார்த்து)

நரசிம்மன் : நானே உன் கூட வந்து அவங்கள பேசவச்சி உனக்கு மேட்ச் பாக்ஸ் வாங்கி தந்திடுவேன். ஆனா அவங்க பொண்ணு இருக்காளே... ரொம்ப நல்ல பொண்ணுதான்.. ஆனா நான் குடிச்சிட்டு போனேன்னு தெரிஞ்சிட்டா அவளவுதான். யாருன்னே பாக்கமாட்டா லெஃப்ட் அன்ட் ரைட் வாங்கிடுவா. அதான் கொஞ்சம் பயம்.... நீ போயிட்டுவாப்பா (என)

-Cut to

SC. No. 4.B **நரசிம்மன் வீட்டு வட்டாரம்** Night / Ext

**(மேரி வீட்டுமுன்)**

(ரமேஷ் வந்து மேரி வீட்டு கதவை தட்டலாமா வேண்டாமா என்று தயங்கியவாறு லேசாக கதவை தட்டி)

ரமேஷ் : அம்மா.. (எனும் சமயத்திற்கு சரியாக ஸ்டெல்லா வெளியிலிருந்து அவனிடம் வந்து சந்தேகித்தபடி)

ஸ்டெல்லா : ஏய்... மிஸ்டர்... என்ன நீங்க.. என்னையே ஃபாலோ செய்ற மாதிரி தெரியுது. என்ன நெனச்சிக்கிட்டிருக்கீங்க (என்று சத்தமிட்டு பேச)

ரமேஷ் : (எதிரில் அவன் அறையை காட்டி) நான் எதிர் வீட்ல வாடகைக்கு வந்திருக்கேன். ஸ்டவ் பத்த வக்க மேட்ச் பாக்ஸ் இல்ல. நரசிம்மன் சார்தான் எதிர் வீட்ல வாங்கிக்க அவங்க ரொம்ப நல்லவங்கன்னு சொன்னாரு (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் மேரி கதவை திறந்து)

மேரி : ஸ்டெல்லா. ஏம்மா இப்பிடி சத்தம் போடறே...? (என்று கூறி ரமேஷை பார்த்து) தம்பி நீ உள்ள வாப்பா..

ரமேஷ் : நீங்க உள்ள போங்க நான் இப்பவே வந்துடறேன் (என்று அவன் அறை பக்கம் திரும்ப)

-Fade out

SC. No. 4.C **மேரி வீடு** Night / Int

(Fade in)

(ரமேஷ் அன்று காலை ஸ்டெல்லாவிடமிருந்து பெற்ற தாம்பூல பையுடன் உள்ளே வர மேரி கட்டிலில் உட்கார்ந்திருக்கிறாள். ஸ்டெல்லா பாத்ரூமிலிருந்து தன் முகத்தை துடைத்தபடி வர மேரி கட்டிலுக்கு பக்கத்தில் சுமார் 25 வயதுள்ள ஜேம்ஸ் உட்கார்ந்திருக்கிறான். ரௌடி டைப்பில் உடை அணிந்திருக்க, அவன் பக்கத்தில் சுமார் 22 வயதான லட்சுமி நின்றிருக்க, மேரி எதிரிலிருந்த சேரை காட்டி 'உட்காரப்பா' என்று ரமேஷுக்கு சொல்ல ரமேஷ் அதில் உட்கார)

மேரி : (ஸ்டெல்லாவை காட்டி) இவ என் மகள் ஸ்டெல்லா (என, ஸ்டெல்லா முகத்தில் எந்த ரிஆக்ஷனும் இல்லாமல் முகத்தை துடைத்தவாறு இருக்க ரமேஷ் தன் கையிலிருந்த தாம்பூல பையை மேரியிடம் கொடுத்தவாறு ஸ்டெல்லாவை காண்பித்து.)

ரமேஷ் : இவங்க கால்லல இந்த தாம்பூலப்பையை என் கிட்டயே விட்டுட்டு வந்துட்டாங்க... இந்தாங்க ஆன்டி...

மேரி : (அதை வாங்கிய படி) ஓ. அப்ப நீங்க இதுக்கு மொதலே சந்திச்சிருக்கீங்களா?!

ஸ்டெல்லா: (சட்டென்று) அதெல்லாம் ஒண்ணுமில்ல... கீழ விழுந்துட்ட தேங்கா வெத்தலபாக்க எடுத்து குடுத்தாரு.. அவ்வளவுதான்...!

மேரி : இவரு சர்ச்சுல அடிப்பட்டவங்களுக்கெல்லாம் ரொம்ப உதவி செஞ்சிருக்காரும்மா...!

ஸ்டெல்லா : எல்லாம் தெரியும்மா...

மேரி : என் ஹஸ்பெண்ட் மிலிடரில இருந்தவரு. காலமாயிட்டாரு. (ஜேம்ஸை காட்டி) இவன் ஜேம்ஸ். இவனும் என் மகன் மாதிரி.. சின்ன வயசிலிருந்தே நம்ம வீட்லதான் ஜாஸ்தியா இருப்பான். இவனோட அப்பா அம்மா கூட இதே வட்டாரத்துலதான் இருந்தாங்க.. அவங்க காலமாயிட்டதும் இப்ப 2 வருஷமா இங்கியே எங்கியோ ரூம் எடுத்துனு இருக்கான். (ஜேம்ஸ் ஹலோ என்பதைப்போல் தலையை அசைக்க) (ரமேஷும் தலையை அசைக்க) (அப்படியே லட்சுமியை காட்டி) இந்த பொண்ணு லட்சுமி.. இதே வட்டாரத்துலதான் இருக்கா ஸ்டெல்லாவ தன் தங்கமாதிரி பாத்துக்குறா இவங்கம்மா எனக்கு ரொம்ப வருஷமா பழக்கம் அவளும் செத்து ஒரு வருஷமாயிடுச்சி.. (என்று வருந்தியவாறு கூறி) ஆமாம்.. உங்க அப்பா அம்மா எங்க இருக்காங்க தம்பி?

ரமேஷ் : எனக்குன்னு சொல்லிக்க யாருமில்ல ஆன்டி... இந்த ஊருக்கு வேலை தேடிதான் வந்திருக்கேன். என்னப்பத்தி சொல்லனும்னா நான் அனாதை ஆஸ்ரமத்ல வளந்தவன்... பி.எஸ்ஸி அப்புறம் பி. ஃபார்ம் முடிச்சிருக்கேன்... அவ்வளவுதான் ஆன்டி... (என்று எழ)

மேரி : இருங்க தம்பி.. டீ சாப்பிட்டு போவீங்க

ரமேஷ் : வேணாம் ஆன்டி.. இன்னொரு நாள் வரேன். இப்ப மேட்ச் பாக்ஸ் தேவையா இருந்தது...

மேரி : (லட்சுமிக்கு) லட்சுமி மேட்ச்பாக்ஸ் குடும்மா (என்றதும் லட்சுமி மேட்ச் பாக்ஸ் எடுத்துவந்து ரமேஷிடம் கொடுக்க ரமேஷ் அதை வாங்கி)

ரமேஷ் : வரேன் ஆன்டி. வரேங்க (என்று மற்ற அனைவரையும் பார்த்து சொல்ல)

மேரி : நல்லதுப்பா. ஏதாவது தேவையின்னா தாராளமா வந்து வாங்கிட்டு போப்பா..

ரமேஷ் : சரிங்க ஆன்டி (என்று வெளியேற, மேரி அவன் போவதை பார்க்க)

-Cut to

SC. No. 5 **நரசிம்மன் வீட்டு வட்டாரம் (முன்)** Day / Ext

(ஸ்டெல்லா வீட்டிலிருந்து வெளியே வந்து தெருவுக்கு இறங்க, ரமேஷ் தன் அறையை அவசர அவசரமாக பூட்டி ஸ்டெல்லாவை பின் தொடர்ந்து, தெருவில் சென்று கொண்டிருந்த ஸ்டெல்லாவை 'என்னங்க மேடம்' என்று கூப்பிட, ஸ்டெல்லா நின்று, திரும்பி ரமேஷைப் பார்த்து முறைக்க)

ரமேஷ் : (தயங்கியவாறு) இல்லீங்க... ஃபாதர் எப்படி இருக்கார்னு... (என்று இழுக்க, ஸ்டெல்லா பதில் ஏதும் சொல்லாமல் திரும்பும் சமயம் ஜேம்ஸ் அங்கு வந்து)

ஜேம்ஸ் : (ரமேஷை பார்த்து) டேய் தம்பீ. இதெல்லாம் நல்லா இல்லேம்மா. நேத்து வந்துட்டு இன்னிக்கே வால அவுத்துட்டியே.. தெரிஞ்சிக்கோ.. இந்த ஸ்டெல்லா எனுக்கு சேரவேண்டியவ.... அவளை உன் பக்கம் இழுக்க ஏதாவது சில்றவேல செஞ்சீன்னா அப்புறம் உனுக்கு ஒரு கை ஒரு காலு இருக்காது... எங்கியோ போயினு இருக்கே உஷாரா போய்டுவா... (என்று மிரட்டியவாறு சொல்ல ஸ்டெல்லா தன் வாய்பொத்தி 'களுக்' என்று சிரித்துவிட்டு செல்ல, ரமேஷ் திரும்ப)

-Cut to

SC. No. 6 **ஹாஸ்பிடல் வார்ட்** Day / Int

(ஃபாதருக்கு தலை கை கால்களில் கட்டு போடப்பட்டு கட்டிலில் படுத்திருக்க, அங்கு ஸ்டெல்லா வர ஃபாதர் அவளிடம்)

ஃபாதர் : வாம்மா... உட்காரு வா. (என, ஸ்டெல்லா உட்கார்ந்து)

ஸ்டெல்லா : உடம்புக்கு எப்படி இருக்குங்க ஃபாதர்.?

ஃபாதர் : கர்த்தரோட ஆசீர்வாதத்தால நல்லா இருக்கேம்மா. உன் கூட வந்திருந்த ரமேஷுன்றவர் சரியான சமயத்துக்கு கொடுத்த ரத்தத்துனால நான் பிழைச்சேன்னு ஹெட்நர்ஸ் சொன்னாங்க.. யாரும்மா அவரு.?

ஸ்டெல்லா: அவர் யாரோ எனக்கு தெரியாது.. சர்ச்சுல உங்களுக்கு அடிபட்டிருந்தப்ப... உங்களை வெளியே கொண்டு வரும்போது என் கூட இருந்தார்.. அவளவுதான் ஃபாதர்.

ஃபாதர்: அப்படியா.. அவரை நான் பார்க்கணுமேம்மா. சர்ச்சுல அடிபட்டவங்களுக்கெல்லாம் ரொம்ப ஹெல்ப் செய்தாராமே. அப்படிப்பட்டவங்களுக்கு நாம நன்றி சொல்லியாகணும்....! இல்லியாம்மா....? அது மாதிரியானவங்களுக்கு பெரிய மனசு மாத்திரம் இல்லேம்மா.... அவங்க பெரிய பண்பட்ட வீட்டு பிள்ளையாவும் இருப்பாங்க....

ஸ்டெல்லா : ஒண்ணும் இல்ல. இப்ப எங்க வீட்டு வட்டாரத்துலதான் தங்கியிருக்காரு... அனாதையாம்...! வேலை தேடிட்டு சென்னை வந்திருக்காராம்... ரமேஷின்ற பேர்ல இருந்தே அவர் ஹிந்தூன்னு தெரியுதே ஃபாதர்...!

ஃபாதர் : நீ எனக்காக தயவுசெஞ்சி... அவரை என்ன வந்து பாக்கச்சொல்லும்மா ஸ்டெல்லா....

ஸ்டெல்லா : சரிங்க ஃபாதர். நீங்க நல்லா ரெஸ்ட் எடுத்துக்குங்க.

-Cut to

SC. No. 7 **கவுண்டர் பங்களா, கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(தேவபுரம் என்ற கிராமத்தில் ஒரு சிறு அரண்மனை போன்ற போர்டிகோ உள்ள, காம்பவுண்ட் இல்லாத, அழகான பங்களாவை காண்கிறோம். அதன் எதிரில் சுமார் 180-200 அடி தூரத்தில் ஒரு நீள வெராண்டா உள்பட இரண்டு அறைகள் உள்ள, கெஸ்ட் ஹௌஸ் ஒன்றையும் காண்கிறேம்.)

-Cut to

Sc. No. 7.A **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(சேர்மன் செந்தில்வராய கவுண்டர் பங்களாவின் ஹாலை காண்கிறோம். ஒரு ஹிந்து ஜமீன்தார் வீட்டின் கம்பீரமான அமைப்பு காணப்படுகிறது. ஹாலின் மத்தியில் நான்கு பெரிய சோஃபாக்கள் காணப்படுகின்றன. சுற்றிலும் பல அறைகள் காணப்படுகின்றன. ஒரு மூலையில் பியானோ ஒன்று காணப்படுகிறது. ஹிந்து

கலாச்சாரத்தை காட்டும் சிறிய சிலைகளும் பெரிய போட்டோக்களும் காணப்படுகின்றன. மொத்தத்தில் ஒரு தெய்வீகக் களையுடன் காணப்படுகிறது).( கவுண்டர் கம்பீரமாக சோஃபாவில் அமர்ந்து தினப் பத்திரிக்கையை படித்துக்கொண்டு இருக்கிறார். அப்பொழுது கவுண்டரின் தங்கை கௌளரி காஃபி டம்ளருடன் வந்து)

கௌளரி : அண்ணா... இந்தாங்கண்ணா காஃபி.. (என்று கொடுத்தவாறு தன் அண்ணனின் பக்கத்தில் உட்கார)

கவுண்டர் : (காஃபியை பெற்று, பெருமூச்சுவிட்டு) அம்மா கௌளரி.. இன்னிக்கு நம்ம குழந்தைங்க காணாமபோய் 17 வருஷம் ஆயிடுச்சி. நான் இன்னைக்கு சர்ச்சுக்கு போயாகணும் இல்ல...? (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் அங்கு வந்த மேனேஜர் நாகபூஷணிடம்) நாகபூஷண் எல்லாம் ரெடியா.. (என்று கேட்க, அதே சமயம் அங்கு வந்த கிரண்)

கிரண் : எல்லாம் ரெடிங்க மாமா.. (என்று கூறிக்கொண்டிருக்கையில் புரோகிதர் அங்கு வர)

புரோகிதர் : வணக்கம்.. கவுண்டர் ஐயாவுக்கு..

கவுண்டர் : வணக்கம்.. வாங்க புரோகிதரே.. உக்காருங்க.. (புரோகிதர் எதிரில் சோபாவில் உட்கார) நான் பார்க்க சொன்ன விஷயம் என்னாச்சு புரோகிதரே?

புரோ : அந்த விஷயத்த பத்தி பேசத்தானே நான் வந்திருக்கிறது.. நேத்து உங்க ஜாதகத்தை முழுசா கணக்கு போட்டு பாத்தேன்.. இப்ப நீங்க ஆரம்பிக்க இருக்கும் மில்லை தாராளமா ஆரம்பிக்கலாம்.. இப்ப குரு உங்க ராசிக்கு வர்ரதாலே நீங்க தொட்ட தெல்லாம் பொன் கவுண்டரே பொன்னு....! இன்னொரு முக்யமான சந்தோஷமான விஷயம் என்னன்னா உங்க வீட்டு ஜாதகப்படியும், நான் போட்ட கணக்குப் பிரகாரமும், காணாமபோன உங்க மகள் கஸ்தூரியும்.. உங்க தங்கை கௌளரி அம்மாவின் மகன் ரமேஷும்.. இந்த வருஷம் உங்களை வந்து சேர்ந்தே ஆகணும்...

கவுண்டர் : அப்படியா ரொம்ப சந்தோஷம் புரோகிதரே.. (கிரண் முகம் கமுக்கமாக வெறுப்பை காட்டுகிறது)

புரோ : இதுவரைக்கும் நான் போட்ட கணக்கு தப்பானது கெடையாது... பார்க்கலாம். இதுக்கு மேல அந்த கடவுளின் செயல்... அப்புறம் ஒரு சின்ன சமாச்சாரம்...

கவுண்டர் : சொல்லுங்க புரோகிதரே...

புரோ : வர்ற வியாழக்கிழமையிலிருந்து ரெண்டு மாசத்துக்கு நான் ஊர்ல இருக்க மாட்டேன். இன்னும் லேட் ஆனாலும் ஆகலாம்...

கவுண்டர் : அப்படி எந்த ஊருக்கு கிளம்பியிருக்கீங்க..?

புரோ : ஒண்ணு விடாம எல்லா வடநாட்டு புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் போய் தரிசனம் செஞ்சிட்டு வரலாம்னு இருக்கேன். வர எப்படியும் ரெண்டு மூணு மாசங்கூட ஆகலாம்..

கவுண்டர் : நல்லது புரோகிதரே.. (என்று தன் ஜிப்பாவிலிருந்து பணத்தை எடுத்து அதை இரண்டாக பிரித்து) இதை காசி விஸ்வநாதரின் உண்டியில் போட்டுடுங்க. இதை உங்க செலவுக்கு வச்சிக்கிங்க (என்று கொடுக்க)

புரோ : (அதை வாங்கியவாறு) கவுண்டர் ஐயாவுக்கு பெரிய மனசு...! நம்ம வீட்டு பூஜை காரியங்களுக்கெல்லாம் என் பையன் கிட்ட சொல்லியிருக்கேன்.... அவன் வந்திடுவான்....

கவுண்டர் : அப்படியா.... ரொம்ப சந்தோஷம்.

புரோ : அப்ப நான் வரட்டுங்களா.? வரேங்க கௌளரி அம்மா...

கவுண்டர், கௌளரி : நல்லது, போய்வாங்க. (என, புரோகிதர் எக்ஸிட்)

நாகபூஷண் : (கவுண்டரிடம்) ஐயா.. புரோகிதரே இப்படி சொன்ன பிறகு, காணாம போன நம்ம வீட்டு பிள்ளைகளை பத்தி பத்திரிகையில ஒரு விளம்பரம் கொடுத்தா நல்லதில்லீங்களா..?

கவுண்டர் : மொதல்ல அதுக்கு ஏற்பாடு பண்ணுங்க....

நாகபூஷண்: ஞாயிற்றுகிழமை வரும்படியா கொடுத்தா நல்லது....

கவுண்டர் : அப்படியே செய்யுங்க.. கௌளரி.. ரேகா எங்கம்மா..?

ரேகா : (வந்து கொண்டே) வந்துட்டேன் பெரியப்பா (வந்து) என்னங்க பெரியப்பா...

கவுண்டர் : ஒரு ரவுண்டு நம்ம ஆஸ்பத்திரி பக்கம் போயிட்டு அப்புறமா காலேஜுக்கு போம்மா

ரேகா : அங்க போய்ட்டுத்தான் போவேன்... பெரியப்பா.... வரேன் அத்தே... (ரேகா வெளியேற ஒரு புது மணத்தம்பதி உள்ளே கவுண்டரிடம் வந்ததும்)

மணமகன் : (பவ்யமாக) வணக்கம் ஐயா (என்று சொல்லி தன் மனைவிக்கு கவுண்டர் காலில் விழ சைகை செய்து, இருவரும் கவுண்டர் காலில் விழ குனிய, கவுண்டர் எழுந்து நின்று காலில் விழுந்து வணங்கும் அவர்களை)

கவுண்டர் : எல்லா வகையிலும் நல்லதே நடக்க அந்த ஆண்டவன் உங்களுக்கு அருள் புரியட்டும். (அவர்கள் எழுந்து வந்து கெளரியின் காலில் விழ கெளரியும் எழுந்து நின்று அவர்களை ஆசீர்வதித்து)

கெளரி : கொஞ்சம் இருங்க (என்று உள்ளே போய் ஒரு தட்டில் புடவை, ஜாக்கெட் பீஸ், பேண்ட், ஷர்ட் பீஸ் என்று வைத்து, அதன் மீது தேங்காய் வெற்றிலை பாக்கு பணம் வைத்தவாறு எடுத்து வந்து கவுண்டரிடம் கொடுக்க கவுண்டர் அதை வாங்கி மணமகனிடம் கொடுக்க)

மணமகன் : (அதை வாங்கி) ஐயா... அப்படியே பெரியம்மா கால்லயும் விழுந்து ஆசீர்வாதம் வாங்கணும்...

கவுண்டர் : தம்பீ.. கெளுச நாளா புதுசா கல்யாணம் ஆகிவர்றவங்கள பாத்ததுமே பாரு வோட மனசு ரொம்ப பாதிக்கிறா மாதிரி தெரியுதப்பா...

மணமகன் : அப்படீன்னா வேண்டாங்க ஐயா... எங்களால அம்மாவுக்கு எந்த தொந்தரவும் வரவேண்டாம். நாங்கபோய் வர்றோம் ஐயா... போய்வர்றோம் அம்மா...

-Cut to

SC. No. 8 **கிராமத்து ஹாஸ்பிடல்** Day / Ext

(காத்தவராய கவுண்டர் தர்ம ஆஸ்பத்திரி எனும் பெயர் பலகையிலிருந்து காட்சி ஆரம்பமாகி கேமரா பின்னுக்கு வர ரேகா ஹாஸ்பிடல் முன் ஸ்கூட்டியில் வந்து நிறுத்தி ஸ்டேண்ட் போட்டு உள்ளே சொல்ல)

-Cut to

SC. No. 8.A **கிராமத்து ஹாஸ்பிடல்** Day / Int

(ஒரு நோயாளிக்கு தலையில் கட்டு போடப்பட்டிருக்கிறது. Dr. ராமநாத் (வயது சுமார் 65) நோயாளியிடம் 2 சிறிய பொட்டலங்களை கொடுத்து)

டாக்டர் : இந்தாப்பா.. ரெண்டு வகை மாத்திர இருக்கு. ரெண்டிலயும் ஒண்ணொண்ணா மத்யானம், ராத்திரிக்கு வயித்துக்கு

ஏதாச்சும் சாப்பிட்டபின்னால சாப்பிடு... 2 நாள் விட்டு வா... (அதை பெற்றுக் கொண்ட நோயாளி வெளியேற ரேகா அங்கு வந்து)

ரேகா : குட் மார்னிங் டாக்டர்...

டாக்டர் : குட் மார்னிங் ரேகா. காலேஜுக்கு புறப்பட்டுட்டியாம்மா?

ரேகா : ஆமாங்க டாக்டர். பெரியப்பா ஒரு விசிட் குடுக்க சொன்னாரு.. யாராவது பேஷன்ட் இருந்தா உங்களுக்கு ஹெல்ப் செஞ்சிட்டு போகலாம்ன்னு வந்தேன்...

டாக்டர் : (பெஞ்சில் உட்கார்ந்திருந்த ஒரு பெண்மணியை காட்டி) அந்தம்மா காலுக்கென்னமோ அடி பட வச்சினு வந்திருக்காங்க... அவங்களை கொஞ்சம் அட்டெண்ட் செஞ்சிட்டு போய்டும்மா... அப்படியே.. நான் சொன்ன விஷயம் ஞாபகத்தில இருக்காம்மா....?

ரேகா : எந்த விஷயம் டாக்டர்... (என்று கேட்டு உட்கார்ந்திருந்த பெண்மணியை பார்த்து 'வாம்மா' என அந்த பெண்மணி வந்து படுக்கையில் படுக்க ரேகா அவளை அடெண்ட் செய்ய ஆரம்பிக்க)

டாக்டர் : அப்பாய்ன்ட்மெண்ட் விஷயம்மா.. என் ஒருத்தனால மெய்ன்டெய்ன் பண்ண முடியலேம்மா.... புதுசா வந்த டாக்டரும் நர்சும் சிடியில வேலை கெடச்சிடுச்சின்னு போய்டாங்க.... நமக்கு டாக்டர் இல்லாட்டியும் 2 பேர் ஹெல்ப் செய்ய இருந்தாபோதும்...! நீ இன்னும் 2 வருஷத்துல டாக்டருக்கு படிச்சி முடிச்சிட்டு வரவரைக்கும் அவங்கள வச்சி சமாளிச்சிடுவேன்....

ரேகா : வில்லேஜ் ஹாஸ்பிடலுன்னாலே ஏன் இப்பிடி பின் வாங்கறாங்க...? செல்ஃபிஷ் ஃபெலோஸ்! டிகிரீ வாங்கறப்ப செய்யற.. பிரமாணமே வேற அப்பரம் நடந்துக்கிற முறையே வேற

டாக்டர் : விடும்மா.. பேப்பர்ல ஒரு அட்வர்டைஸ்மென்ட் கொடுத்து பாக்கலாமே.. என்ன சொல்றம்மா...?

ரேகா : பெரியப்பா கிட்ட சொல்லி அப்படியே செஞ்சிடலாம் டாக்டர்...!

டாக்டர் : ரொம்ப தேங்க்ஸ் ரேகாம்மா (ரேகா அந்த பெண்மணி காலுக்கு சுற்றிய பேண்டேஜுக்கு முடிச்சுபோட)

-Cut to

SC. No. 9 **கிராமத்து 'சர்ச்'** Day / Ext

(கவுண்டர், மேனேஜர் நாகபூஷண் மற்றும் கிரண் சர்ச்சுக்கு வர ஃபாதர் அவர்களை மகிழ்ச்சியோடு வரவேற்கிறார்)

ஃபாதர் : வாங்க.. வாங்க.. சௌக்யங்களா கவுண்டரய்யா.?

கவுண்டர் : நான் நல்லா இருக்கேன் ஃபாதர்... நீங்க சௌக்யங்களா?

ஃபாதர் : ஜீஸஸ் கிருபையால நல்லா இருக்கேன்... நேற்று மிஸ்டர் நாகபூஷண் சொன்னதைப் போல பிள்ளைங்களுக்கு சொல்லி அனுப்பிச்சிட்டேன். பிள்ளைங்கள வரச்சொல்லட்டுங்களா..?

கவுண்டர் : வரச் சொல்லுங்க ஃபாதர்...

ஃபாதர் : தாமஸ் (என்று கூப்பிட ஒரு இளைஞன் வர) பிள்ளைங்கள கூட்டிட்டுவா... (தாமஸ் போய் 50-60 சிறுவர் சிறுமியர்களை கூட்டி வர அவர்கள் எல்லோரும் வரிசையாக நிற்க, கவுண்டர் அவர்களுக்கு நோட்டு புத்தகம், பென், பென்ஸில், மிட்டாய்கள் வழங்குகிறார். கிரண் மற்றும் நாகபூஷண் அவருக்கு உதவியவாறு இருப்பர். சிறுவர் சிறுமியர் அவற்றை வாங்கிச் சென்றபின், ஃபாதர் மிகுந்த சந்தோஷத்துடன்)

ஃபாதர் : கவுண்டரய்யா.. நானும் சுமார் 16-17 வருடங்களா பார்த்துக் கொண்டிருக்கேன். ஊர் குழந்தைங்கள எல்லாம் உங்க குழந்தைங்கமாதிரி கவனிக்கிறீங்க.. அதென்னமோ இந்த வருஷம் உங்க பிள்ளைங்க நமக்கு கெடச்சிடுவாங்கன்னு என் மனசில தோணுது...!

கவுண்டர் : (ஆச்சரியத்துடன்) இதென்ன ஆச்சர்யம்.. புரோகிதர்கூட இதையேத்தான் சொன்னார்... உங்க வாயாலயும் வந்திடுச்சி.. ரொம்ப நன்றிங்க ஃபாதர்.. உங்க வார்த்தையைப்போல நடந்துட்டா ஊரெல்லாம் பண்டிகையா கொண்டாடிடலாம் ஃபாதர்...

(கிரணின் அதே வெறுப்பு முகம்)

ஃபாதர் : ஜீஸஸ்... உங்க ஆசைய நிறைவேற்றுவார். பரிசுத்த மனசோடு பள்ளிக்கூடங்க கட்டியிருக்கீங்க... தர்ம ஆஸ்பத்திரிங்க நடத்திக்கிட்டு வர்றீங்க... கஷ்ட காலத்தில ஜனங்களுக்கு உதவுறீங்க... இன்னும் பல உதவிங்கள செய்துவர்ற உங்களுக்கு ஜீஸஸ் நல்லது செய்யாமலா போய்விடுவார்... நிச்சயமாக செய்வார்...!

கவுண்டர் : ரொம்ப நன்றிங்க ஃபாதர் (என்று கை குலுக்க)

-Cut to

SC. No. 10 **ஜேம்ஸ் வீடு** Day / Int

(ஜேம்ஸ் தன் அறையில் கட்டிலின் மீது பனியன் லுங்கியில் படுத்திருக்க, அவன் இடுப்பினிடம் லட்சுமி உட்கார்ந்திருக்க, லட்சுமியின் குங்குமம் சற்று அழிந்து தலைமுடியும் கலைந்தவாறு காணப்படுகிறது. அவள் மெதுவாக ஜேம்ஸ் மார்பில் சாய்ந்தவாறு)

லட்சுமி : உன் கிட்ட ஒண்ணமட்டும் புரிஞ்சுக்க முடியலியே...

ஜேம்ஸ் : அப்படீன்னா...?

லட்சுமி : அப்படீன்னா.. ஸ்டெல்லாதும் உன்னுதும்தான் விஷயம்.

ஜேம்ஸ் : என்னா?

லட்சுமி : ஸ்டெல்லா உன்ன பார்த்தாலே பத்தடி தூரம் ஓட்றதும் இல்லாம உன் மேல ரேங்கி ரேங்கி உளுவுரா. நீ என்னான்னா.. அவளையே கட்டிக்கணும்னு ஒத்த கால்ல நிக்கிறியே.!

ஜேம்ஸ் : அதுக்கு இப்ப என்ன செய்யணோண்ற...?

லட்சுமி : என் மனச, என்னை, முளுசா வாங்கிக்கினு அவளதான் கட்டிக்குவேன்னு சொல்றியே. இது என்னா நியாயம்னு சொல்லு.?

ஜேம்ஸ் : அட என் கண்ணுக்குட்டி.. ஸ்டெல்லா என் ஆஸ்தி மாதிரி. நான் அவங்க வீட்டுக்கு எவ்ளோ ஹெல்ப் பண்ணியிருக்கேன்.. அதுமட்டும் இல்லாம.. சின்ன வயசில இருந்தே.. எனுக்குதான் அவன்னு நெனச்சிக்கினு இருக்குறேன்.. தப்பா சொல்லு.!

லட்சுமி : நான் என்னத்த சொல்றது. எனக்கு நாமத்தை போடு. அவளுக்கு குங்குமத்தை வையின்னு சொல்லட்டா..

ஜேம்ஸ் : அதுக்குதானே பொம்பள புத்தீன்றது.. இல்ல குட்டி.. உன்ன கை உட்டுடுவேனா.? பாரு.. என் உயிரு இருக்கிற வரைக்கும் என் உயிரோட உயிரா நீ இருப்ப.. அவ என் சொத்து.. நீ கடல்ல எடுத்த முத்து. கவலப்படாதே உனுக்கு லில்லீன்னு பேர மாத்தி.. க்ரிஸ்டியனா ஆக்கி நான் சாவுறவரைக்கும் எங்கூடவே வச்சிக்கிறேன்...!

லட்சுமி : எனக்கு எல்லா கடவுளும் ஒண்ணுதான். உனுக்கு இஷ்டம் வரும்போது தாலிகட்டு.. ஆனா நீதான் என்

புருஷன். (என்று அவன் தலைமுடியை கோதிவிட ஜேம்ஸ் அவளை அப்படியே தன் மீது இழுத்துக் கொள்ள)

-Cut to

SC. No. 11 **நரசிம்மன் வீட்டு வட்டாரம்** Day / Ext

(ரமேஷ் தன் அறையை பூட்டி வெளியேற இதற்காகவே காத்துக்கொண்டிருந்த ஸ்டெல்லா அவனை பின் தொடர்ந்து கேட்டிடம் வந்ததும்.)

ஸ்டெல்லா : மிஸ்டர்... (ரமேஷ் திரும்பி பார்த்துவிட்டு முன் செல்ல)

ஸ்டெல்லா : ஹலோ... மிஸ்டர்... உங்களத்தான்...

ரமேஷ் : (நின்று திரும்பி) என்னயா கூப்டீங்க...? வேணாங்க ப்ளீஸ்...!

ஸ்டெல்லா : என்னங்க. ரொம்பவே 'அேக்ட்' பண்றீங்களே....

ரமேஷ் : போன தடவ உங்க ஜேம்ஸ் கிட்ட பேச்ச வாங்கிக் கிட்டேன்... இப்ப ஒத வாங்கிக்க சொல்றீங்களா.?

ஸ்டெல்லா : ஏன் மிஸ்டர் உங்களுக்கு தைரியமின்றதே இல்லியா? பாருங்க மிஸ்டர் எனக்கும் மேனர்ஸ்ஸின்றது தெரியும். ஜேம்ஸ் அன்னிக்கி அப்படி நடந்துக்கிட்டது தப்புன்னு எனக்கும் ஃபீல் ஆகுது. ஐயம் ஸாரி ஃபார்தட்! ஃபாதர் உங்களை பாக்கணோண்ணு சொன்னாரு. போய்பாருங்க. (என்று ஒரு விஸிடிங் கார்ட் ஐ கொடுக்க ரமேஷ் அதை பெற்றுக் கொள்ள) இதுதான் அவர் வீட்டோட அட்ரஸ். (என்று சொல்லி சட்டென்று அங்கிருந்து கிளம்பிவிடுகிறாள். ரமேஷ் அவள் போன திசையை நோக்கி ஒரு 'மெச்சூர்ட் லுக்' விடுத்து புன்சிரிக்க)

-Cut to

SC. No. 12 **ஃபாதர் வீடு** Day / Int

(காட்சியை ரமேஷ் முதுகிலிருந்து ஆரம்பித்து அவன் முன் சென்று கதவை தட்டுவதில் ஆரம்பிக்கிறோம். கதவு தட்டும் ஓசையை கேட்ட ஃபாதர்)

ஃபாதர் குரல்:யெஸ்.. கம் இன்.. (ரமேஷ் கதவை தள்ளி உள்ளே செல்ல அங்கு ஃபாதர் தலையில் லேசான கட்டுடன் சோபாவில் படுத்திருக்க அவருக்கு எதிரில் மதர் மற்றும் ஸ்டெல்லா உட்கார்ந்திருக்க)

மதர் : சரி ஃபாதர்.. நான் வர்றேன்... (என்று எழுந்து நிற்க)

ஃபாதர் : நல்லது ஸிஸ்டர்...

மதர் : வரட்டுமா ஸ்டெல்லா...

ஸ்டெல்லா : சரிங்க மதர் (மதர் 'எக்ஸிட்')

ரமேஷ் : (ஃபாதரிடம் வந்து நின்று) குட் மார்னிங் ஃபாதர்...

ஃபாதர் : குட் மார்னிங் மை ஸன்.. உட்காரப்பா...

ரமேஷ் : (உட்கார்ந்து) எப்படி இருக்கீங்க ஃபாதர்...?

ஃபாதர் : ஜீஸஸ் அருளால நல்லா இருக்கேம்பா. ஸ்டெல்லா.. ரமேஷுக்கு ஃப்லே(அ)ஸ்கிலிருந்து காஃபி குடும்மா.. (ஸ்டெல்லா அலட்சியத்துடனே காஃபியை கப்பில் ஊற்றி வந்து ரமேஷிடம் நீட்ட, ரமேஷ் அதை பெற்றுக்கொண்டு)

ரமேஷ் : ஃபாதர் உங்களுக்கு..?

ஃபாதர் : நான் கொஞ்சம் மின்னதான் குடிச்சேன்... நீ குடிப்பா... (ரமேஷ் காஃபி குடித்தான பிறகு)

ஃபாதர் : ரமேஷ்.. உனக்கு யாரும் இல்லை. வேலை தேடி சென்னைவந்திருக்கேன்னு ஸ்டெல்லா மூலமா தெரிஞ்சது...

ஸ்டெல்லா : (குறுக்கிட்டு) ஃபாதர் இவர் மேல பரிதாபப்பட்டு நான் அதை சொல்லலே.. கேள்விப்பட்டதை சொன்னேன் அவ்வளதான்...!

ஃபாதர் : ஸ்டெல்லா கொஞ்சம் சும்மா இரும்மா. சொல்லுப்பா ரமேஷ்... உன்னோட 'க்வாலிஃபிகேஷன்' - 'பேக்ரௌண்ட்'... என்னன்னு நான் தெரிஞ்சிக்கலாம்தானே...?

ரமேஷ் : தாராளமா ஃபாதர்... நான் சின்ன வயசிலயே அனாதை ஆயிட்டேன்... அந்த வயசிலயே பலபேர் வீட்ல வேல செஞ்சி.. கடைசியா யாரோ ஒருத்தர் என்னை அனாதை ஆஸ்ரமத்துல சேத்திருக்காரு...

ஃபாதர் : உன் படிப்புக்கு ஏதும் தொந்தரவு வரலியே...?

ரமேஷ் : இல்லீங்க ஃபாதர்.. அனாத ஆஸ்ரமத்து ப்ரின்ஸிபால் ரொம்ப நல்லவர்... என்ன பி.எஸ்ஸி படிக்கவச்சி பி.ஃபார்மா வையும் முடிக்கவச்சாரு... அவருக்கு பிள்ளைங்க யாரும் இல்ல... என்னையே அவரோட

பிள்ளையா நெனச்சி, அவர் ரிடையர்ட் ஆனதும் மெடிகல் ஷாப் வச்சி தரேன்னு சொன்னார்... பாவம்.. ஹார்ட் அட்டேக்ல இறந்திட்டார்... அவர் மனைவி.. 'நீ எங்கயாவது போய் வேல தேடிக்க'ன்னு சொல்லிட்டாங்க. இன்னொரு விஷயம் ஃபாதர்... ப்ரின்ஸிபால் சாகறதுக்கு முன்ன என்ன ட்ரைவிங் ஸ்கூலுக்கு அனுப்பி டிரைவிங்லைஸென்சும் வாங்கி குடுத்திருக்கார் ஃபாதர்...

ஃபாதர் : காட் ப்லெஸ் யூ மை ஸன்... உன்கிட்ட அந்த ட்ரைவிங்லைஸென்ஸ் இருக்கிறதனாலதான் இப்ப வேலை இல்லாத உனக்கு.. இங்க ட்ரைவர் வேலை கொடுக்க முடியுது... உனக்கு இஷ்டம்னா இதை நீ ஒப்புக்கலாம். என்ன சொல்றப்பா...?

ஸ்டெல்லா : சொல்றதுக்கு என்ன இருக்குங்க ஃபாதர்? இங்க அவருக்கு வேல கெடச்சது அவர் அதிர்ஷ்டம்...!

ஃபாதர் : ஸ்டெல்லா...!

ரமேஷ் : இல்லீங்க ஃபாதர்.. அவங்க சொல்றது சரிதான்... எனக்கு இந்த வேல கெடச்சது என் அதிர்ஷ்டம்தான்...

ஸ்டெல்லா : அப்படீன்னா ஜீஸஸ்ஸோட ஆசீர்வாதம் உங்களுக்கு கெடச்சிடுச்சுன்னு ஆச்சு இல்லியா..?

ரமேஷ் : ஆமாம்...!

ஸ்டெல்லா : நீங்க இப்ப ஜீஸசுக்காக சேவை செய்யரவராகவும் ஆயிட்டீங்க இல்லியா...?

ரமேஷ் : ஆமாம்...!

ஸ்டெல்லா : அப்ப ஏன் நீங்க எங்க மதத்தில சேர்ந்து ஒரு க்ரிஸ்டியனா இருந்து சேவை செய்யக்கூடாது. (ரமேஷ் தலைகுனிந்து மௌனமாக இருக்க)

ஃபாதர் : (ரிஆக்ஷன்) (வியப்பு, எதிர்பார்ப்பு)

ஸ்டெல்லா : (ரிஆக்ஷன்) (எதிர்பார்ப்பு)

ரமேஷ் : (புன்சிரிப்புடன்) நல்ல கேள்விதான் கேட்டீங்க மேடம். பெத்தவங்களே தெரியாம இருக்கிற எனக்கு இந்த மதங்கள்ள எப்படி ஆர்வம் வரும் சொல்லுங்க...?

ஸ்டெல்லா : (ரிஆக்ஷன்) – (வெறுப்பு)

ஃபாதர் : (ரிஆக்ஷன்) – (பொறுமை)

ரமேஷ் : அதுக்காக நான் கடவுள் மேல நம்பிக்க வச்சிருக்கிறவங்களை.. கடவுளை நம்பவேண்டாம்னு சொல்றவன் இல்ல.. அது அவங்கவங்க சொந்த விருப்பத்த பொருத்தது. எனக்கு தெரிஞ்ச வரைக்கும் சொல்லணுண்ணா.. பொதுவா.. புதுசா ஒருத்தர் அறிமுகமாகறப்ப.. அவர் பளிச்சின்னும் சுத்தமாவும் தெரிஞ்சா அவர்கிட்ட பேச ஆரம்பிக்கிறாங்க. இல்லாட்டி, அவரை அவாய்ட் பண்றாங்க. அந்த ரெண்டும் சரியா இருந்து அவர் கிட்ட பேச ஆரம்பிச்சதும்.. அவர் பேச்சு, மூவ்மென்டை கவனிக்கிறாங்க. அது டீஸென்ட்டான வகையில இருந்தா மேற்கொண்டு பழகி அவர் குணத்தை பாக்கறாங்க. குணமும் நல்லா இருந்துட்டா அவரை நண்பனா ஏத்துக்க ஆசைப்படறாங்க... நண்பனானதும்... அவர் அவருக்காக தியாகம் செய்யரவராகவும் இருக்கார்ணு தெரிஞ்சா அவரை சொந்தக்காரனாகவும் ஆக்கிக்க தயங்கறதில்லை... இதுதான் நான் பார்த்த மனித உறவுக்கான ஜாதி! மதம்! இன்னும் எல்லாமே! உங்க அபிப்ராயத்த சொல்லுங்க மேடம். (ஸ்டெல்லா ஃபாதர் முகத்தை பார்க்க)

ஃபாதர் : பரவாயில்லயே மை ஸன்.. வயது சின்னதானாலும் விஷயங்கள நல்லா புரிஞ்சி வச்சிருக்கற.. (என்று, கார் சாவியை கொடுத்தவாறு) இந்தா ரமேஷ் நம்ம கார் கீ.. வெச்சிக்க. ஈவினிங் ஸிக்ஸோ க்ளாக் சர்ச் பக்கத்தில இருக்க கார்ஷெட்டுக்கு போய் பீட்டர் கிட்ட சொல்லிட்டு.. காரை இங்க எடுத்துட்டு வந்துடு.

ரமேஷ் : சரிங்க ஃபாதர் (என்று சாவியை பெற்று வெளியேற) (இருவரும் அவன் போவதை பார்த்திருக்க,)

-Cut to

SC. No. 13 **மேரி வீடு** Day / Int

(மேரி உடல் நலமின்றி கட்டிலில் படுத்திருக்க, அவள் கால் பக்க மிருந்த சேர் ஒன்றில் ஜேம்ஸ் பேப்பர் படித்தவாறு உட்கார்ந்திருக்க, மேரி இருமியவாறு எழுந்து சிறிய பாட்டிலிலிருந்து ஸிரப்பை குடித்துவிட்டு மறுபடியும் படுத்துக்கொள்ள, ஜேம்ஸ் அவன்பாட்டுக்கு பேப்பர் படித்தவாறே இருக்க, அப்போது கிச்சனிலிருந்து அங்கு வந்த ஸ்டெல்லா சற்று கோபத்துடன்)

ஸ்டெல்லா : அம்மா...

மேரி : என்னம்மா?

ஸ்டெல்லா : லவங்க டப்பால ஆயிரம் ரூபாய் வச்சிருந்தேன். நீ ஏதாவது எடுத்துக்கிட்டியா.?

மேரி : (எழுந்து உட்கார்ந்து) ஓ.. அதா.. ஆமாம்மா.. நான் சொல்ல மறந்திட்டேன்.. பக்கத்து தெரு மகேஷ்வரி ஒரு பட்டுப்பொடவைய எடுத்துனு வந்திருந்தாங்க...

ஸ்டெல்லா : பொடவையா..?

மேரி : ஆமாம்மா.. உங்க பொண்ணுக்கு இந்த பொடவை கலர் நல்லா மேட்ச் ஆகும்.. வாங்கிக்கிங்க.. பணத்தை கொஞ்சம் கொஞ்சமாவே குடுங்க பரவாயில்லன்னு சொன்னாங்க. அதான் அந்த ரூபாய எடுத்து குடுத்திட்டேன். அந்த பொடவை உனுக்கு ரொம்ப நல்லா இருக்கும்மா...!

ஸ்டெல்லா : புத்தி இருக்காம்மா உனக்கு.? நான் எப்பம்மா பொடவை கட்டியிருக்கேன்...? இப்ப மருந்து வாங்க காசில்லாம பண்ணிட்டியேம்மா.. (என்று ஒரு தீர்மானத்துக்கு வந்து உள்ளே போய் சிறுமிகள் இடுப்பில் அணியும் ஒரு மூன்றுபட்டை வெள்ளி இடுப்புகயிற்றில் அரசன் இலை போன்ற பில்லையிருக்கும் அதை கொண்டு வந்து)

ஸ்டெல்லா : அம்மா.. ஜேம்ஸை இத வச்சிட்டு ஆயிரம் ரூபா வாங்கிட்டு வரச்சொல்லும்மா...

மேரி : (அந்த இ. கயிற்றை பார்த்து) ஐயோ இந்த செய்னை ஏம்மா எடுத்துட்டு வந்தே.?

ஸ்டெல்லா : பியானோ க்லாஸ்ல இருந்து வந்த பணமும் வீட்டு வாடகை அது இதுன்னு செலவாயிடுச்சி.. இப்ப டாக்டர் எழுதி குடுத்திருக்கிற மருந்தை வாங்கி வர பணம் வேணாமா? சொல்லும்மா.. இருந்த ரூபாயயும் ஒரு வழி செஞ்சிட்டு உக்காந்திருக்கே...

மேரி : அதுக்காக இந்த செய்னைத்தான் வெக்கணுமா?

ஸ்டெல்லா : பின்ன வேறென்ன இருக்குதும்மா. அது சரி. இதுக்கு முன்னகூட ஒரு தடவ இந்த செய்னை மட்டும்வைக்காதேன்னு அடம்பிடிச்சியே. ஏன்? அப்படி இந்த செய்ன்ல என்னம்மா இருக்கு...?

மேரி : ஜீஸஸ்.. நான் ஏன்தான் அந்த பொடவைய வாங்கினனோ தெரியலயே.. அப்படி இல்லேம்மா.. அது..

ஸ்டெல்லா : (நிதானத்துடன்) அப்படியும் இல்ல இப்படியும் இல்ல.. பாரும்மா... அவசரத்துக்கு இப்படிசெய்யறது பாவம் இல்லதானே. இதயெல்லாம் பெரிசா எடுத்துக்காதேம்மா.. மொதல்ல உன் உடம்பு நல்லா ஆகட்டும்.. இத. அப்புறம் எடுத்துக்கிட்டா போச்சி... ஜேம்ஸ் இந்தா இத வச்சிட்டு பணத்த வாங்கிட்டுவா. (ஜேம்ஸ் பேப்பரை மடித்து வைத்து சிரிக்க)

ஸ்டெல்லா : ஏன் இந்த நேரத்துல இப்படி லூஸ்மாதிரி சிரிக்கிறே?

ஜேம்ஸ் : இல்ல ஸ்டெல்லா.. வெறும் ஆயிரம் ரூபாய்க்கு இத வைக்க சொல்றீயே.. அந்த பணத்த நான் குடுக்கமாட்டேனா? அதுவுமில்லாம உங்க அம்மா அத வெக்காதேன்னு வேற சொல்றாங்க...

ஸ்டெல்லா : வேணாம்பா சாமி...! இனி எந்த காரணத்துக்கும் உன் கிட்ட பணம் வாங்கக்கூடாதுன்னு தீர்மானிச்சிட்டேன்...

ஜேம்ஸ் : ஏன்?

ஸ்டெல்லா : ஏன்னா, நீ பணம் குடுக்கிறப்பல்லாம் நம்ப கல்யாணத்த எப்ப வச்சிக்கலாம்? சீக்கிரமா என்ன கட்டிக்கோன்னு என் உயிர வாங்கறியே அதுக்குத்தான்...!

மேரி : இனிமே அப்படியெல்லாம் கேக்கமாட்டாம்மா... இந்த தடவை இவன் கிட்டயே வாங்கிக்கம்மா... அந்த செய்னை பெட்டியில வெச்சிடு.. போம்மா..

ஸ்டெல்லா : முடியாதும்மா! ஜேம்ஸ்.. இந்தா பிடி (என்று நீட்ட அவன் வாங்காமல் இருவர் முகத்தையும் பார்த்து நிற்க)

ஸ்டெல்லா : மூஞ்சிய என்னா பாக்கற.. இப்ப நீ போறியா.. இல்ல நான் போவட்டுமா..?

ஜேம்ஸ் : சரி சரி குடு... நீ ஏன் சேட் கடைக்கு போவணும்? (என்று இ.கயிற்றை பெற்று எக்ஸிட்) (மௌனமாக உட்கார்ந்திருக்கும் மேரியிடம் ஸ்டெல்லா உட்கார்ந்து)

ஸ்டெல்லா : (வேதனையுடன்) அம்மா உன் பேச்ச கேக்கலேன்றதுக்காக மனச போட்டு குழப்பிக்காதேம்மா... எனக்கு எல்லாத்தையும் விட உன் ஹெல்த் தாம்மா முக்கியம்... ஆபரேஷன் ஆன உடம்பு இல்லியாம்மா...?

மேரி : ஆனாலும்...

ஸ்டெல்லா : ஜேம்ஸ் கிட்டயே பணம் வாங்கியிருக்கலாமேன்னு சொல்றியா அவன் தொந்தரவு குடுக்கிறது என் மனசுக்கு ரொம்ப வேதனையா இருக்கும்மா. அதனாலதான் இப்படி செஞ்சேன்... (மேரி மௌனமாக இருக்க)

ஸ்டெல்லா : நான் செஞ்சது தப்புன்னா. தயவு செஞ்சி என்ன மன்னிச்சிடும்மா (மேரி கண்ணீருடன் திரும்பி படுக்க, ஸ்டெல்லா ஜீஸஸ் படத்தினருகில் போய் நின்று பாட்டொன்றை பாடுகிறாள்)

## பாடல் : 1

SC. No. 14 **நகர 'சர்ச்'** (H.W.O) Day / Int

(ஃபாதர் மற்றும் மதர், இவர்கள் சர்ச்சின் பிரிவை சேர்ந்த மலைப்பிரதேசத்தில் சில மலை ஜாதியினர் 'சர்ச்' கட்டுவதாலும் கிருஸ்தவ மதத்துக்கு சேர்ந்ததற்காகவும் ஹிந்துக்களால் தாக்கப்பட்டதைப் பற்றி பேசிக்கொண்டிருக்க) (இரண்டு ஸிஸ்டர்கள் புத்தகக்கட்டுக்களை, சுமை கஷ்டத்துடன் எடுத்து வந்து டேபிள் மேல் வைத்துவிட்டு போக) (அப்போது ரமேஷ் உள்ளே வந்து புத்தக கட்டுக்கள் வைக்கப்பட்ட டேபிளிடம் செல்ல)

மதர் : (ஒரு பத்திரிகையை பிரித்து அதில் ஒரு பகுதியை ஃபாதருக்கு காட்டியவாறு) பாத்தீங்களா ஃபாதர் எவ்வளவு பெரிய விஷயத்தை எவ்வளவு சின்னதா போட்டிருக்காங்க.. பாருங்க ஃபாதர்...

ஃபாதர் : இந்த பேப்பர்ல அப்படி போட்டிருக்கலாம் ஸிஸ்டர்.. வேற பேப்பர்ல 'போல்டா' போட்டிருக்கலாம் இல்லியா.?

மதர் : நீங்க என்னவாவது சொல்லுங்க ஃபாதர்.. இப்ப எல்லாம் நம்ம கிருஸ்தவங்களுக்கு நடக்கிறது எதுவுமே ஞாயமா தெரியலே... இப்படிப்பட்ட விஷயங்க அப்பப்ப பேப்பர்ல வந்துகிட்டே இருக்கு பாருங்க... (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் ஸ்டெல்லா அதை கேட்டவாறு உள்ளே வந்து)

ஸ்டெல்லா : ரொம்ப கரெக்டா சொன்னீங்க மதர். (என்று கூறியவாறே ரமேஷ் பக்கம் பார்க்க, ரமேஷ் ஸிஸ்டர்கள் கொண்டு வந்து வைத்த புத்தகக்கட்டுக்களை பிரித்த வண்ணம் இருக்க)

ஸ்டெல்லா : இல்லீங்க ஃபாதர், ஃபர்ஸ்ட் அஃப் ஆல் எஜுகேஷன், டிஸ்ஸிப்லின், யுனிஃபார்மிடி, நாகரீகமுன்னு இதெல்லாத்தையும் காண்பிச்சது நம்ம க்ரிஸ்டியானிடி தானே? அப்படி இருக்கப்ப இன்னும் வறுமை கோட்டை தாண்டாத எவ்வளவோ மலைவாசிங்க நல்லபடி வாழ.. எல்லாத்தையும் கத்துக்கணும்னு நம்ம மதத்தில சேர்ந்தது எந்த விதத்துல தப்பாகும் ஃபாதர்.? சொல்லுங்க மதர்...

மதர் : நீ சொல்றது சரிதாம்மா. ஆனா நம்மவங்களுக்கு நடக்கிறது சரியாயில்லையே..

(ரமேஷ் 10-10 ஆக புத்தகங்களுக்கு ரப்பர்பேண்ட் போட்டு அடுக்கி வைத்துக் கொண்டிருக்க)

ஃபாதர் : இப்ப, சரி தப்புன்னு நாம வாதம் செஞ்சி ஒரு பிரயோஜனமும் இல்லம்மா...

ஸ்டெல்லா : (குறுக்கிட்டு) சொல்லுங்க ஃபாதர் என்ன செய்யணும் சொல்லுங்க...

ஃபாதர் : இப்ப.. நம்மவங்க அங்க போயி மொதல்ல தாக்கப்பட்டு இருக்கறவங்களுக்கு சமாதானம் சொல்லணும்... உங்க மூலமா அவங்க மன நிம்மதி அடையணும்... உடனே போய் அவங்களோட பிரச்சனைகளை ஆன அளவு சீக்கிரம் தீர்த்திட்டு வந்தீங்கன்னா.. முன்னுக்கு சர்ச் கட்ட என்ன உதவிங்கள செய்யலாம்னு அதுக்கான ஏற்பாடுங்கள பண்ணலாம்...

மதர் : சரிங்க ஃபாதர்! நாளைக்கு காலைலியே நாங்க இங்கிருந்து புறப்பட்டுடறோம்... என்ன ஸ்டெல்லா.?

ஸ்டெல்லா : அப்படியே ஆகட்டும் மதர்.. நான் பியானோ க்லாசுக்கு போய் அதை முடிச்சிக்கிட்டு நாளையில இருந்து ஷர்லீய, க்லாஸ் எடுக்க சொல்லிட்டு வந்துடறேன்...

ஃபாதர் : அப்படியே செய்யும்மா. (மதரை பார்த்து) ஸிஸ்டர் நீங்க நம்ம கார்லயே போய்ட்டு வந்துடலாம். அப்பதான் சீக்கிரமா போய் சேரமுடியும். ரமேஷ்... (என)

ரமேஷ் : (டேபிளிடம் இருந்தவன் திரும்பி நின்று) சொல்லுங்க ஃபாதர்..

ஃபாதர் : இவங்களை...

ரமேஷ் : (குறுக்கிட்டு) காலைல சீக்கிரமா கார் எடுத்துட்டு.. இவங்களை இறியூர் மலைப்பிரதேசத்துக்கு கூட்டிட்டு போகணும்.

ஃபாதர் : வெரிகுட்.. நீ வீட்டுக்கு போகும்போது காரை எடுத்துட்டு ஸ்டெல்லாவையும் கூட்டிட்டு போ... ஸ்டெல்லா எப்படியும் உங்க வட்டாரத்திலதானே இருக்கிறது.. காலைல மதர்ர பிக் அப் செஞ்சிகிட்டு சீக்கிரமா கிளம்பிடு...

ஸ்டெல்லா : அவர் போகட்டும் ஃபாதர், நான் பியானோ க்லாஸை முடிச்சிட்டு லேட்டா போறேன்...

ஃபாதர் : (மதரை பார்த்து) நீங்கபோற இடத்துக்கு பக்கத்தில, தேவபுரம்ல இருக்கிற சர்ச் ஃபாதருக்கு ஒரு லெட்டர் தரேன்... மொதல்ல அவரைபோய் பாருங்க.. அவர் உங்கள கைட் பண்ணுவார்... (என்று மெதுவாக எழ)

–Cut to

SC. No. 15 **நகர பஸ் நிறுத்தம்** Eve (around 7 p.m.) / Ext

(ஸ்டெல்லா பஸ்சுக்காக காத்திருக்க, அடிக்கடி தன் கை கடியாரத்தை பார்த்தவாறே இருக்க, அப்போது அங்கு வந்த x பெண்)

x பெண் : என்ன பஸ்சுக்கு காத்திருக்கியாம்மா...?

ஸ்டெல்லா : (வெறுப்பாக) பஸ் ஸ்டாப்ல பின்ன ரயிலுக்கா காத்திருப்பாங்க...?

x பெண் : (கடுப்பாக) சாயங்காலம் 6 மணியில இருந்தே பஸ் ஸ்ட்ரைக் நடக்குது.. அதை சொல்லதான் உன்ன கேட்டது...

ஸ்டெல்லா : (வெறுப்பின்றி) எதுக்காம் ஸ்ட்ரைக்கு..?

x பெண் : பஸ்டிரைவர் ஒருத்தன போலீஸ் அடிச்சிட்டானாம் அதுக்கு பஸ்ஸை தெருவுல கன்னா பின்னான்னு நிறுத்திட்டு கலாட்டா செஞ்சிருக்காங்க.. இவங்க சண்டையில பப்ளிக்குக்கு எவ்வளவு தொந்தரவு பாரு. இருட்டிடிச்சி ஏதாவது ஆட்டோ பிடிச்சி போய் வீடு சேரு. (என்று சொல்லி x பெண் எக்ஸிட் ஆக)

ஸ்டெல்லா : (தனக்குள்) டிரைவர் போலீஸ் ரெண்டு பேருமே தப்பு செய்யறாங்க... இவங்கள கேக்கறதுக்குதான் நம்மகிட்ட

ஆளு இல்ல... யூஸ்லெஸ் ஃபெலோஸ் (என்று முனகிக் கொண்டிருந்தவள் காலியாக ஆட்டோ வருவதை பார்த்து) ஆட்டோ... (என ஆட்டோ அவள்முன் நிற்கிறது)

ஸ்டெல்லா : ஆர்.கே நகர் போகணும்...

ஆட்டோ டிரைவர் : எளுபத்து அஞ்சி ரூபா ஆகும்மா...

ஸ்டெல்லா: என்ன எழுபத்து அஞ்சு ரூபாயா? அவசரத்துக்கு வேறவழியில்லாம ஒன்னன்டாஃப் தரலாம். நீங்க ஒரே அடியா மூணுமடங்கு கேக்கறது ஞாயமா சொல்லுங்க...?

ஆ.ட்ரைவர் : பாரும்மா இன்னிக்கு பஸ் ஸ்ட்ரைக்கு.. எங்குளுக்கு இதுதான் சான்ஸ்சு... உங்குளுக்கு இஷ்டம் இருந்தா குடுங்க... இல்லேன்னா வேற வண்டிய பாத்துக் குனுபோங்க....

ஸ்டெல்லா : நீங்கள்ளாம் பப்ளிக் செர்வென்ட்ஸ்.. இப்படி அதிகமா பணம் கேக்கிறது தப்பில்லயா.?

ஆ.ட்ரைவர்: இன்னிக்கு நீங்க தர்ற மூணுமடங்கு பணத்துல நான் என்னா மாடிவீடா கட்டிக்க முடியும்... அன்னண்ணிக்கு பணத்தை ஊட்டுக்கு குடுத்தாதாம்மா எங்க ஊட்டுல அடுப்பு எரியும்...!

ஸ்டெல்லா : நீங்க மாடி வீடே கட்டிக்குங்க. அதுக்கு இந்த வேலைக்கு ஏன் வந்தீங்க.. பேசாம கொள்ளையடிக்கிற வேலைக்கு போவவேண்டியதுதானே...

ஆ.ட்ரைவர் : முட்டாள்தனமா ஓட்டு போட்டு.. நம்ம ஜனங்க நெறைய பேர அந்த வேலைக்குதாம்மா உட்டுக்கிறாங்க... அவங்க கூடதாம்மா பப்ளிக்க செர்வென்ட்ஸ்சு...

ஸ்டெல்லா : சரி சரி. உங்ககிட்ட பேசி பிரயோஜனம் இல்ல... 75 ரூபா தரேன்... ஆனா மனசுல திட்டிக்கிட்டுதான் தருவேன்...

ஆ.ட்ரைவர் : மனசுல என்னாம்மா. ஒப்பனாவே திட்டிகினு குடும்மா. இன்னிக்கி காலம் ஓடுனா சரி.. (ஸ்டெல்லா முணுமுணுத்தவாறு வண்டியில் உட்கார வண்டி புறப்பட)

-Cut to

SC. No. 16 **ஸ்டெல்லாவீட்டு எக்ஸ்டென்ஷன் (முக்யவீதி)** Night / Ext

(R.K. நகர் ஏரியாவுக்கு ஆட்டோ வந்து மெய்ன் ரோட்டில் நிற்கிறது)

ஸ்டெல்லா : இதென்ன இங்கியே நிறுத்திட்டீங்க.. அந்த க்ராஸ்குள்ள போங்க...

ஆ.ட்ரைவர்: தயவு செஞ்சி மன்னிச்சிடுங்கம்மா.. என் வண்டி டயருங்கல்லாம் இப்பவே ரொம்ப தேஞ்சிபோயி இருக்குது... இன்னும் இந்த ஜல்லி போட்ட ரோட்ல போனா டயர் கதி அதோகதிதான்... நாலு காசு சம்பாதிக்கிற இந்தமாதிரி டயத்துல டயர் பர்ஸ்ட் ஆயிடுச்சின்னா முடிஞ்சிது... இங்கியே ஏறங்கிகோம்மா...

ஸ்டெல்லா: எப்படிப்பட்ட ஜனங்கப்பா நீங்க.? கொஞ்சம் கூட மனசாட்சியே இல்லாதவங்களா இருக்கீங்களே.. நான் பணத்தை இப்பதரமாட்டேன்.. வீட்டுகிட்ட விட்டாதான் தருவேன்...

ஆ.ட்ரைவர் : இப்படி சொன்னா எப்படீம்மா.. பாத்தா படிச்சவங்கமாதிரி ரொம்ப நல்லவங்களா தெரியறீங்க.. சரி பத்து ரூபா புடிச்சிகிட்டுதான் தாம்மா... (என்று கேட்டுக்கொண்டு இருக்க அங்கு வேறு ஒரு ஆட்டோ வந்து நிற்கிறது. அதிலிருந்து ஆட்டோ ட்ரைவர் II மற்றும் பின்சீட்டிலிருந்த மூன்று பேர் இறங்கி வந்து)

ஆ.ட்ரைவர் II: ஏ..என்னப்பா இங்க கலாட்டா...?

ஸ்டெல்லா : பாருங்க.. இந்த ஆட்டோகாரர் மீட்டரை விட மூணு மடங்கு பணம் கேட்டதும் இல்லாம வீடு வரைக்கும் வர முடியாதுன்னு இங்கியே எறங்கச் சொல்றாரு...

ஆ.ட்ரைவர் II: இவனுங்கெல்லாம் இப்படிதான் மேடம். நீங்க மீட்டர் சார்ஜ் மட்டும் குடுங்க உங்களை உங்க வீட்டு முன்னாடியே விட்டுடறேன்...!

ஸ்டெல்லா : உங்க கூட மூணுபேர் இருக்காங்களே... நான் எப்படி வர்றது...?

ஆ.ட்ரைவர் II: (இருவரைகாட்டி) இவங்க ரெண்டு பேரும் போய்டுறாங்க. (ஒருவனைக்காட்டி) இவன் என் ஃப்ரண்ட்... என் பக்கத்திலயே உக்காந்துக்குவான்...

ஸ்டெல்லா : (தான் வந்த ஆட்டோ காரரிடம்) நீ வீடு வரைக்கும் கொண்டு போய் விடாததால... நீ சொன்னா மாதிரி 10 ரூபா பிடிச்சிக்கமாட்டேன்... 20 ரூபா பிடிச்சிக்கிட்டுதான் தருவேன்... (என்றதும் ட்ரைவர் II, ட்ரைவர் I னிடம்)

ஆ.ட்ரைவர் II : யோவ்.. மரியாதையா இந்த மேடம் குடுக்கிறத வாங்கிக்கிட்டு ரைட் சொல்லு... (என்று அதட்டும் குரலில் சொல்லி சட்டென்று நல்லவன் போல்) எதிலயும் ஒரு கணக்கு வேணாவா ட்ரைவர் அண்ணே.

ஆ.ட்ரைவர் I : உங்க கணக்கு என்னான்னு எனக்கும் தெரியும்... எனக்கு ஏன் இதல பங்கு... இந்த ராத்திரில ஏன் சும்மா பேச்சு..? நீ எவ்வளோ குடுக்கிறியோ குடும்மா.. (ஸ்டெல்லா இறங்கி தன் பர்சிலிருந்து பணத்தை தர அதை வாங்கி ட்ரைவர் I வேகமாக போய்விட)

ஆ.ட்ரைவர் II : நீங்க நம்ம வண்டியில உக்காருங்க மேடம். (தன் நண்பனிடம்) நீ முன்னால உக்காரு (என்றதும் அவன் ட்ரைவர் சீட்டில் உட்கார ஸ்டெல்லா பின்சீட்டில் உட்கார, மற்ற இருவர் Y,Z அங்கேயே இருக்க, ட்ரைவர் வண்டியை ஸ்டார்ட் செய்து க்ராஸ் ரோட்டில் நுழைய, மெய்ன் ரோட்டில் தூரத்தில் ஒரு அம்பாஸிடர் கார் வந்து கொண்டிருப்பதை காண்கிறோம்) (ஆட்டோ கொஞ்ச தூரம் வந்ததும் வீடுகள் அதிகம் இல்லாத இருட்டாக உள்ள ஒரு இடத்தில் நிற்கிறது.)

ஸ்டெல்லா : ஏன் ஆட்டோவை நிறுத்திட்டீங்க?

ஆ.ட்ரைவர் II : ம்.. உன் கூட ஆடலான்னுதான் (என்று சொல்ல ட்ரைவர் நண்பன் ஸ்டெல்லா பக்கத்தில் வந்து உட்காருகிறான்)

ஸ்டெல்லா : யூ ஸ்கௌண்ட்ரல்ஸ்! என்னை யாருன்னு நெனச்சே? இருங்க போலீஸை கூப்பிடறேன்... (என்று வெளியே இறங்க முயற்சிக்க ட்ரைவர் நண்பன் அவள் வாயை பொத்தி கைகளை பின்னால் மடக்க, ஸ்டெல்லா அவன் பிடியிலிருந்து தப்ப முயற்சிக்க) (அப்பொழுது ஆட்டோவில் வந்து மெய்ன் ரோட்டில் நின்றுவிட்ட அந்த Y, Z இரண்டு பேரும் ஓடி வருவதை காண்கிறோம். அவர்கள் பின்னால் சற்று தூரத்தில் மெய்ன்ரோட்டில் வந்துகொண்டிருந்த அம்பாஸிடர் காரையும். காண்கிறோம்.) (இப்பொழுது ஆட்டோ ட்ரைவர் II கூட ஸ்டெல்லா பக்கத்தில் வந்து உட்கார்ந்து)

ஆ.ட்ரைவர் II : ஏய்.. மரியாதையா எங்களுக்கு அட்ஜஸ்ட் ஆயிடு. இல்ல... உன்ன ரேப் செஞ்சி எங்கயாவது காட்ல கழுத்த... அறுத்து போட்டுட்டு வந்துடுவோம்... (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் ஓடி வந்த அந்த Y, Z இருவர் ஆட்டோவிடம் வர )

ஸ்டெல்லா : (அந்த இருவரிடம்) பாருங்க மிஸ்டர்...! இவங்க எங்கிட்டதப்பா நடந்துக்கறாங்க... தயவு செஞ்சி என்ன இவங்க கிட்டயிருந்து காப்பாத்துங்க... ப்ளீஸ் ஹெல்ப் மீ... (என, Y, Z இருவரும் சிரிக்க, அவர்களை புரிந்துகொண்ட ஸ்டெல்லா உரத்த குரலில் 'விடுங்கடா என்னை' ப்ளீஸ் ஹெல்ப் மீ.. என்று கத்துவதற்கு சரியாக அம்பாஸிடர் கார் பாஸ் ஆகிறது) (காரை ரமேஷ் ஓட்டிச்சென்றுகொண்டிருக்க அவனுக்கு ஆட்டோ விலிருந்து வந்த குரல் கேட்க, சட்டென்று ப்ரேக் போட்டு ரிவர்ஸில் ஆட்டோவிடம் வந்து நிறுத்த) (காரைப் பார்த்த ஸ்டெல்லா கார் உள்ளே இருட்டாக இருந்ததால்)

ஸ்டெல்லா : சார் என்னை காப்பாத்துங்க... ப்ளீஸ் காப்பாத்துங்க... (என, ரமேஷ் காரை ஆட்டோ முன் குறுக்காக நிறுத்தி, இறங்கி ஆட்டோவிடம் வரும்போது Y, Z அவனை தடுக்க அதில் Y)

Y : டேய் இது எங்க ஃபேமிலி மேட்டர்...! நீ இதுல தலையிடாத...

Z : மரியாதையா போய்டு நைனா.. (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் ரமேஷை பார்த்துவிட்ட ஸ்டெல்லா அவர்களிடமிருந்து திமிறிக்கொண்டு ஆட்டோவிலிருந்து வெளியே வந்து விழ, அவளைப் பார்த்த ரமேஷ்)

ரமேஷ் : மேடம் நீங்களா..?

ஆ.ட்ரைவர் II : (ரமேஷிடம் வந்து) ஓ. இவ உன் கிராக்கியா..? (என்று கூறியவாறு நால்வரும் ரமேஷை சுற்றிக் கொள்ள)

X : மூஞ்சிய என்னடா பாத்துனு.. ஏத்துங்கடான்னா.. (என்று கெட்ட வார்த்தையில் திட்ட, Y ரமேஷை அடிக்க கையை ஓங்கியதும் ரமேஷ் அதை தடுத்து.)

ரமேஷ் : (சீனியர் ரௌடி பாவனையில்) இருங்கப்பா. நானும் உங்களை மாதிரி ஆளுதான். நீங்க மாத்திரம் நான் போய்னு இருக்கிற வேலைல சரியா உதவி பண்ணிங்கண்ணா இந்த பொண்ணவிட பத்து மடங்கு அழகான பொண்ண செட்அப் பண்ணி ஆளுக்கு அஞ்சாயிரம் ரூபாயும் வாங்கித் தருவேன்.. என்ன சொல்றீங்க...?

ஆ.ட்ரைவர் II : என்னடா இவன்.. ஜோபு காலியா இருக்கப்ப துட்ட சொல்லி ஜோரை கெடுத்துட்டானே.. என்னா வேல சொல்டா அதை...

ரமேஷ் : நான் சொல்றதுக்கு முன்ன இந்த பொண்ண அனுப்பிட்டா நல்லது.. (என்று ஆ.ட்ரைவரிடம் நெருங்கி மெதுவாக) ஏன்னா.. இந்த பொண்ணு எங்க ஊட்டு எதிர்லதான் இருக்குது.. நான் உங்குளுக்கு சொல்ற விஷயம் இவளுக்கு தெரிஞ்சா என்னப்பத்தின கெட்ட விஷயமெல்லாம் வீட்டாண்ட இருக்கறவங் களுக்கு தெரிஞ்சிடும். (என, ஆ.ட்ரைவர் பக்கத்தில் நின்று அதை காதுகொடுத்து கேட்டுக் கொண்டிருந்த)

X : தெரிஞ்சா தெரிஞ்சிக்கிட்டும். மொதல்ல அமிக்கினு அது என்னா வேலைன்னு சொல்டா மை...

ரமேஷ் : என்னாங்கப்பா.. ஒரு பொண்ண ஆட்டோல தூக்கி போட்டுனு ரேப் செய்ற தைரியசாலிங்க நீங்க... எவ்ளோ ஆட்டோங்களை திருடி அது ஹிஸ்ட்ரியையே மாத்தி விக்கிற புத்திசாலிங்க நீங்க... என்ன அடிச்சிபோட்டுட்டு இந்த காரை எடுத்து போய் விக்கவா முடியாது உங்களால...? என்னால என்ன செஞ்சிடமுடியும் உங்களை...? (என்று அவர்களின் கவனத்தை திருப்ப)

ஆ.ட்ரைவர் II : (ஒரு தீர்மானத்திற்கு வந்து, X ஸிடம்) என்னடா சொல்ற?

X : சரிஉடு எப்பிடியும் இவன் கார் நம்ம கைலதான இருக்குது.... அனுப்பிடு அவள...!

Y : (ரமேஷின் காலரை இழுத்துபிடித்து) இங்க பார்ரா.. எங்க கிட்ட மாட்னா அவ்ளதான்.. எந்த கொம்பனாலும் தப்பிக்க முடியாது (என்று காலரை விட)

ரமேஷ் : (பேயறைந்தவள் போல் நின்றிருந்த ஸ்டெல்லா விடம்) வேற ஆட்டோவுக்கு காத்துக்கிட்டிருக்காம

ஓடியே போய் வீட்டசச்சேருங்க. போங்க மேடம்.
(சொன்னதே போதும் என்று ஸ்டெல்லா வேகமாக ஓடத்தொடங்கி இருட்டில் மறைந்ததும், ரமேஷ் அந்த நால்வரையும் பார்த்து)

ரமேஷ் : என்னை மன்னிச்சிடுங்கண்ணே... இவ்ளோ ஈஸியா ஒரு பொண்ண விட்டுக்கொடுத்த நீங்க. என் கூட வர லாயக்கில்லாதவங்கண்ணு என் மனசுக்கு படுது...!

ஆ.ட்ரைவர் II : என்னடா சொன்ன.. (என்று ரமேஷ் முகத்தில் ஒரு குத்துவிட ரமேஷ் கீழே விழுந்து எழுந்து நின்றபின் இவன் அவர்களை அடிக்காமலே வெறும் தப்பித்தே அவர்களை வலுவிழக்கச் செய்துவிடுகிறான். ஆனாலும் தப்பிக்கும் போது அவன் வலது முஷ்டியில் சிறிய காயம் ஏற்பட்டு விடுகிறது)

## (சண்டை காட்சி எண்-1)

ரமேஷ் : (வலுவிழந்து விழுந்திருப்பவர்களை பார்த்து) டேய் பசங்களா.. இந்த கார் யார்துன்னு தெரியுமா..ா உங்குளுக்கு.. சையித் இப்ராயிம்முக்கு வலது கையா இருக்கிற படே மியான் கரீம்துடா...! நான்தாண்டா அவுங்குளுக்கு ஸீக்ரெட் ஸர்வீஸ் ட்ரைவர்...! வரட்டுமா..? (என்று காரில் ஏறி வேகமாக புறப்பட, அவர்கள் அசந்து பார்க்க)

-Cut to

SC. No. 17 **நரசிம்மன் வீட்டு வட்டாரம் (மேரி வீட்டு முன்)** Mor / Ext

(ரமேஷ் வந்து மேரி வீட்டின் கதவை தட்டும்போது அவன் வலது உள்ளங் கையில் ஒரு சிறிய கட்டு போடப்பட்டிருக்க கதவை திறந்த ஸ்டெல்லா, ரமேஷை கையில் கட்டுடன் பார்த்து, கிண்டலாக)

ஸ்டெல்லா : என்ன மிஸ்டர்...? சினிமால வர்ற ஹீரோ மாதிரி கையில கட்டுகட்டிட்டு வந்து நிக்கிறீங்க... இப்ப என்ன சொல்லப் போறீங்கன்ன.. (நாடக பாணியில்) உனக்காக அந்த ரௌடிங்க கூட சண்டைபோட்டு உன்ன காப்பாத்தியிருக்கேன்... இப்ப என்னப்பத்தி என்ன நெனைக்கிறீங்க.. (என்று காலரை தூக்கிவிட்ட வாறு நடித்து) அப்படீன்னுதானே கேக்க வந்திருக்கீங்க...?

(ரமேஷ், 'அடியே பைத்தியம்' என்ற பாவனையில் அவளையே பார்த்திருக்க)

ஸ்டெல்லா: ஏன் பொண்ணுங்க விஷயத்தில இந்த ஆம்பளைங்க இப்படி வீக் மைண்டடா இருக்கீங்க...? ஒரு வயசு பொண்ணுக்கு முதல் நாள் ஹெல்ப் செஞ்சிட்டா அடுத்த நாளே அவள் வீட்டு முன்னால ஜொள்ளு விட்டுனு நிக்கிறீங்களே.? எனிவே.. தேங்க்யூ ஃபார் யுவர் ஹெல்ப்

ரமேஷ் : பேசிமுடிச்சாச்சா. சரி இப்ப டைம் சரியா ஏழு. 7.30 க்கு நாம இங்கிருந்து கௌம்பனும்னு சொல்லி யிருக்கு. அந்த விஷயத்தை உங்களுக்கு ஞாபகப் படுத்திட்டு போகத்தான் நான் வந்தது. ஜொள்ளு விடறதுக்கு இல்ல...!

ஸ்டெல்லா : எனக்கும் தெரியும்... நீங்க வந்து ஞாபகப்படுத்த-வேண்டிய அவசியம் எனக்கில்ல...

ரமேஷ் : அப்ப சரி. நான் 7.30 க்கு இங்க வருவேன். கார் ஹாரனை அடிச்சிட்டு 7.32 வரைக்கும் வெய்ட் பண்ணுவேன்... அதுக்கப்புறம் மதரை பிக்அப் செய்ய போய்டுவேன்... (என்று கிளம்ப, ஸ்டெல்லாவும் தன் துப்பட்டாவை உதறியவாறு உள்ளே போக)

-Cut to

SC. No. 18 **நெடுஞ்சாலை** Day / Ext

(நெடுஞ்சாலையில் கார் போய்க்கொண்டிருப்பதை இரண்டு மூன்று முறை காண்கிறோம்.) (பின் சீட்டில் மதர் மற்றும் ஸ்டெல்லா உட்கார்ந்திருக்க ரமேஷ் ட்ரைவ் செய்துகொண்டிருக்க) (ரமேஷ் வலது முஷ்டியின் மேல் பேண்டேஜ்கட்டுக்கு பதிலாக இரண்டு பேண்டெய்ட் போட்டிருப்பதை காண்கிறோம்) (கார் நெடுஞ்சாலையில் போய்க்கொண்டிருக்க)

-Cut to

SC. No. 19 **ஜேம்ஸ் வீடு** Day / Int

(ஜேம்ஸ் தான் திருடி வந்த ஒரு சிறிய விக்ரகத்தை ஒரு பழைய பத்திரிகையில் மடித்து வைக்க முற்படும் சமயம் தற்செயலாக அந்த பத்திரிகையில் விளம்பரம் ஒன்று இவன் கவனத்தை ஈர்க்கிறது. படத்திலுள்ளவைகளை உன்னிப்பாக கவனிக்கிறான். பிறகு அதிலுள்ளதை படிக்க ஆரம்பிக்கிறான், அதில்)

இந்த படங்களில் உள்ள சிறுவர்கள் காணாமல் போய் 17 வருடங்கள் கழிந்துவிட்டன. இவர்கள் அணிந்திருந்த

ஆபரணங்களின் படத்தை இங்கு வெளியிட்டுள்ளோம். பெண் சிறுமியின் வலது தொடையில் சுட்ட காயத்தின் தழும்பு இருக்கும். இந்த சிறுவர்களைப் பற்றிய தகவலாகட்டும், சிறுவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களின் தகவலாகட்டும் யாரேனும் கொடுத்தால் அவர்களுக்கு தக்க சன்மானம் கொடுக்கப்பட்டு, கௌரவிக்கப்படுவார்கள்.

இப்படிக்கு

செந்தில்வராய கவுண்டர், தேவபுரம்,

(விலாசம் கீழே சிறிய எழுத்துக்களில் காணப்படுகிறது)

(இதைப்படித்ததும் ஜேம்ஸ் ஆச்சர்யத்துடன் ஒரு நொடி அப்படியே நின்று, மறுபடியும் விளம்பரத்தில் உள்ள படங்களில் சிறுமிகள் அணியும் வெள்ளியால் செய்யப்பட்டதைபோல் உள்ள இடுப்பு கயிற்றில் அரசன் இலையைப் போன்ற பில்லையை கூர்ந்து கவனிக்கிறான்) (அதற்கு மேலேயே சிறுவர்கள் அணியும் அரைமாவிலை வடிவில் பில்லையுள்ள மற்றொரு இடுப்பு கயிறு படமும் தெரிகிறது)

-Cut to

SC. No. 20 **அடகுக்கடை** Day / Int

(சேட்டு புத்தகத்தில் எழுதிக்கொண்டிருக்க, ஜேம்ஸ் அங்கு வர, அவனைக்கண்ட சேட்டு.)

சேட்டு : ஓ..... ஜேம்ஸ் பாய்.. வாங்கோ... வாங்கோ... என்னா வேண்மா இருக்குது பாய்...?

ஜேம்ஸ் : அன்னிக்கு ஒரு வெள்ளி அர்ணாகயிறு வச்சிட்டு போனேன் இல்ல. அது இப்ப வேணும்.. கணக்கு போட்டு மொத்தம் எவ்ளோ ஆச்சின்னு சொல்லு சேட்...

சேட்டு : அது ஏன் பாய் இவ்ளோ ஜல்தி எட்துக்றீங்கோ...?

ஜேம்ஸ் : உனுக்கு ஏன் அதெல்லாம் சொல்லணும்...? ஒரு நாள் ஜாஸ்தி ஆனா கூட ஒரு மாச வட்டிய புடிச்சிக்கிற ஆளாச்சே நீ.. (என்று சொல்லிக்கொண்டிருக்கையில் ஒரு பெண்மணி பித்தளைக்குடம் ஒன்றுடன் உள்ளே வந்து உட்கார)

சேட்டு : இந்தாப்பா ஜேம்ஸ் இவ்ளோ ஆயிருக்குது பாரு (என்று ஒரு சிறிய சீட்டையும் ப்லாஸ்டிக் கவரில் போட்டு

வைத்திருந்த ஸ்டெல்லாவின் வெள்ளி இ. கயிறையும் கொடுக்க அதை வாங்கிய ஜேம்ஸ் சீட்டை பார்த்து பணத்தை கொடுத்துவிட்டு இ.கயிறு கவரை ஜேபியில் போட.) (சேட்டு அந்த பெண்மணியை பார்க்க)

-Cut to

SC. No. 21 **ஜேம்ஸ் வீடு** Day / Int

இ. கயிற்றை ஜேபிலிருந்து எடுத்த ஜேம்ஸ், விளம்பரத்தை வைத்து இரண்டையும் ஒப்பிட்டு பார்க்க, அவன் முகம் தெளிவடைகிற அதேசமயம் லட்சுமி வருகிறாள்.)

லட்சுமி : என்னா.. ஐயா இன்னிக்கி பேப்பர்ல எதையோ ரொம்ப உசாரா பாத்துணு இருக்காப்போல இருக்குது. (என்றவாறு அவனருகில் போக ஜேம்ஸ் இ. கயிறை பேப்பரால் மூடி அவளை கட்டி அணைத்து ஒரு முத்தமிட்டு)

ஜேம்ஸ் : உசார் தான் லட்சுமி...

லட்சுமி: (அவன் பிடியிலிருந்து விடுபட்டு) அதென்னா சொல்ணோண்றியோ அதை புரியிறா மாதிரி சொல்லு...

ஜேம்ஸ் : விஷயத்தை பூரா தெரிஞ்சிகிட்ட அப்புறம் டீடெய்லா சொல்றேன். இப்ப உன்னால ஒரு ஹெல்ப் ஆகணும் குட்டி....

லட்சுமி : (கேள்விக்குறியுடன் பார்க்கிறாள்)

ஜேம்ஸ் : அப்பிடி ஒண்ணும் பெரிய்ய வேல இல்ல.. நீ ஸ்டெல்லா தொடைய பாக்கணும்...!

லட்சுமி : தூ.. ஸ்டெல்லா தொடைய நான் ஏன் பாக்கணும். ஸ்டெல்லா தொடையும் என் தொடமாதிரிதான் இருக்கும்...!

ஜேம்ஸ் : இல்ல.. அங்கதான் ஒரு வித்யாசம் இருக்குது... அவ சோத்துகாலு தொடையில.. சுட்டகாயத்து தளும்பு இருக்குதான்னு நீபாத்து சொல்லணும்... அவ்ளோதான்...

லட்சுமி : அதனால உனக்கு ஆவப்போறது என்னா..?

ஜேம்ஸ் : ஆவரது ஆவாதது எல்லாத்தையும் அப்புறம் சொல்றேன்.

(என்று சொல்லிக் கொண்டிருக்கையில், வில்லியம்ஸ் சிறுவன் உள்ளே வந்து)

வில்லியம் : ஜேம்ஸ்ண்ணே... ராங் ராஜண்ணா கூப்புடுறாரு... சீக்கிரம் வரணுமாம்...

ஜேம்ஸ் : சரி போலாம் இரு... லட்சுமி நான் கோவா போய்னு இருக்கேன். வர 3-4 நாள் ஆவும்... அதுக்குள்ள நான் சொன்ன விஷயத்தை பாத்து வை. கோவால இருந்து உனுக்கு ஒரு நல்ல கிஃப்ட் வாங்கினுவரேன்... (என்று தன் கிட் பேகை எடுத்துக் கொள்ள)

லட்சுமி : அப்படி என்னா பெரிய கிஃப்ட் வாங்கினு வந்துடுவே

ஜேம்ஸ் : அவளுக்கு அந்த தளும்புமட்டும் இல்லாம இருக்கட்டும்..

வில்லியம் : (குறுக்கிட்டு) எவளுக்கு எந்த தளும்பு அண்ணே...?

ஜேம்ஸ் : உங்காயா தலையில இருக்கிற தளும்பு.. நடறா மூடிக்கினு.. வாய (இருவரும் எக்ஸிட்) (லட்சுமி புன்சிரிப்புடன் நிற்க)

-Cut to

SC. No. 22 **கிராமத்து சர்ச்** Day / Ext

(சர்ச் முன் கார் வந்து நிற்கிறது. அதிலிருந்து ரமேஷ், மதர் மற்றும் ஸ்டெல்லா இறங்கி சர்ச்சை நோக்கி போக)

-Cut to

SC. No. 22.A **கிராமத்து சர்ச்** Day / Int

(மூவரும் சர்ச்சினுள் வந்ததும் மதர் மற்றும் ஸ்டெல்லா 'ஜீஸஸ்' ஐ நோக்கி வணங்குகிறார்கள். அப்போது அங்கிருந்த ஃபாதர் இவர்களிடம் வந்ததும்.)

மதர் : குட் மானிங் ஃபாதர்...

ஃபாதர் : குட் மானிங்.. காட் ப்லெஸ் யூ ஆல்.. (பெயர் அறிமுகங்கள் முடிந்த பின், மதர் ஒரு கவரை ஃபாதரிடம் கொடுக்க ஃபாதர் அதை வாங்கி தன் ஜேபியில் வைத்துக் கொண்டு.)

ஃபாதர் : நீங்க வந்திருப்பதில் ரொம்ப சந்தோஷம்... உங்க இந்த... சர்வீஸை ஜீஸஸ் மெச்சாமல் இருக்கமாட்டார்... எல்லா விஷயத்தையும் ஃபாதர் ஃபோன்ல சொன்னார்...

ஸ்டெல்லா: அந்த மலைப்பிரதேசம் இங்கிருந்து எவ்வளவுதூரம் இருக்கும் ஃபாதர்...?

ஃபாதர் : ஒரு ஐந்தாறு கிலோ மீட்டர் இருக்கும்மா. அங்க போறதுக்கு முன்னாடி. செந்தில்வராய கவுண்டரை மீட் பண்ணணும்...

ஸ்டெல்லா : செந்தில்வராய கவுண்டரா...? ஹிந்து பேரா இருக்கே. அவரை நாம ஏன் மீட் பண்ணணும் ஃபாதர்...?

ஃபாதர் : அவர்தான் இந்த ஊர் சேர்மேன்.. இந்த ஊர் மட்டுமில்லை... சுமார் 10 ஊர் அவர் அன்டர்ல இருக்கும்மா... சுற்றுப்புற கிராமத்தில எல்லாம் ஆஸ்பத்ரிங்க, ஸ்கூலுங்கன்னு கட்டிகொடுத்திருக்கிற பெரிய மனுஷரம்மா அவரு... இருங்க... அவர் வீட்ல இருக்காரான்னு ஃபோன் செஞ்சி தெரிஞ்சிக்கலாம். (என்று சொல்லிக்கொண்டிருக்கையில் வெளி யிலிருந்து கார் சப்தம் கேட்கிறது.)

ஃபாதர் : ஓ... கவுண்டரே வந்துட்டார் போல இருக்கு... வாங்க போய் பார்க்கலாம்... (நால்வரும் வெளியேற.)...

-Cut to

SC. No. 22.B **கிராமத்து சர்ச்** Day / Ext

(சர்ச் முன் கவுண்டர் கார் வந்து நிற்க) (காரிலிருந்து இறங்கிய கவுண்டர் காரை ஓட்டிவந்த கிரணிடம்.)

கவுண்டர் : கிரண்... நீ தோட்டத்துக்கு போய் எவ்வளவு லோடு இளநீர் போச்சின்னு பாத்துட்டு வந்துடுப்பா...

கிரண் : சரி மாமா...

கவுண்டர் : ஒரு வேளை நேரமாகிறதா இருந்தா நீ அங்கயே இருந்து எல்லாத்தையும் சீக்கிரமா முடிச்சிட்டு வா...

கிரண் : சரி மாமா. நான் தோட்டத்துக்கு போறேன் (எக்ஸிட் ஆக) (கவுண்டர் சர்ச்சின் வாசல் பக்கம் திரும்ப, ஃபாதர், மதர், ஸ்டெல்லா, ரமேஷ் சர்ச்சின் வெளியே நின்றிருக்க, கவுண்டர் அவர்களை பார்த்தவாறு ஃபாதருக்கு)

கவுண்டர் : வணக்கம் ஃபாதர். (என்று படி ஏறி அவர்களிடம் போக)

ஃபாதர் : வணக்கம் கவுண்டரய்யா... கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக... உங்களைப் பற்றிதான்

பேசிக்கிட்டிருந்தோம்... நீங்களே வந்துட்டீங்க... உங்களுக்கு ஆயுசு நூறு. (என்று சிரித்தவாறே சொல்ல)

கவுண்டர் : (மூவரையும் பார்த்தவாறு) இவங்க...? (பெயர் அறிமுகங்கள் நடந்து முடிகிறது)

கவுண்டர் : இவங்க வந்திருக்கும் உத்தேசம்....?

மதர் : பக்கத்தில் இறியூர் மலைப்பிரதேசத்தில் ஏழை ஜனங்களை தாக்கி யாரோ அட்டூழியம் செஞ்சிருக்காங்க...

ஸ்டெல்லா : (குறுக்கிட்டு) அங்க எல்லாரையும் பார்த்து என்ன நடந்ததுன்னு தெரிஞ்சிக்கிட்டு போகத்தான் வந்திருக்கோம்...

கவுண்டர் : ரொம்ப நல்லதும்மா ... (என்று கூறிவிட்டு. ஃபாதரை நோக்கி) அதைப்பத்திதான் உங்ககிட்ட பேசிட்டு போகலாம்னு நான் வந்தேன் ஃபாதர்... இவங்க வந்திருக்கிறது ரொம்ப நல்லதா போச்சி...

ஃபாதர் : இவங்க இன்னிக்கு உங்க கெஸ்ட் ஹௌஸ்ல தங்கலாமில்லியா..?

கவுண்டர் : இதென்னங்க ஃபாதர் புதுசா கேட்டுக்கிட்டிருக்கீங்க.. இந்த ஊருக்கு வர்ற இப்படிப்பட்டவங்களுக்காகத்தானே நம்ம வீட்டு பக்கத்திலேயே கெஸ்ட் ஹௌஸ் கட்டியிருக்கிறது. கிரண் தோட்டத்துக்கு போயிருக்கான். அவன் வந்ததும் இவங்க லக்கேஜை கெஸ்ட் ஹௌஸ்ல வச்சிட்டு.. காஃபி சாப்டுட்டு உடனே மலைப் பிரதேசத்துக்கு போயிடுவோம்.

மதர் : நாங்க கார்ல தானே வந்திருக்கோம்... நம்ம கார்லயே போய்வரலாம் இல்லீங்களா?

கவுண்டர் : அப்ப சரி, புறப்படலாம்.. வரட்டுங்களா ஃபாதர்...?

ஃபாதர் : காட் ப்லெஸ்.. போய் வாங்க. (மதர், ஸ்டெல்லா, ரமேஷ்) வர்றோம் ஃபாதர்..

ஃபாதர் : கர்த்தர் உங்களுடன் இருப்பார். போய் வாங்க. (நால்வரும் விடைபெற்று வெளியேற)

–Cut to

SC. No. 23 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(கெஸ்ட் ஹௌஸ் முன் ரமேஷ் காரை நிறுத்தியதும், லுங்கி சட்டையுடன், லட்சுமி நாராயணன் (ல.நா) வேலை ஆள், நபும்சகன் (அலி) ஓடி வருகிறான். காரிலிருந்து இறங்கிய கவுண்டர்)

கவுண்டர் : லட்சுமி நாராயணா... இவங்க லக்கேஜை எல்லாம் உள்ளவை... (மதரை பார்த்து) நீங்க குளிர்ச்சியா முகம் கை காலெல்லாம் கழுவிட்டு ரெடியா இருங்க... காஃபி வரும்... காஃபி சாப்டுட்டு உடனே புறப்படலாம். இறியூர் போய் வந்ததும்.. ராத்திரிக்கு நம்ம வீட்டுலதான் உங்களுக்கு சாப்பாடு...

மதர் : உங்களுக்கு ஏன் வீண் சிரமம்...?

கவுண்டர் : எங்க ஊருக்கு வந்திருக்கிறவங்களுக்கு நாங்க இவ்வளவு கூட செய்யலேன்னா எப்படிங்க மதர்... சரி... நான் வீட்டு வரைக்கும் போய்ட்டுவந்துடறேன்... (எக்ஸிட்) (மற்றவர்கள் கெஸ்ட்ஹௌஸ் உள் போக.).

-Cut to

SC. No. 23.A **கெஸ்ட் ஹௌஸ் (வெராண்டா)** Day / Int

(அனைவரும் வெராண்டாவுக்கு வந்ததும் ல.நா. ரமேஷிடம்)

ல. நா : பாருங்க நீங்க ஆம்பள... இந்த ரூம்ல இருங்க. அவங்க அந்த ரூம்ல இருக்கட்டும்....

ரமேஷ் : அப்படியே ஆகட்டும் நாராயணா....

ல. நா : பாருங்க சார்.. தயவு செஞ்சி நாரதர்போல நாராயணா நாராயணான்னு கூட்பிடாதீங்க... அன்பா லட்சுமீன்னு கூப்பிடுங்க... என்னக்கா (என்று ஸ்டெல்லாவை பார்க்க)

ஸ்டெல்லா : கரெக்ட் லட்சுமி...

ல. நா : ஆ.. ங் அப்படி கூப்புடுங்க... உள்ள.. பாத்ரூம்ல நல்லா தண்ணி வரும்... ஒண்ணும் கவலைபடாதீங்க... நீங்க தயார் ஆயிடுங்க. நான் காப்பி எடுத்துட்டு வரேன்...

ஸ்டெல்லா : ஆ... ம்... லட்சுமி.. ராத்திரி சாப்பாடு அவங்க வீட்ல தான்னு கவுண்டர் சார் சொன்னாரு.. அவரு வெஜிடேரியனா.. நான்வெஜிடேரியனா?

மதர் : என்னம்மா ஸ்டெல்லா...?

ஸ்டெல்லா : சும்மா கேட்டுவச்சேன் மதர்...!

ல. நா : எங்க மொதலாளி ஐயா கவுண்டரே ஆனாலும் மீன் கோழின்னு எதுவும் கெடயாது... இவங்க அப்பா காலத்தில சாப்பிட்டிருக்கலாம். எனக்கு புத்தி தெரிஞ்சு வீட்ல கறி சமச்சதை பாத்ததே இல்லக்கா... ஆனா மத்தவங்க விஷயத்துல தலையிடமாட்டாரு...

மதர் : அதைவிடு லட்சுமி. நீ போய் காஃபி எடுத்துட்டு வந்துடு நாங்க சீக்கிரமா கிளம்பியாகணும்....

ல. நா : சரிம்மா. அஞ்சு நிமிஷத்துல கொண்டாந்துடறேன் (என்று வெளியேற, புன்சிரிப்புடன் இவர்கள் அவனையே பார்த்திருக்க.)

-Cut to

SC. No. 24 மலைப்பிரதேச பாதை Day / Ext

(காரை ரமேஷ் ஓட்ட, கவுண்டர் முன்ஸீட்டிலும் மதர், ஸ்டெல்லா பின்ஸீட்டிலும் இருக்க, காரின் 2-3 பாஸிங் ஷாட்ஸ் ஆனதும்).

கவுண்டர் : நான் மலையில நடந்ததை கேள்விப்பட்டேன் மதர்... ஒரு முக்ய விஷயமா சேலத்துக்கு அர்ஜன்டா போக வேண்டியிருந்ததால மேனேஜர் கிட்ட இந்த விஷயத்தை கவனிக்க சொல்லிட்[illegible] போயிட்டேன்...

ஸ்டெல்லா : நீங்க என்னன்னா சொல்லுங்க சார்... இங்க நடந்திருக்கிறது ரொம்ப அன்ஸிவிலைஸ்ட் அக்ட்...!

கவுண்டர் : கண்டிப்பாம்மா... மனுஷனுங்க செய்ற வேலையா செஞ்சிருக்காங்க.. மிருகத்தனமா நடந்திருக்காங்க...

மதர் : எல்லாரையும் குறை சொல்ல முடியாது... இது யாரோட வேலைன்னு அங்க போய் தெரிஞ்சிக்கலாம் விடுங்க...

கவுண்டர் : அது என்னமோ சரிதான் மதர்.... எதையும் சரியா விசாரிக்கணும்...

மதர் : அக்கம் பக்கத்து ஊருங்கள்ள.. ஸ்கூல், ஆஸ்பத்திரி எல்லாம் நீங்க கட்டி இருக்கிறதா ஃபாதர் சொன்னார். அப்ப உங்க ஆஸ்பத்திரியில இருந்து மருந்து கெடைக்கும்னு ஆச்சு...!

கவுண்டர்: கண்டிப்பா மதர்... இப்ப எங்க ஊர்ல இருக்கிற ஆஸ்பத்திரியிலதான் எனக்கு ஒரு சின்ன தொந்தரவு...

ஸ்டெல்லா : என்ன சார் உங்களுக்குபோய் அப்படிப்பட்ட தொந்தரவு?

கவுண்டர் : ஆமாம்மா... இப்ப நம்ம ஆஸ்பத்திரியில இருக்கிற வயசான டாக்டருக்கு உதவியா இருந்த டாக்டரும்.. காம்பவுண்டர் வேலையில இருந்து.. எல்லா வேலையையும் கவனிச்சிக்கிட்டிருந்த நர்ஸும்.. ஒண்ணா சென்னைக்கு போய் வேலைல சேர்ந்துட்டாங்க. பாவம் ரெண்டு மாசமா நம்ம டாக்டர் ஒருத்தரே ரொம்ப கஷ்டப்பட்டுக்- கிட்டிருக்கார்... ஜனங்களுக்கு சரியா சேவை செய்ய முடியலே...

மதர் : உங்க பக்கத்துல இருக்காரே ரமேஷ் அவர் பி.ஃபார்மா முடிச்சிருக்காரு... சரியான வேலை கெடைக்காததால எங்க ஃபாதர் கிட்ட ட்ரைவரா வேலை செஞ்சுகிட்டு இருக்காரு...

கவுண்டர் : அப்படியா. ரொம்ப சந்தோஷம்... நான் உன்னை வெறும் டிரைவர்ன்னுதான் இருந்தேம்பா...

ரமேஷ் : பரவாயில்லிங்க சார்...

கவுண்டர் : அப்படீன்னா நீங்க ஏன் நம்ம ஆஸ்பத்திரியில வேலை செய்யக் கூடாது...? இப்ப நீங்க வந்து சேர்ந்தீங்கண்ணா ரொம்ப உதவியா இருக்கும் ரமேஷ்...!

ரமேஷ் : ஃபாதர் கிட்ட ஒரு வார்த்தை சொல்லிட்டு,...

மதர் : (குறுக்கிட்டு) நல்ல வேலை கெடச்சா நீ போகலாம்னு ஃபாதரே சொல்லியிருக்காரே, அவர்கிட்ட நான் பேசிக்கிறேன்... நீ நாளைக்கே வேலைல சேர்ந்துடு.

ரமேஷ் : அப்படியே ஆகட்டும் மதர்...

கவுண்டர் : (ஸ்டெல்லாவை காண்பித்து) இந்த குழந்த மதர்...? (ஸ்டெல்லா மெதுவாக முகத்தை திருப்பிக்கொள்ள)

மதர் : ஸ்டெல்லாவா...! பி.எஸ்ஸி முடிச்சி நர்ஸ் ட்ரெய்னிங் முடிச்சிருக்கா.. பியானோ க்லாஸ் எடுக்கறா...

கவுண்டர் : அப்படியா... நம்ம வீட்டுல கூட பியானோ இருக்கும்மா.. அதிருக்கட்டும்.. இந்த குழந்த ஏன் நம்ம ஆஸ்பத்திரியில சேர்ந்து எங்களுக்கு உதவியா இருக்க கூடாது..?

ஸ்டெல்லா : மதர்... நான் க்ரிஸ்டியன் கம்யூனிடி நடத்துர ஆஸ்பத்திரியிலதான் வேலை செய்யறதுன்னு தீர்மானிச்சிருக்கேன்...

கவுண்டர்: ஜனங்க சேவைய.. ஜீஸஸின் சேவையா நெனச்சிக்கிட்டு ஏம்மா செய்யக்கூடாது...?

மதர் : அதுவும் ஞாயம்தான். எங்களுக்கு இவ்வளவெல்லாம் ஹெல்ப் செய்யற உங்களுக்கு நாங்க இந்த ஊர்ல இருக்கிறவரைக்கும் டெய்லி காலைல ஒரு ரெண்டு மணி நேரம்.. நம்ம ஸ்டெல்லா உங்க ஆஸ்பத்திரியில வந்து வேலை செய்வா விடுங்க... என்னம்மா ஸ்டெல்லா..?

ஸ்டெல்லா : (மனமில்லாமல் ஏற்றுக்கொண்டு) சரிங்க மதர்...

-Cut to

SC. No. 25 **மலைப்பிரதேசம்** Day / Ext

(மலைப்பிரதேசத்தில் கார் வர, ஒரு குடிசை முன் கை கால்களில் கட்டுகளுடன் உட்கார்ந்திருந்த 4-5 பேர் காரை கண்டு எழுந்து நிற்க கார் அவர்களிடம் வந்து நிற்க)

(மதர், ஸ்டெல்லா, ரமேஷ், கவுண்டர் காரிலிருந்து இறங்க, வேறு திசையிலிருந்து 3 பேர் கவுண்டரிடம் வந்து)

பரமன் : (கை கூப்பி) கும்பிடரேன்ய்யா...

கவுண்டர் : இங்க ஒரு தப்பு நடந்திருக்கு.. அதை செஞ்சவங்க யாரு?

போஜன் : அப்பிடி எதுவுமில்லீங்க.. மலையில இருக்கிறவங்களுக்கு ரெண்டு பேச்சு புத்தி சொன்னோம். அவ்வளவுதானுங்க ஐயா...

கவுண்டர் : வெறும் வாயாலதான் புத்தி சொன்னீங்களா..?

பஸவன் : கிரிஸ்தான் ஜாதிக்கு சேராதீங்கடான்னா.. எங்க இஷ்டம்னு சொன்னானுங்க... அதுக்குத்தான் ஆளுக்கு ரெண்டு போடறாமாதிரி ஆயிடுச்சிங்க ஐயா...

கவுண்டர் : வெக்கமா இல்ல இப்படி சொல்ல.. இப்படி செஞ்சதால உங்களால என்ன சாதிக்க முடிஞ்சது...? எங்க இருக்காங்க அடிபட்ட மத்தவங்க எல்லாம்.?

பரமன் : அதோ அந்த சர்ச் கட்ற எடத்துல இருக்காங்க... (என்றதும் மதரும் ரமேஷும் அந்தபக்கம் போக.)

கவுண்டர் : அப்படீன்னா அவங்கள ஒதுக்கி வச்சிருக்கீங்களா.?

பஸவன் : பின்ன என்ன செய்யரதுங்கய்யா? நம்ம மதத்தை உட்டுட்ட அப்புறம்.. நம்ம எடத்துல இருக்க உடலாமாங்க ஐயா.?

கவுண்டர் : மூடு வாயை... இப்ப நீங்க செஞ்சிருக்கிற காரியத்தால இந்து தர்மத்துக்கே தலைக்குனிவு...! தர்மத்தை பத்தி என்ன தெரிஞ்சி வச்சிருக்கீங்க? ஒவ்வொரு மனுஷனுக்கும் சுதந்திரத்த கொடுத்திருக்கிற தர்மந்தான் இந்து தர்மம்! கடந்த காலத்தில எவ்வளவோ பேர் சாமிங்களை சீ.. தூன்னு துப்பி செருப்பு மாலை கூட போட்டிருக்காங்க... அப்படிப் பட்டவங்களை... இந்து தர்மத்தை பின்பற்றினவங்க என்ன செஞ்சிட்டாங்க..? அடிச்சாங்களா, ஒதச்சாங் களா, கலவரத்தை ஏற்படுத்தினாங்களா? இல்லியே. கடவுளைப்பத்தி தெரியாதவங்கன்னு சும்மா விட்டுட்டாங்க. அப்பேர்பட்ட தெளிவு இருக்கணும்...! இந்துங்கன்னு சொல்லிக்கிட்டு மனுஷனுங்க மாதிரியா நடந்திருக்கீங்க.?

போஜன் : (சொல்லலாமா வேண்டாமா என்ற பாவனையில்) ஐயா.. இப்படி சொல்றேன்னு ஐயா தப்பா எடுத்துக்கக் கூடாது. ஐயாவும் இந்துவா இருந்து அவங்க செஞ்சது சரின்னு.. அவங்கபக்கமாவே பேசறீங்களே எஜமான்...?

கவுண்டர் : அவுங்க இப்படி ஆகறதுக்கு காரணமே நீங்கதான்... புத்தி இருந்தா நல்லா யோசிச்சிபாரு... புரியும்! இப்படி நீங்க நடந்துக்கிட்டதுக்கு பதில் சொல்லிதான் ஆகணும். (அந்த மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள.)

ஸ்டெல்லா : பாருங்க... நான் உங்களை விட ரொம்ப சின்னவள் தான்... ஆனாலும் உங்களை நான் ஒண்ணு கேட்டு தான் ஆகணும்... அவங்கெல்லாம் காட்டுல வசிக் கிறாங்-கன்றதுக்காக காட்டு பிராணிங்க மாதிரியே வசிக்கணுமா..? சொல்லுங்க.. அவங்க கிறிஸ்தவ மதத்தில சேர்ந்தா சுத்தமா இருக்க கத்துக்குவாங்க.. பள்ளிக்கூடம் போய் நாலு எழுத்தை கத்துக்குவாங்க.. நாகரீகத்தை கத்துக்கிட்டு ஒரு நல்ல பிரஜையா வாழ்வாங்க. இவ்வளவெல்லாம் செய்யற கிறிஸ்தவ மதத்துல சேர்ரத்துல என்ன தப்பு? போகட்டும். இவ்வளவு காலமா காட்டுல வசிக்கிற அவங்க வாழ்க்கை தரத்தை உயர்த்தாம காட்டு ஜனங்களாகவே விட்டிருக்கீங்களே.. இதெல்லாம் சரியா? யோசிச்சு பாருங்க.!

(பேச்சு சப்தம் குறைந்தவாறு தொடர காட்சி dissolve ஆகிறது.)

- Dissolve

SC. No. 25.A **மலைப்பிரதேசம் (H.W.O)** Day / Ext

**(வேறு இடம்)**

(மதர் மற்றும் ரமேஷ் தாக்கப்பட்டவர்களுக்கு பழம், ப்ரெட், பன் பகிர்ந்து கொண்டிருக்க)

மதர் : உங்களுக்கெல்லாம் யார் மருந்துபோட்டு கட்டு கட்டியது?

x : எங்க கவுண்டரய்யா ஆஸ்பத்திரியில இருக்கிற வைத்தியர்தான்...

Y : நாங்க எந்த மதத்துல மாறினாலும் கவுண்டரய்யா எங்குளுக்கு கடவுள் மாதிரிங்கம்மா...

ரமேஷ் : சரி. நீங்கள்ளாம் போய் ஓய்வெடுத்துக்குங்க...

X : சரிங்கய்யா...

(ரமேஷ், மதர் புறப்பட)

- Fade out

SC. No. 26 **கவுண்டர் பங்களா** Night / Int

(ஒரு சோஃபாவில் ரேகா உட்கார்ந்து புத்தகத்தை பார்த்தவாறு இருக்க, கிரண் சுவர் ஓரம் டெலிஃபோன் இருக்கும் டேபிளுக்கு பக்கத்தில் உள்ள சோஃபாவில் உட்கார்ந்து டெலிஃபோன் டைரக்டரியை புரட்டியவாறு இருக்க, கவுண்டர் ஒரு அறையிலிருந்து வெளியேவர அப்போது ல.நா.வுடன் மதர், ஸ்டெல்லா, ரமேஷ் உள்ளே வருகிறார்கள் அவர்களை கண்ட கவுண்டர்)

கவுண்டர் : வாங்க மதர்... வாம்மா ஸ்டெல்லா.... வாப்பா ரமேஷ். உட்காருங்க... (என்றதும் அவர்கள் மூவரும் பெரிய சோஃபாவில் உட்காருகிறார்கள். அதே சமயம் கிரண் அங்கு வந்து ரேகா உட்கார்ந்திருக்கும் சோஃபாவில் உட்கார கவுண்டர் சிறிய சோஃபாவில் உட்கார)

(கவுண்டர் வந்தவர்களை, ரேகா மற்றும் கிரணுக்கு அறிமுகம் செய்து வைக்கிறார்.).

(அப்போது கௌரி பாருவுடன் வெளியிலிருந்து அங்கு வர, அனைவரும் எழுந்து நிற்க)

கவுண்டர் : (கௌரியிடம்) எங்கம்மா போய்வரீங்க.....?

கௌரி : கோயிலுக்கண்ணா...!

கவுண்டர் : (மதர், ஸ்டெல்லா ரமேஷுக்கு கௌரியை காட்டி) இவங்க என் தங்கை கௌரி (என, அனைவரும் கௌரிக்கு வணக்கம் சொல்ல)

கவுண்டர் : போம்மா பாருவ ரூம்ல படுக்க வச்சிட்டு வாம்மா.. (கௌரி, பாரு எக்ஸிட் ஆக) (அனைவரும் உட்கார்ந்த வுடனே).

ஸ்டெல்லா : (சட்டென்று) உங்க தங்கை கூட இருந்தவங்களை ஏன் சார் எங்களுக்கு இன்ட்ரொட்யூஸ் பண்ணல...?

கவுண்டர் : இப்ப அதை பத்தித்தான் உங்ககிட்ட சொல்ல இருந்தேம்மா... அவங்கதான் என் மனைவி பார்வதி அவளுக்கு மன நிலை சரியில்லேம்மா இன்ட்ரொட்யூஸ் பண்ணாலும் பிரயோஜனம் இருக்காதும்மா.

ஸ்டெல்லா : ஏன் சார் அப்படி....? என்ன ஆச்சிங்க சார்...?

கவுண்டர் : அது ஒரு பெரிய கதைம்மா...

பதினேழு வருஷங்களுக்கு முன்ன என் மகள் கஸ்தூரியும்... கௌரி மகன் ரமேஷும் காணாம போய்ட்டாங்க. (அப்பொழுது அங்கு வந்த கௌரி)

கௌரி : ஆமாம்மா எங்க ஊர் திருவிழாவில்தான்...! (என்று சோபாவில் உட்கார) ஃப்ளேஷ்பே(அ)க் ஆரம்ப-மாகிறது)

– Dissolve

SC. No. 26.A கவுண்டர் பங்களா Day / Int

ஃப்ளேஷ் பே(அ)க் ஆரம்பம்

17 வருடங்களுக்கு முன்பு

(ஒரு ஜமீன்தார் வீட்டின் களைகட்டிய விழாக்கோல சூழ்நிலை. சுற்றத்தார் சிரிப்பு அலைகளின் சத்தம் கேட்டவண்ணம் இருக்கிறது. பார்வதி, கௌரி மற்றும் 4-5 நடுத்தர வயது பெண்கள் விலையுயர்ந்த பட்டு புடவைகளையும் நகைகளையும் அணிந்தவண்ணம் ஹாலிலிருந்து ஒரு பெரிய அறைக்குள் செல்ல.)

-Cut to

SC. No. 26.B கவுண்டர் பங்களா (பெரிய அறை) Day / Int

(பார்வதி, கௌரி, 4-5 பெண்கள் டீபாயை சுற்றி சோபாவில் அமர்கிறார்கள். டீபாய் மீது சற்றே பெரிய ஒரு அழகான வட்டத்தட்டில் வெற்றிலைகள் அழகாக அடுக்கப்பட்டு பலவித பாக்கு மற்றும் சுண்ணாம்புடன் இருக்க, அங்கு வந்த பெண்மணிகள் வெற்றிலை

பாக்கு போட்டுக் கொண்டிருக்கையில், பார்வதி டீபாய் மேலிருந்த டம்ளரிலிருந்து தண்ணீர் குடிக்க, தண்ணீர் தலைக்கு ஏறுகிறது.) (கௌரி பதறிப் போய் பார்வதி கையிலிருந்த டம்ளரை வாங்கி டீபாய் மீது வைத்துவிட்டு அவள் தலையை நிதானமாக தட்டிக் கொடுத்து, பாருவின் முதுகை தடவிவிட, அதைக் கண்ட முதல் பெண்)

முதல் பெண் :நாத்தனாருங்கன்னா இப்படி இல்ல இருக்கணும்... நம்ம வீட்லயும் இருக்குங்களே...

இரண்டாம் பெண் : போச்சிடீ.. வச்சியா உன் கண்ண.. (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் 5 வருட கஸ்தூரி தன் தாய் பார்வதி மடியிலும் 7 வருட ரமேஷ் தன் தாய் கௌரி மடியிலும் ஓடிவந்து உட்காருகிறார்கள். அப்போது முதல் பெண் கஸ்தூரியை அழைத்து, அன்பாக அவள் கன்னத்தைத் தடவி)

முதல் பெண் : இவளுக்கு ஊட்டி.. கான்வென்ட்ல படிக்கிற என் பையன் பிரதீப்தான் சரியான ஜோடி...! (என்று சொன்னதும், சட்டென்று பாரு)

பாரு : என்னையும் கௌரியையும் எப்படி யாராலும் பிரிக்க முடியாதோ அப்படித்தான் இவங்களும்....

முதல் பெண்: அப்படீன்னா இப்பவே இங்கியே எங்க முன்னாலயே நிச்சயம் பண்ணிடு பாக்கலாம்....

பாரு : (ஆவேசத்துடன்) ஆமாம். இப்பவே அது நடந்துடட்டும் (என்றவள், தட்டிலிருந்து 7-8 வெற்றிலையை எடுத்து அதன் மீது கொஞ்சம் கொட்டை பாக்கை வைத்து)

பாரு : இந்தா கௌரி... என் மகள் கஸ்தூரிக்கு உன் மகன் ரமேஷ்தான் மாப்பிள்ளை... உனக்கு சம்மதம்தானே.?

(என்றதும், கௌரி தாம்பூலத்தை வாங்கிக்கொண்டு தானும் வெற்றிலை பாக்கை எடுத்து பாருவிடம் கொடுத்து)

கௌரி : எப்பவுமே... உங்க இஷ்டம்தான் அண்ணி என் இஷ்டமும்.. (என்று வெற்றிலைபாக்கு மாற்றிக் கொள்ள)

முதல் பெண் :என்ன இவ்வளவுதானா? பெரிய ஜமீன்தார் ஃபேமிலி.. இவ்வளவு சிம்பிளா வெறும் வெற்றிலை பாக்கோடு முடிச்சிட்டீங்களே.?

பாரு : ரமேஷா.. வா இங்க... (என்று ரமேஷை அழைத்து தன் கழுத்திலிருந்த ஒரு அழகான பெரிய தடித்த செய்னை எடுத்து ரமேஷ் கழுத்தில் போட கௌரியும் கஸ்தூரியை அழைத்து தன் கழுத்திலிருந்த ஒரு பெரிய நெக்லஸை கஸ்தூரி கழுத்துக்கு போட)

பாரு : இன்னிக்கு ராத்திரி விருந்தை நிச்சயதாம்பூலத்துக்கும் சேர்த்து ஜோரா நடத்திடலாம்...! (என்று சொல்லிக் கொண்டிருக்க கஸ்தூரியும் ரமேஷும் எழுந்து வெளியே ஓட கவுண்டர் உள்ளே வர எல்லோரும் எழுந்து நிற்க)

கவுண்டர் : என்னம்மா கௌரி.. இன்னிக்கு நம்ம ஊர் திருவிழாவில நம்ம வீட்டு பூஜை இருக்குதேம்மா. பாரு....பூஜைக்கு தேவையானதையெல்லாம் தயார் செஞ்சிட்டியா...?

முதல் பெண் : (குறுக்கிட்டு) அதுக்கு முன்ன உங்க மகள் கஸ்தூரிக்கும் கௌரி மகன் ரமேஷுக்கும் நிச்சயதாம்பூலமே முடிஞ்சிடிச்சே...! இனிமே உங்க மகளுக்கு உங்களால வேற மாப்பிள்ளைய தேடமுடியாது...!

கவுண்டர் : என்னம்மா கௌரி.. இவங்க என்ன சொல்றாங்க.? (பாருவும் கௌரியும் தலைகுனிந்து நின்று)

கௌரி : எங்களை மன்னிச்சிடுங்கண்ணா.. நாங்க தாம்பூலத்தை மாத்திக்கிட்டோம்... நம்ம பிள்ளைங்க நம்மகிட்ட யிருந்து தூரமாகக்கூடாதுங்கற ஒரே உத்தேசத்துல இப்படி செஞ்சிட்டோம்... (என்றதும், கவுண்டர் கோபத்தால், இப்போது ஏதோ அசம்பாவிதம் நடக்கப்போகிறது என்ற எதிர்பார்ப்பில் எல்லா பெண்களும் அவரையே பார்த்துக் கொண்டு நிற்க, கவுண்டர் சிரித்தவாறு)

கவுண்டர் : பாருவும் கௌரியும் எனக்கு இரண்டு கண்கள் மாதிரி. ஊருக்கே உதாரணமா நடக்கிற இவங்க.. எதை செஞ்சாலும் சரியாத்தான் செஞ்சிருப்பாங்க... (எல்லா பெண்களும் ஏமாற்றத்துடன் உட்கார)

கவுண்டர் : அம்மா கௌரி.. நான் தோட்டத்துக்குப்போய் இன்னும் அரை மணிநேரத்துல வந்துடறேன்... (என்று சொல்லி வெளியேற)

-Cut to

## SC. No. 26.C கவுண்டர் பங்களா (ஹால்)(H.W.O.) Day / Int

ஹாலில் பாரு, கௌரி, கவுண்டர், சுற்றத்தார் அனைவரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்க, கமான் வண்டிக்காரன் சாட்டைக்கோலை இடுப்பில் சொருகிக்கொண்டு ஓடி வந்து கலவரத்துடன்)

வண்டிக்காரன் : எஜமான் கஸ்தூரி அம்மாவும் ரமேஷ் ஐயாவும் திருவிழால பலூன் வேணும்னு அடம் பிடிச்சாங்க...! நீங்க இங்கயே இருங்க நான் போய் வாங்கிட்டு வரேன்னு...

கவுண்டர் : (கோபத்துடன் குறுக்கிட்டு) பிள்ளைங்க எங்கடா முட்டாள்...? (என்று எழ)

வண்டிக்காரன் : (பயத்தால் நடுங்கியவாறு) பலூன் வாங்கிட்டு வர்றதுக்குள்ள எந்தப்பக்கம் போனாங்கண்ணே தெரியலீங்க எஜமான்... திருவிழா முழுசும் தேடிட்டேன் எஜமான்... கெடக்கலீங்க எஜமான்... (என்றதும் உட்கார்ந்திருந்த பார்வதி எழுந்து நின்று வேதனை-யோடு 'கஸ்தூரி' என்று கத்தியவாறு மூர்ச்சித்து கீழே விழ.)

-Dissolve

## SC. No. 26.D கவுண்டர் பங்களா (ஹால்) ஃப்ளேஷ் பே(அ)க் முடிந்ததும் Night / Int

(எல்லோரும் மௌனமாக உட்கார்ந்திருக்க)

கவுண்டர் : அன்னிக்கு போன நினைவு பாருவுக்கு இன்னும் திரும்பி வரலேம்மா... சித்தபிரமை பிடித்தவளாவே இருக்கா... நாங்க பார்க்காத டாக்டரில்ல... வேண்டாத தெய்வங்களில்ல... அன்னையிலிருந்து என் தங்கை கௌரிதாம்மா இவளுக்கு எல்லாமா இருந்து பார்த்து வர்றாள்.

ஸ்டெல்லா : பாவம் சார். ஜீஸஸ் மேல நம்பிக்கை வையுங்க... உங்களுக்கு நல்லதாகும்...!

கவுண்டர்: ஆமாம்மா.. சரி இன்னும் நேரமாச்சு எல்லாரும் சாப்பிடபோலாமே..

ஸ்டெல்லா: சார்... உங்க வீட்ல பியானோ இருக்குன்னு சொன்னீங்களே.. அதை நான் பார்க்கலாமா...?

கவுண்டர் : தாராளமா பாரு... வாம்மா.. அதுல யாரும் வாசிக்கிறதில்ல. சும்மா சுத்தம் செஞ்சி வக்கிறதோடு சரி.. (என்று ஹாலின் ஒரு மூலையில் இருந்த பியானோவிடம் ஸ்டெல்லாவை அழைத்துச் சென்றதும், ஸ்டெல்லா 'C' 'கார்ட்' ஐ அழுத்தியதும் எழுந்த ஓசை, தன் அறையில் உட்கார்ந்திருந்த பாருவை ஈர்க்க, பாரு ஹாலுக்கு வந்து பியானோவிடம் போக, உட்கார்ந்திருந்த அனைவரும் ஆச்சர்யத்தோடு பாருவை பின் தொடர்கிறார்கள்.) (ஸ்டெல்லா 'C' ஸ்கேலில் சிறுவர்கள் பாட்டை வாசிக்க ஆரம்பிக்க)

(அங்கு வந்த பாரு ஸ்டெல்லாவின் கன்னத்தை அன்பாக தடவிக்கொடுக்க, பாருவின் செயலில் ஸ்டெல்லா ஒன்றும் புரியாது உட்கார்ந்திருக்க, கவுண்டரும் கௌரியும் ஆச்சர்யத்தில் மூழ்கியிருக்க,)

கவுண்டர் : கௌரீ.. இதென்னம்மா ஆச்சர்யம்... பதினேழு வருஷமா எந்த ஒரு பெரிய மாறுதலும் இல்லாம, யாருகிட்டயும் போகாம இருந்த உங்க அண்ணி.. இன்னிக்கு இந்த குழந்த வாசிக்கிறதை கேட்டு கிட்ட வந்து கன்னத்தையும் தடவிக்கொடுத்துட்டாளேம்மா...!

கௌரி : எனக்கும் அதாண்ணா ஆச்சர்யமா இருக்கு..! (என்று பாருவின் கையை பிடித்துக்கொள்ள)

ஸ்டெல்லா : நான் மொதல்லியே சொல்லலியா சார்... ஜீஸஸ்ஸை நம்பினா நல்லதாகும்னு. (என்று எழுந்து நிற்க)

ரமேஷ் : மேடம் ப்ளீஸ்.. பேச்சு பேச்சுக்கு ஜீஸஸ் பேர சொல்றது தப்பில்லை.. ஆனா தயவுசெஞ்சி இனிமே சூழ்நிலைய புரிஞ்சிகிட்டு சொல்லுங்க...

(ஸ்டெல்லா ரமேஷை பார்த்து கோபமாக முறைக்க)

கவுண்டர் : (ஸ்டெல்லா கவனத்தை திருப்பும் வகையில்) அம்மா ஸ்டெல்லா பியானோவை வாசிச்சிக்கிட்டே ஒரு பாட்டு பாடும்மா..

ஸ்டெல்லா : இல்லசார் உங்க பொண்ணு ரேகா பாடட்டும் நான் கூட வாசிக்கிறேன்...

ரேகா : ஐயய்யோ.. பாடறது எனக்கு வரவே வராத ஒண்ணுங்க.. தயவு செஞ்சி என்னை கட்டாயப்படுத்தாதீங்க...

கவுண்டர் : ரமேஷ் நீயே ஒரு பாட்டு பாடேம்பா..

ரமேஷ் : நான் பாடுற பாட்டுக்கு பியானோவை சரியா வாசிக்கணும் சார்... பாவம் இந்த மேடம் கைல...

ஸ்டெல்லா : (குறுக்கிட்டு) பாருங்க மிஸ்டர்.. அது எந்த இண்டியன் ராகத்துல பாடறீங்களோ பாடுங்க.. நான் உங்க கூட வாசிச்சு காட்டறேன். இட்ஸ் அ சேலன்ஞ் (என்று வாசிக்க உட்கார)

(ரமேஷ் கஷ்டமான ராகத்தில் பாடுவான். ஆனாலும் அதற்கு சரியாக ஸ்டெல்லா வாசிக்கிறாள்.)

## பாடல் - 2

பாட்டு முடிந்ததும் எல்லோரும் குஷியாக கை தட்டுகிறார்கள்.
(பாருவின் முகத்தில் ஒரு மாற்றம் தெரிகிறது)

கவுண்டர் : ரொம்ப நல்லா வாசிச்சேம்மா ஸ்டெல்லா.. ரமேஷ் நீயும் ரொம்ப நல்லா பாடினேப்பா.... ரெண்டுபேருக்கும் ஐம்பது ஐம்பது மார்க்கு... சரி வாங்க சாப்பிட போகலாம். (எல்லோரும் கிளம்ப)

- ஃபேட் அவ்ட்

## SC. No. 27 கிராமத்து ஹாஸ்பிடல் Day / Int

(ஒரு நோயாளிக்கு டாக்டர் மருந்து மாத்திரை கொடுத்தனுப்புவதற்கும் கவுண்டர், மதர், ஸ்டெல்லா ரமேஷ் உள்ளே வருவதற்கும் சரியாக இருக்க)

கவுண்டர் : வணக்கம்... டாக்டருக்கு...

டாக்டர் : வணக்கம் வணக்கம்.. நான் உங்களை கவனிக்கல கவுண்டரய்யா.

கவுண்டர் : (டாக்டரை காட்டி) இவர்தான் எங்க குடும்ப டாக்டர் (என, மதர், ஸ்டெல்லா, ரமேஷ் வணங்க டாக்டரும் வணங்குகிறார்)

கவுண்டர் : உங்களுக்கு சந்தோஷத்தை தரக்கூடிய ஒரு விஷயத்தோட வந்திருக்கேன் டாக்டர்...!

டாக்டர் : அப்படீங்களா..? சொல்லுங்க ஐயா...

கவுண்டர் : (ரமேஷை காட்டி) மிஸ்டர் ரமேஷ் பி.ஃபார்மா முடிச்சிருக்கார்.. இன்னையிலிருந்து நம்ம ஆஸ்பத்திரியில உங்களுக்கு எல்லா வகையிலயும் உதவியா இருப்பார்....

டாக்டர் : உண்மையிலேயே ரொம்ப சந்தோஷமான விஷயம் தான்...

கவுண்டர் : (ஸ்டெல்லாவை காட்டி) பாருங்க நம்ம ஸ்டெல்லாம்மா கூட நர்ஸ் ட்ரெய்னிங் முடிச்சிருக்காங்க.. மதர் சிபாரிசால நம்ம ஆஸ்பத்திரியில காலை நேரத்தில் 2 மணி நேரம் உங்களுக்கு உதவ ஒத்துக்கிட்டிருக்காங்க...

மதர் : உங்க ரேகா இங்க வரமாட்டாங்களா சேர்மேன் சார்...?

கவுண்டர் : வருவா மதர்.. நேரம் கிடைக்கும் போதெல்லாம் வருவா. அதுவுமில்லாம.. சட்டப்படி படிப்பு முடிஞ்சபின்னால- தான் நோயாளிங்கள சோதிக்க அனுமதிக்கணும்.. இல்லீங்களா...?

ஸ்டெல்லா: கரெக்ட். இன்னும் ரெண்டு வருஷம் ஆயிட்டா அவங்கதான் இங்க பெர்மனென்ட் டாக்டர். ரமேஷ் அவங்களுக்கு அஸிஸ்டென்ட் (என்று கிண்டலாக ரமேஷை பார்க்க) (ரமேஷ் எந்த ரியேக்ஷனும் இல்லாமல் அவளை பார்க்க)

கவுண்டர் : நல்லது தானேம்மா.. டாக்டர்.. மதரும் இவங்களும் இன்னிக்கு சென்னை போயிட்டிருக்காங்க. கூட நம்ம சோமு போயிட்டிருக்கான். நம்ம ஆஸ்பத்திரிக்கு தேவையான மருந்துங்க லிஸ்டை கொடுத்துட்டீங் கன்னா சோமு நம்ம தாமோதர் கடையிலிருந்து கொண்டு வந்துடுவான்...

டாக்டர் : அப்படீங்களா...! ஒரு அஞ்சு நிமிஷம்... எழுதிக்குடுத்துடறேன்...

ரமேஷ் : டாக்டர்... நான் உங்களுக்கு ஹெல்ப் செய்ய வரலாமா...?

டாக்டர் : வாங்க மிஸ்டர் ரமேஷ் (இருவரும் மருந்து அறைக்குள் செல்ல வெளியிலிருந்து சோமு கவுண்டரிடம் வந்து.)

சோமு : தோட்டத்துகிட்ட போயிட்டு வந்தேன். எஜமான் வரச்சொன்னீங்கன்னு சொன்னாங்க...

கவுண்டர் : ஆமாம்... சோமு இவங்களை அவங்க கார்ல கூட்டிட்டுபோய் சென்னைல விட்டுட்டு வரும்போது பஸ்ஸுல வந்துடு.. (கொஞ்சம் பணம் கொடுத்து) போகும்போது பெட்ரோல் போட்டுக்கோ.. வர்றப்ப நம்ம தாமோதர் கடையில மருந்துகளை வாங்கிட்டு வந்துடு. டாக்டர் லிஸ்டை எழுதிக்கிட்டிருக்காரு...

சோமு : சரிங்க எஜமான்...

கவுண்டர் : சரி நீ போய் காரை கொஞ்சம் க்ளீன் செஞ்சி ரேடியேட்டரையும் செக் செஞ்சுக்க (சோமு எக்ஸிட்)

ஸ்டெல்லா : இந்த ஊர்ல அதிகமா பேஷண்ட்ஸ் இல்ல , நோயாளிங்க இல்லாம இருக்கிறது நல்லதுதானே...?

கவுண்டர் : சரியா சொன்னேம்மா.. ஆனாலும் சொல்ல முடியாது.. சில நேரத்தில ரொம்ப ஜனங்க வந்துடராங்க.. (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் டாக்டர் கொடுக்கும் சீட்டை வாங்கி ஸ்டெல்லாவிடம் கொடுத்து)

கவுண்டர் : இந்தாம்மா இந்த சீட்டை நம்ம சோமு கையில குடுத்துடு...

ஸ்டெல்லா : (சீட்டை வாங்கி) சரிசார் அப்ப நாங்க கிளம்பறோம்...

மதர் : வர்ரேன் சேர்மேன் சார்... வர்ரேன் டாக்டர்.. ரமேஷ்...

டாக்டர், ரமேஷ் : நல்லதுங்க மதர்.. (மதர், ஸ்டெல்லா, கவுண்டர் கிளம்ப, டாக்டர், மற்றும் ரமேஷ் அவர்களை பார்க்க)

-Cut to

SC. No. 28 **மேரி வீடு** (H.W.O.) Day / Int

(மேரியும் லட்சுமியும் கீரை ஆய்ந்து கொண்டிருக்க.)

லட்சுமி : அப்படியாக்கா...! கீரை வகையில இருக்கிற சத்து மீன் கறியில இல்லேன்றியா...?

மேரி : ஆமாம்மா... பாரு இப்ப நான் கீரை வகைங்கள சாப்பிட ஆரம்பிச்ச பின்னால என் உடம்பு தேறி வருதே.. ஆனாலும் வயசான பின்னால தெரிஞ்சி என்ன பிரயோஜனம்.. சின்ன வயசு.. நீ நல்லா கீரைங்களை சாப்பிடு... எந்த நோயும் உன் கிட்டவராது....!

லட்சுமி : ஆமாக்கா. இனிமே அப்படியே செய்யிறேன். (என்று சொல்லிக் கொண்டிருக்கையில், உள்ளே வந்த ஸ்டெல்லா, செருப்பை மூலையில் விட்டு ஜீஸஸ்

படத்திடம் சென்று சில நொடிகள் பிரார்த்தனை செய்துவிட்டு மேரியிடம் வர)

லட்சுமி : (குஷியாக) இதோக்கா.. ஸ்டெல்லா கூட வந்தாச்சி...!

ஸ்டெல்லா : உடம்புக்கு எப்படி இருக்கும்மா...?

மேரி : பரவாயில்லம்மா..

லட்சுமி : நீ எப்படி இருக்கே ஸ்டெல்லா.?

ஸ்டெல்லா : எனக்கென்னடி.. பார்த்தா தெரியல...?

மேரி : போன இடத்துல உங்களுக்கு தொந்தரவு ஒண்ணும் வரலியே...

ஸ்டெல்லா : அதெல்லாம் ஒண்ணும் இல்லம்மா. எனக்குதான் கார்ல போனா அந்த காத்து பட்டதுமே தூக்கம் வந்துடுமே. நல்லா தூங்கிட்டுதான் வந்தேன். கார்ல ஒரே எடத்துல உக்காந்து வந்ததுனால. முதுகுதான் கொஞ்சம் வலிக்குது. எங்கம்மா அந்த மாத்திரை டப்பா. (என்று கேட்டவாறு டேபிளிடம் சென்று மாத்திரை டப்பாவை திறக்க அதில் மாத்திரை இருப்பதில்லை)

லட்சுமி : எதுக்கு ஸ்டெல்லா மாத்திரை...? அக்காவுக்கு உடம்பு வலி வந்தா.. நல்லசூடான தண்ணியில... ரெண்டு ஸ்பூன் நீலகிரி தைலத்தை ஊத்தி குளிப்பாட்டிவிடுவேன். குளிச்சி முடிச்சதுமே உடம்பு தக்குனு ஆயிடும்.. நீயே கேட்டுபாரு அக்காவ.

மேரி : ஆமாம்மா...!

லட்சுமி : வேற ஒருத்தர்கிட்ட தண்ணி ஊத்திகிறதே ஒரு சுகம் ஸ்டெல்லா. நான் தண்ணி ஊத்தி உட்ட அப்புறம் சொல்லு.. உன் ஒடம்பு நோவு எங்க போச்சின்னு...

ஸ்டெல்லா : ஒண்ணும் வேணா.. ஒரு மாத்திரை போட்டுகிட்டா எல்லாம் சரியாயிடும்...!

லட்சுமி : அக்கா நீங்களே சொல்லுங்கக்கா...

மேரி : லட்சுமி பேச்சை கேளும்மா. நெஜமாவே அப்படி தண்ணி ஊத்தி விட்டா. ஒடம்பு நோவு போயிடுதும்மா...

ஸ்டெல்லா : சரிம்மா.. எதுக்கும் நான் போய் மாத்திரை வாங்கிட்டு வந்துடறேன். (என்று கிளம்ப)

லட்சுமி : ஸ்டெல்லாவுக்கு ரொம்ப கூச்சம் அக்கா..

மேரி : இருக்கும்தான்...! (என்று சிரிக்க)

-Cut to

SC. No. 28.A **மேரிவீடு (பாத்ரூம்)** (H.W.O.) Day / Int

(ஸ்டெல்லா நெஞ்சிலிருந்து முழங்கால் வரைக்கும் டவல் சுற்றிக் கொண்டு நின்றிருக்க லட்சுமி, ஸ்டெல்லாவின் தலையில் வெந்நீர் ஊற்றி பின் ஸ்டெல்லா தலையை குனியச் சொல்லி ஷேம்புவை ஊற்றி தேய்த்து அவள் கண்ணுக்கு போகும் படியாக கண்களிடம் தேய்க்க)

ஸ்டெல்லா : அய்யோ... தண்ணி ஊத்து டீ கண் எரியுது.. (என்று கத்த, லட்சுமி குஷியுடன் ஸ்டூலை தள்ளி ஸ்டெல்லா கையை பிடித்து 'இதுல உக்கார்' என, ஸ்டெல்லா உட்கார, டவல் சற்று விலக, லட்சுமி டவலை விலக்கி வலது தொடையை பார்க்க சுட்ட காயத்தின் தழும்பு காணப்படுகிறது. உடனே ஸ்டெல்லா தலையில் வெந்நீரை தபதப என்று ஊற்றி)

லட்சுமி : எங்க கைய குடு (ஸ்டெல்லா கையை நீட்ட அதை தேய்த்து)

லட்சுமி : எங்க கால குடு சோப் போடறேன்....

ஸ்டெல்லா: உனக்கு வெக்கமே இல்லையா டீ.. ? மொதல்ல நீ வெளியே போ...

லட்சுமி : சரி சரி... நான் போறேன்.. போறதுக்கு முன்ன ஒரு சின்ன கேள்வி...

ஸ்டெல்லா : சைத்தானை உள்ளே சேர்த்த கதையா போச்சே.. என்ன டீ உன் கேள்வி...?

லட்சுமி : (இழுத்தவாறு) உன் வலது தொடையில (ஸ்டெல்லா குனிந்து தன் தொடைப்பக்கம் பார்க்க)

லட்சுமி : சுட்ட காயத்தின் தழும்பு இருக்கே எப்ப சுட்டுகின..?

ஸ்டெல்லா : ம்... நீ தோச சுட்டப்ப... இடியட்.. நீ இப்ப போறியா. இல்ல அம்மாவ கூப்பிடுட்டா..?

லட்சுமி : வேணாம்மா தாயே.. நான் போறேன் (என்று எக்ஸிட்)

-Cut to

SC. No. 29 **நகர சர்ச்** Mor / Ext

மதர், ஸ்டெல்லா, 2 ஸிஸ்டர்கள் எல்லோரும் ஊருக்கு போக தயாராக இருக்கின்றனர். அவர்களுடன் இருந்த ஃபாதர்)

ஃபாதர் : ஜீஸஸ் ஆசியினால அந்த ஊர் சேர்மேன் மிஸ்டர் கவுண்டர் அறிமுகம் ஆனது நல்லதா போச்சு... ரொம்ப நல்லவரா இருக்கார்...

மதர் : ஆமாம் ஃபாதர் அந்த ஊர் ஜனங்க கூட அவரை தெய்வமா நெனக்கிறாங்க...

ஃபாதர் : ட்ரெய்ன் டிக்கட் எல்லாம் ஜாக்கிரதையா வச்சிருக்கீங்கதானே?

ஸ்டெல்லா : நான் வச்சிருக்கேன் ஃபாதர்....!

ஃபாதர் : நல்லது. அங்கே நடக்கிற விஷயங்களை அப்பப்ப ஃபோன் செய்ய மறந்துடாதீங்க... ஜனங்க கஷ்டங்களை சால்வ் செய்றதோட சர்ச்சயும் நல்லபடியா கட்ட ஆரம்பிச்சிடுங்க... சென்னை ஃபாதர் மத்ததை பார்த்துக்குவார்.. ரமேஷை கேட்டதா சொல்லுங்க.. ட்ரெய்ன் புறப்படறதுக்கு ஒரு கால் மணிநேரம் முன்னாடி இருக்கிறது நல்லது. புறப்படுங்க...

மதர் : சரி ஃபாதர்.. கிளம்புங்கம்மா போலாம் (என்று எல்லோரும் ஃபாதரிடம் விடைபெற )

– Fade out

SC. No. 30 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(கெஸ்ட் ஹௌஸ் முன் கார் வந்து நிற்க மதர், 2 ஸிஸ்டர்கள், ஸ்டெல்லா அதிலிருந்து இறங்க, மதர் மற்றும் 2 ஸிஸ்டர்கள் தங்கள் லக்கேஜ்களை எடுத்துக்கொண்டு போய் ரமேஷ் அறைக்கு பக்கத்து அறையிடம் நிற்க.)

மதர் : பாருங்க ஸிஸ்டர்ஸ்... நீங்க இந்த ரூம்ல இருங்க நான் போய் மத்த லக்கேஜை எடுத்துட்டு வந்திடறேன் (என்று திரும்பி, ரமேஷ் அறையை கடந்து வர)

ஸ்டெல்லா : (ட்ரைவர் சோமுவிடம்) எங்களுக்கு இங்க வரைக்கும் ட்ராப் குடுத்ததுக்கு ரொம்ப தே(அ)ங்க்ஸ் சோமு...!

சோமு : எனக்கு எதுக்கும்மா தேங்க்ஸ்சு... எல்லாம் எஜமான் உத்தரவு...! மதர் கிட்ட சொல்லிட்டு நான் கிளம்பறேன். (என்றதும், ஸ்டெல்லா லக்கேஜுடன் வெராண்டா வந்து ரமேஷ் அறையை கடக்கும் சமயம், ரமேஷ் வெளியே வந்து)

ரமேஷ் : குட் ஈவினிங் மேடம். ஜர்னி எப்படி இருந்தது...? (என்று கேட்டுக்கொண்டிருக்க, ல.நா. ரமேஷ் ரூமிலிருந்து வெளியே வர, அவனைக் கண்ட ஸ்டெல்லா.)

ஸ்டெல்லா : ஓ... இவ்வளவு சீக்கிரம் உன்னை இவரு கையில போட்டுக்கிட்டாரா...?

ல.நா : (முழித்தவாறு ரமேஷை பார்க்க)

ரமேஷ் : அப்படீன்னா என்னங்க அர்த்தம்...?

ஸ்டெல்லா : ம்.... ஜின்ஜர் சிக்கனுன்னு அர்த்தம்...! சும்மா பேசாதீங்க.. ஜர்னி செய்து டயர்டா வந்திருக்கோம்... கார்ல என் லக்கேஜ் இருக்கு... ரெண்டு பேரும் போய் எடுத்துட்டுவாங்க..

ரமேஷ் : வாட்...?

ஸ்டெல்லா : வாட்டுன்னா.. என்னான்னு அர்த்தம்.. கோ மேன்...!

ரமேஷ் : ஓஹோ.. உங்களால வேலை கெடச்சுதுங்கறதுக்காக. இந்த ஸர்வீஸா.. இருக்கட்டும்... (என்று கூறியபடி முன் செல்ல, இரண்டு ஸிஸ்டர்களும் திடீரென்று கூச்சலிட்டு அறையிலிருந்து பதறியடித்தபடி, வெளியே ஓடிவர, ரமேஷ், ஸ்டெல்லா, ல.நா. அதிர்ச்சியுடன் அங்கு செல்ல மதரும் ட்ரைவரும் ஓடி வந்து 'இன்க்லூட்' ஆக.)

ரமேஷ் : என்னாச்சு ஸிஸ்டர்...?

ஸிஸ்டர் I : (மூச்சு அடைக்க 'பாம்பு' என்று சைகை செய்து அறையை காட்ட)

ஸிஸ்டர் II : (திக்கியவாறு) அந்த ரூம்ல பாம்பு வந்திட்டிருக்கு...

ரமேஷ் : அதுக்காகவா இப்படி பயந்துபோய் கூச்சலிடறீங்க. (என்று வேகமா சமையலறைக்கு போய் ஒரு குச்சியை எடுத்துவந்து அறையுள் சென்று பாம்பை குச்சியால் வெளியே எடுத்து வந்து கொஞ்ச தூரத்தில் விட்டு வர.)

ரமேஷ் : நம்மபாட்டுக்கு நாம இருந்திட்டா. அதுபாட்டுக்கு அது போயிடும் ஸிஸ்டர்...

ஸிஸ்டர் I : பாருங்க. அது உங்களுக்கு கடவுளா இருக்கலாம்... ஆனா எங்களுக்கு அது வெறும் பாம்புதான்...!

ஸிஸ்டர் II : மதர் எங்களால இங்க தங்க முடியாது... ப்ளீஸ். சர்ச்சுகிட்டயே தங்கறதுக்கு ஏற்பாடு செஞ்சு குடுத்துடுங்க மதர்...

மதர் : சர்ச்கிட்ட ரூம் இல்லேன்றதாலதானே ஃபாதர் இங்க தங்கறதுக்கு ஏற்பாடு செஞ்சி, இவ்வளவு ஹெல்ப் செஞ்சிருக்காரு... இதுக்கு மேலயும் நாம அவங்களுக்கு தொந்தரவு கொடுக்கிறது சரியான்னு நீங்களே சொல்லுங்க... இப்ப மறுபடியும் ஃபாதர்

கிட்ட போறதா.. இல்ல நேரா மலைப்பிரதேசத்துக்கு போறதா..? நீங்களே தீர்மானம் செய்யுங்க...

ஸிஸ்டர் I : ஸாரி மதர். தயவு செய்து இந்த ஒரு ஹெல்ப் மட்டும் செஞ்சிடுங்க.. உங்களை வேற எதுவுமே கேக்கமாட்டோம்...

மதர் : என்னம்மா ஸ்டெல்லா......?

ஸ்டெல்லா : எனக்கு ஒண்ணுமில்ல மதர்... உங்க இஷ்டம் எப்படியோ அப்படிதான்...

ரமேஷ் : உங்களுக்கும் பாம்பை பார்த்தா பயமா மேடம்...?

ஸ்டெல்லா: பாம்புக்கு பயப்படலேன்றதால நீங்க ஹீரோ ஆயிட்டீங்களா... அவங்களாட்டம் பயந்து நான் மலைக்கு ஓட மாட்டேன். எனக்கென்னமோ இந்த இடம் ரொம்ப பிடிச்சிருக்கு. (என்று கூறியவாறு கவுண்டர் பங்களாவை பார்க்க.)

மதர் : நல்லதா போச்சும்மா. நீ இங்கேயே இரு. அப்பதான் சென்னைல இருந்து வர்ர சாமான்களை மலைக்கு எடுத்துட்டு வர்ரதுக்கும், நாம ஒத்துக்கிட்ட மாதிரி காலைல நீ ஹாஸ்பிடலுக்கு போறதுக்கும் வசதியா இருக்கும். (என்று சொல்லிவிட்டு ஸிஸ்டர்களை நோக்கி)

மதர் : சரி புறப்படுங்க ஸிஸ்டர் நாம இறியூர் மலைப்பிர தேசத்துக்கே போயிடலாம். (என்று நால்வரும் எக்ஸிட்)

ரமேஷ் : (ல. நாவை பார்த்து) லட்சுமி நீ என் ரூம் கதவுமேல ரமேஷ்ன்னும் அவங்க ரூம் கதவுமேல ஸ்டெல்லான்னும் எழுதிடு...

ல.நா. : எழுதிட்டா போச்சி. (என்று தன் ஜேபியிலிருந்து ஒரு சாக் பீஸை எடுத்து கதவுக்கு மேல் வாசற்காலில் அவரவர்களின் பெயர்களை தமிழில் எழுதுகிறான்.)

-Cut to

SC. No. 31 **ஜேம்ஸ் வீடு** (H.W.O.) Day / Int

(லட்சுமியும் ஜேம்சும் கட்டிலின் மீது உட்கார்ந்திருக்கிறார்கள் ஜேம்ஸ் தலையணை அடியிலிருந்து ஒரு 50 ரூபாய் நோட்டு கத்தையை எடுத்து காட்டி.)

ஜேம்ஸ் : பாத்தியா லட்சுமி இந்த தடவ சம்பாதனை...?

லட்சுமி : இதை நீ ஞாயமா சம்பாதிச்சியா சொல்லு பாக்கலாம்.

ஜேம்ஸ் : இந்த ஜனங்க சாமின்னு கும்பிடற சாமியாருக்கு நான் வேலை செஞ்சதாலதான் இந்த நோட்டு கத்தையே கெடச்சுது. நீயே சொல்லு இது நல்லபணமா கெட்ட பணமான்னு (என்று அவளை கட்டி அணைத்து ஒரு முத்தம் கொடுக்க)

லட்சுமி : அய்ய... உடுப்பா நீ.. இருபத்து நாலு மணி நேரமும் வாசனை புடிச்சிக்கிட்டே இருப்ப...!

ஜேம்ஸ் : சரி.. ஸ்டெல்லா விஷயம் என்னா ஆச்சி..? ஸ்டெல்லா தொடைய பாத்தியா..?

லட்சுமி : இதப்பாரு.. நான் நெஜத்தை சொல்லனும்னா.. நீயுங் கூட நெஜத்தை சொல்லணும். நீ ஏன் அந்த தளும்ப பத்தி தெரிஞ்சிக்கணும்...?

ஜேம்ஸ் : நெஜத்தையே சொல்றேன்.. தளும்பு இருந்துச்சா? இல்லையா?

லட்சுமி : இருந்துச்சி...!

ஜேம்ஸ் : (சங்கடப்பட்டு) நான் சொல்ற விஷயத்தை யாருகிட்டயும் சொல்ல மாட்டதானே..?

லட்சுமி : சரிதான்.. சொல்லுப்பா...

ஜேம்ஸ் : ஸ்டெல்லா யார் சொல்லு...?

லட்சுமி : இதென்ன அப்படி கேக்கறே.. ஸ்டெல்லா, மேரி அக்கா பொண்ணுதானே....?

ஜேம்ஸ் : இல்ல...!

லட்சுமி : (ஆச்சரியத்துடன்) பின்ன...?

ஜேம்ஸ் : மேரி ஆன்டி வளர்ப்பு மகள், அவ்ளோதான். நானும் சொந்த மகள்னுதான் இருந்தேன்.. தொடையில எப்ப தளும்பு இருக்குதோ அப்ப அவ கண்டிப்பா மேரி ஆன்டி மகளே இல்ல... யார் மகளா இருந்தா என்னா...? அவ எனக்குதான் சொந்தம்...!

லட்சுமி : அது சரி அப்ப ஸ்டெல்லா யார் மகள்னு சொல்லு...

ஜேம்ஸ் : டைம் வர்ரப்போ எல்லா விஷயத்தையும் சொல்றேன். இப்ப அத்தோட உட்டுடு. (என்று அவளை அணைக்க)

-Cut to

SC. No. 31.A **ஜேம்ஸ் வீடு** Mor / Int

(ஜேம்ஸ் ஒரு சின்ன சூட்கேஸில் தன் துணி மணிகளை வைத்து கடைசியில் வெள்ளி இ. கயிற்றை நியூஸ் பேப்பரில் பொட்டலமாக மடித்து அதை சூட்கேஸினுள் ஓரமாக வைத்து சூட்கேஸை மூட இரண்டு நொடியில் சூட்கேஸ் திறந்து கொள்ள, லட்சுமி உள்ளே வர.)

(ஜேம்ஸ் மறுபடியும் சூட்கேஸை நன்கு அழுத்தி மூட)

லட்சுமி : எவ்வளவோ செலவு செய்றே.. ஒரு புது சூட்கேஸ் வாங்கிக்க கூடாதா....?

ஜேம்ஸ் : வாங்கலாம் லட்சுமி.. இப்ப எனக்கு பஸ்சுக்கு நேரமாயிடுச்சி... உன்கிட்ட நாளைக்கு வந்து பேசிக்கிறேன்... (என்று லட்சுமிக்கு ஒரு முத்தம் கொடுத்து வெளியேற)

-Fade out

SC. No. 32 **கிராமத்து சர்ச்** Day / Ext

(சர்ச்சிலிருந்து ஃபாதர் வெளிவரும் போது ஜேம்ஸ் அங்கு வந்து)

ஜேம்ஸ் : குட் ஆஃப்டர்னூன் ஃபாதர்...

ஃபாதர் : குட் ஆஃபடர்னூன் மை ஸன்.. யாரப்பா நீ.. எங்கிருந்து வர்றே. என்ன விஷயம்...?

ஜேம்ஸ் : என் பேர் ரிச்சர்ட் ஃபாதர்... சென்னையிலிருந்து வர்றேன். இங்க செந்தில்வராய கவுண்டர் வீட்டுக்கு போகணும். அவர் வீடு எங்க இருக்குன்னு... (என்று இழுக்க)

ஃபாதர் : (சிரித்தவாறு) நான் அவர் பங்களா பக்கமாத்தான் போறேன். வா.. நான் உன்னை அங்க ட்ராப் செய்யறேன்...

ஜேம்ஸ் : ரொம்ப தே(அ)ங்க்ஸ் ஃபாதர்... (என்று அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அம்பாஸிடர் காருள் நுழைந்து ரியர் வின்டோவிடம் தன் சூட்கேஸை வைத்துவிட்டு உட்கார ஃபாதர் ட்ரைவர் ஸீட்டில் உட்கார, கார் கிளம்ப)

-Cut to

SC. No. 32.A **கிராமத்து பாதை** Day / Car Ext & int

(கார் போய்க் கொண்டிருக்க காரினுள்)

ஃபாதர் : ம்... உன் பெயர் என்னன்னு சொன்ன மை ஸன்..?

ஜேம்ஸ் : ரிச்சர்ட் ஃபாதர்.. செந்தில்வராய கவுண்டர் இந்த ஊர்ல என்னவா இருக்கார் ஃபாதர்.?

ஃபாதர் : (சிரித்தவாறு) எல்லாமுமா இருக்காருப்பா... ஜீஸஸ் அவருக்கு சகல சௌபாக்யத்தையும் கொடுத்திருக்கார். அது சரி. நீ என்ன விஷயமா அவரை பாக்கணும்னு வந்திருக்கே.?

ஜேம்ஸ் : ஒரு பிஸினஸ் விஷயமாதான் ஃபாதர்...!

ஃபாதர் : ம்... சென்னைல எந்த சர்ச்சுக்கு போறே..?

ஜேம்ஸ் : (தலையை சொறிந்து) சென்னை ராயபுரத்தில இருக்கிற செய்ன்ட் ஸேவியர்ஸ் சர்ச்சுக்குதான் போறேன் ஃபாதர்.. (என்று சொல்லும் போது கார் ஒரு பள்ளத்தில் இறங்கி ஏறி ஒரு ஆட்டு ஆட்டி தூக்கிப்போட, சூட்கேஸ் திறந்து கொண்டு வெள்ளி இ. கயிறு பொட்டலம் வெளியே சூட்கேசுக்கு சற்று தள்ளி விழுந்துவிடுகிறது .(ஜேம்ஸ் கொஞ்சம் தடுமாறி பின் சரியாக உட்கார) (கார் போய்க்கொண்டிருக்க)

ஃபாதர் : நீ போற சர்ச்ல ரெவரெண்ட ஃபாதர் சாமுவேல் தானே இருக்கார். ரிச்சர்ட்...?

ஜேம்ஸ் : (சற்றே விழித்து) ஆமாம் ஃபாதர். (அப்போது கவுண்டர் பங்களா வர)

ஃபாதர் : மை ஸன்.. பாருப்பா.. அதுதான் நீ கேட்ட கவுண்டர் பங்களா (என்று காரை நிறுத்த)

ஜேம்ஸ் : ரொம்ப தே(அ)ங்க்ஸ் ஃபாதர். (என்று திரும்பி சூட்கேஸை எடுக்க, அது திறந்திருப்பதை கண்டு, அவசர அவசரமாக எடுத்து அதை அழுத்தி மூடி எடுத்துக்கொண்டு வெளியே வந்து.)

ஜேம்ஸ் : தே(அ)ங்க்ஸ்..வரேன் ஃபாதர்..

ஃபாதர் : காட் ப்லெஸ் யூ... (என, கார் முன்செல்ல)

-Cut to

SC. No. 32.B **கவுண்டர் பங்களா** Day / Ext

(ஜேம்ஸ் தன் சூட்கேசுடன் கவுண்டர் வீட்டு பக்கம் போய்க் கொண்டிருக்கும் போது சூட்கேஸ் மறுபடியும் வாய் திறந்து கொண்டு துணிமணியெல்லாம் கீழே விழ) 'த்தூத்' இது ஒண்ணு என்மகன்து' (என்றவாறு கோபமாக துணிமணிகளை சூட்கேஸில் போட்டவாறு இ. கயிறு, பொட்டலத்தை சூட்கேஸ் முழுவதுமாக தேடிவிட, அது இருக்காது. அப்போது கார் போன திசையிலிருந்து வந்த கிராமவாசி ஒருவன் ஜேம்ஸிடம் வந்து)

ஒருவன் : என்ன சார் தேடறீங்க...?

ஜேம்ஸ் : ம்... என் உயிர் இங்க எங்கயோ உளுந்திடுச்சிப்பா.. கொஞ்சம் தேடித்தறியா...?

ஒருவன் : இந்த சிட்டிகாரங்களுக்கு எப்பவுமே திமிர் பேச்சுதான்..

ஜேம்ஸ் : (நைஸ் செய்தவாறு) கோவிச்சிக்காதீங்க தலைவரே.. இந்த ஊர் ஃபாதர் காரு இந்த பக்கம் இப்ப போச்சே.. மறுபடியும் அவரு சர்ச்சுக்கு போனார்ன்னா இந்த ரோட்டுலயே வருவாரா... இல்ல சர்ச்சுக்கு போறதுக்கு வேற வழி இருக்குதா?

ஒருவன் : எப்படி சொல்ல முடியும். இந்த வழியா வந்தாலும் வரலாம்.. இல்லேன்னா ஏரி பக்கமாவும் போகலாம். ஏன்..?

ஜேம்ஸ் : இந்த பக்கம்தான் வருவார்ணா அவர் கார்லயே சர்ச்சுகிட்ட போயிடலாம்னுதான்...

ஒருவன் : அதிகமா பேசாதீங்க உங்க நாக்குகூட, தேஞ்சாலும் தேஞ்சிடும் (என்று கூறிக்கொண்டே எக்ஸிட் ஆக)

ஜேம்ஸ் : (அங்கிருந்த ஒரு கல்லின் மீது உட்கார்ந்து தனக்குள்) இப்ப என்ன செய்றது. ஸ்டெல்லா அர்ணா கயிறு செய்னை அவங்க வீட்ல குடுத்துட்டு, அவ சின்ன வயசிலியே செத்து போய்ட்டான்னு சொல்லி, அவ சேப்டரை க்ளோஸ் செய்யலாண்ணு இருந்தா இப்பிடி ஆயிடுச்சே. ம்... இப்ப கூட அவ சேப்டர் க்ளோஸ் ஆன மாதிரிதானே.. இந்த செய்ன் ஸ்டெல்லாதுதான்னு நான் சொன்னாதானே அவங்களுக்கு தெரியும். எப்படியோ கதை முடிஞ்சிது. எதுக்கும் ஃபாதர் கார்ல தேடிப்பாத்துடணும். (என்று பேசியவாறு எழ)

-Cut to

SC. No. 33 **கோயிலுக்கு போகும் பாதை (இடம் I)** Day / Ext

(ஃபாதர் காரில் போய்க்கொண்டிருக்கும்போது சற்று தூரத்தில் கவுண்டரின் கார் ரிப்பேர் ஆகி நின்றிருக்க டிரைவர் சோமு பானட்டை திறந்து ரிப்பேர் செய்து கொண்டிருக்க. அங்கு ஃபாதரின் கார் வந்து நிற்க)

ஃபாதர் : வணக்கம் கவுண்டர் ஐயாவுக்கு என்னாச்சு வண்டிக்கு.?

கவுண்டர் : வணக்கம் ஃபாதர், என்னமோ என்ஜின்ல கோளாறாம்...

ஃபாதர் : நீங்க எங்கயாவது போகணும்னா சொல்லுங்க... நான் ட்ராப் கொடுக்கறேன்...

கவுண்டர் : கோயில் வரைக்கும் போகணுமா இருந்தது...

ஃபாதர் : ஏறுங்க ஐயா நம்ம வண்டியில.. கோயில் கிட்ட ட்ராப் செய்யறேன்...

கவுண்டர் : சோமு.. வண்டி ரெடியானதும் கோயில்கிட்ட வந்துடு..

சோமு : சரிங்க எஜமான் (கவுண்டர், ஃபாதர் காரில் உட்கார கார் புறப்படுகிறது.)

Fast Fade out or – Cut to

SC. No. 33.A **கோயிலுக்கு போகும் பாதை (இடம் II)** Day / Car. Int & Ext

(கார் போய்க்கொண்டிருக்க, காரினுள்)

ஃபாதர் : கோயில்ல என்ன விசேஷம் கவுண்டரய்யா..?

கவுண்டர் : ரொம்ப நாளா கோயில் பக்கம் ஒரு அரசஞ்செடி நடணும்னு இருந்தது. ஏன்னா,, அரசமரத்து காத்தை சுவாசிச்சா அறிவு தெளிவாகும்னு பெரியவங்க சொல்லியிருக்காங்களே..

ஃபாதர் : ரொம்ப நல்ல காரியந்தான்... அப்படியே கோயிலுக்கு போற இந்த ரோட்டையும் சரி செஞ்சிட்டா நல்லா இருக்கும்.

கவுண்டர் : கண்டிப்பா...! ஃபாதர்.. செஞ்சிடலாம்... (கார் போய்க் கொண்டிருக்க)

-Cut to

SC. No. 34 **கோயில் முன்** Day / Ext

(கோயிலின் முன் கார் வந்து நிற்க கவுண்டர் இறங்க)

ஃபாதர் : நான் மறுபடியும் இதே வழியா திரும்பி வருவேன்...

ஒரு வேளை உங்க கார் வரலேன்னா நம்ம கார்லயே உங்களை உங்க வீட்டுகிட்டயே விட்டுடறேன்... வரட்டுங்களா..?

கவுண்டர் : ரொம்ப நன்றிங்க ஃபாதர்... (என்று கூறி கோயில் பக்கம் செல்ல, கவுண்டருக்காகவே காத்திருந்த பக்கத்து கிராமத்து பெரியவர்கள் A B C D எழுந்து.)

A & B : கவுண்டரய்யாவுக்கு வணக்கம்...

C & D : வாங்க கவுண்டரே வணக்கம். (என்று வரவேற்கும் பொழுது காட்சி ஃபேட்அவ்ட் ஆகிறது)

Fade Out

SC. No. 34.A **கோயில்** Day / Ext

(காட்சி ஃபேட் இன் ஆனதும் கவுண்டர் மற்றும் A B C D நால்வரும் கோயிலில் பூஜை முடித்து வந்தவர்களாக நெற்றியில் குங்குமத்துடன் உட்கார்ந்திருப்பதை காண்கிறோம் அப்போது கவுண்டர்)

கவுண்டர் : ம்.... உங்க ஊர்ல பள்ளிக்கூடம் வேணும்னு நீங்க எல்லாரும் சேர்ந்து வந்திருக்கிறதை பார்த்து எனக்கு ரொம்ப சந்தோஷம்...! கல்விக்குதான் நாம முக்யத்துவம் கொடுக்கணும்... பிள்ளைங்கள படிக்கறதுக்கு அனுப்பாம வேலைக்கு அனுப்பறது அவங்களுக்கு நாம செய்யற பெரிய துரோகம் ஆகும்... அடுத்த வாரமே உங்க பள்ளிக்கூட கட்டிடத்தின் வேலை ஆரம்பம் ஆகிவிடும்... உங்க ஊர் பிள்ளைங்கள்ள படிக்காத பிள்ளைங்க இல்லாம இருக்கிறத பார்த்துக்கிறது உங்க கடமை...!

A & B : அப்படியே செய்வோம் கவுண்டரய்யா...

கவுண்டர் : சரி வாங்க அரசஞ் செடியை நட்டுடலாம். (என்றதும் எல்லோரும் எழுகிறார்கள். பக்கத்தில் அரசன் செடி நட முன்பே தோண்டிவைத்திருந்த பள்ளத்தில் அரசன் செடியை நட்டு முறையான பூஜை செய்து முடிக்கும் சமயம் ஃபாதரின் கார் ஹாரன் சத்தம் கேட்கிறது.)

கவுண்டர் : சரி. இன்று நான் புறப்படறேன்...

C & D : ஆகட்டுங்கய்யா...

A & B : ரொம்ப நன்றிங்க ஐயா. போய் வாங்க... (கவுண்டர் எக்ஸிட்)

-Cut to

SC. No. 34.B **கோயிலுக்குமுன் (பாதை)** Day / Ext

(ஃபாதரின் கார் கோயில் முன் பாதையில் நின்றிருக்க, காரிடம் வந்த கவுண்டர் காரின் முன் சீட்டில் உட்காரபோக அங்கு ஒரு பெரிய பால்பவுடர் அட்டை பெட்டியை கண்டதும்.)

கவுண்டர் : பரவாயில்ல நான் பின்னால உக்காந்துக்கறேன்... (என்று பின் ஸீட்டில் உட்கார)

ஃபாதர் : இப்ப பிள்ளைங்களுக்கு பால் பவுடர் கொடுக்கறதை கொஞ்சம் கொறச்சிட்டாங்க... அதுதான் நானே போய் வாங்கிட்டு வந்துட்டேன்...!

கவுண்டர் : வயிறு நெறைய சாப்பாடு போடறத விட இப்படி பிள்ளைங்களுக்கு ஊட்டம் குடுக்கக்கூடியத குடுக்கறதுதான் நல்லது. நாமும் ஏதாவது செய்யணும்... (என்று சொல்லிக்கொண்டிருக்கையில் காரிடம் பூஜாரி பிரசாத தட்டுடன் வந்து தட்டை கவுண்டரிடம் கொடுத்தவாறு.)

பூஜாரி : ஐயா, அம்பாளிடம் வச்சு மந்திரித்த கயிறு இதுல இருக்கு. வீட்டுல அதுக்கு கற்பூர தீபம் காட்டி எஜமானி அம்மா கழுத்துல கட்டுங்க... நல்லதே நடக்கும்... (என்று கொடுத்து நமஸ்கரிக்க, கவுண்டரும் பிரசாத தட்டை வாங்கி, நமஸ்கரித்தபின், பிரசாத தட்டை ரியர்விண்டோ விடம் வைக்க, கார் புறப்பட)

-Cut to

SC. No. 35 **கோயிலுக்கு போகும்பாதை (திரும்பிவருதல்)** Day / Car Int/Ext

(பாதை மேடும் பள்ளமுமாக இருப்பதால் கார் போய்க்கொண்டிருக்க உள்ளிருப்பவர்கள் ஆட்டப்படுபவர்களாக இருப்பதை காண்கிறோம்.)

(காரினுள்)

(சற்று தூரத்தில் ஒரு பள்ளத்தை காண்கிறோம். கார் அந்த பள்ளத்தில் இறங்கி ஏற தூக்கிப்போடுகிறது. அப்பொழுது பின்னால் வைத்த பிரசாத தட்டிலுள்ள பூஜை பிரசாதங்கள் கொட்டிக் கொண்டு ஸ்டெல்லாவின் இ. கயிறு பொட்டலத்துடன் கலந்து விடுவதை காண்கிறோம்.)

(காரின் வெளியே) (2-3 பாஸிங் ஷாட்)

(கவுண்டரின் கார் நின்றிருக்கும் இடத்திற்கு முன் வந்து ஃபாதர் கார் நிற்கிறது. கவுண்டரும் ஃபாதரும் காரிலிருந்து இறங்கி வந்து)

கவுண்டர் : என்னப்பா சோமு.. கார் ரெடியாயிடுச்சா.?

சோமு : (பானட்டை மூடாமல் கையை வேஸ்டில் துடைத்துக் கொண்டு) ஆயிடுச்சிங்க எஜமான்... (என்று ட்ரைவர் ஸீட்டில் உட்கார்ந்து காரை ஸ்டார்ட் செய்ய, கார் ஸ்டார்ட் ஆகிறது.)

கவுண்டர் : (காரின் பின் ஸீட் கதவை திறந்து நின்று) ரொம்ப நன்றிங்க ஃபாதர். (என, சோமு வெளியே வந்து பானட்டை மூட)

ஃபாதர் : நமக்குள்ள என்னங்க.. அப்ப நான் வரேன்.. காட் ப்லெஸ் (என்று அவர் காரிடம் போக, கவுண்டர் தன் காரில் உட்கார, ஃபாதர் தன் காரிடம் சென்று உள்ளே உட்கார கோயில் பிரசாத வாசனை அடிக்க, அவர் திரும்பி பார்க்க விண்டோவிடம் பூஜை பிரசாததட்டை பார்த்தவர்)

ஃபாதர் : (சற்றே உரத்த குரலில்) ஒரு நிமிஷம் கவுண்டரய்யா.. பூஜை பிரசாதத்தை விட்டுட்டு போறீங்களே.. (என்று பின்ஸீட் சென்று பிரசாத தட்டை எடுக்கும்போது சிதறி இருக்கும் தேங்காய், பூ, பழம், பொட்டலங்களை கண்டு, 'அடடே எல்லாம் கொட்டிட்டிருக்கே' என்று அனைத்தையும் தட்டில் போட கிட்டத்தட்ட பூஜாரி கொடுத்த மந்திரித்த கயிறு பொட்டலத்தை போலவே உள்ள ஸ்டெல்லாவின் இ. கயிறு பொட்டலத்தையும் சேர்த்து தட்டில் போடுகிறார்.) (கவுண்டர் காரிலிருந்து இறங்க முற்பட, சோமு)

சோமு : நீங்க உக்காருங்க எஜமான்... நான் எடுத்துட்டு வந்திடறேன். (என்று ஃபாதர் காரிடம் செல்ல, காரிலிருந்து பிரசாத தட்டுடன் வெளியே வந்த ஃபாதர்.)

ஃபாதர் : இந்தாப்பா கடவுள் பிரசாதம்... (என்று கொடுக்க, அதை பெற்றுக்கொண்டு வந்த சோமுவிடம்)

கவுண்டர் : முன்னாலயே வையுப்பா. (என, சோமு காரினுள் உட்கார்ந்து ஸ்டியரிங் பக்கத்திலுள்ள சிறிய வினாயகர் சிலையிடம் வைக்க.) (ஃபாதரின் கார் இவர்களை கடக்க)

கவுண்டர் : நல்லது ஃபாதர். (என்று கையசைக்க) (சோமு காரை ஸ்டார்ட் செய்ய)

-Cut to

SC. No. 36 **கவுண்டர் பங்களா** Day / Ext

(வெளியே சிறிய பூஜைக் கூடையில் புஷ்பங்களுடன் வந்துகொண்டிருந்த கௌரி கவுண்டர் கார் வருவதை கண்டு உள்ளே செல்ல இருந்தவள் அங்கேயே நிற்க, கார் வந்து நிற்கிறது. அப்போது வேலையாள் ஒருவன் காரிடம் ஓடி வந்து)

வேலையாள் : ஜமான் வியாபாரிங்க காலைலியே வந்து தோட்டத்தில உக்காந்துனு இருக்காங்க. நீங்க வந்த உடனே சொல்லச்சொன்னாங்க...

கவுண்டர் : நீ தோட்டத்துக்கு போ. இதோ வந்துடறேன் (வேலையாள் எக்ஸிட்)

கௌரி : வாங்கண்ணா. சாப்டுட்டு போய்டுவீங்க.

கவுண்டர் : என்னம்மா கௌரி... இன்னிக்கு என்ன நாள்... வெள்ளிக்கிழமை... நீ சொல்லித்தானே வாரத்துக்கு மூன்று நாள் ஒரு வேளை சாப்பிட்டு ஆரோக்யமா இருக்கேன்.

கௌரி : ஓ... மறந்தே போச்சண்ணா...!

சோமு : எஜமான்... பிரசாத தட்டை சின்னம்மா கையில குடுத்துடட்டுங்களா?

கவுண்டர் : குடுத்துடு சோமு (சோமு பிரசாத தட்டை எடுக்க, கௌரி வந்து அதை பெற்றுக் கொள்ள.)

கவுண்டர் : அம்மா கௌரி.. பூஜாரி மந்திரிச்ச கயிறை அதுல வச்சிருக்காரு.. அதுக்கு கற்பூரம் காட்டி உங்க அண்ணி கழுத்தில கட்டிடும்மா..

கௌரி : உங்க கையாலேயே வந்து கட்டிடுங்கண்ணா... பூஜை ரூம்ல வைக்கறேன்...

கவுண்டர் : சரிம்மா. சோமு கிளம்புப்பா தோட்டத்துக்கு போலாம்...

-Cut to

SC. No. 37 **கிராமத்து சர்ச்** Day / Ext

(சர்ச்சின் முன் ஜேம்ஸ் ஃபாதருக்காக காத்திருக்க, ஃபாதர் காரில் வந்து இறங்க, ஜேம்ஸ் ஓடி வந்து)

ஜேம்ஸ் : குட் ஆஃப்டர்னூன் ஃபாதர்.

ஃபாதர் : என்ன ரிச்சர்ட்.. கவுண்டரை நீ பாத்திருக்க முடியாதே.. அவர் இப்பதான் வீடுபோய் சேர்ந்திருப்பார்...

ஜேம்ஸ் : இப்ப போய் பாக்கிறேன் ஃபாதர்.. கார்ல என் கீ செய்ன் தொலைஞ்சிட்டாமாதிரி இருக்குது.. கொஞ்சம் தேடி எடுத்துக்கிட்டுங்களா ஃபாதர்...?

ஃபாதர் : பை ஆல் மீன்ஸ்... எது எது யார் யாருக்கு போய்ச் சேரணுமோ.. அது அது அவங்கவங்களுக்கு போய் சேரவேண்டியதுதானே ஞாயம்... தாராளமா போய் தேடி எடுத்துக்கப்பா...

(ஜேம்ஸ் காரினுள் சென்று பொட்டலத்தை தேட, அது கிடைக்காததும் காரிலிருந்து வெளியே வந்த ஜேம்ஸ்)

ஜேம்ஸ் : தே(அ)ங்க்ஸ் ஃபாதர்.. கீ செய்ன் கெடைக்கல.. வேற எங்கேயோ விழுந்திட்டிருக்குது. நா வரேன் ஃபாதர்... இன்னும் ஒரு மணி நேரத்துல ஒரு பஸ் இருக்குதாம்... கவுண்டரை பாத்துட்டு நான் அப்படியே ஊருக்கு கிளம்பிடறேன், ஃபாதர்..

ஃபாதர் : நல்லதுப்பா. அப்படியே செய்... (ஃபாதர் சர்ச் பக்கம் போக, ஜேம்ஸ் ரோட்டில் செல்ல)

-Cut to

SC. No. 38 கவுண்டர் பங்களா (பாரு அறை) Day / Int

(சற்று தேறிவரும் பார்வதி கட்டிலின் மீது படுத்திருக்க, திடுதிப்பென்று விழித்துக்கொண்ட அவள் சுற்றிலும் பார்க்க யாரும் இல்லாதிருக்க கட்டிலிலிருந்து இறங்க முயற்சித்து நிலை தடுமாறி கட்டிலின் பக்கத்தில் இருந்த சிறிய டேபிள் மேல் விழ, நெற்றியில் அடிபட்டு கீழே விழுகிறாள். வெளியிலிருந்த கௌரி, பாரு ரூமிலிருந்து விழுந்த சத்தம் கேட்டு, பதைபதைக்க உள்ளே ஓடிவந்து, கீழே விழுந்திருக்கும் பாருவை தூக்கி கட்டிலின் மீது படுக்க வைத்து, பயந்தவளாக, பக்கத்திலிருந்த சொம்பிலிருந்து தண்ணீரை எடுத்து பாருவின் முகத்தில் தெளிக்க, பாரு கண்திறக்காமல் இருக்க, மேலும் பயந்துபோன கௌரி வேலையாளை கூப்பிட்டு கவுண்டரை அழைத்துவரச் சொல்லி அனுப்புகிறாள்.) (நேரக் கழிவு) கவுண்டர் பதைபதைப்புடன் உள்ளே வர, கௌரி பாருவுக்கு விசிறியால் காற்று வீசிக்கொண்டிருக்க)

கவுண்டர் : (பதை பதைப்போடு) கௌரி. ஏம்மா என்னாச்சம்மா...?

கௌரி : நான் வெளியில இருந்தேண்ணா... அண்ணி ரூம்ல சத்தம் கேட்டு உள்ள வந்தேன்... எப்படி விழுந்தாங்கன்றதே தெரியல...

கவுண்டர் : (பாருவின் தலையை லேசாக அசைத்து) பாரு.. பாரு.. (என, நிதானமாகக் கண்திறந்த பாரு, கௌரியை பார்த்து)

பாரு : கௌரி.. (என்றதும், கவுண்டர், கௌரி முகத்தில் சந்தோஷமும் ஆச்சர்யமும் காணப்படுகிறது, பின் பாருவின் கண்கள் மெதுவாக மூடிக்கொள்கிறது)

கவுண்டர் : (அளவில்லா சந்தோஷத்துடன் மெதுவான குரலில்) கௌரி உங்க அண்ணி உன்ன அடையாளம் தெரிஞ்சிக்கிட்டாம்மா.. இப்ப இவ சொன்ன இந்த வார்த்தைய கேட்டு எவ்வளவோ வருஷங்கள் ஆயிடிச்சேம்மா எல்லாம் கடவுள் செயலம்மா.. இவள் குணமாயிட்டா அதுவே போதும். சரிம்மா கௌரி.. காலைல பூஜாரி மந்திரிச்சி குடுத்த கயிறை பாரு கழுத்தில கட்டச் சொன்னனே. கட்டினியாம்மா?

கௌரி : (இனி இருவரும் மென்மையான குரலிலேயே பேசுகிறார்கள்) இல்ல அண்ணா.. உங்களையே வந்து கட்டச்சொன்னேனே...

கவுண்டர் : போம்மா அதை எடுத்துட்டுவாம்மா (கௌரி வேகமாக வெளியேற) (கவுண்டர் பாருவின் தலையை அன்போடு தடவிவிட்டபடி இருக்க, கௌரி பிரசாத தட்டுடன் என்ட்ரி கவுண்டர் பிரசாத தட்டைவாங்கி ஒரு பொட்டலத்தை எடுத்து பிரிக்க அதில் மந்திரித்த கயிறு இல்லாமல் தங்கள் பெண் கஸ்தூரியின் வெள்ளி இ கயிறு இருப்பதை கண்டு, ஆச்சர்யத்துடன் பார்த்து, அதிலிருந்து பில்லையை திருப்பிப்பார்க்க அதில் அவர்கள் குடும்பத்து இனிஷியல்கள் G.K.S. இருப்பதை கண்டு இன்னும் ஆச்சர்யப்பட்டு)

கவுண்டர் : அம்மா கௌரி இதென்னம்மா ஆச்சர்யம்...! இது யாருதுன்னு பாரம்மா (என, கௌரி அதை வாங்கி பார்த்து சந்தோஷத்தில்.)

கௌரி : அண்ணா... சந்தேகமே இல்ல. இது நம்ம கஸ்தூரிதுதான் (பில்லையின் பின்பகுதியை காட்டி)

இங்க பாருங்கண்ணா நம்ம குடும்பத்து இனிஷியல்ங்க அப்படியே இருக்கே...!

கவுண்டர் : ஆமாம்மா..நானும் பாத்தேன்... இது எப்படி இங்க வந்தது. இது கெடச்சிடுச்சி... அப்ப கஸ்தூரி.. அந்த குழந்தைக்கு ஒண்ணும் ஆகாம இருக்கணும் கடவுளே.. கௌரி நம்ம பிள்ளைங்களுக்கு ஒண்ணும் ஆகாது இல்லையாம்மா..?

கௌரி : ஒண்ணும் ஆகாது அண்ணா... அந்த தாயோட ஆசீர்வாதம் நமக்கு எப்பவும் இருக்கிறதால அவங்க நல்லாதான் இருப்பாங்க...

கவுண்டர் : அது சரிம்மா.. பிரசாதத்தை கொடுத்தது பூஜாரி... கௌரி.. பூஜாரியை உடனே கூட்டிட்டு வரச்சொல்லும்மா.. (கௌரி எக்ஸிட்) (கவுண்டர் இன்னொரு பொட்டலத்தை பிரிக்க அதில் மந்திரித்த கயிறு இருக்க அதை பாருவின் கழுத்துக்கு கட்ட)

- Cut to

SC. No. 38.A **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(பாருவின் அறையிலிருந்து ஹாலுக்கு வந்த கௌரி)

கௌரி : லட்சுமி நாராயணா.. (என, ல.நா. அங்கு ஓடிவர)

கௌரி : இப்பவே பூஜாரி வீட்டுக்கு போய் அவரை எங்க இருந்தாலும் கூட்டிட்டுவா...

ல.நா. : சரிம்மா.. இப்பவே வந்துடறேன்... (என்று வேகமாகவெளியேற).

-Cut to

SC. No. 38.B **கவுண்டர் பங்களா** Day / Int

(ல.நா. வெளியே வந்துகொண்டிருக்க ஸ்டெல்லா எதிரே வர, அவசரத்தில் இருக்கும் ல.நா. விடம்)

ஸ்டெல்லா : ஏய் லட்சுமி... ஏன் இவ்ளோ அவசரம்...?

ல.நா. : ஐயோ... பெரியம்மாவுக்கு நெத்தியில அடிபட்டிட்டிருக்குது.. உடனே பூஜாரியை கூட்டினுவரச் சொல்லியிருக்காங்க... (என்று சொல்லியவாறே நடக்க) (ஸ்டெல்லா தனக்குள்) மலவாசிங்களபத்தி பேசலாம்னு வந்தா.. இங்க நெலம இப்படி இருக்கே.. சரி.. ஃபாதருக்கு சொல்லி ஃபோன் பண்ணவச்சா ஆச்சி.. நாமவேற ஏன் இங்க (என்று புறப்பட)

-Cut to

SC. No. 38.C **கவுண்டர் பங்களா** Day / Int

**(பூஜை அறை)**

(பூஜையறையில் கௌரி, கடவுள் படங்களுக்கும் சாமுண்டேஷ்வரி விக்ரகத்திற்கும் ஆரத்தி தட்டை காட்டி)

கௌரி : அம்மா இதுவரை எங்கவம்சத்தையே காப்பாத்திய நீ... இந்த வம்சத்து வாரிசுங்களையும் அப்படியே காப்பாத்தணும் தாயே.. (என்று ஆரத்தி தட்டை கீழே வைத்து வணங்க, 'ஃஜூம் டு' கற்பூர ஜோதி)

- Fade out

SC. No. 38.D **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(காட்சி பூஜாரியின் முதுகுப்புறத்திலிருந்து ஆரம்பமாகிறது) (ஹாலில் சோஃபாவில் கவுண்டர், கௌரி, கிரண் உட்கார்ந்திருக்க, அங்கு போகும் பூஜாரியை பார்த்த கவுண்டர் )

கவுண்டர் : வாங்க பூஜாரி ஐயா.. உட்காருங்க.. (என, பூஜாரி சோஃபாவில் உட்கார, கவுண்டர் இ. கயிற்றை காட்டி)

கவுண்டர் : பாருங்க.. இது நீங்க குடுத்த பூஜை பிரசாத தட்டுல இருந்தது.. இதை நீங்க வச்சீங்களா..?

பூஜாரி : (பூஜாரி இ.கயிற்றை வாங்கி உற்று பார்த்து) இல்லியே...இதை நான் இப்பதான் பாக்கறேன் (என்று திருப்பி தர)

கௌரி : அண்ணா... இவரு கோயிலுக்கு போய் கஸ்தூரிபேர்ல ஒரு அர்ச்சனை செய்யட்டும்..

கவுண்டர் : சரிம்மா அப்படியே செய்யுங்க..

பூஜாரி : அம்பாளோட கிருபை உங்களுக்கு எப்பவும் இருக்கும்... ஒண்ணும் கவலைப்படாதீங்க... நான் கோயிலுக்கு இப்பவே போறேன்... (என்று எக்ஸிட்)

கவுண்டர் : அப்படின்னா இது எப்படி இங்க வந்தது.. பூஜாரிக்கு தெரியாதுன்னு சொல்றாரு.. நான் ஃபாதர் கார்லதான் கோயிலுக்கு போய்டு வந்தேன்.. அவர் கார்லதான் இது பிரசாத தட்டுல சேர்ந்திருக்கணும்... வேற எந்த வழியும் இல்லை.. (என்று டேபிளிடம் சென்று ரீஸீவரை எடுத்து டயல் செய்து) ஹலோ...

ஃபாதர் குரல் : யார் கவுண்டரய்யாங்களா....

கவுண்டர் : ஆமாங்க ஃபாதர்... ஃபாதர்.. காணாமபோன என் பெண்ணோட வெள்ளி அர்ணாகயிறு பிரசாத தட்டுல கெடச்சிருக்கு... பூஜாரியை கேட்டா அவருக்கு அதப்பத்தி எதுவும் தெரியாதுன்னு சொல்றாரு... அப்படி இருக்க உங்க கார்ல வரும்போதுதான் அது பிரசாத தட்டுல சேர்ந்திருக்கணும்.... இன்னிக்கு புதுசா உங்க கார்ல யாராவது வந்தாங்களா ஃபாதர்..?

ஃபாதர் குரல் : ஆமாம்! இன்னிக்கு ரிச்சர்டுன்னு ஒரு யங்மேன் பிஸினஸ் விஷயமா உங்கள பார்க்க என் கார்லதான் வந்தார்.. நான்தான் அவரை உங்க வீட்டு கிட்ட ட்ராப் செஞ்சேன்.. அவர் உங்கள வந்து பார்க்கவே இல்லீங்களா..?

கவுண்டர் : இல்லீங்களே ஃபாதர்....

ஃபாதர் குரல் : அப்படியா... அவர் கீ செய்ன் காணாம போயிடிச்சின்னு வந்து கார்ல தேடினாரு.. சரி விடுங்க. அவர் மூலமாத்தான் அது உங்க கிட்ட வந்திருக்கும்னா அவனர சுலபமா கண்டு பிடிச்சிடலாம்...!

கவுண்டர் : (அவசரத்தோடு) எப்படிங்க ஃபாதர் ?

ஃபாதர் குரல் : சென்னை ராயபுரத்துல இருக்கிற செய்ன்ட் சேவியர்ஸ் சர்ச்சுக்குதான் போறதுன்னு சொல்லி இருக்காரு. அங்க இருக்கிற ரெவரெண்ட் ஃபாதரை எனக்கு நல்லா தெரியும்... அவங்களை விசாரிச்சா ரிச்சர்ட் இருக்கிற இடம் தெரிஞ்சிடும்... என்ன ஒண்ணுண்ணா.. அதே பேர்ல 5-6 பேர் இருந்துட்டா கண்டுபிடிக்க கொஞ்சம் லேட் ஆகும் அவ்வளவுதான்...

கவுண்டர் : சரிங்க ஃபாதர்.. உங்களுக்கு தொந்தரவு இல்லேன்னா.. நாம ரெண்டு பேரும் இப்பவே சென்னைக்கு புறப்படலாங்களா..?

ஃபாதர் குரல் : சரி.. எனக்கு ஒரு சின்ன வேலை இருக்கு... அதை முடிச்சிட்டு உடனே உங்களுக்கு ஃபோன் பண்ணிடறேன்... (என்றதும் கவுண்டர் ரீஸீவரை வைத்துவிட்டு சோஃபா விடம் வர கிரணும் கௌரியும் நின்று கொண்டிருக்க.)

கிரண் : பெரியம்மா.. மாமா ரொம்ப டென்ஷனா இருக்காரு... கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கட்டும், நான் ஃபாதர் கூட

சென்னைக்கு போய் எல்லா விஷயத்தையும் தெரிஞ்சிகிட்டு, அந்த ஆள் கெடச்சா கையோட கூட்டிட்டு வந்திடறேன்...

கௌரி : ஆமாண்ணா.. கிரண் சொல்றது சரீன்னு தோணுது... அங்க போன பின்னால எவ்வளவு சுத்தனுமோ என்னமோ...?

கவுண்டர் : ரெஸ்ட் இருக்கட்டும்மா.. மொதல்ல இது எப்படி இங்க வந்ததுன்னு கண்டுபிடிச்சாகணும்மா...

கௌரி : இவ்வளோ வருஷமா கடவுளை நம்பி நல்லதே நடக்கும்னு எதிர்பார்த்து இருந்திருக்கோம்... அந்த கடவுள் மேலயே பாரத்தை போட்டு மனசை சமாதானப்படுத்திட்டு இருங்கண்ணா... கிரண் ஃபாதர் கூட போய் எல்லா விஷயத்தையும் தெரிஞ்சுகிட்டு வருவான்...

கவுண்டர் : சரிம்மா.. எப்படியோ செய்யுங்க... அந்த ஆண்டவன் விட்டவழி...

-Cut to

SC. No. 39 கிரண் மலைபங்களா Day / Int

கிரண் : (செல்லில் நம்ப...ரை அழுத்தி..... ஹலோ நாந்தான் டேடி... நம்ம திட்டத்துக்கு ஒரு பெரிய ஆபத்து வந்திருக்குது டேடி. (கிரணுடைய தந்தை நாகேந்திரன் குரல்.)

நா. குரல் : என்னடா..? அப்படி என்ன ஆபத்து..?

கிரண் : காணாம போன கஸ்தூரியின் வெள்ளி அரணா கயிறு இப்ப மாமா கைக்கு கெடச்சிருக்கு...

நா. குரல் : நெஜமாவா..? எப்படிடா..?

கிரண் : யாரோ ஒருத்தன் ரிச்சர்டுன்னு நம்ம ஊர் ஃபாதர் கார்ல மாமாவை பாக்கணோண்ணு வீட்டுகிட்ட வந்து எறங்கியிருக்கான்... அவன் மூலமாதான் அது... வந்திருக்கணும்... வேற எந்த சான்சும் இல்ல டேடி... எங்க ஊர் ஃபாதர் கிட்ட அவன் சென்னை ராயபுரத்தில இருக்கிற செய்ன்ட் ஸேவியர்ஸ் சர்ச்சுக்குதான் போறதுன்னு சொல்லியிருக்கான்... அதை கேட்டதும் மாமாவே ஃபாதரோட கிளம்பணும்னு இருந்தாரு.. நான் பெரியம்மா கிட்ட பேசி கொஞ்சம் ப்ரெஷர்

குடுத்தேன்... அவங்க பேசினதில மாமா என்னையே அனுப்ப ஒத்துக்கிட்டார்...

நா. குரல் : வெரி குட்.. மொதல்ல எப்படியாவது அந்த ஆளை கண்டுபிடிக்கணும். நீங்க கிளம்புங்க... நான் சென்னைக்கு உங்களை ஃபாலோ செய்றேன். ஃபாதரை எப்படி ஹேண்ட்ல் செய்யணோண்ணு அப்புறம் சொல்றேன்.

கிரண் : ஓகே டேட்... (என்று கட்செய்ய.......)

- Cut to

SC. No. 40 **ஜேம்ஸ் வீடு** Day / Ext

(ஜேம்ஸ் வீட்டின் முன்புறம் இருந்த திண்ணையில் சிறுவன் வில்லியம் உட்கார்ந்திருக்க பொலிஸ் ஜீப் அங்கு வருகிறது. அதிலிருந்து இறங்கிய PC1 PC2 சிறுவனிடம் வந்து.)

PC1 : டேய் பொடியா எங்கடா உன் குரு.. ?

வில்லியம் ; (எழுந்து நின்று) ஊருக்கு போயிருக்கார் சார்...

PC 2 : ஏண்டா டேய். நம்ம கிட்டயே உடுறியா...? (என்று அவன் காதை திருகி).

PC1 : போடா போய் அவனோட கிராக்கி ஒருத்தி இருந்தாளே அவள கூட்டினுவா.. (சிறுவன் ஓட)

PC2 : (சிகரெட் பற்ற வைக்க)

PC1 : டேய் எனக்கும் ஒரு தம் குடு...

PC2 : ஏன் உன்கிட்ட இல்லையா..? சரி. உன் ஜேப்ல இருக்கிறத என்க்கு குடு... என்ஜேப்ல இருக்கிறத உனக்கு தரேன்..

PC1 : கில்லாடி என் மகன்டா நீ.. (என்று சொல்ல லட்சுமி என்ட்ரி)

PC2 : வாம்மா வா.. எங்க உன் ராஜா.. ஐயா கூட்னுவரச் சொல்லியிருக்காரு...

லட்சுமி : உங்களாலதான் ஜேம்ஸ் கெட்டு குட்டிச்சுவரானது... நீங்க அவுருகிட்ட லஞ்சம் வாங்கினு வாங்கினு உட்டுடுறீங்க. அவரு அதே தைரியத்தில திருட்டு தொழிலை செஞ்சிக்கினே இருக்காரு... எவன் கெட்டா

உங்குளுக்கு என்னா சொல்லுங்க.. பணம் வந்தா போதுண்றீங்க...

PC1 : இதோடா.. அம்மா பேச்சு எங்கயோ போவுது...

PC2 : இந்த பேச்செல்லாம் எலக்ஷன்ல நிக்கிறதுக்கு ட்ரெய்னிங்பா...

PC1 : அவனை தூக்கிவச்சி இவ்ளோல்லாம் பேசறியே.. வா இன்ஸ்பெக்டர் ஐயா கிட்ட வந்து இப்படியே சொல்லு... உனக்கு மெடல் தருவாரு...!

PC2 : தரமாட்டாருடா... மெடல் குத்துவாரு...! (என்று சிரிக்க)

PC1 : ம்.... ஏறு வண்டியில..

லட்சுமி: எனக்கென்ன பயமா, நடங்கபோகலாம். (என்று ஜீப்பில் ஏற அங்கு வில்லியம் ஓடி வந்து)

வில்லியம் : அக்கா..நீ போ... நா போயி உங்க ஓனரம்மாகிட்ட சொல்லிட்டு வரேன்...!

- cut to

SC. No. 41 **மேரி வீடு** Day / Int

(ஜேம்ஸ் சூட்கேசுடன் உள்ளே வந்து கட்டிலில் படுத்திருந்த மேரியிடம் தாழ்ந்த குரலில்)

ஜேம்ஸ்: மேரி ஆன்டி.. ஸ்டெல்லா எங்கே...?

மேரி : ஃபாதர் அர்ஜன்டா ஏதோ ஊருக்கு அனுப்பியிருக்காரு. ஏம்பா என்ன விஷயம்... ?

ஜேம்ஸ் : நீயும் உன் வீட்டுக்காரரும்.. அஸ்ஸாமில இருந்தப்ப ஸ்டெல்லா பொறந்தான்னு.. எல்லார்கிட்டயும் சொல்லியிருக்கே...

மேரி : ஜீஸஸ் (என்று எழுந்து உட்கார்ந்து) ஆமா. அதுக்கு என்னா இப்போ ?

ஜேம்ஸ் : (மிரட்டும் குரலில்) அதுபொய்யின்னு எனக்கு தெரிஞ்சிபோச்சி. மரியாதையா ஸ்டெல்லா யாருன்னு உன் வாயாலயே சொல்லிடு. இல்லன்னா.. உன் மேல உயிரையே வச்சினு இருக்கிற ஸ்டெல்லாக்கு.. நீ அவளோட நெஜமான அம்மா இல்லேன்றத சொல்லிடுவேன்...

மேரி : டேய் ஜேம்ஸ்.. வாழ்க்கையில எனக்கிருக்கிற ஒரே ஒரு பந்தம் அவதாண்டா... அவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமையறவரைக்கும்...! நான் உயிரோட இருந்தாகணுண்டா...!

ஜேம்ஸ் : நான் இருக்கறப்ப உனக்கு ஏன் அந்த கவல... ? என்னிக்கிருந்தாலும் அவ எனுக்கு சேரவேண்டியவ-தானே....? நான் பாத்துக்கிறேன் உடு...

மேரி : கண்டிப்பா அவ உன்ன கல்யாணம் செஞ்சிக்க மாட்டா..! ஒரு படிப்பில்லே.. ஒரு நல்ல வேல இல்லே.. எப்படிடா கட்டிக்குவா உன்ன? நம்ம வட்டாரத்தில எல்லாரும் உன்ன ரவடின்னுதான் சொல்றாங்க...!

ஜேம்ஸ் : அதெல்லாம் எனுக்கு தெரியாது. அவ என்னை கட்டிக்காம இருந்தா.. வேற யாரையும் அவள கட்டிக்க உடமாட்டேன். உஷார். (என்று எக்ஸிட் ஆக)

(மேரி டேபிளிடம் வந்து உட்கார்ந்து ஒரு இன்லேண்ட் லெட்டரை எடுத்து எழுதத் தொடங்க)

- Cut to

SC. No. 42 **ஜேம்ஸ் வீடு** Day / Ext

(ஜேம்ஸ் வீடடின் திண்ணையில் வில்லியம் உட்கார்ந்திருக்க ஜேம்ஸ் சூட்கேசுடன் என்ட்ரி.. அவனை பார்த்த வில்லியம் குதித்து............ வந்து.)

வில்லியம் : (பதற்றத்துடன்) ஜேம்ஸ்ண்ணே (என, ஜேம்ஸ் அவன் தோளில் கை போட்டு)

ஜேம்ஸ் : என்னடா...?

வில்லியம் : கொஞ்ச நேரத்துக்கு முந்தி, போலீஸ்காரங்க வந்து உன்ன கேட்டாங்க... ஊருக்கு போயிருக்காருன்னு... சொன்னேன்... நான் லட்சுமி அக்காவை கூட்னுவரத்துக்கு அப்படிபோவ அக்கா இங்க வந்துட்டு அவங்கள என்னாவோ திட்டியிருக்குது.. அவங்க அக்காவ கூட்டினு ஸ்டேஷனுக்கு போனாங்க.. நான் போய் லட்சுமி அக்கா எஜமானி அம்மாகிட்ட சொன்னேன்... அவங்க கார் எடுத்துனு போனாங்க... (அப்போது கார் வந்து ஜேம்ஸ் வீட்டுமுன் நிற்க அதிலிருந்து லட்சுமியும் எஜமானியும் இறங்கி ஜேம்ஸிடம் வர)

ஜேம்ஸ் : வாங்கம்மா.. வணக்கம்மா..

எஜமானி : வணக்கம்பா... ஜேம்ஸ் இதப்பாருப்பா.. லட்சுமி ரொம்ப நல்ல பொண்ணு... உன் மேல உயிரையே வச்சிருக்கா... தப்பா நெனைக்காதே.. உன் மாதிரி ஆளுக்கு இப்படிப்பட்ட பொண்ணு கெடைக்கணும்ணா புண்ணியம் செஞ்சிருக்கணும்... இவளை கட்டிகிட்டு சமூகத்தில... ஒரு நல்ல மனுஷனா வாழப்பா. (என்று லட்சுமியின் தலையை தடவி விட்டு) இன்னும் நான் வரேம்பா... (என்று காரில் போய் உட்கார்ந்து புறப்பட (ஜேம்ஸ், லட்சுமியுடன் தன் வீட்டு வாசலிடம் வந்து பூட்டை திறக்க சூட்கேஸை கீழே வைக்க அது வாய்திறந்து கொள்கிறது அதைக்கண்ட ஜேம்ஸ் கோபத்துடன் தூ... ங்.... த்தா என்று அதை ஓங்கி உதைக்க)

Fade Out

SC. No. 43 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(போஸ்ட் மே(அ)ன் வந்து 'போஸ்ட்' என்று கூப்பிட ரமேஷ் அறையிலிருந்து வெளியேவந்து போஸ்ட்மே(அ)ன் கொடுத்த இன்லண்ட் லெட்டரை வாங்க, போஸ்ட்மே(அ)ன் எக்ஸிட், லெட்டரை ஆசையோடு....... திருப்பி பார்த்துக் கொண்டிருக்கும் போது ஸ்டெல்லா அங்கு வந்து.)

ஸ்டெல்லா : யாருக்கு மிஸ்டர் லெட்டர்... ?

ரமேஷ் : உங்களுக்குத்தான்... உங்க அம்மா அனுப்பியிருக்காங்க...

ஸ்டெல்லா : அதுக்குள்ள ஃப்ரம் அட்ரஸ்ஸ படிச்சிட்டீங்களா... ? (என்று பட்டென்று லெட்டரை பிடுங்கி எக்ஸிட் ஆக)

Cut to

SC. No. 43A **கெஸ்ட் ஹௌஸ் (ஸ்டெல்லா அறை)** Day / Int

(ஸ்டெல்லா உட்கார்ந்து அவசரமாக லெட்டரை பிரித்து வாய்விட்டு படிக்க தொடங்குகிறாள் ..............)

அன்புள்ள ஸ்டெல்லாவுக்கு,

உன் தாய் ஆசியுடன் எழுதுவது. இங்கு நான் சௌக்கியமாக இருக்கிறேன் . உன் ஆரோக்யத்திற்கு ஜீஸஸ் அருள் புரிவாராக.

ஒரு முக்கியமான விஷயம் என்ன வென்றால், ஜேம்சுக்கு உன்னை கட்டிக்கொடுக்க வேண்டும் என்று என்னை வற்புறுத்தி தொந்தரவு செய்துவருகிறான். உன்னை அடைவதற்காக அவன் எப்பேர்ப்பட்ட

காரியத்தையும் செய்வான். நான் உன்னுடைய தாய் அல்ல, நீ வேறு யாருக்கோ பிறந்தவள் என்று சொல்லவும் தயங்கமாட்டான். நீ அவற்றையெல்லாம் நம்ப வேண்டாம். நான்தான் உன் தாய். உன்னைத்தவிர இந்த உலகில் எனக்கு யார் இருக்கிறார்கள், இவ்வளவுதான் சங்கதி.

இப்படிக்கு உன் அம்மா
மேரி

(கடிதத்தை படித்த ஸ்டெல்லா தன் கண்களை துடைத்தவாறு.)

ஸ்டெல்லா : (தனக்குள்) இந்தம்மா ஏன் இப்படி எழுதியிருக்காங்க... ஜேம்ஸ் பேச்சப்போய் யார் நம்புவாங்க... நான் நம்புவனா, என்ற முகம் சோர்ந்து எழ, ஜன்னலிடம் வந்த ரமேஷ்)

ரமேஷ் : அம்மா என்ன எழுதியிருக்காங்க ?

ஸ்டெல்லா : ம்... சிக்கனுக்கு மசாலா பத்தலேன்னு எழுதி-யிருக்காங்க...!

ரமேஷ் : சோகத்திலும் சிக்கனா.....! (என்று ரமேஷ் ஃப்ரேம் அவ்ட் ஆக)

SC. No. 44 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(கவுண்டர் கார் கெஸ்ட் ஹௌஸிடம் வந்து நிற்க, கவுண்டர் காரிலிருந்து இறங்கி வந்து ஸ்டெல்லா அறை கதவை தயங்கியவாறு தட்ட ஸ்டெல்லா சற்று கோபத்துடன் 'யாரது' என்று கேட்டவாறு கதவை திறந்து கவுண்டரை கண்டதும்)

ஸ்டெல்லா : என்ன சார்.. (என, அவள் முகத்தில் சங்கடம் காணப்படுகிறது. அதே சமயம் ரமேஷ் தன் அறையிலிருந்து வெளியே வந்து)

ரமேஷ் : நமஸ்தே சார்...

கவுண்டர் : நமஸ்தே, வாப்பா ரமேஷ் (என்று ஸ்டெல்லா பக்கம் திரும்பி) ஏம்மா உன் முகம் வாடியிருக்கு... உடம்பு சரியில்லையாம்மா.. ?

ஸ்டெல்லா : (சற்றே கோபத்துடன்) அதெல்லாம் ஒண்ணுமில்லே, நீங்கே வந்த விஷயத்தை சொல்லுங்க..

கவுண்டர் : இப்படி கோபமா கேட்டா எப்படிம்மா சொல்றது...?

ஸ்டெல்லா : (நடித்தவாறு மெல்லியகுரலில்) சரி சொல்லுங்க...!

கவுண்டர் : ஒண்ணுமில்லேம்மா பாருவ நாளைக்கு சென்னை ஆஸ்பத்திரிககு கூட்டிட்டு போகணும்... நீயும் கூட வந்தா... ரொம்ப உதவியா இருக்கும்மா... நான் மதர் கிட்ட சொல்லி பர்மிஷன் வாங்கிட்டேன்...

ஸ்டெல்லா : அதெல்லாம் முடியாது.. என்ன கேக்காம ஏன் இப்படி செஞ்சீங்க.?

கவுண்டர் : ரமேஷ் நீயாவது கொஞ்சம் சொல்லேம்பா...!

ரமேஷ் : ம்.... (என்று சற்று யோசித்து) சொல்லுவேன் சார்... ஆனா நான்சொன்னா இவங்க உங்களுக்கு டபுள் நோ சொல்லிடுவாங்களே...

கவுண்டர் : பாரும்மா... உனக்கு எந்த தொந்தரவும் தரமாட்டோம்.... நீ எங்க கூட வரணுன்றது தான் எங்க ஆசை.... பாருவையும் உன் அம்மாவா நெனச்சி வாம்மா... (என ஸ்டெல்லா மனம் சற்று மாறுகிறது.)

ஸ்டெல்லா : ம்.. சரி... எப்ப திரும்பி வர்றது... ?

கவுண்டர் : (குஷியுடன்) நாளைக்கேம்மா...!

ஸ்டெல்லா : சரி போய் வரலாம் (ரமேஷிடம் திரும்பி) மிஸ்டர் ரமேஷ் நீங்க எனக்கு பதிலா மலைக்கு போய் மருந்து களை குடுத்துட்டு வாங்க... நான் சென்னைக்கு போய்ட்டு வர்றேன்... (என்று சற்று நெருங்கி) எதுக்கும் ஒரு களை இருக்கணும் மிஸ்டர்...!

கவுண்டர் ஆமாம்பா ரமேஷ் அந்த வேலைய நீயே முடிச்சிடப்பா. (ரமேஷ் முழிக்க)

- Cut to

SC. No. 45 **கவுண்டர் பங்களா** Mor / Ext

(பங்களாமுன் காரிடம் கவுண்டர் நின்றிருக்க கிரண் அங்கு வருகிறான், அவனை பார்த்த கவுண்டர்.)

கவுண்டர் : கிரண் இப்பதான் சென்னையிலிருந்து வர்றியா... ?

கிரண் : ஆமா மாமா....

கவுண்டர் : போன விஷயம் என்ன ஆச்சிப்பா... ஏன் ஒரு ஃபோன் கூட பண்ணல ?

கிரண் : நானும் நம்ம ஃபாதரும் சென்னை சர்ச் ஃபாதரை போய் மீட் பண்ணோம். அவர் ரிச்சர்டுன்ற பேர்ல ஆறு அட்ரஸ்

குடுத்தாரு. நாலு அட்ரஸ்ல அவங்களும் கெடச்சாங்க இன்னும் ரெண்டு பேரு ஊருக்கு போயிருக்கிறதா சொன்னாங்க..

கவுண்டர் : அந்த நாலுபேர் என்ன சொன்னாங்க...?

கிரண் : அவங்க நாலு பேருமே நம்ம ஊருக்கு வரவேயில்லேன்னு சொல்லிட்டாங்க...!

கவுண்டர் : அப்படியா, மிச்சம் ரெண்டு பேரை பார்த்தியா...?

கிரண் : ஃபாதரை அனுப்பிச்சிட்டு நான் அங்கயே தங்கியிருந்து பார்த்துட்டுதான் வந்தேன்... அவங்களும் இந்த ஊருக்கு வரலேன்னு சொல்லிட்டாங்க மாமா...!

கவுண்டர் : அப்ப இங்க வந்தவர் ரிச்சர்டுன்னு பொய் பேரை சொல்லி போயிருப்பாரா!? இதுல ஏதோ மர்மம் இருக்கு கிரண்... எதுக்கும் போலீஸ் கம்ப்ளைன்ட் குடுக்கணுமா இருந்தது...

கிரண் : வரும்போது அதையும் செஞ்சிட்டுதான வந்தேன் மாமா..! (என்று பொய் சொல்ல)) (அப்போது வீட்டி லிருந்து பாருவை கௌரி நிதானமாக கூட்டிவந்து கொண்டிருக்க)

கவுண்டர் : பாருப்பா.. இப்ப நான் உங்க அத்தைய கூட்டிட்டு சென்னை ஆஸ்பத்திரிக்கு போய்டிருக்கேன்... நீ எவ்வளவு சீக்கிரமா அந்த ஆள கண்டுபிடிக்கணுமோ அவ்வளவு சீக்கிரம் கண்டுபிடிக்க எல்லா ஏற்பாடும் பண்ணிடு... மத்ததை நான் வந்தபின்னால பேசிக்கிறேன். வரட்டா...

(என்று பார்வதியிடம் சென்று அவளுக்கு ஆதரவாக கையை பிடித்து காரிடம் வரும்போது, ஸ்டெல்லா தோளில் ஒரு வே(அ)னிடி பே(அ)க்குடன் அங்கு வர பார்வதியை பின் சீட்டில் உட்கார வைத்த கவுண்டர் ஸ்டெல்லாவிடம் திரும்பி)

கவுண்டர் : ஸ்டெல்லாம்மா.. நீ பாரு பக்கத்தில உக்காந்துகோம்மா (என, ஸ்டெல்லா பின் சீட்டில் உட்கார கவுண்டர் முன் சீடடில் உட்கார)

கௌரி : அம்மா ஸ்டெல்லா. அண்ணியை ஜாக்கிரதையா... பார்த்துக்கோம்மா...

ஸ்டெல்லா : பாருங்க மேடம்.. நான் எதுக்கும் ஒத்துக்கிறதில்லை... ஒத்துக்கிட்டா செய்யற வேலைய பெர்ஃபெக்டா செய்யாம விடமாட்டேன்...!

கவுண்டர் : கரெக்ட்டம்மா.. உங்க க்ரிஸ்டியானிடில ஒரு ஸிஸ்டம் ஒரு டிஸிப்லினுன்னு இருக்கும்மா...

ஸ்டெல்லா : ஏன் சார்.. ஐஸ் வக்கிறீங்களா?

கவுண்டர் : (சிரித்தவாறு) இருக்கிறததான் சொன்னம்மா. எப்படியும் சென்னைக்கு போய்க்கிட்டு இருக்கோம்.. ஐஸ் என்ன ஒரு பாக்ஸ் ஃபுல்லா ஐஸ்க்ரீமே வாங்கிட்டா போச்சு. சோமு வண்டி எடுப்பா. வரம்மா கௌரி.. கிரண்...

கௌரி : சரிங்கண்ணா (என, கார் கிளம்புகிறது.)

- Cut to

SC. No. 46 **நெடுஞ்சாலை** Day / Ext, car Int

(கார் சென்னையை நோக்கி போய்க்கொண்டிருக்கிறது. 2-3 பாஸிங் ஷாட்ஸ் பாரு கண்ணயர்ந்து உறங்கிய வண்ணம் இருக்க, ஸ்டெல்லா பாருவின் மடியில் தன்னையறியாமல் தலைவைத்து படுத்து, உறங்கிய நிலையில் இருக்க, அதை எதேச்சையாக பார்த்த கவுண்டர், அதிசந்தோஷத்துடன் ரசித்து மென்குரலில்.)

கவுண்டர் : சோமு பின்னாடி ஸ்டெல்லாம்மாவ கொஞ்சம் பாருப்பா... (என, சோமு கண்ணாடியை அட்ஜஸ்ட் செய்து பின் சீட்டை பார்க்க)

கவுண்டர் : ஸ்டெல்லா பேசும்போதுதான் புலி மாதிரி சீர்றது.. உள் மனசு ரொம்ப மெதுவுப்பா. பாரு.. எப்படி பூ மாதிரி பாரு மாடியில படுத்திருக்கு...

சோமு : ஆமாங்க எஜமான்.. நீங்க சொல்றதும் சரிதான்...!

- Dissolve

SC. No. 47 **சிடி ஹாஸ்பிடல்** Day / Int

(மனோவைத்தியர் சத்யா பாருவை பரிசோதனை செய்து அவளிடம் பேசும்போது அவளிடம் ரியேக்ஷன் எதுவும் இல்லை. ஆனாலும் அவளின் நடவடிக்கைகளை கண்டு சந்தோஷத்துடன், பாருவை மெதுவாக அழைத்துக்-கொண்டு ஹாலுக்கு வந்ததும் கவுண்டர் மற்றும் ஸ்டெல்லா உட்கார்ந்திருக்கும் சோஃபாவில் உட்காரவைத்து.)

டாக்டர் : மிஸ்டர் கவுண்டர் நீங்க ஃபோன்ல சொன்னதைப் போல உங்க மனைவிகிட்ட கொஞ்சம் இம்ப்ரூவ்மென்ட் தெரியுது...

கவுண்டர் : ஆமாங்க டாக்டர் (என்று ஸ்டெல்லாவை காட்டி) இந்த குழந்த வந்த பின்னாலதான் பாரு நடவடிக்கையில கொஞ்சம் மாற்றம் தெரியுது. ஆனா இந்தம்மாதான் நம்ம வீட்டுக்கு அடிக்கடி வரமாட்டேன்றாங்க. (அப்போது டாக்டர் ஸ்டெல்லாவை கேள்விக்குறியுடன் பார்க்க.)

கவுண்டர் : ஓ.. மன்னிக்கணும் டாக்டர். இவங்களை உங்களுக்கு அறிமுகமே செய்யலியே... இவங்க பெயர் ஸ்டெல்லா... B.Sc முடிச்சி நர்ஸ் டிரெய்னிங் முடிச்சிருக்காங்க... எங்க ஊர் பக்கத்துல மலைபிரதேசத்தில நடந்த கலவரத்தில பாதிக்கப்பட்டவங்களுக்கு செர்வீஸ் செய்ய வந்திருக்காங்க...

டாக்டர் : வெரி குட். செர்வீஸ் மைண்ட் இருக்க வேண்டும். பாரும்மா ஸ்டெல்லா... உன்ன பார்த்தப்ப பார்வதி அம்மாக்கு மனசு லேசாகிறது என்ற பட்சத்தில... நீ அவங்கள அம்மான்னு கூப்பிட்டா ரொம்ப நல்லது... அவங்க இன்னும் சீக்கிரமா குணமடைய வாய்ப்பு இருக்கு... நீ அவங்ககிட்ட கொஞ்சம் க்லோஸா பழகணும்மா... இதுவும் ஒரு சர்வீஸ்தானே. (ஸ்டெல்லா இரண்டுங் கெட்டானாக சங்கடத்தில் மாட்டிக் கொண்டவளாக அசடுவழிய சிரிக்க)

- Cut to

SC. No. 48 **மலைப்பிரதேச பாதை** Day / Ext,

(மலைப்பாதையில் ஜீப் போய்க்கொண்டிருக்கிறது. அதில் ரமேஷ் மற்றும் ட்ரைவர் குமார் இருக்கிறார்கள். ஜீப் திடீரென்று 'புர் புர்' சத்தத்துடன் நின்றுவிட, ட்ரைவர் இறங்கி வந்து பானட்டை திறந்து பார்க்க ரேடியேட்டர் ஹீட் ஆகி புகை வந்த வண்ணம் இருக்க ரமேஷும் இறங்கி வந்து)

ரமேஷ் : என்னாச்சு குமார்.....?

குமார் : ரேடியேட்டர் ஹீட் ஆகி இருக்கு சார். தண்ணி ஊத்தணும்...

ரமேஷ் : தண்ணி இல்லேண்ணா கேன் குடுங்க. நானே போய் எடுத்துட்டுவரேன்... எந்த பக்கம் போகணும்னு சொன்னா போதும்...

குமார் : (ஒரு திசையை காட்டி) பாருங்க அந்த பக்கம் ஒரு சின்ன ஃபால்ஸ் இருக்கு.. இந்தாங்க (என்று கேனை கொடுக்க ரமேஷ் அதை பெற்று சிறிது தூரம் செல்ல ஒரு பெண் பாடிக்கொண்டிருக்கும் அருமையான பாடல் கேட்கிறது. ஆச்சர்யம் மற்றும் ஆர்வத்துடன் ரமேஷ், பாட்டு வந்த திசையில் போக)

- Cut to

## பாடல் - 3

SC. No. 48A **மலைப்பிரதேசம் (நீர் வீழ்ச்சி)** Day / Ext

(நீர் வீழ்ச்சியில் ஒரு பெண் பாடியவாறு குளித்துக்கொண்டிருக் கிறாள். பாடல் முழுவதும், குளிக்கும் பெண் மற்றும் காட்டில் வரும் ரமேஷை மாறி மாறி காண்கிறோம். பாட்டு முடியும் தருவாயில் ஃபால்ஸிடம் வந்த ரமேஷ் கால் சறுக்கி தண்ணீரில் விழுந்துவிட. சத்தத்தைகேட்டு, அவனைக்கண்டு, பாடியவாறு குளித்துக் கொண்டிருந்த பெண், பயந்து கூக்குரலிட, காட்டுவாசிகள் நான்கைந்துபேர் ஓடிவந்து ரமேஷை தாக்க ஆரம்பிக்க, ரமேஷ் அவர்களை எதிர்க்காமல் தன்மேல் அடிவிழாதவாறு தடுத்துக்-கொண்டிருக்கையில் குமார் அங்கு வர, அவர்கள் தாக்குவதை நிறுத்த)

ரமேஷ்: அப்பா காட்டு ராஜாங்களா... நான் உங்க பொண்ணு குளிக்கறத பாக்கணோண்ற வேலையா வரலேப்பா... ஜீப்புக்கு தண்ணி எடுத்துணு போக வந்தேன்...!

காட்டு வாசி: (குமாரிடம்) இவரு உங்க ஆளுன்னு தெரியாது... சாமி நல்லதாச்சி நீங்க வந்தது...!

குமார் : சரி உங்க வேலைய போய்பாருங்க (என, காட்டுவாசிகள் எக்ஸிட்) வாங்க சார் (என அவர்கள் ஜீப் பக்கம் நடந்தவாறு)

ரமேஷ் : காலம் இவ்வளவு மாறியிருந்தும் பொண்ணுங்களை இப்படி கண்ணா பாத்துக்கறாங்களே.. அதனாலதான் பழங்குடிங்கள டிஸ்டர்ப் செய்யக்கூடாதுன்னும் அவங்கள அப்படியே வச்சிருக்ணோம்னு இவங்களை ஆராய்ச்சி செய்யறவங்க ரெக்கமெண்ட் பண்றாங்க போல இருக்கு. (பேசியவாறே ஜீப்பிடம் வர)

குமார் : இவங்க மாறமாட்டாங்க.... உக்காருங்க சார் போலாம் (என, இருவரும் ஜீப்பில் உட்கார வண்டி புறப்பட)

-Cut to

SC. No. 49 **கிராமத்து ஹாஸ்பிடல்** Eve / Int

(டாக்டரும் ரமேஷும் அவரவர்களின் வேலையில் ஈடுபட்டிருக்க, ரேகாவின் என்ட்ரி, நேராக ரமேஷிடம் வந்து)

ரேகா : என்ன மிஸ்டர் ரமேஷ்.. நீர் வீழ்ச்சியில பாதிங் ஸீன் பாக்க போய் பாடியை டேமேஜ் பண்ணிக்க இருந்தீங்களாமே (என்று சிரித்தவாறு சொல்லி) பேசாம ஒரு கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானே? ஏன் இந்த அல்ப ஆசை..?

ரமேஷ் : எங்க மாதிரி ஆளுங்க அடிவாங்கினா உங்க மாதிரி ஆளுங்களுக்கு குஷிதான்... ஏழைங்களுக்கு இதெல்லாம் சகஜம் விடுங்க....

ரேகா : அப்படீன்னா பணக்காரனா இருந்திருந்தா அந்த பொண்ண கிட்னேப் பண்ணியிருப்பீங்களா..?

ரமேஷ் : உங்க ஸ்டேண்டார்டுக்கு நான் பேச முடியாது. தயவு செஞ்சி ஆளை விடறீங்களா...?

ரேகா : ஸாரி மிஸ்டர் ரமேஷ்.. இதுக்கெல்லாம் கோவிச்சிக்கிட்டா எப்படி...? இந்த குடும்பத்தில சேர்ந்திருக்கிறவரைக்கும் நீங்களும் பணக்காரன்தான்...! (என்று டாக்டரை பார்த்து) டாக்டர் நான் நம்ம ரமேஷை கொஞ்சம் வெளிய கூட்டிட்டு போகலாமா? சர்ச்வரைக்கும் போயிட்டு வரணும்...

டாக்டர் : தாராளமா.. அவர் மனசும் கொஞ்சம் ரிலேக்ஸ் ஆகும். (என்று டாக்டர் சொன்னதும், ரேகா ரமேஷின் கையை பிடித்து 'சும்மா வாங்க ரமேஷ்' என்று வெளியே இழுத்து செல்ல.)

-Cut to

SC. No. 50 **கவுண்டர் பங்களா** Night / Ext

(கவுண்டர் வீட்டு முன் கார் வந்து நிற்கிறது. கவுண்டர், பாரு மற்றும் ஸ்டெல்லா இறங்க.)

ஸ்டெல்லா :அப்ப நான் போய் வரேன் சார்...!

கவுண்டர் : என்னம்மா இவ்வளவு அவசரம்... நம்ம வீட்லயே சாப்டுட்டு நிதானமா போகலாம் இல்லியா...? (ஸ்டெல்லா தன் அறைக்கு சென்று எப்படியாவது மாமிச உணவு சாப்பிட வேண்டும் என்ற ஆசையில், நடித்தவாறு)

ஸ்டெல்லா: இல்லிங்க சார். எனக்கு ஏனோ வயிறு சரியில்லை.. ஒரு மாதிரியா இருக்கு.. வரேன் சார் (என்று அவசரமாக எக்ஸிட்)

-Cut to

SC. No. 51 **கெஸ்ட் ஹௌஸ்** Night / Ext

(ஸ்டெல்லா தன் அறையை நோக்கி வர, ல.நா. அங்கு வர)

ல.நா. : வாங்கக்கா... இப்பதான் வந்தீங்களா சென்னையிலிருந்து...?

ஸ்டெல்லா: பாரு லட்சுமி.. உன்னால எனக்கு ஒரு ஹெல்ப் ஆகணும். சிக்கன் சாப்பிடாம என் நாக்கு செத்துட்டிருக்கு. இந்தா முன்நூறு ரூபா (என்று தன் பர்ஸிலிருந்து மூணுநூறு ரூபாய் நோட்டை கொடுத்து) போய் சிக்கன் வாங்கிட்டு வந்து பாதிய ஃப்ரை பண்ணு,.. பாதிய குழம்பு வச்சிடு... அதுக்குள்ள நான் சமையலுக்கு ரெடி பண்றேன்... (ல.நா. பணத்தை வாங்கி ஜேபியில் போட்டு) சரிக்கா. இப்ப வர்றேன்.. (என்று எக்ஸிட்)

(Time Lapse)

SC. No. 51.A **கெஸ்ட் ஹௌஸ் (கிச்சன்)** Night / Int

(ஸ்டவ் மேல் இருக்கும் கடாயில் எண்ணை காய்ந்திருக்க ல.நா. கழுவிய சிக்கன் துண்டுகளை கடாயில் போடும் சமயத்திற்கு சரியாக ரமேஷ் என்ட்ரி)

ரமேஷ் : ஏய்.. ஏய்.. ஏய்... நிறுத்து நிறுத்து (அங்கேயே இருந்த ஸ்டெல்லா, ரமேஷை கோபமாக பார்க்க)

ரமேஷ் : பாருங்கப்பா.. நீங்க சிக்கன் செஞ்சி சாப்பிடுங்க. நான் வேணாண்ணல. ஆனா எனக்கும் சமைக்கும் இந்த கடாயில மாத்திரம் செய்யக்கூடாது...

ஸ்டெல்லா: ஏய் மிஸ்டர். நீங்க என்ன ப்ராமின்னா.? நான்வெஜ் சாப்பிடறதில்லன்றதுக்காக நீங்க சுபீரியர் ஹ்யூமன் ஆயிடுவீங்களா... உலகத்தில இருக்கிற ஜனங்கள்ள 80% ஜனங்கள் நான்வெஜ் சாப்பிடறவங்கதான்... ஆதிகாலத்தில எல்லாரும் நான்வெஜ் சாப்பிட்டவங்கதான்.. தெரியுமா..?

ரமேஷ் : அப்படீன்னா இன்னும் நாம ஆதிமனுஷனாவே இருக்கணோண்றீங்களா..?

ஸ்டெல்லா: இவ்வளோ பேசறீங்களே.. சரி.. வார் காரணமா நாட்ல பஞ்சம் வந்து, உங்களுக்கு சாப்பிட நான்வெஜ்தான் கெடைக்குது.. அப்ப என்ன பண்ணுவீங்க...?

ரமேஷ் : பாருங்க மேடம்.. பாகிஸ்தான் சோல்ஜரையும் நாம மனுஷனாத்தான் பாக்குறோம். ஆனா அவன்

நம்மவங்களை கொன்னுட்டே வந்தா சும்மா இருக்க முடியுமா.? அவனை கொல்ல வேண்டியதுதானே...? அந்த சிசுவேஷன்ல உயிர் வாழ்ந்து எதிரிங்களை கொல்றதுக்காக, பிராணிங்களை கொன்னு சாப்பிடலாம்... ஆனா இப்படி பஞ்சம் இல்லாத காலத்தில் பிராணிங்களை கொன்னு சாப்பிடற ஆசை அதிகமாயிட்டா.. வார் டைம்ல உங்களுக்கு மனுஷன் கறிய சாப்பிடற ஆசை வந்தாலும் வரும் உஷாரா இருங்க...!

ஸ்டெல்லா: என்ன சொன்னீங்க யூ ஸ்டுப்பிட்.. (என்று கடாயை கீழே தள்ளி) எனக்கு இன்னிக்கு இந்த நான்வெஜ்ஜும் வேணா ஒண்ணும் வேணா (என்று வெளியேற)

ரமேஷ் : அப்படின்னா இன்னிக்கு மட்டும்தான் லட்சுமி...!

ல.நா. : உங்குளுக்கு மத்தியில நான் மாட்டிக்கிட்டேன் (என்று தன் தலையை இரண்டு கையால் பிடித்து கொள்ள)

ரமேஷ் : அது இயற்கையின் விதிப்பா... 58228

-Cut to

SC. No. 52 **கெஸ்ட் ஹௌஸ்** Mor / Ext

(ஸ்டெல்லா வெளியே வந்து அறையை பூட்டி, ஜீப்பிடம் வந்து ட்ரைவர் குமாரிடம்)

ஸ்டெல்லா: எங்க அந்த கம்பவுண்டர்...? இன்னும் வரலையா...? (என்று ரமேஷ் அறையை பார்க்க, அது பூட்டியிருக்க, அங்கு வந்த ல.நா.)

ல.நா. : அவர் காலைலியே எழுந்து.. நடந்துகிட்டே போயிட்டாரு...

ஸ்டெல்லா: அப்படியா..? சரிபோலாம்.. குமார் நாம ஹாஸ்பிடல் போய் அங்கிருந்து மலைக்கு போகணும் (என்று ஜீப்பில் உட்கார, ஜீப்புறப்பட)

-Cut to

SC. No. 53 **கிராமத்து ஹாஸ்பிடல்** (H.W.O.) Day / Int

(டாக்டருக்கு சற்று தள்ளி ரமேஷும் ரேகாவும் நெருக்கமாக நின்று சிரித்து பேசிக் கொண்டே மருந்துகளை எடுத்து வைத்துக்கொண்டிருக்க, உள்ளே வந்த ஸ்டெல்லா நேராக ரேகாவிடம் வந்து)

ஸ்டெல்லா: பாரும்மா.. எவ்வளவுதான் படிச்சிருந்தாலும் லேடீஸ்ங்க ஜென்ட்சுங்க கிட்ட கொஞ்சம் தூரமாத்தான் இருக்கணும்... அதுவும் இப்படி ஊமைமாதிரி இருக்கிறவங்க கிட்ட.. (என்று ரமேஷை பார்க்க)

ரேகா : ஸ்டெல்லா அக்கா.. எதிலேயும் தெளிவு இருந்தா எப்ப, யார் கூட வேணும்னாலும் பழகலாம்...! இப்பெல்லாம் தொட்டாலே சொக்கிப் போயிடற யங்ஸ்டர்ஸ் மத்தியில நம்ம ரமேஷ் மாதிரி இன்டெலெக்சுவல் ஃப்ரெண்ட் கெடைக்கிறது ரொம்ப ரேர்...! எனக்கு கல்யாணம்னு ஆனா நம்ம ரமேஷ் மாதிரியான ஆளைத்தான் கட்டிக்குவேன்... உங்க விஷயத்துல ரமேஷ் எப்படீன்னு நான் புரிஞ்சிக்கிட்டேன்... நீங்க புரிஞ்சிக்கோங்க... (என்று ஸ்டெல்லாவின் கன்னத்தை கிள்ளி) வரேன் ஸ்டெல்லாக்கா, பாய் ரமேஷ் (என்று எக்ஸிட்)

ஸ்டெல்லா: என்ன மிஸ்டர்... இந்த பொண்ண புடிச்சிட்டா பெர்மனென்ட்டா பணக்கார வீட்ல ஃபேமிலி மெம்பர் ஆயிடலாம்னு பாக்கிறீங்களா...?

ரமேஷ் : ஏன்... நீங்களும் ஒரு பணக்கார பையனை புடிச்சிக்கோங்க.. எதுக்கும் ஒரு களை வேணும் மேடம்..!

டாக்டர் : அம்மா ஸ்டெல்லா உங்க சண்டையே ஒரு சுவாரஸ்யமானதுதான். மலைக்கு போற ஐடியாவே இல்லியா...?

-Cut to

SC. No. 54 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext & Int

(கவுண்டர் ஸ்டெல்லா அறையிடம் சென்று கதவை தட்டி)

கவுண்டர் : அம்மா ஸ்டெல்லா.. (என்று அன்போடு அழைக்க)

(Interior Close Shot)

ஸ்டெல்லா : ஐயோ.. ஜீஸஸ் இன்னிக்கி எங்க கூட்டிட்டு போகணும்னு சொல்றாரோ (என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு வந்து கதவை சட்டென்று திறந்து)

(Exterior)

ஸ்டெல்லா : (சற்று ஜோராக) என்ன சார் (என, கவுண்டர் சற்றே பின்வாங்கி சுதாரித்துக் கொண்டு)

கவுண்டர்: டிபன் ஆச்சாம்மா... (என்று கேட்டவாறு திரும்பி வெளியிலிருந்து ரமேஷ் வருவதை கண்டு) வாப்பா ரமேஷ் (என, அவன் அருகில் வர) பாருப்பா ரமேஷ்

இன்னைக்கு நீயும் ஸ்டெல்லாவும் எங்க கூட கோயிலுக்கு வரணும்.

ஸ்டெல்லா: என் ரூம் கதவ தட்டி என்ன கூப்பிடிட்டு... நான் கோயிலுக்கு வர்றதுக்கு அவர்கிட்ட கேட்டிட்டிருக்கீங்களே என்ன என்னன்னு நெனச்சிட்டிருக்கீங்க...?

ரமேஷ் : அவர் மனசுக்கு பிடிச்ச.. அழகான கோபக்காரப் பொண்ணுறண்ணு தெரிஞ்சிக்கிட்டிருக்காரு...!

கவுண்டர் : கரெக்டா சொன்னப்பா...

ஸ்டெல்லா : பாருங்க சார்... நான் இந்த ஊருக்கு வந்திருக்கிறது உங்க கூட கோயிலுக்கும் ஹாஸ்பிடலுக்கும் சுத்திக்கிட்டிருக்கிறதுக்கில்ல... இருக்கிறதுக்கு ஃப்ரீயா இடம் கொடுத்தீங்கன்னு ரொம்பவே டாமினேட் பண்றீங்களே...?

கவுண்டர் : என்னம்மா அப்படி சொல்லிட்டே. நீ எங்க கூடவே இருந்திடரேன்னு சொல்லிடு.. இங்க எல்லாமே உன்னுதாயிடும்மா...!

ரமேஷ் : கோயிலுக்குதானே கூப்பிடறாங்க...

ஸ்டெல்லா : மிஸ்டர்.. நீங்க பேசாதீங்க. நான் இந்து கோயிலுக்கெல்லாம் போறதில்லை...!

கவுண்டர் : எதையும் வெறுக்கக்கூடாதம்மா... நான் தவறாம சர்ச்சுக்கு ஞாயிற்றுகிழமையில போய்வரேனே. வெறுப்புதாம்மா மனுஷன கெடுக்கறது...

ஸ்டெல்லா : சரி.. இதுதான் ஃபர்ஸ்ட் அன்ட் லாஸ்ட் நெக்ஸ்டைம் என்ன இப்படி கோயிலு அங்க இங்கன்னு கூப்பிடக்கூடாது...!

கவுண்டர் : ரொம்ப சந்தோஷம்மா... நீயும் ரமேஷும் முகம் கைகால் கழுவி ட்ரெஸ் செஞ்சிட்டு தயாரா இருங்க... நான் போய் வீட்டுல கூட்டிட்டு இங்கியே வந்திடறேன்...

-Dissolve

SC. No. 54.A **கெஸ்ட் ஹௌஸ்** Day / Int

(ஸ்டெல்லா புடவை உடுத்தி மேக்-அப் செய்து கொண்டிருக்க, கதவை தட்டும் சத்தம் கேட்க)

ஸ்டெல்லா : யாரது...?

ல.நா. : நானக்கா...!

ஸ்டெல்லா : கம்இன்.. (ல.நா. உள்ளே வந்து ஸ்டெல்லாவை பார்த்து)

ல.நா. : என்னாக்கா எப்பவும் சுடிதார் போட்டுனு இருப்பே.. இன்னிக்கு பொடவை கட்டினு இருக்கிறியே... நீ இந்த பொடவையில எவ்ளோ அளகா இருக்ற தெரியுமா...?

ஸ்டெல்லா : எனக்கும் மேனர்சுன்றது தெரியும் லட்சுமி.. கோயிலுக்கு போறோம் இல்ல.. எதை செஞ்சாலும் பெர்ஃபெக்டா செய்யணும்...!

ல.நா. : அப்படீன்னா குங்குமத்தை வச்சிக்கங்க சரியாபோவும்...

ஸ்டெல்லா: கோயிலுக்கு போறவங்க எல்லாம் குங்குமத்தை வச்சிக்கிட்டுதான் போறாங்களா.?

ல.நா. : புருஷன் இல்லாதவங்க குங்குமம் வச்சிக்காம போவாங்க

ஸ்டெல்லா : எனக்கும் புருஷன் இல்ல இல்லியா...?

ல.நா. : ஐயோ, அப்பிடி இல்லக்கா அது... புருஷன் செத்தவங்க வச்சிக்கமாட்டாங்க...

ஸ்டெல்லா: அப்படீன்னா புருஷனுக்காகத்தான் குங்குமம் வச்சிக்கிறாங்க.. கடவுளுக்காக இல்ல இல்லியா...?

ல.நா. : (முழிக்கிறான்)

ஸ்டெல்லா: அது ஏன் புருஷன் செத்தா பொண்டாட்டி குங்குமம் வச்சிக்கிறதில்லை.? பொண்டாட்டி செத்தா உன் மாதிரி ஆம்பளைங்க என்னத்தை விட்டுடறாங்க...? (என்று ஹேண்ட் பே(அ)க்கை எடுக்க ஸ்டெல்லா திரும்ப,

ல.நா.: தன்னை ஸ்டெல்லா ஆம்பளை என்று கூறிவிட்டாளே என்ற நாணத்தால் குறுகி ஸ்டெல்லாவுக்கு ஏதும் சொல்லாமல் வெளியேற.) (ஹேண்ட் பே(அ)குடன் திரும்பிய ஸ்டெல்லா 'எல்லாம் போகஸ்' என்று ல.நா. அங்கு இல்லாததை கண்டு 'எங்க லட்சுமி' என்று கேட்டுக்கொள்ள கார் சத்தம் கேட்டு வெளியேற)

-Fade out

SC. No. 55 **கிராமத்து கோயில்** Day / Ext

(கோயில் கோபுரத்திலிருந்து ஃஜூம் பே(அ)க் ஆகிறது. கவுண்டரின் கார் மற்றும் ஜீப் கோயில் முன் வந்து நிற்கிறது. காரிலிருந்து கவுண்டர், கௌரி, பாரு, இறங்க ஜீப்பிலிருந்து ஸ்டெல்லா, ரேகா, ரமேஷ் இறங்கி அனைவரும் கோயில் வாசல் முன் வர, பூஜாரி அவர்கள்மேல் புஷ்பங்களை தூவி வரவேற்கிறார்.)

## (க்ரே(அ)ஃபிக் ஒர்க்)

(சாமந்திப்பூவின் இதழ் ஒன்று நிதானமாக சரிந்து வந்து, ஸ்டெல்லாவின் நெற்றியில் பொட்டுவைக்கும் இடத்தில் சரியாக உட்கார்ந்து விடுகிறது)

(ஸ்டெல்லா தன்மேல் விழுந்த பூக்களை மெதுவாக உதறிக் கொள்ள அப்போது தற்செயலாக ஸ்டெல்லாவை கவனித்த கவுண்டர், தன்னை அறியாமல் கை கூப்பிவணங்கி)

கவுண்டர் : (பரவசத்துடன்) அம்மா தாயே எல்லாம் உன் மாயை. (என)

ஸ்டெல்லா : என்ன சார் என்ன பாத்து தாயே மாயைன்றீங்க...?

(அனைவரும் ஸ்டெல்லா பூவின் இதழ் பொட்டுடன் இருப்பதை ஆச்சர்யத்துடன் பார்த்து நிற்க)

கவுண்டர் : (சுதாரித்துக்கொண்டு) நீ இப்படியே வாம்மா.. உள்ளே போகலாம்... (என, எல்லோரும் கோயிலுக்குள் நுழைகிறார்கள்)

-Cut to

SC. No. 55.A **கோயில் (உள்ளே)** Day / Int

(மூலஸ்தானம் திரையிடப்பட்டுள்ளது, எல்லோரும் கை கூப்பி நின்றிருக்க, ஸ்டெல்லா உள்ளே அங்குமிங்கும் பார்த்தவாறு நின்றிருக்க, பூஜாரி வந்து கவுண்டரிடம்)

பூஜாரி : ஐயா. எல்லாம் தயாராயிருக்கு பூஜையை ஆரம்பிக்கலாமா...?

கவுண்டர் : இதெல்லாம் என்ன கேட்டுட்டுதான் செய்யணுமா. ஆரம்பியுங்க.. (என்று ஸ்டெல்லாவை பார்க்க ஸ்டெல்லா புன்சிரிப்புடன் திரைப்பக்கம் திரும்ப, பம்பை, உடுக்கை சத்தம் ஆரம்பமாகிறது. அதை வாசிப்பவர்களை கண்டு பயங்கொண்டு ஸ்டெல்லா கவுண்டர் பக்கம் ஒட்டி நின்று திரைப்பக்கம் பார்த்திருக்க, பம்பை உடுக்கை சத்தம் அதிகமாகி மணி ஓசையும் சேர்ந்து உக்கிரமாக ஒலிக்க, திரை விலக, காளி உக்ர ரூபத்தில் அலங்காரத்துடன் அழகாகவே காண்கிறாள். ஆனால் வாத்ய ஓசை இன்னும் அதிகரிக்க அதிகரிக்க காளியை கைக்கூப்பி வணங்கி நின்ற ஸ்டெல்லா பயத்தின் அதிர்ச்சியில் நிதானமாக, மயங்கி விழ, ரமேஷ் அவளை கவனித்துவிட, மற்றவர்

எல்லோரும் வாத்தியங்களின் ஓசையோடு கண்மூடி பக்தி பரவசத்தில் நின்றிருக்க, சட்டென்று ரமேஷ் ஸ்டெல்லாவை தூக்கிக் கொண்டு வெளியேற)

-Cut to

SC. No. 55.B **கோயில் (வெளியே)** Day / Ext

(ஸ்டெல்லாவை வெளியே தூக்கி வந்த ரமேஷ், உட்காரும் கல்லின்மேல் படுக்க வைத்து தண்ணீர் கொண்டு வர செல்ல, கவுண்டர் பரிவாரம் 'என்ன ஆச்சு' என்று பதற்றத்துடன் ஓடிவர பின்னால் கௌரி பாருவை அழைத்துக்கொண்டு வர, ரேகா, ஸ்டெல்லாவின் முகவாய்கட்டையை மெதுவாக ஆட்டி 'ஸ்டெல்லக்கா' என்று அழைத்து அவள் நெற்றியை தொட்டுப்பார்க்க, பாருவுடன் கௌரி அங்கு வர ரமேஷும் தண்ணீர் சொம்புடன் அங்கு வந்து ஸ்டெல்லா முகத்தில் தண்ணீரை தெளிக்க, தண்ணீர் பட்டதில் ஸ்டெல்லா (முகம் சிலிர்க்க கண்திறந்து, மெதுவாக எழுந்து உட்கார்ந்து மௌனமாக அனைவரையும் பார்த்து)

ஸ்டெல்லா : நான் எப்படி இங்க வந்தேன்...?

ரமேஷ் : நான்தான் இங்கு கொண்டுவந்து போட்டது (என)

ஸ்டெல்லா : போட்டதா.. (என்று சில நொடிகள் கழித்து கவுண்டரை பார்த்து)

ஸ்டெல்லா: ஏன் சார்.. கடவுள இப்படிதான் கும்பிடறதா..? பாக்கறதுக்கு பயங்கரமா? கடவுள் பாக்கறதுக்கு சாந்தரூபமா இருந்தாதானே நாமும் சாந்த மனோபாவத்தில் கும்பிட முடியும், மனசுக்கும் அப்பதானே சாந்தி கிடைக்கும். ஏன் இப்படி கடவுள பயங்கரமா கும்பிட்டு ஜனங்களும் பயங்கரமா நடந்துக்கறா மாதிரி செய்யறீங்க (என்று கூறி தன் ஹேண்ட் பே(அ)கிலிருந்த பெட்பாட்டிலை எடுத்து கடகடவென்று தண்ணீரை குடித்து முடிக்க)

கவுண்டர் : நான் ஒண்ணு சொல்லட்டுமாம்மா...?

ஸ்டெல்லா : சொல்லுங்க... ஆனா உங்க கடவுள்தான் ஒசத்தீன்னு 'ஆர்க்யூ' பண்ணாதீங்க...

கவுண்டர் : சரிம்மா.. உனக்கு ரெண்டு அண்ணன்மார்கள் என்று வச்சிக்குவோம். ரெண்டு பேரும் நல்லவங்க... ஒருத்தன்

ரொம்ப சாது. இன்னொருத்தன் முரடன்... அனாவசியமா சண்டைக்கு போக மாட்டான்... வந்த சண்டைய விடமாட்டான்...! ஒரு நாள் நீ தெருவில வரும்போது ஒருத்தன் உன்னை பலாத்காரம் செய்ய முயற்சிக்கிறான்.... அப்ப நீ அவங்கிட்டயிருந்து தப்பிச்சி வந்து எந்த அண்ணன் கிட்ட போய் சொல்லுவே...?

ஸ்டெல்லா : முரட்டு அண்ணன் கிட்டதான் சொல்லுவேன்... அது சரி. இதுக்கும் நான் உங்க சாமிய பாத்து பயந்து மயங்கி விழுந்ததுக்கும் என்ன சம்மந்தம்...?

கவுண்டர் : இருக்கும்மா...! ஊர் ஜனங்களும் அப்படித்தான். துஷ்ட சக்திகளால ஊருக்கு கெடுதல் ஆகாமல் இருக்கட்டும்னுதான் அதை அழிக்கும் என்ற நம்பிக்கையில் உக்ரமா இருக்கிற சாமிங்களை கும்பிடறது...! அதுக்குத்தான் நம்ம பெரியவங்க ஜனங்களுடைய மனோபாவத்துக்கு தகுந்தாமாதிரி கடவுளுங்களை விதவிதமா உருவகுத்தாங்க... இந்து தர்மத்தில நெறைய படிகள் உண்டம்மா... கடைசியில காற்றுதான் கடவுளுன்னு சொல்ற ஞானிங்கதான் அதிகம்...

ஸ்டெல்லா : ஓஹோ ஹோ.. ஒரு ஒரு ஸிசுவேஷனுக்கு ஒரு ஒரு கடவுள்....!

ரமேஷ் : ஆமாங்க மேடம்.. உடம்புக்கு கோல்ட் ஆயிட்டா சிக்கன், ஹீட் ஆயிட்டா போர்க், நார்மலா இருந்தா மட்டனுன்னு நீங்க நம்ம லட்சுமிக்கு அட்வைஸ் பண்ணியிருக் கீங்களே அப்படித்தான் (எல்லோரும் பயந்தவாறே சிரிக்க)

ஸ்டெல்லா : ஓஹோ நீங்க இவ்ளோ பேச ஆரம்பிச்சிட்டீங்களா...?

கவுண்டர் : வாம்மா ஸ்டெல்லா போய் நல்லா ரெஸ்ட் எடும்மா (என, எல்லோரும் புறப்பட)

-Cut to

SC. No. 56 **மேரி வீடு** Eve / Int

(மேரி கட்டிலில் படுத்திருக்க, வீட்டு ஓனர் நரசிம்மனின் குரல்) (அம்மா உங்களுக்கு லெட்டர் வந்திருக்கு)

மேரி : வாங்க உள்ளே. (உள்ளே வந்த நரசிம்மன் மேரியிடம் கடிதத்தை கொடுத்துவிட்டு)

நரசிம்மன் : நீங்க சர்ச்சுக்கு போயிருந்தப்ப போஸ்ட்மேன் குடுத்துட்டு போனான்... நானும் வெளில போய்ட்டு இப்பதான் வந்தேன்... அப்ப நான் வரேம்மா.. (என்று கதவை மூடி வெளியேற)

(மேரி அவசரமாக கடிதத்தை பிரித்து படிக்க துவங்கும் சமயம் ஜேம்ஸ் கதவை தள்ளி உள்ளே வந்து)

ஜேம்ஸ் : என்னா.. வீட்டு ஓனர் லெட்டரோட வந்துட்டு போறான். யாருகிட்டயிருந்து வந்திருக்குது...? (என்று கேட்டவாறு, மேரியிடமிருந்து லெட்டரை பிடுங்கி ஃப்ரம் அட்ரஸை படித்து) ஓஹோ பெத்தவங்க ஊட்டுக்கே மகள அனுப்பி வச்சிட்டியா.. அவுங்களே அப்பா அம்மான்னும் சொல்லிட்டியா....?

மேரி : என்னா... (என்று ஆச்சர்யத்துடன்) அவள பெத்தவங்க வீட்டுக்கே போயிருக்காளா..? நீ சொல்லித்தாண்டா எனக்கு இது தெரியுது... பாத்தியா நான் இன்னும் ரொம்ப நாள் இருக்கமாட்டேன்னு.. ஜீஸஸ் அவ வீட்டுலயே சேத்துட்டாரு... இன்னுங்கூட இந்த விஷயத்தை அவங்களுக்கு சொல்லாமபோனா கர்த்தர் என்ன மன்னிக்கமாட்டார்...

ஜேம்ஸ் : ஓஹோ.. நான் சொல்லிதான் உனுக்கு தெரிஞ்சிதா.. என்னா அேக்டிங் பண்றியா? நீ சொல்றது நிஜம்னா இனிமே இந்த விஷயம் யாருக்கு தெரிஞ்சாலும் ஸ்டெல்லா உயிரோட இருக்கமாட்டான்றதை தெரிஞ்சிகோ. என்னபத்தி தெரியும் இல்ல...? ஸ்டெல்லா எனுக்கு சேரவேண்டியவ உஷார். (என்று கடிதத்தை அவள் மீது வீசியடிக்க, மேரி ஜீஸஸ் படத்தை பார்த்து 'ஜீஸஸ்' என்று கைகூப்பி வணங்க)

- Fade Out

SC. No. 57 **காவல் நிலையம்** (H.W.O.) Day / Int

(சப் இன்ஸ்பெக்டர் முன் ஜேம்சும் லட்சுமியும் நின்றிருக்க)

எஸ்.ஐ. : டேய் நீ 'டீல்' செஞ்சிருக்கிறது மினிஸ்டர் வீட்டு மாலு... இன்னும் அரை மணி நேரத்துல கமிஷனர் வராரு... எதுக்கும் அவர் கால்ல விழுந்து மன்னிப்பு கேட்டுவை...

ஜேம்ஸ் : எனுக்கு மூணு நாள் டைம் குடுத்தா போதும் சார்.. நான் போய் அவனுங்ககிட்டயிருந்து எப்பிடியாவது செலைய் வாங்கிணு வந்துடுவேன் சார்..

| | |
|---|---|
| எஸ்.ஐ. : | உன்ன எப்படிடா வெளிய உடறது… நாளைக்கு மினிஸ்டர் ஆளுங்க வந்து.. நீ உள்ள இல்லேன்னா அவங்க ஆட்டத்தை காட்டிடுவானுங்களே… (லட்சுமியைகாட்டி) இவளுக்கு உன் ஆளுங்களை தெரியும் இல்ல…? அனுப்பு இவளையே… உனுக்காக என்னா 'டயலாக்' அடிக்கறா இவ… |
| லட்சுமி : | ஆமா ஜேம்ஸ்.. நான் போய் அவங்களை கெஞ்சி கால்ல விழுந்தாவது அந்த செலைய கொண்டாந்துடறேன்… |
| ஜேம்ஸ் : | உனுக்கு தெரியாது லட்சுமி… அவங்க ரொம்ப மோசமானவனுங்க… எதுக்கும் பாக்கமாட்டானுங்க… நீ என் ஆளுன்னு தெரிஞ்சிருந்தா கூட உன் கிட்ட நல்ல மாதிரியா நடந்துக்க மாட்டானுங்க… அதுவுமில்லாம கோவா கிட்டயா இருக்கு.? |
| லட்சுமி : | நீ இந்த திருட்டு தொழில உடரதா இருந்தா என் உயிரே போறதா இருந்தாலும் இதை நான் செய்றேன்… அவங்கள்ள யார் கிட்ட பேசணும்னுமட்டும் சொல்லு… |
| எஸ்.ஐ. : | டேய் உனுக்காக அவ்ளோ தில்லா கேட்டுனு இருக்கா இல்ல… அனுப்புடா… |
| ஜேம்ஸ் : | சார் நான் இவ கிட்ட கொஞ்சம் சபரேட்டா பேசணும்.. |
| எஸ்.ஐ. : | ம்..ம்.. போ..<br>(ஒரு மூலைக்கு சென்று லட்சுமியும் ஜேம்சும் கிசுகிசுத்தபின்) |
| லட்சுமி : | சரி ஜேம்ஸ் நானே போய் வரேன்.. நீ தைரியமா இரு… |
| ஜேம்ஸ் : | ம்ம்.. போவும்போது மறக்காம வில்லியம்ம கூட்டிணுபோ.. (லட்சுமி எக்ஸிட்) (ஜேம்ஸ் அவள் போன திசையை பார்த்து நிற்க) |

-Cut to

SC. No. 58 **குந்தாபுரம் மீனவன் வீடு** Day / Int

(மீனவன் மாதேவா ஒரு பழைய பேப்பர் ஒன்றை கையில் பிடித்து தன் மனைவி மாதேவியிடம் வந்து உட்கார்ந்து)

| | |
|---|---|
| மாதேவா : | இங்க பாத்தியா மாதீ.. நம்புளுக்கு 16-17 வருஷத்துக்கு முந்தி ஒருத்தன் வந்து அனாதை கொளந்தேன்னு ஒரு புள்ளைய குடுத்துட்டு போனானே.. அது காணாம போன கொளந்தேன்னு பேப்பர்ல வந்திருக்குது.. அதுல அவன் அரணாகயிறு போட்டோ கூட போட்டிருக்காங்க பாரு… |

மாதேவி : (பார்த்து ஆச்சர்யத்துடன்) ஆமா இது நம்ம ரமேஷ் புள்ளை தில்லையா...! உனுக்கு எங்க கெடச்சிது இந்த பேப்பர்...!

மாதேவா: ஏ.. உப்பு வாங்கினு வந்த பேப்பர் இது... புள்ளையோட மொகத்தை பாத்ததுமே தெரிஞ்சிகிட்டேன்... படிச்ச பெறகுதான் முளுசா தெரிஞ்சிச்சி... அவன்கூட. ஒரு பொட்டபுள்ள கூட காணாம போயிருக்காளாம்...!

மாதேவி : (நடந்ததை நினைத்துபார்த்தவளாக) உங்கண்ணனுக்கு புள்ளைங்க இல்லேன்னு அவருக்கு குடுத்து, அவுரு பொஞ்சாதி அந்த புள்ளைய எப்பவும் அடிச்சினே இருக்கான்னு, உங்க அண்ணன் அந்த புள்ளைய யாரோ மருந்து கடக்காறன் ஊட்டுல வேலைக்கு விட்ட வரைக்கும் தெரியும்.. அப்பறம் அந்த புள்ளை என்ன ஆனான்றதே தெரியாதே நம்புளுக்கு..

மாதேவா : அப்படியே விசாரிச்சினே போனா தெரிஞ்சிடுமில்ல...

மாதேவி : ஆமாய்யா.. அந்த புள்ளை இடுப்புல இருந்த வெள்ளி செயினை சேட்டுகிட்ட வித்து.. அந்த சொல்ப பணத்துல வியாபாரம் ஆரம்பிச்சோம்... அதுனாலதானே இப்ப நாம்ப நல்லா இருக்கிறோம்... அந்த புள்ளையபத்தி இவ்ளோ தெரிஞ்ச பின்னால புள்ளைய கண்டுபுடிச்சி அவங்க வீட்டுல கொண்டுபோய் சேக்கலேன்னா அந்த கடல் தாயி நம்மள சும்மா விடமாட்டாய்யா...!

மாதேவா : நல்லதாச்சி.. நாம வித்த அந்த செயினை சேட்டு ஒண்ணுமே பண்ணாம கெடப்புல வச்சிருந்தான்... ஒரு வருஷம் களிச்சி ரெட்ட பணம் குடுத்து அதை கொண்டாந்தோம். கவனமிருக்கா.?

மாதேவி : ஆமாய்யா... இந்த செயினு இல்லேன்னா அந்த புள்ள அந்த ஊட்டு புள்ளாதான்னு எப்படியா சொல்லமுடியும் வேற அடையாளம் எதுனா குடுத்திருக்காங்களா...?

மாதேவா : ஒடம்பு அடையாளம் எதுவும் இல்லை... வேற நகைங்க இருக்குது. ஆனா நம்புளுக்கு கெடச்சிது அந்த வெள்ளி அர்ணாகயிறு ஒண்ணுதானே...?

மாதேவி : தம்பிய மொதல்ல கண்டு பிடிச்சாகணும்.. நாளைக்கே போலாமா?

மாதேவா : நாளைக்கே எப்பிடி... வாரத்து வேலை தலமேல இருக்குதே.. அர்ஜன்டான வேலயெல்லாம் முடிச்சவொடனே போலாம்...

மாதேவி : சரி அப்படியே செய்யலான்யா.. (என்று காரியத்த தொடங்க)

-Cut to

SC. No. 59 **கவுண்டர் பங்களா** Day / Int

(மறுநாள் தீபாவளி பண்டிகைக்காக வந்துள்ள சுற்றத்தார் நடமாட்டத்தால் வீட்டில் குதூகலம் காணப்படுகிறது. கவுண்டர் சோஃபாவில் உட்கார்ந்திருக்க, அவரிடம் வந்த மேனேஜர்)

மேனேஜர் : நம்ம ஊரின் பழைய பார்ட்டி சகலகலாவல்லி, நாட்யமணி நாகவேணியம்மா வந்திருக்காங்க உங்களை பார்க்கணுமாம்.!

கவுண்டர் : இப்ப என்னப் பார்க்க ஏன் வந்தாங்க...?

மேனேஜர் : பழைய விசுவாசம் ஐயா.. 20 வருஷம் கழிச்சி சொந்த ஊருக்கு வந்திருக்காங்களே... ஒரு காலத்திலே இந்த குடும்பத்து தர்பாருக்குள்ள இருந்தவங்க... அந்த காலத்திலே இந்த குடும்பத்து சுபகாரியத்துக்கெல்லாம் இவங்கதானே மனோரஞ்சிதத்தை கொடுத்தவங்க...

கவுண்டர் : பார்வதி இப்படி இருக்கப்ப நமக்கு எதுக்கு... (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் நாகவேணி உள்ளே வந்துவிடுகிறாள்.

நாகவேணி: (கவுண்டரிடம் வந்து நின்று) வணக்கம் கவுண்டரய்யாவுக்கு. (என)

கவுண்டர் : வணக்கம், வணக்கம்.. உட்காருங்க

நாகவேணி : இல்லைங்க.. பரவாயில்லைங்க...

கவுண்டர் : அந்தக் காலமெல்லாம் போச்சு.. உட்காருங்க...!

நாகவேணி : (எதிரில் சோஃபாவில் உட்கார்ந்து) உங்க ஆசீர்வாதத்தால நாங்க பாம்பே போயி சம்பாதிச்சு.. தற்சமயம் நல்லா இருக்கோம்... அதுக்கு நன்றி சொல்லிட்டு போகலாம்னு வந்தேன்... எவ்வளவு சம்பாதிச்சாலும் நான் உங்க பேச்சுக்கு அடிபணிஞ்சவதான்... எங்களை மறந்துடாதீங்க...

மேனேஜர் : இன்னும் ரெண்டு நாள் ஊர்லதானே இருப்பீங்க.. நாளைக்கு இங்க உங்களுடைய ப்ரோக்ராம்தான் (என்று கூறிவிட்டு கவுண்டரை பார்க்க)

நாகவேணி: ஐயாவின் விருப்பம் எப்படியோ...? (என்று காந்தப்பார்வையுடன் அசைந்து உட்கார)

கவுண்டர் : சரி சரி.. உங்க இஷ்டம்... நடத்துங்க...!

நாகவேணி : ரொம்ப சந்தோஷம்... வரேங்க... (என்று ஒய்யாரமாக எழ)

-Cut to

SC. No. 60 **கிராமத்து ஹாஸ்பிடல்** Day / Int

(டாக்டரும் ரமேஷும் பேசிக்கொண்டிருக்க ஸ்டெல்லா உள்ளே வந்து)

ஸ்டெல்லா : மலைக்கு எடுத்துட்டு போக எல்லாம் ரெடியா டாக்டர்...?

டாக்டர் : ரெடிம்மா.. அப்படியே ஃபாதர் வந்து ஒரு பாக்ஸ் கொடுத்துட்டு போனார். அமெரிக்காவிலிருந்து வந்த மருந்தாம்...! ரொம்ப 'காஸ்ட்லி'ன்னு கூட சொன்னாரு. பார்த்து யூஸ் பண்ணணுமாம்மா...

ரமேஷ் : ஏன் டாக்டர், இந்த மாதிரியான மருந்தையெல்லாம் ஏன் இந்தியாவிலேயே தயார் பண்ண முடியாது...?

ஸ்டெல்லா : முடியாது மிஸ்டர்.. 90% 'ஹைடெக் டெக்னாலஜி' இன்னும் அங்க இருந்துதான் வந்துகிட்டு இருக்கு... அதை வச்சிகிட்டு இங்க கொஞ்சம் மாத்தி நான்தான் கண்டுபுடிச்சேன் நான்தான் கண்டுபுடிச்சேன்னு சண்டை புடிக்கத்தான் இவங்களுக்கு தெரியும்...

ரமேஷ் : அப்படியே ரொம்ப பணமும் வருதாம்...?

ஸ்டெல்லா : ஹலோ மிஸ்டர். என்ன இன்டைரக்டா அடிக்கிறதா நெனப்பா? எனக்கும் புரியுது மிஸ்டர்... பணம் வர்றது இந்தியாவில டிடெக்டிவ் வேலை பாக்கறதுக்கு இல்ல... ஏழைங்களுக்காக.. அவங்க 'வெல் பீயிங்கு'க்காக...!

ரமேஷ் : எந்த மாதிரியான ஏழைங்களுக்கு...?

ஸ்டெல்லா: உங்களுக்கு ஏன் சொல்லணும் மொதல்ல நீங்க கஷ்டபட்டு சம்பாதிச்சி அந்த பணத்தில ஏழைங்களுக்கு உதவி பண்ணி காட்டுங்க.. அப்புறம் சொல்றேன்...!

ரமேஷ் : அது கரெக்ட்... ஆனா.. ஒருத்தர் கிட்ட வாங்கி இன்னொருத்தருக்கு உதவி செய்றது ஒண்ணும் பெரிய கஷ்டம் இல்லேன்றது என் அபிப்ராயம்...

ஸ்டெல்லா : உங்களுக்கு அந்த 'செர்வீஸ் மைண்ட்'ம் அந்த 'கெபே(அ)ஸிடி'யும் இல்லேன்னு ஒத்துக்குங்க.. (என்று இருவரும் வாய்ச்சண்டையில் இருக்க, ரேகா உள்ளே வந்து)

ரேகா : டாக்டர் நீங்களாவது இவங்க சண்டைய நிறுத்த கூடாதா? வேடிக்கை பார்த்துட்டு இருக்கீங்களே...?

டாக்டர் : இவங்க சண்டையில நெறைய பாய்ன்ட்சுங்க வெளிய வருதும்மா... கேக்கறதுக்கு ரொம்ப ஸ்வாரஸ்யமா இருக்கேம்மா...

ரேகா : சரி சரி.., சமாதானம் ஆச்சு இல்ல... நான் இப்ப வந்த விஷயம் என்னன்னா. நீங்க எல்லாரும் நாளைய தீபாவளிக்கு நம்ம வீட்டுக்குதான் சாப்பாட்டுக்கு வரணும்... நாளைக்கு ஃபுல்லா நம்ம வீட்லதான் சாப்பாடு டிஃபன் எல்லாம்... இது பெரியப்பாவோட ஆர்டர்... (என்று ஸ்டெல்லாவிடம்) அக்கா நீங்க சுடிதார் போட்டு கோபப்பட்டாவே இவ்வளவு அழகா தெரியரீங்க, நாளைக்கு புடவை கட்டிகிட்டு வந்து கோபப்பட்டா இன்னும் ரொம்ப அழகா தெரியுவீங்க... (என்று அவள் கன்னத்தை கிள்ளி வெளியேற. ஸ்டெல்லா கோபம் மறைந்தவளாக புன்சிரிக்க)

-Cut to

SC. No. 61 **கவுண்டர் பங்களா** EVE / Int

(கவுண்டர் வீட்டில் நாகவேணியோடு வாத்தியக்காரர்களெல்லாம் ஹாலின் மத்தியில் உட்கார்ந்து சுருதியை சரிபார்த்துக் கொண்டிருக்க, கவுண்டர், பாரு, கௌரி, ரேகா, மேனேஜர், ரமேஷ், ஸ்டெல்லா, டாக்டர், ட்ரைவர்கள், சுற்றத்தார் சிறுவர்கள் எல்லோரும் வாத்திய கோஷ்டியை சுற்றி சோஃபா நாற்காலிகளில் உட்கார்ந்திருக்க, கவுண்டர், நாகபூஷணிடம் வாத்திய கோஷ்டியை காட்டியவாறு)

கவுண்டர் : நாகபூஷண் இவங்களையெல்லாம் கவனிச்சீங்களா....?

மேனேஜர் : லைட்டா கவனிச்சாச்சி... ப்ரோக்ராம் முடிஞ்சதும் எல்லாரையும் திருப்திபட கவனிச்சி அனுப்பிச்சிடறேன் விடுங்க ஐயா... (வாத்திய கோஷ்டியினர் ஒரு மாடர்ன் ட்யூனில் பாட்டுபாட ஆரம்பிக்க, கவுண்டர்)

கவுண்டர் : கொஞ்சம் இருங்க (என, நாகவேணி பாட்டை நிறுத்தியதும்) பழைய ட்யூன்ல பாட்டை கேட்டு ரொம்ப வருஷங்களாயிடுச்சு... (என, நாகவேணி தன் கோஷ்டியினருக்கு சைகை செய்ய அதே மாடர்ன் இன்ஸ்ட்ருமென்டில் பழைய கஃஜல் டைப்பில் ஒரு அருமையான பாட்டு பாடுகிறார்கள்)

## பாடல் - 4

(பாட்டு முடிகிறது. எல்லோரும் மகிழ்ச்சியோடு கைதட்டியவாறு எழுந்து நிற்க சிறுவர்கள் ரேகாவிடம் வந்து)

சிறுமி : அக்கா அக்கா.. வாங்கக்கா.. பட்டாசுவெடிக்கலாம்... (என)

ரேகா : ஸ்டெல்லா அக்காவை கூப்பிடமாட்டீங்களா...? (என)

சிறுமி : (ஸ்டெல்லா கையை பிடித்து) நீங்களும் வாங்க அக்கா

ஸ்டெல்லா : நான் எதுக்கு நீங்களே போய் வெடிங்க...!

ரேகா : பரவாயில்லை வாங்கக்கா... பசங்க எவ்வளவு ஆசையா கூப்பிடறாங்க... (என்றதும் அவர்கள் அனைவரும் புறப்பட)

-Cut to

SC. No. 61.A கவுண்டர் பங்களா (வெராண்டா) Night / Ext

(பாருவுக்கு வெடிச்சத்தம் தொந்தரவளிக்கும் என்று கௌரி அவளுடன் அறையிலேயே இருக்க) (சிறுவர்கள் சிறு சிறு குழுக்களாக இருந்து சந்தோஷமாக பட்டாசு, சுறுசுறுபத்தி பற்றவைத்துக் கொண்டிருக்க, பெரியவர்கள் அனைவரும் உட்கார்ந்தும் நின்றும் சிறுவர்களை பார்த்து ரசித்துக் கொண்டிருக்கும்போது சிறுவர்களுடன் இருந்த ஸ்டெல்லாவின் முந்தானைக்கு எதிர்பாராதவிதமாக குத்துவிளக்கின் சுடர், பற்றிக் கொள்ள உடனே அதை கவனித்த கவுண்டர் ரமேஷிடம்)

கவுண்டர் : ரமேஷ் அங்க பாரு ஸ்டெல்லா புடவையில நெருப்பு பத்திகிட்டு இருக்கு... ஓடிப்போய் தண்ணி எடுத்துட்டு வாப்பா.. (என, ரமேஷ் ஓட, கவுண்டர் பதற்றத்துடன் 'ரேகா, ஸ்டெல்லா புடவைல நெருப்பும்மா' என்று கூறியபடி ஸ்டெல்லா விடம் ஓடிவர, ஸ்டெல்லா இவர்கள் சத்தம் கேட்டு குனிந்து முந்தானையை பார்க்க, முந்தானையில் நெருப்பு பற்றிக் கொண்டிருப்பதை கண்டு அதிர்ச்சியில் முந்தானையை கீழேவிட்டு காலால்

அணைக்க பார்த்து, காலில் செருப்பில்லாததால் முந்தானையை உதர, கவுண்டரும் தன் அங்க வஸ்திரத்தால் நெருப்பை அணைக்க முயல, அனைவரும் அவர்களை சுற்றி நிற்க, ரமேஷ் தண்ணீர் பக்கட்டுடன் வந்து முந்தானைமேல் ஊற்ற, அது அணைய, மீதி தண்ணீரை ஸ்டெல்லா மீதே ஊற்றிவிட்டு)

ரமேஷ் : கொஞ்சம் குளிர்ச்சி ஆகட்டும்.. இவங்களுக்கு தண்ணி அடிக்கிறதே என்வேலையா போச்சு... (என்று கூறி, பக்கெட்டுடன் எக்ஸிட்)

(ஸ்டெல்லா கண்களில் நீர் ததும்புகிறது. அப்பொழுது ரேகா அன்போடு ஸ்டெல்லா கையை பிடித்து)

ரேகா : வருத்தப்படாதேக்கா... உங்கமேல இருக்கிற அன்பாலதான் ரமேஷ் அப்படி செஞ்சாரு.. (ஸ்டெல்லா சற்று கூல் ஆக)

கவுண்டர் : (ஸ்டெல்லாவை பார்த்து) எங்க கஸ்தூரிக்கும் இதே எடத்தில இதே மாதிரி தீபாவளியப்பதான் பாவாடையில நெருப்பு பத்திக்கிச்சு.. கண்கலங்காதேம்மா ஸ்டெல்லா.. உனக்கு ஒண்ணும் ஆகலே... (என்று ஸ்டெல்லாவின் தலையை தடவி விட, ஸ்டெல்லா நீர் ததும்பும் கண்களுடன் கவுண்டரை பாதி பாசத்துடன் பார்க்க)

-Fade Out

SC. No. 62 நரசிம்மன் வீட்டுவட்டாரம் (வெளியே) Day / Ext

(நரசிம்மன், வீட்டுபடி இறங்கி நான்கடி முன் செல்ல, அவர் எதிரில் மாதேவா மாதேவி வந்து ஒரு சிறிய துண்டு சீட்டை நீட்டி)

மாதேவா : ஐயா இந்த அட்ரஸ்சு.. (நரசிம்மன் அதை வாங்கி பார்த்து)

நரசிம்மன் : என்னப்பா என் அட்ரஸ்ஸ என்கிட்டயே கேக்கறியே? (என்று சிரிக்க)

மாதேவா : அப்படீன்னா ரமேஷ் உங்க ஊட்லதான் இருக்காரா.?

நரசிம்மன் : ஆமா. எங்க வீட்டுலதான் இருந்தாரு. ஆனா இப்ப இல்ல. அதுசரி நீங்க அவருக்கு என்ன ஆகணும்..?

மாதேவா : ஐயோ.. அது ஒரு பெரிய கதைங்கய்யா...!

மாதேவி : அந்த தம்பி சின்ன வயசுல எங்க ஊட்லதான் வளந்துச்சி.

மாதேவா : அவர் அட்ரஸ்ஸ கண்டுபிடிக்க சுத்தோ சுத்துண்ணு சுத்தி

கடைசியா இந்த அட்ரஸ்ல இருக்கிறதா கண்டு பிடிச்சோம்.

நரசிம்மன் : அப்படி என்ன விஷயமா பாக்கணும்...?

மாதேவா : ஒரு முக்கியமான சமாச்சாரத்தை பத்தி பேசியாவணும்.

நரசிம்மன்: அப்படியா..? இருங்க அவர் அட்ரஸ் என்கிட்ட இருக்கு குடுக்கறேன்... (என்று தன்ஜேபியிலிருந்து ஒரு பாக்கட் புக்கை எடுத்து அதிலிருந்து ஒரு சிறிய சீட்டை எடுத்து கொடுத்து) இதாங்க அவர் அட்ரஸ், இங்கதான் அவர் வேலை செய்றார்...!

மாதேவா : (சீட்டை பெற்றுக் கொண்டு) ரொம்ப நன்றிங்க ஐயா...

நரசிம்மன் : சரி நான் இன்னும் வரேன். ரமேஷை பார்த்தா நான் கேட்டதா சொல்லுங்க... (என்று நரசிம்மன் எக்ஸிட்)

மாதேவா : (அட்ரஸ் சீட்டை படித்து) இந்த அட்ரஸ்சும் பேப்பர்ல வந்த அட்ரஸ்சும் ஒரே எடமா இருக்குதே...! இவ்ளோ வருஷம் அனாதை ஆஸ்ரமத்தில் படிச்சாருன்னுதானே சொன்னாங்க. இவரு என்னான்னா இந்த ஊர்லதான் வேலை செய்றாருன்னு சொல்றாரே.. ஒரே கொளப்பமா இருக்குதே மாதீ...

மாதேவி : எப்பிடியோ கடவுள் தயவால சேரவேண்டிய எடத்துக்கு போய் சேர்ந்துட்டாரு உடுய்யா...

மாதேவா : அப்பிடீன்னா.. நாம ஊருக்கு போய் மிச்சம் உட்ட வேலையெல்லாத்தையும் முடிச்ச பின்னால.. நேரா தம்பி இருக்கிற ஊருக்குபோய் சமாச்சாரத்தை தெரிஞ்சிகினு.. தம்பிகிட்ட அவர் அர்ணாகயிறு செயினை குடுத்துட்டுவந்துட்டா போதும் மாதீ...

-Cut to

SC. No. 63 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(கெஸ்ட் ஹௌஸ் முன் கார் வந்து நிற்கிறது. ட்ரைவர் சோமு காரிலிருந்து இறங்கி ஸ்டெல்லா அறையை நோக்கி சென்று கதவைத்தட்ட)

ஸ்டெல்லா குரல் : யாரது...?

சோமு : நான்தாங்க சோமு... எஜமான் உங்களை கூட்டிட்டுவரச் சொன்னார்...

ஸ்டெல்லா குரல் : இதோ வந்துட்டேன்.

(அப்போது ரமேஷ் அறையிலிருந்து வெளியே வந்து)

ரமேஷ் : என்ன சோமு.. எங்கயோ கிளம்பிட்டாமாதிரி இருக்கு...

சோமு : பெரியம்மாவை கூட்டிட்டு சென்னைக்கு போயிட்டிருக்கோம்... (என்று சொல்லிக்கொண்டிருக்கையில் வெளியே வந்த ஸ்டெல்லா கதவை பூட்டி வேகமாக காரிடம் செல்ல) இந்த அவசரத்தில் ஜன்னல் கதவை மூட மறந்துவிட (க்லோஸ் ஷாட் டு விண்டோ) (ஜன்னல் கதவு கொஞ்சம் திறந்திருப்பதை காண்கிறோம்) கீழே ஜன்னலை ஒட்டி ஒரு அட்டைபெட்டி இருப்பதையும் காண்கிறோம்) (காரில் உட்கார்ந்திருக்கும் ஸ்டெல்லா ரமேஷை பார்த்து)

ஸ்டெல்லா : (கிண்டலாக) மலைக்கு போய் சரியா எல்லாத்தையும் குடுத்துட்டு வாங்க.... 'பாதிங் ஸீன்' பாக்கறதுக்கு போயிடாதீங்க... நான் சென்னைக்கு போயிட்டு வரேன். (என்று சிரிக்க சோமுவும் சிரித்தவாறு காரை கிளப்பிச் செல்ல)

(ரமேஷ் கார்போகும் திசையை பார்த்தவாறு தன் இடுப்பின் மீது இரண்டு கைகளையும் வைத்து நிற்க.)

-Cut to

SC. No. 64 நகர ஹாஸ்பிடல் (H.W.O.) Day / Int

(டாக்டர் டெஸ்டிங் ரூமிலிருந்து வெளியே வந்தவாறு)

டாக்டர் : பரவாயில்லை மிஸ்டர் கவுண்டர்.. உங்க ஒய்ஃப் ரொம்பவே இம்ப்ரூவ் ஆகியிருக்காங்க... அவங்களுக்கு ஒரு சின்ன ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுக்கலாமுன்னு இருக்கேன்... எதுக்கும் டாக்டர்ங்களோடு கன்சல்ட் பண்ணிட்டு உங்களுக்கு ஃபோன் பண்றேன்... அப்ப அம்மாவை அழைச்சிட்டு வரவேண்டியிருக்கும்... (என்று சொல்லிக்கொண்டிருக்க நர்ஸ் ஜோதி, பாருவை கைபிடித்து அழைத்துக் கொண்டு வந்து கவுண்டர் பக்கத்தில் உட்கார வைக்க.)

டாக்டர் : அப்படியே மிஸ்டர் கவுண்டர்... உங்க ஹாஸ்பிடலுக்கு ஒரு நர்ஸ் வேணும்னு சொல்லியிருந்தீங்க இல்லையா...? (என்று ஜோதியை காட்டி) இவங்க பெயர் ஜோதி... (ஜோதி கவுண்டரை பார்த்து வணங்க)

டாக்டர் : ரொம்ப நல்ல பொண்ணு. நான் எல்லாம் சொல்லியிருக்கேன்.. ஹாஸ்பிடலையும் பார்த்துக்கிட்டு அம்மாவையும் நல்லா பார்துக்குவாங்க.. இன்னிக்கே இவங்கள நீங்க கூட்டிட்டு போகலாம்..!

(கவுண்டர் ஸ்டெல்லாவின் அபிப்ராயத்தை கேட்கும் வகையில் அவளிடம்)

கவுண்டர் : என்னம்மா சொல்ற ஸ்டெல்லா..? (என்றதும்)

ஸ்டெல்லா : என்னை ஏன் கேக்கறீங்க... இவங்க வந்தா எனக்கு உங்க கூட வர்றவேல கொறையுமே...

கவுண்டர் : அப்படி ஆகிறதா இருந்தா எனக்கு யாருமே வேணாம்மா...!

ஸ்டெல்லா : (ஜோதியை பார்த்து) நீங்க சார் இஷ்டப்படி எங்க கூட வர்றீங்க...

டாக்டர் : (ஆச்சர்யத்துடன்) என்னம்மா ஸ்டெல்லா.. கவுண்டர் உன்மேல இவ்வளோ அன்பும் பாசமும் வச்சிருக்காரே.. கீப் இட் அப்...! வேலையில ஸின்ஸியர்ரா இருக்கிறவங்க எங்க போனாலும் அவங்களுக்கு மரியாதை இருக்கும்.

கவுண்டர் : ஸ்டெல்லா வந்த அதிர்ஷ்டத்தில்தான் டாக்டர்.. பாரு இவ்வளவு குணமாகியிருக்கிறது...!

டாக்டர் : எல்லாம் மேல இருக்கிறவன் செயல்...

-Cut to

SC. No. 65 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(ல.நா. கெஸ்ட் ஹௌஸ் முன் தண்ணீர் பைப்பை ரிபேர் செய்து கொண்டிருக்க, ரமேஷ் அங்கு வந்து)

ரமேஷ் : என்ன செஞ்சிட்டிருக்க லட்சுமி...?

ல.நா. : ஒண்ணுமில்ல தண்ணி லீக் ஆயிட்டிருந்தது...!

ரமேஷ் : அப்படியா.. லட்சுமி. என் ரூம் சாவியை காணோம்.. எங்கயோ தொலைஞ்சிட்டுருக்குது. இப்ப என்ன செய்யறது. லட்சுமி...?

ல.நா. : ஐயோ. அதுக்கு ஏன் கவலப்படறீங்க... என்கிட்ட சாவி கொத்தே இருக்குது... அதல ஏதாவது ஒண்ணுல தெரந்தா தெரந்துக்குது. இருங்க ஒரு நிமிஷம் எடுத்துனுவரேன். (என்று ஓடி கிட்சனுக்குள் நுழைந்து ஒரு சாவிக்கொத்தோடு வந்து ரமேஷிடம் கொடுக்க,

ரமேஷ் அதை வாங்கி தன் அறையிடம் போக, ல.நா. தண்ணீர் டேன்க் பக்கம் போக, ரமேஷ் சாவிகளை பூட்டில் விட்டு பார்க்க ஒன்றில் பூட்டு திறந்து கொள்ள, அதே சமயம்)

ல.நா. : ஐயோ.. பாம்பு... பாம்பு (என்று ல.நா கத்த ரமேஷ் அங்கு ஓடிவர ஒரு நல்ல பாம்பு படமெடுத்து நின்றிருக்க)

ரமேஷ் : லட்சுமி ஒரு குச்சி எடுத்துட்டு வா. இந்த பாம்பை தூரமா கொண்டு போய் ஏதாவது புதர்ல விட்டுட்டு வந்துடலாம்...!

ல.நா. : (ரமேஷிடம் வந்து நின்று கொண்டு) நல்லா சொன்னீங்க.. பாம்பை அப்பிடியே உடறதா...? உட்டா திரும்பியும் வந்துடாதா.. சும்மா அடிச்சு போடுங்க.. (என்று சொல்லியவாறு கீழே பார்க்க பாம்பு அங்கு இல்லை இருவரும் குச்சிகளை எடுத்துக்கொண்டு பாம்பை தேட, பாம்பு அவர்களுக்கு 'டேகா' கொடுத்துவிட்டு கெஸ்ட் ஹௌஸ் வந்து அங்கிருந்த அட்டைபெட்டி மேல் ஏறி திறந்திருந்த ஸ்டெல்லா அறை ஜன்னல் வழியாக உள்ளே நுழைந்துவிட, ரமேஷும் ல.நா.வும் பாம்பை தேடி அலுத்து கெஸ்ட்ஹௌஸிடம் வர, ல.நா. ஸ்டெல்லா அறை ஜன்னல் கதவு திறந்திருப்பதை கண்டு அங்கு போய்க்கொண்டே)

ல.நா. : ஐயோ.. பாம்பு இது வளியா ரூம் உள்ள பூந்துட்டா அக்கா வந்து என்னை பெண்ட் எடுத்துடுவாங்களே... (என்று ஜன்னலிடம் வந்து அதை மூடி, படியிடம் போய் ஒருகல்லை எடுத்து வந்து ஜன்னல் கதவிடம் வைத்து பந்தோபஸ்த் செய்ய)

-Fade out

## SC. No. 66 கெஸ்ட் ஹௌஸ் Night / Ext

(ஃபேட் இன் ஆனதும் கெஸ்ட் ஹௌஸ் முன் படியில் உட்கார்ந்து ல.நா. அரிசியை புடைத்துக் கொண்டு இருக்க, ஸ்டெல்லா அங்குவர, அவளை கண்ட ல.நா. எழுந்து நின்று)

ல.நா. வாக்கா... இப்பதான் வர்றீயா..?

ஸ்டெல்லா : உஷ் (என்று அவன் பேச்சை தடுத்து) அதிருக்கட்டும்.. இங்க பாத்தியா (என்று ரூமிடம் சென்றவாறு பிரியாணி கப் இருக்கும் பாலி

பே(அ)க்கை காட்டி) உங்களை ஏன் நான் கெஞ்சணும்... ட்ரைவருக்கு சொல்லி சென்னை யிலிருந்தே சிக்கன் பிரியாணி கொண்டு வந்திருக்கேன்...! இன்னிக்காவது நிம்மதியா என்ன சாப்பிடவிடுவீங்க இல்ல...? எங்க உங்க குரு ரமேஷ்...? (என்று கேட்டவாறு பூட்டை திறக்க)

ல.நா. : ரூம்லதான் இருக்காருக்கா.. 'உனுக்கு ஏதாவது வேணுமாக்கா...

ஸ்டெல்லா : ஒண்ணும் வேணா... என்னை நிம்மதியா சாப்பிடவிட்டா போதும்... (என்ற கூறியவாறு உள்ளே செல்ல)

-Cut to

SC. No. 66.A கெஸ்ட் ஹௌஸ் (ஸ்டெல்லா அறை) Night / Int

உள்ளே வந்த ஸ்டெல்லா தன் அறையின் கதவை மூடி நேராக போய் டேபிள் மேல் பாலி பே(அ)க்கை வைத்துவிட்டு பாத்ரூம் போய் முகத்தை துடைத்தவாறு வெளியே வந்து டவலை ஸ்டேன்ட் மீதுபோட, ''புஸ்'' என்ற சத்தம் கேட்கிறது. சத்தம் கதவிடமிருந்து வந்தாற்போல் இருக்க கதவிடம் சென்று திறந்து அங்குமிங்கும் பார்த்து விட்டு கதவை சாத்தி தாழிட்டு டேபிளிடம் வர பாம்பு பாலி பே(அ)க்கிடம் படமெடுத்து நின்றிருக்க, அதை கண்ட ஸ்டெல்லா ''பாம்பு பாம்பு'' என்று கூச்சலிட்டு தூரம் போய் நிற்க, சத்தம் கேட்டு வெளியே வந்திருக்கும் ரமேஷும் ல.நாவும் கதவை தட்டி 'கதவை திறங்க' 'அக்கா கதவை தெறக்கா' என, ஸ்டெல்லா மெதுவாக பாம்பை பார்த்தவாறே சென்று கதவை திறக்க, ரமேஷும் ல.நாவும் உள்ளே வந்து ''எங்க பாம்பு'' என்று கீழே தேடி பின் மேலே டேபிள் மேல் இருப்பதை காண)

ல.நா. : காலைல பாத்தமே அதே பாம்புதான் இது...! சந்தேகமே இல்ல...

ரமேஷ் : லட்சுமி உன் வாயை மூடு... ஏன் நாமதான் இதை உள்ள விட்டோம்னு சொல்றதுதானே... போய் ஒரு கோணிப் பையும் குச்சியும் எடுத்திட்டு வா (ல.நா. எக்ஸிட்)

ஸ்டெல்லா : (பாம்பை பார்த்தவாறே) ஓ உங்க வேலதானா இது? அண்ணைக்கு ஸிஸ்டர்ங்க வந்தப்ப கூட பாம்பை விட்டது நீங்க தானா...? ரொம்ப 'டேஞ்ஜரஸ் பீபில்' நீங்க... இன்னும் ஒரு நிமிஷம் கூட நான் இங்க இருக்கமாட்டேன்... இப்பவே என் சூட்கேஸ் புக்ஸை எடுக்கணும். சீக்கிரம் பாம்பை பிடிச்சிட்டு போங்க...

(என்று வெளியே போய் ஜன்னல் வழியாக பார்க்க, ல.நா. கோணிப்பை குச்சியுடன் வர அதை வாங்கி ரமேஷ் பாம்பை குச்சியால் தட்டி பையில் ஏற்றி மேலே முறுக்கி ல.நாவிடம் கொடுத்தவாறு)

ரமேஷ் : இந்தா இதை கொண்டுபோய் தூரமா எங்கயாவது விட்டுட்டு வந்துடு...

ல.நா. : ஐயய்யோ.. என் கைல ஆவாது சாமி...! (என, ரமேஷ் பையுடன் எக்ஸிட்) ஸ்டெல்லா உள்ளே வந்து தன் துணி மணிகளை சூட்கேஸில் நிரப்பி புத்தகங்களை அடுக்கி பின் படுக்கையை சுருட்டியவாறு)

ஸ்டெல்லா : இனிமே உங்க கூட இருக்க என்னால முடியாது...!

ல.நா. : இப்ப எங்க போவீங்க அக்கா...?

ஸ்டெல்லா : வேற எங்கயாவது போறேன்...

ல.நா. : இந்த இருட்டுல, இந்த கிராமத்துல யாருகிட்ட போய் தங்கறத்துக்கு எடம் கேட்பீங்க..? எஜமான் வீட்டுக்குதான் போவணும்...!

ஸ்டெல்லா : எங்கயும் வேணா... மலைக்கு போய் மதர் கூடவே இருந்திடறேன்..! (அப்போது ரமேஷ் என்ட்ரி)

ல.நா. : பாருங்க இந்த அக்கா மலைக்கு போறேன்னு ஒக்காந்துனு இருக்காங்க...

ரமேஷ் : என்னங்க இது இந்த இருட்டுல நீங்க மலைக்கு போக முடியுமா..? இந்த ரூம்ல பாம்பு இருந்திச்சீன்னுதானே இங்க இருக்க பிடிக்கலே... இப்ப என் ரூம்ல தங்கி இருங்க நான் லட்சுமி ரூம்ல படுத்து அட்ஜஸ்ட் பண்ணிக்கிறேன்... காலைல உங்க இஷ்டம் போல செய்யுங்க.. என்ன லட்சுமி...?

ல.நா. : அப்ப கட்டில உனக்கு குடுத்துட்டு நான் கீழதான் படுக்கணும்... (ஸ்டெல்லாவிடம்) சரிக்கா.. கீழயே இவ்வளோ பாம்பு இருக்குதுன்னா இன்னும் மலைக்குப் போற வழியில ஒரு மாதிரியான பாம்பு இல்ல அக்கா.. கருநாகம், கோதிநாகம், கட்டுவிரியன், நாகமண்டலம், மலைப்பாம்புன்னு இப்பிடி நெறைய பாம்புங்க வரும்...!

ஸ்டெல்லா : அப்படியா.. உங்களை விட அதுங்க எவ்வளவோ மேலு!

ரமேஷ் : இப்ப ஏன் அதெல்லாம்... நீங்க உங்க பெட்டை எடுத்துக் கிட்டு அந்த ரூமுக்கு போங்க...!

ல.நா. : அப்பிடியே செஞ்சிடலாம். வாக்கா...

ஸ்டெல்லா : சரி சரி காலைல மொதல் வேலையா மதரை போய் பாக்கணும்... எடு லட்சுமி என் பெட்டை..

-Cut to

SC. No. 67 **கெஸ்ட் ஹௌஸ்** E.Mor / Ext

(காலைப்பொழுதின் கிராமத்து இயற்கை சூழல். ரமேஷ், ஸ்டெல்லா படுத்திருக்கும் தன் அறைக்கதவை தட்ட ஸ்டெல்லா கதவை திறந்து)

ஸ்டெல்லா : என்ன மிஸ்டர்..........?

ரமேஷ் : இந்தாங்க மேடம்... இது என் ரூம் கீ.. நீங்க இந்த ரூமிலயே இருந்தாலும் சரி. இல்ல மலைக்கு போய் மதர் கூட இருந்தாலும் சரி.. யாரு 'டேஞ்சரஸ் பீபில்" யாரால யாருக்கு தொந்தரவுங்கறதை.. நிதானத்தோடு யோசிச்சு, ஒரு முடிவுக்கு வாங்க... (என்று அவள் கையில் சாவியை கொடுத்துவிட்டு வெளியேற திரும்ப)

ஸ்டெல்லா : மிஸ்டர் ரமேஷ்.. நான் மலைக்கு போய் தங்கறதா இல்ல.. நீங்க பாம்பு வந்த ரூம்லயே படுத்துக்கோங்க...!

-Cut to

SC. No. 67.A **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(ஸ்டெல்லா தன் அறையிலிருந்து சற்று அதிகமாகவே புத்தகங்களை கையிலும் இன்னும் சிலவற்றை தோள் பையிலும் எடுத்து வந்து ரமேஷ் அறையில் வைப்பதை ஒரு முறை காண்கிறோம். அடுத்த முறையும் கஷ்டத்தோடு அதே சுமையுடன் வரும்போது, ல.நா. வந்து)

ல.நா. : அக்கா.. அம்மா உங்கள வரச் சொன்னாங்க...

ஸ்டெல்லா: எனக்கு வர்ற கோவத்துக்கு உங்கள என்ன செய்யறதுன்னே தெரியலே....!

ல.நா. : பாவங்கா அம்மா.. உங்கள கையோட கூட்டுனு வரச்சொன்னாங்க வாக்கா...

ஸ்டெல்லா : (கோபத்துடன்) என்ன ஆயிடுச்சாம் அந்த பைத்தியத்துக்கு... 'கோ மேன்' வரமுடியாதுன்னு

சொல்லு... (ல.நா. ஏமாற்றத்துடன், அங்கிருந்து உடனே வெளியேற) (ஸ்டெல்லா புத்தகங்களுடன் ரமேஷ் அறைக்குள் நுழையும் போது வாசற்கால் மேல் ரமேஷ் என்று எழுதியிருப்பதை க்லோஸ் ஷாட்டில் காண்கிறோம்)

குறிப்பு : (இவர்கள் கலாட்டாவில் அவர்களின் பெயர்களை மாற்றி எழுதுவதைப்பற்றி அவர்கள் யோசிக்கவில்லை.)

-Cut to

SC. No. 68 **கவுண்டர் பங்களா** Day / Int

(பாரு அறையில் கௌரி பாருவுக்கு டம்ளரில் பால் கொடுக்க, ல.நா. அங்கு வர, அவனை கண்ட கௌரி )

கௌரி : எங்கப்பா ஸ்டெல்லா...?

ல.நா. : வரமுடியாதுன்னு சொல்லிட்டு... பெரியம்மாவை பைத்தியம்னு சொல்லிட்டாங்க அம்மா... (என்று அவன் சொல்லி முடித்ததும் பாரு சட்டென்று 'பைத்தியம் பைத்தியம்' என்று கூவியவாறு கட்டிலிலிருந்து இறங்கி மறுபடியும் 'பைத்தியம் பைத்தியம்' என்று சொல்லிக் கொண்டே வேகமாக வெளியே போக வாசற்படி தடுக்கி 'தடால்' என்று கீழே விழ தலையில் அடிபட்டு ரத்தம் வருகிறது. பாரு மூர்சையாகிறாள். இதனால் பயந்து போன கௌரியும் ல.நாவும் ''அண்ணி.. அண்ணி'' ''அம்மா.. அம்மா'' என்று அலற அந்த சத்தத்தை கேட்ட கவுண்டர் அங்கு ஓடிவந்து பாருவை நர்ஸ் ஜோதியின் உதவியுடன் கட்டிலில் படுக்கவைத்து, கௌரியிடம்)

கவுண்டர்: பாத்துக்கம்மா நான் டாக்டருக்கு ஃபோன் பண்ணிட்டுவரேன். (என்று வெளியேற)

Dissolve

SC. No. 68.A **கவுண்டர் பங்களா** Day / Int

(பாருவுக்கு தலையில் கட்டு போடப்பட்டு கட்டிலில் படுத்திருக்க, கவுண்டர், கௌரி, ரேகா, நர்ஸ்ஜோதி மேனேஜர் சுற்றி நின்றிருக்க, டாக்டர் ராம்நாத் ல.நா. கிரண் என்ட்ரி)

டாக்டர் : என்னாச்சு அம்மாவுக்கு...? (என்று கேட்டவாறுவந்து பாருவின் கை நாடியை பார்த்துவிட்டு கண்ணை விரித்து பார்க்கையில்)

கௌரி : வாசப்படி தடுக்கி விழுந்துட்டாங்க டாக்டர். நர்ஸ்தான் தலைக்கு கட்டு போட்டுச்சி...

கவுண்டர் : (சற்று வேதனையுடன்) இப்பதான் கொஞ்சம் கொஞ்சமா தேறிக்கிட்டு வந்தா.. அதுவும் தலையிலயே அடிபடணுமா.. ஏன் இப்படி ஆகுது.?

(டாக்டர் பரிசோதிப்பதை நிறுத்தி தன் கிட்டிலிருந்து சிரின்ஜ் மற்றும் மருந்தெடுத்து, பாருவுக்கு ஊசிபோட, ரேகா தலைக்கட்டை அவிழ்த்துவிட்டு மருந்திட்டு புதிய கட்டை கட்ட, டாக்டர் அனைவரையும் பார்த்து)

Dr.ராம்நாத் : அவங்க நல்லா தூங்கட்டும் எல்லாரும் வெளிய வாங்க.. (என்றதும், கௌரி திரும்ப, பாரு கண்திறந்து தெளிவுடன்)

பாரு : கௌரி எனக்கு என்னாச்சு...? (என்று கேட்க, எல்லோரும் அசந்து நின்று பாருவையே பார்த்து நிற்க (கவுண்டரை பார்த்து) ஏங்க. எனக்கு என்னாச்சுன்னு இப்படி எல்லாரும் என்ன சுத்தி நின்னுட்டிருக்கீங்க...? (கவுண்டர் அளவிலா சந்தோஷத்தில் கண்ணீர்விட, கௌரி வெளியே ஓட)

Dr. ராம்நாத் : (முந்திக் கொண்டு) ஒண்ணும் ஆகலம்மா. நீங்க கட்டில்லயிருந்து விழுந்து தலையில லேசா அடிபட்டிருக்கு. உங்களுக்கு ஒரு சின்ன அடிபட்டாலும் எங்களால எப்படி தாங்கிக்க முடியும்... அதனாலதான் எல்லாரும் வந்து நின்னுகிட்டிருக்கோம்... (என, கௌரி வீபூதியுடன் அங்கு வந்து பாருவின் நெற்றியில் இட்டு அவள் கழுத்துக்கும் பூச)

பாரு : இதென்ன கௌரி இதுக்குபோய் வீபூதி எடுத்துட்டுவந்து இடறே..? (என்று இரும)

கௌரி : உங்களுக்கு அதிகமா வலி எடுக்க கூடாதுன்னுதான் அண்ணி...!

பாரு : போடி பைத்தியம்.. நீ இருக்கும்போது எனக்கெப்படி வலிக்கும்...? (என்றதும் கௌரி அழுகையுடன் நெகிழ்ந்து போகிறாள்.)

Dr. ராம்நாத் : (குறுக்கிட்டு) பாருங்கம்மா.. உங்களுக்கு தலையில அடிபட்டிருக்கு. அதிகமா பேசக்கூடாது. தயவு செய்து கொஞ்ச நேரம் கண்ணை மூடிபடுத்து.. நல்லா தூங்கி

எழுந்துடுங்க. அப்புறம் சாவகாசமா பேசலாம். (பாருவுக்கு 'சிரப்'பை கொடுத்து குடிக்க வைத்தபின்) வாங்க எல்லோரும் வெளிய போகலாம் (என, எல்லோரும் வெளியேற) பாரு ஒன்றும் புரியாதவளாக படுக்க)

- Dissolve

SC. No. 68.B **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(பாரு அறையிலிருந்து எல்லோரும் ஹாலுக்கு வந்ததும் கவுண்டரும் டாக்டரும் சோஃபாவில் உட்கார, மற்றவர்கள் வெளியேற கௌரி சமையலறை பக்கம் திரும்ப)

Dr. ராம்நாத் : அம்மா கௌரிம்மா. ஒரு நிமிஷம் இங்க வந்து போங்க (கௌரி வர)

Dr. ராம்நாத் : ஒரு முக்கிய விஷயம்.. எந்த காரணத்துக்கும் உங்க அண்ணிகிட்ட அவங்க சித்தசுவாதீனம் இல்லாம இருந்ததையும், கஸ்தூரி அர்ணா கயிறு கெடச்சிருக்கிறத பத்தியும் பேசக்கூடாதும்மா. சரி.. இன்னும் நீங்க போலாம்மா..

கௌரி : சரிங்க டாக்டர் (என்று எக்ஸிட்)

Dr. ராம்நாத் : அப்ப நான் டாக்டர் சத்யூக்கு ஃபோன் பண்ணிடரேன் ஐயா. (என்று எழ)

- Dissolve

SC. No. 68.C **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(ஹாலில், கவுண்டர் வீட்டாருடன் இப்பொழுது ஸ்டெல்லா, ரமேஷ் உட்கார்ந்திருக்க, அப்பொழுது அங்கு சென்னை மனோவைத்தியர் டாக்டர் சத்யூஎன்ட்ரி, அனைவரும் எழுந்து நிற்க)

Dr. ராம்நாத் : குட் ஆஃப்டர்னூன் டாக்டர் சத்யூ...

Dr. சத்யூ : வெரி குட் ஆஃப்டர்னூன் டாக்டர் ராம்நாத். (இருவரும் கை குலுக்கி) (கவுண்டரை பார்த்து) வணக்கம் மிஸ்டர் கவுண்டர்

கவுண்டர் : வணக்கம் டாக்டர் உக்காருங்க... (அனைவரும் உட்கார)

Dr. சத்யூ : (உட்கார்ந்து) டாக்டர் ராம்நாத் ஃபோன் பண்ணி எல்லா விஷயத்தையும் சொல்லிட்டார், இப்ப நீங்க சொல்லுங்க... (என்று கௌரியை பார்க்க)

கௌரி : காலைல (ஸ்டெல்லாவை காண்பித்து) இந்த ஸ்டெல்லா, லட்சுமி நாராயணன் கிட்ட அண்ணியை பைத்தியம்னு சொல்லிட்டா (ஸ்டெல்லா தலைகுனிய, கவுண்டர் அவள் தலையை தடவி விட) அவன் அதை அப்படியே இங்க வந்து சொல்ல.. அண்ணி பைத்தியம் பையத்தியமுன்னு சொல்லிக்கிட்டே வெளியே போனப்ப.. வாசற்படி தடுக்கி கீழே விழுந்து தலையில அடிபட்டு ரத்தம் வந்துடுச்சி... நம்ம டாக்டர் வந்து கவனிச்சாரு கொஞ்ச நேரத்துல அண்ணி கண் விழிச்சி 'எனக்கு என்ன ஆச்சு'ன்னு நல்லா பேச ஆரம்பிச்சிட்டாங்க டாக்டர்...

Dr. சத்யூ : நீங்க பழைய கதையை எதுவும் அவங்களுக்கு சொல்லலேதானே...?

Dr. ராம்நாத் : இல்ல டாக்டர். நான் அவங்களை சமாதானப் படுத்திட்டு இவங்களயெல்லாம் வெளிய கூட்டிட்டு வந்து உங்களுக்கு ஃபோன் பண்ணேன்.

Dr. சத்யூ : 'வெல்டன்' டாக்டர். மிஸ்டர் கவுண்டர்.. வாங்க அம்மாவை போய் பார்க்கலாம் (கௌரியைபார்த்து) நீங்களும் வாங்கம்மா (டாக்டர்கள், கவுண்டர், கௌரி எழ)

- Dissolve

SC. No. 68.D **கவுண்டர் பங்களா (பாரு அறை)** Day / Int

(டாக்டர்கள், கவுண்டர், கௌரி உள்ளே வர பாரு படுத்திருக்க, கௌரி பாரு தோளை மெல்ல தொட்டு)

கௌரி : அண்ணி.. (என, பாரு கண்விழித்து எழுந்து உட்கார்ந்து கொள்ள) (பாரு Dr. சத்யூ வை கேள்விக்குறியுடன் பார்க்க)

கவுண்டர் : பாரு... இவர் டாக்டர் சத்யூ சென்னையிலிருந்து வந்திருக்கார்...

Dr. சத்யூ : வணக்கம்மா...

பாரு : வணக்கம் டாக்டர்...

Dr. சத்யூ : (கவுண்டரிடம்) நீங்களெல்லாம் கொஞ்சம் வெளியே இருங்க. நான் இவங்க கிட்ட நிதானமா பேசியாகணும்..

(என, மூவரும் வெளியேற, டாக்டர் கதவை மூட, காட்சி ஃபேட் அவுட் ஆகிறது)

SC. No. 68.E **கவுண்டர் பங்களா(ஹால்)** Day / Int

(ஃபேட் இன் ஆனதும், கதவை திறந்த டாக்டர் சத்யூ, ஹாலில் இருந்தவர்களைப்பார்த்து 'இப்ப எல்லாரும் வரலாம்' என ஹாலில் இருந்த அனைவரும் பாரு அறையினுள் நுழைகிறார்கள்)

- Dissolve

SC. No. 68. F **கவுண்டர் பங்களா (பாரு அறை)** Day / Int

(உள்ளே வந்த அனைவரும் கும்பலாக நிற்க)

Dr. சத்யூ : இப்படி நின்னா எப்படி..? சுற்றி நில்லுங்க.. (அனைவரும் பாரு கட்டிலை சுற்றி நிற்க)

Dr. சத்யூ : (கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்திருக்கும் பாருவிடம்) பாருங்க அம்மா இப்ப உங்களுக்கு ஒரு சின்ன டெஸ்ட்..! சரிங்களா..?

பாரு : சரிங்க டாக்டர்...

Dr. சத்யூ : இவங்கள்ள உங்களுக்கு யார் யார் தெரியுமுன்னு காட்டி அவங்கவங்க பேருங்களை சொல்லுங்க பார்க்கலாம்.

(பாரு ஒரு முறை அனைவரையும் பார்த்துவிட்டு ஒவ்வொருவராக காட்டி)

பாரு : இவள் எங்க வீட்டுக்காரரோட தங்கை கௌரி... (கௌரி குஷியாதல்) இவர் எங்க ஆஸ்பத்திரி டாக்டர் ராம்நாத்.... (டாக்டர் புன் முறுவல்) இவர் எங்க வீட்டுக்காரர் பேரை சொல்லமாட்டேன்... (அனைவரும் மகிழ்ச்சியோடு சிரிக்கிறார்கள்) (கவுண்டரின் ஆனந்தம்) இவன் நம்ம கோவிந்தனோட பேரன்... லட்சுமிநாராயணன் சரிதானே..? (ல.நா. கை தட்டி 'ஆமாம்மா'..) (மற்றவர்களை பார்த்து) இவங்களை எல்லாம் தெரியலயே...

Dr. சத்யூ : இவங்க எல்லாரைப்பத்தியும் உங்ககிட்ட சொல்லி யிருக்கேன்... (என்று கூறி) இவங்களை நான் உங்களுக்கு இன்ட்ரட்யூஸ் பண்றேன்.. இவர் கிரண் உங்க சின்ன நாத்தனார் மகன்... (கிரண் நடித்தவாறு

அன்புடன் பார்க்க, பாரு அன்புடன் பார்க்கிறாள்) இவர் ரமேஷ் உங்க ஹாஸ்பிடல்ல டாக்டருக்கு அஸிஸ்ட் பண்றாரு... (என) (ரமேஷின் புன்முறுவல்)

பாரு : நம்ம கௌரி மகன் பேரு கூட ரமேஷ்தான்...! (என்று முகம் வாட)

Dr. சத்யூ: இது நர்ஸ் ஜோதி (பாரு, ஜோதி இருவரும் புன்முறுவல் செய்ய)

(ஸ்டெல்லாவை காட்டி) இந்தம்மா ஸ்டெல்லா. உங்க ஹாஸ்பிடல்லயும் இருந்துக்கிட்டு மலையில ஜன சேவையும் செய்யறாங்க.. உங்கள சென்னைக்கு கூட்டிட்டு வரப்ப இவங்கதான் உங்கள கவனிச்சிக்கு வாங்க... (என, பாரு ஸ்டெல்லாவை பாசத்தோடு பார்க்கிறாள். ஸ்டெல்லா சங்கடம் கலந்த சந்தோஷத்துடன் பார்க்கிறாள்.)

கவுண்டர் : (ஸ்டெல்லாவிடம்) பாரும்மா ஸ்டெல்லா.. இன்னைக்கு எங்களுக்கு ரொம்ப சந்தோஷமான நாளம்மா.. உன்னாலதான் பாரு நல்லா ஆனான்னு நான் நம்பறேன். உனக்கு என்ன வேணுமோ கேளும்மா...?

ஸ்டெல்லா : அவங்க நல்லா ஆகிட்டாங்க இல்ல. அதுவே எனக்கு போதும் சார்.... இப்பவே என் செர்வீசுக்குன்னு நெறையவே ஃபீஸ் குடுத்துட்டிருக்கீங்க...

கவுண்டர் : அதை விடும்மா... இப்ப எங்களுக்கு வேலை செய்யற பொண்ணா நெனைக்காம.. எங்க மகளா நெனச்சு.. அதிகாரத்தோட கேளம்மா..

பாரு : ஏங்க... சும்மா கேட்டுக்கிட்டிருந்தா எப்படி..? ஸ்டெல்லா இங்க வாம்மா (என, ஸ்டெல்லா பாருவிடம் போக, பாரு தன் கழுத்திலிருந்து ஒரு தங்கச்சங்கிலியை எடுத்து ஸ்டெல்லாவின் கழுத்தில் போடுகிறாள். (ஸ்டெல்லா செய்வதறியாது விழிக்க)

கவுண்டர் : இது எப்பவுமே உன் கழுத்தில இருக்கணும்மா....

Dr. சத்யூ : மிஸ்டர் கவுண்டர். அம்மாவை எங்கயாவது காற்றோட்டமான எடத்துக்கு கூட்டிட்டு போயிட்டு வாங்க. அப்ப நான் வரட்டுங்களா. வரேம்மா...

பாரு : ரொம்ப நன்றிங்க டாக்டர்....

Dr. சத்யூ : இருக்கட்டும்மா எல்லாம் அவன் செயல்.. (என்றதும், கவுண்டர் டாக்டர் சத்யூ வெளியேற, அனைவரும் பின் தொடர)

- Dissolve

SC. No. 68.G **கவுண்டர் பங்களா (ஹால்)** Day / Int

(பாரு அறையிலிருந்து அனைவரும் ஹாலுக்கு வந்ததும்.)

Dr. சத்யூ : எல்லாம் நல்லதாகவே முடிஞ்சது. இன்னும் நான் புறப்படறேன்... ஒரு விஷயம்.. மறுபடியும் அவங்க தலைக்கு அடிபடாம பாத்துக்கணும்.. அப்புறம் அதிர்ச்சியான விஷயங்களை அவங்க காதுல விழாதமாதிரி பாத்துக்கிட்டா நல்லது... (என்று கூறி வெளியேற, டாக்டர் ராமநாத் அவருடன் செல்ல.)

கவுண்டர் : கௌரி நாளைக்கு காலைல நாம எல்லாரும் நம்ம கோயிலுக்கு போயிட்டு அப்படியே மலைக்கோயிலுக்கு போயிட்டு வந்துடலாம் (என அனைவரும் சந்தோஷத்துடன் ஆமோதிக்க)

Fade Out

SC. No. 69 **மலைக்கோயில்** Day / Ext

மலைக்கோயிலின் முன் பந்தலின் கீழ் கவுண்டர் குடும்பத்தார் மற்றும் ட்ரைவர்கள், மேனேஜர், டாக்டர், ஸ்டெல்லா, ரமேஷ் அனைவரும் உட்கார்ந்தும் நின்றவாறும் இருக்க.

மலைவாசிகளின் பாட்டும் நடனமும்.

**பாடல் - 5**

SC. No. 70 **காவல் நிலையம்** Day / Int

(எஸ்.ஐ. தன் சீட்டில் உட்கார்ந்திருக்க, லட்சுமி, வில்லியம் அங்கு வர)

S.I. : வா வா... என்னா இப்ப வரேண்ணு போன ஆளு இவ்வளோ நாள் ஆனதும் வந்திருக்கியே (என்று கேட்டுக் கொண்டிருக்க, லட்சுமி டேபிள் மேல் ஒரு பஞ்ச லோக சிலையை வைத்து)

லட்சுமி : இன்னும் ஜேம்ஸ உட்டுடுங்க சார் (என்று சொல்லி லாக்கப்பிடம் வந்து)

லட்சுமி : (ஜேம்ஸிடம்) ஜேம்ஸ் நீ என்ன மறந்துட்டு ஒரு நல்ல மனுஷனா மாறு. அதுவே எனக்கு போதும்... (என்று கூறி வேகமாக வெளியேற, வில்லியம் அங்கேயே இருக்க)

S.I. : ஏ... 401 ஜேம்ஸ் இங்க அனுப்பு (401 சிறை பூட்டை திறக்க, ஜேம்ஸ் வேகமாக வெளியே வந்து வில்லியம் தோளை பிடித்து)

ஜேம்ஸ் : டேய்..! லட்சுமி ஏண்டா அப்படி போறா.. ஏண்டா இவ்ளோநாளு.. என்னாடா ஆச்சி.... ?

வில்லியம் : (அழுதவாறு) அக்காவை ரூமுக்கு கூட்டிணுபோயி ரொம்ப அடிச்சி ஒதச்சி இருக்காங்கண்ணா.. தெனம் அக்கா அழுந்துனே இருந்திச்சி.. எனுக்கு சாப்பாடு குடுக்க வந்தப்போ தப்பிச்சி அக்கா கிட்ட போனேன்.. என் தொடையில சிகரெட் நெருப்ப வச்சிட்டாங்க (என்று விக்கி விக்கி அழ, ஜேம்ஸ் முகம் கோபத்தால் சிவக்க)

S.I. : ஜேம்ஸ் இங்க வாடா. இதுல ஒரு கையெழுத்து போட்டுட்டு நாளைக்கு வந்து பாரு (என்று லெட்ஜரை நீட்ட, ஜேம்ஸ் அங்கு போக)

Cut to

SC. No. 71 **லட்சுமி வீடு** Day / Ext

(ஜேம்ஸ் மற்றும் வில்லியம் லட்சுமி வீட்டு கதவை தட்டிக்கொண்டிருக்க பதில் ஏதும் வருவதில்லை)

ஜேம்ஸ் : லட்சுமி நான் ஜேம்ஸ் வந்திருக்கேன்..! கதவை தெற... (மறுபடியும் பதில் ஏதும் வராமல் இருக்க,ஜேம்சும் வில்லியமும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு, ஜேம்ஸ் வேதனை கலந்த ஆத்திரத்துடன் 'லட்சுமி தெற கதவ' என்று ஜோராக தட்டி தட்டி கடைசியில் காலால் உதைக்க கதவு திறந்து கொள்ள இருவரும் உள்ளே நுழைய)

-Cut to

SC. No. 71.A **லட்சுமி வீடு** Day / Int

(லட்சுமி வாயில் நுரைஒழுக விழுந்திருக்க, முந்தானை சரிந்திருக்க, அவள் நெஞ்சில் சிகெரெட்டால் சுட்ட காயங்கள் காணப்படுகின்றன, அவள் அருகில் வந்த ஜேம்ஸ் அதை பார்த்து 'ஐயோ' என்று தலையில் அடித்துக்கொண்டு)

ஜேம்ஸ் : போடா ஆட்டோ கூட்டுனுவாடா...! ஆஸ்பத்திரிக்கு எடுத்துனுபோலாம்... (வில்லியம் வெளியே ஓட)

(ஜேம்ஸ் லட்சுமியின் தலையை தன் மடியில் வைத்தவாறு)

ஜேம்ஸ் : லட்சுமி உன்ன நெருப்பில சுட்ட அவங்க எல்லாரும் அவுங்களுக்கு அவுங்களே நெருப்பு வச்சிக்கிறாமாதிரி நான் செய்யலேன்னா என் பேரு ஜேம்ஸ் இல்ல. லட்சுமி நீ கெடல லட்சுமி... கெடல..நீ சாவக்கூடாது...! உன்ன நான் சாக உடமாட்டேன்... எனுக்கு நீ வேணும் லட்சுமி நீ வேணும்... (லட்சுமி முனக) சத்தியமா எனக்கு ஸ்டெல்லா மேல இருந்த ஆசை போயிடுச்சி லட்சுமி...! நீ நம்பலேண்ணா ஸ்டெல்லா கையாலயே மாலைய வாங்கி உன் கழுத்துல போடறேன்...!

வில்லியம் : (ஓடி வந்து) ஆட்டோ வந்துடுச்சண்ணா (என, ஜேம்ஸ் லட்சுமியை தூக்க)

-Cut to

SC. No. 72 **கவுண்டர் பங்களா போகும் பாதை** Day / Ext

(மாதேவா மாதேவி தேவபுரத்தின், பாதையில் வந்துகொண்டிருக்க எதிரில் வந்த ஒரு X ஆளைக்கண்டு)

மாதேவா : ஏங்க.. ரமேஷுன்னு சென்னையிலிருந்து வந்து இந்த ஊர் ஆஸ்பத்திரியில வேல செய்றாராமே..? அவுரு இருக்கிற எடம் உங்களுக்கு தெரியுமா..?

X : ரமேஷ் ஸாருங்களா.. அவரு எங்க கவுண்டர் ஐயா விருந்தாளி பங்களாலதான் தங்கியிருக்காரு... (என்று திரும்பி தூரத்தில் இருக்கும் கவுண்டர் பங்களாவை காண்பித்து) அதோ தெரியுது பாருங்க... ஒரு பங்களா அதுக்கு எதுருல இருக்கிறதுதான் விருந்தாளி பங்களா...!

மாதேவா : ரொம்ப நன்றிங்க ஐயா (X நபர் எக்ஸிட்) மாதீ பாத்தியா...? ரமேஷுக்கு அது அவுங்க வீடுதான்றது தெரியாம அவுங்ககிட்டயே வேலை செஞ்சினு இருக்குது...!

மாதேவி : அதுதான்யா விதீன்றது.. யோவ் நாம்ப அவங்ககிட்ட ரமேஷ் அரணா கயிறு செயின குடுத்து.. ரமேஷ் அவுங்க பையந்தான்னு சொல்றப்ப அவுங்க எதுனா பணம் கொடுத்தா.. அத வேணாண்ணு சொல்லிடாதய்யா.. (என்று முன்னே செல்ல)

-Cut to

SC. No. 73 **கெஸ்ட் ஹௌஸ்** Day / Ext

(மாதேவா மாதேவி கெஸ்ட் ஹௌஸிடம் வந்து பூட்டியிருக்கும் கதவுகளை பார்த்து ஏமாற்றத்துடன் நின்று)

மாதேவா : இங்க யாருமே இல்லியே... (என்றவாறு கவுண்டர் பங்களா பக்கம் பார்க்க, அப்போது கிரண், பங்களாவிடம் காரை நிறுத்தி, இவர்களை கண்டு இங்கே வந்து)

கிரண் : யார் வேணும் உங்களுக்கு....?

மாதேவா : (ஒரு பேப்பர் கட்டிங்கை காட்டி) இந்த விளம்பரத்த குடுத்தது நீங்கதானே சார்...? (கிரண் அதை வாங்கி பார்த்து ஸ்தம்பித்து, சுதாரித்துக்கொண்டு)

கிரண் : ஆமா நாங்கதான் என்ன விஷயம்...?

(மாதேவா பேப்பர் கட்டிங்கை கிரணிடமிருந்து திருப்பி வாங்கியவாறு)

மாதேவா : இந்த தம்பி சின்ன வயசுல எங்க ஊட்டுலதான் வளர்ந்தது... (கிரண் சட்டென்று அங்குமிங்கும் பார்த்துவிட்டு)

கிரண் : அப்படியா ரொம்ப சந்தோஷம்.. வாங்க கார்ல உக்காருங்க... வீட்டில போய் பேசுவோம்... (என்று இருவரையும் அவசர அவசரமாக காரில் ஏற்றி காரை வேகமாக ஓட்டிச் செல்ல)

-Cut to

SC. No. 74 **கிரண் மலைபங்களா** Day / Ext

(கிரண் கார் அவன் பங்களா முன் வந்து நிற்க மாதேவா மாதேவி இறங்கி சுற்றும்முற்றும் பார்த்து நிற்க)

கிரண் : வாங்க வாங்க (என்று அவர்களை அழைத்துக்கொண்டு கதவிடம் சென்று பூட்டை திறக்க மூவரும் உள்ளே செல்ல)

-Cut to

SC. No. 74.A **கிரண் மலைபங்களா (ஹால்)** Day / Int

(மூவரும் உள்ளே வந்ததும், கிரண் சோஃபாவை காண்பித்து உட்காருங்க என்று மூவரும் உட்கார)

கிரண் : காணாமல் போன ரமேஷ் என் தம்பிதான்..! என்ன விஷயம் சொல்லுங்க...?

மாதேவா : சார் நாங்க மீனவங்க.. ரமேஷ்தம்பி அதான் உங்க ஆஸ்பத்திரியில வேல செஞ்சினு இருக்கிறாரே அவரை சுமாரு 16-17 வருஷத்துக்கு முந்தி ஒருத்தன் கூட்டிணுவந்து.. இவன் அனாதை பையன்... நீங்க வளத்துக்குங்கன்னு சொல்லி குடுத்துட்டு போயிட்டான்... அப்ப ரமேஷ் தம்பிக்கு 6-7 வயது இருக்கும்... எங்குளுக்கும் கொளந்த இல்லாததனால எங்க கிட்டயே வச்சிகினோம்... தம்பி வந்த நேரம்... என் பொஞ்சாதி புள்ளதாச்சி ஆயிட்டா... அதனால கொளந்த இல்லாத என்... அண்ணனுக்கு இந்த ரமேஷு தம்பிய குடுத்துட்டோம்... அவன் தம்பிய வச்சிக்காம வேறயாருக்கோ குடுத்துட்டான்...!

மாதேவி : எல்லாம் அவரு பொஞ்சாதியால...

மாதேவா : அதானதும் பல கையிமாறி அனாத ஆஸ்ரமத்தில இருக்கிறதா தெரிஞ்சிகினு, அங்கஇருந்து சென்னைக்கு போயி இப்ப இங்க வந்திருக்கிறோம்....

கிரண் : அடடா.. ரொம்பவே கஷ்டப்பட்டுட்டிருக்கீங்க.. மொத்தத்துல ஒரு நல்ல காரியத்தை செஞ்சதுக்காக ரொம்ப சந்தோஷம்...! ஆமாம்... ரமேஷ் எங்க பையன்றதுக்கு ஆதாரம் இருக்கணுமே உங்ககிட்ட... (என, மாதேவா தன் ஜேபியிலிருந்து வெள்ளி இ. கயிற்றை எடுத்து)

மாதேவா : நீங்க பேப்பர்ல போட்டிருந்தது இந்த அரணாகயிறு செயினு படந்தானே...? ரமேஷ் தம்பி எங்ககிட்ட வந்தப்ப இது ஒண்ணுதான் அந்த தம்பி இடுப்புல இருந்திச்சி.. (கிரண் பட்டென்று அதை பிடுங்கி பில்லையை பார்த்து)

கிரண் : ஆமாம்... இன்னும் வேற ஆதாரங்களும் இருக்கணுமே...?

மாதேவி : சத்தியமா சொல்றோம்...! தம்பிய எங்குளுக்கு குடுத்தப்ப இது ஒண்ணுதான் தம்பி இடுப்புல இருந்தது...

கிரண் : சரி சரி இருங்க அப்பாவுக்கு ஃபோன் பண்ணி கூப்பிடறேன்... உங்களுக்கு அவர் கையால சன்மானம் கொடுத்து மரியாதை செய்யறதுதானே ஞாயம்... (என்று இடுப்பு கயிற்றுடன் தன் அறைக்கு வேகமாக செல்ல)

-Cut to

SC. No. 74.B **நாகேந்திரன் வீடு** Day / Int

(கிரணின் தந்தை நாகேந்திரன் சோஃபாவில் 'டான்' போல உட்கார்ந்து எதிரில் இருந்த டிவியில் பாக்ஸிங் பார்த்துக் கொண்டிருக்க. அப்போது செல் ஃபோன் ஒலி எழுப்ப அதை எடுத்து)

நாகேந்திரன் : ஹலோ...

கிரண் குரல் : டேடி... நான் கிரண் பேசறேன்... ஒரு மீன்கார ஜோடி வந்து இப்ப நம்ப ஆஸ்பத்திரியில இருக்கிற ரமேஷ்தான், கௌரி பெரியம்மாவின் மகன் ரமேஷுன்னு சொல்லி, அவன் சின்ன வயசில போட்டிருந்த வெள்ளி அரணாகயிற்றை என்கிட்ட குடுத்திருக்காங்க... அவங்களுக்கு உங்க கையால சன்மானம் செய்ய வக்கிறேன்னு சொல்லி நம்ம பங்களா ஹால்ல உக்கார வச்சிருக்கேன்... இப்ப என்ன செய்யலாம் டேடி......?

நாகேந்திரன் : போச்சிடா... அவன் வந்திட்டா நம்ம திட்டம் எல்லாமே கெட்டு போயிடுமே... ம்... நீ ஒண்ணும் கவலபடாத.. அவங்கள வயிறு ரொம்ப தின்னவச்சி நைசா பேசி அங்கயே உக்காரவை..! மிச்சத்தை நான் வந்து பாத்துக்கறேன்...

- Dissolve

SC. No. 74.C **கிரண் மலைபங்களா** Eve / Ext

(நாகேந்திரனின் கார் வந்து பங்களா முன் நிற்கிறது. அதிலிருந்து நாகேந்திரன் இறங்க, அவனுக்காக காத்திருந்தவனாக கிரண்)

கிரண் : வாங்க டேடி (என்று உள்ளே கூட்டிச்செல்ல)

-Cut to

SC. No. 74.D **கிரண் மலைபங்களா (ஹால்)** Eve / Int

மாதேவா மாதேவியின் முன், டீபாயின் மேல் அவர்கள் சாப்பிட்டு மிஞ்சிய பிஸ்கட், சிப்ஸ், வாழைப்பழ தோல்கள் இருக்கின்றன. மாதேவா தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும்போது நாகேந்திரன் கிரண் என்ட்ரி நாகேந்திரனை கண்ட இவர்கள் இருவரும் எழுந்து நின்று)

மாதேவா : ஐயாவுக்கு வணக்கம்..

நாகேந்திரா : வணக்கம் உக்காருங்க (நால்வரும் உட்கார)

நாகேந்திரன் : என் பையன் எல்லாவிஷயத்தையும் சொன்னான்... உங்க மூலமா ரமேஷ் எங்க பையன்தான்றது தெரிஞ்சது... நீங்க

செஞ்ச இந்த உபகாரத்துக்கு எவ்வளவு பணம் குடுத்தாலும் போதாது... ஆனாலும் ஞாயமானதை குடுக்க வேண்டியது எங்க தர்மம்... ரெண்டு லட்சம் ரூபா குடுக்கிறேன். பத்தலேன்னா கேளுங்க... என்னம்மா..?

மாதேவி : (நடித்தவாறு) அதெல்லாம் உங்க இஷ்டம் சாமி... உங்க பையன் உங்களுக்கு கெடச்சிருக்கிறதே எங்குளுக்கு சந்தோஷம்...!

நாகேந்திரன் : எங்களுக்கும் ரெண்டு மடங்கு சந்தோஷம்மா...!

மாதேவா : அப்படீன்னா.. ரமேஷ் தம்பிய ஒருதாட்டி பாத்துட்டு அப்பிடியே ஊருக்கு போயிடறோம் ஐயா..

கிரண் : ரமேஷ் எங்கயோ வெளியே போயிருக்கான்... இப்ப மணி அஞ்சு... ஏழு மணிக்கெல்லாம் வந்துடுவான்...

நாகேந்திரன் : வந்த பின்னால தாராளமா பாத்து பேசிட்டு போங்க.. உங்களுக்கும் அவன்மேல பாசம் இருக்குமில்லையா.. ஆனா ஒரு கண்டிஷன்...! (மாதேவா மாதேவி பரஸ்பரம் பார்த்துக்கொள்ள) இன்னிக்கி ராத்திரி உங்களுக்கு இங்க விருந்து...! நல்லா வயிறார நீங்க சாப்பிட்டுதான் போகணும்.... உங்களை வீட்டுக்கே கொண்டுபோய் விட்றது எங்க தர்மம்...

மாதேவா : உங்க பேச்சை மீற முடியுமா...

நாகேந்திரன் : உக்காந்திருங்க ஒரு நிமிஷத்தில வந்திடறேன் (என்று எழுந்து அறைக்கு போக கிரண் அவனை பின் தொடர)

மாதேவா : (மாதேவியிடம் தாழ்ந்த குரலில்) அடியே ஒண்ணுக்கு அர்ஜன்ட்டு.. வெளிய போய் இருந்துட்டு வந்துடறேன் (என்று வெளியேற)

-Cut to

SC. No. 74.E **கிரண் மலைபங்களா** Eve / Ext

(வெளியே வந்த மாதேவா ஒண்ணுக்கு உட்கார அங்குமிங்கும் பார்த்துவிட்டு அதே கட்டிடத்தின் பக்கத்தில் சுவற்று ஓரமாக உட்கார 'டேய் முட்டாள் நான் நாகேந்திரன்டா' என்ற பேச்சு சத்தம் கேட்டு மேலே பார்க்க ஜன்னல் தெரிகிறது. ஏன் இவ்வளவு கோபமாக பேசுகிறார் என்று மாதேவா எழுந்து நின்று ஒட்டு கேட்க)

நாகேந்திரன் : எனக்கு இல்லடா.. இங்கு ரெண்டு பண்ணிங்க வந்திருக்கு... (மாதேவா ரியேக்ஷன்) சாதா ஓட்டல்லையே என்னென்ன கெடைக்குதோ அதை யெல்லாம் வாங்கிட்டு வா...! மறக்காம கலக்கிறதுக்கு கோககோலாவோ, பெப்ஸியோ வாங்கிட்டுவா... (நேர

இடைவெளி) ஆ......ம் அது போதும் அப்படியே நம்ம சைனா ராஜுகிட்ட போய் 2 மருந்து பொட்டலங்க வாங்கிக்க (நேர இடைவெளி) காலி பண்றது இல்லடா. பைத்தியம் மருந்துதான்... இப்ப எல்லாம் அதைதானடா யூஸ்பண்றோம். இது ரொம்ப முக்கியம் மறந்துடாதே. (நேர இடைவெளி) சரி சரி நீ இதையெல்லாம் எடுத்துக்கிட்டு மெய்ன்ரோடுக்கு வந்துடு... நான் அங்கவந்து கலெக்ட் பண்ணிக்கிறேன்... சீக்கிரம் போ.. ஃபோன வை....

(இதையெல்லாம் ஒட்டு கேட்ட மாதேவாவுக்கு அவர்கள் மேல் சந்தேகம் வந்து, புரிந்துகொண்டவ னாக, மெதுவாக அந்த இடத்தைவிட்டு சற்று தூரம் வந்து, ''திருட்டு என் மகனுங்களா'' என்று சொல்லிநடந்து பங்களா உள் போக)

-Cut to

SC. No. 74. F **கிரண் மலைபங்களா (ஹால்)** Eve / Int

(மாதேவா கதவிடமிருந்து ஓடிவந்து மாதேவி பக்கத்தில் உட்கார்ந்து கொள்ள, நாகேந்திரன், கிரண் அறையிலிருந்து ஹாலுக்கு வந்ததும்)

மாதேவா : ஐயா.. நானும் இவுளும்.. கொஞ்ச நேரம் வெளியில அப்பிடியே போயிட்டுவரோம்...

நாகேந்திரன் : நீங்க ரொம்ப தூரத்தில் இருந்து வந்திருக்கீங்க. அசதியாகூட இருக்கும்... ஏன் இன்னும் உடம்ப அலட்டிக்கிறீங்க..? (என்று ஒரு அறையைகாட்டி) அந்த ரூம்ல போய் நிம்மதியா பேசிட்டிருங்க. ரமேஷ் வந்ததும் கூட்பிடறேன். அப்ப வாங்க...

மாதேவா : சரிங்கய்யா.. (என்று மாதேவா மாதேவி எழுந்து அறைக்குள் போக)

-Cut to

SC. No. 74. G **கிரண் மலைபங்களா (பெரிய அறை)** Eve / Int

(மாதேவா மாதேவி கட்டிலில் அமர்ந்து தாழ்ந்த குரலில்)

மாதேவா : மாதீ எனுக்கு என்னுமோ இவுங்கமேல சந்தேகமா இருக்குது...

மாதேவி : எனுக்குந்தாய்யா.. பெரிய பங்களாக்கு நம்பள கூட்டினு போவாம.. யாரும் இல்லாத இந்த ஊட்டுக்கு ஏன்யா கூட்டுனுவரணும்..?

மாதேவா : ஆமா மாதீ.. நானு வெளியில ஒண்ணுக்கு போயினு இருந்தப்போ யாருகிட்டயோ நம்பள மீன் புடிக்கற ரெண்டு பண்ணிங்க வந்திருக்குதுன்னு சொன்னான்... அப்பிடியே பைத்தியம் மருந்து பொட்டலம்... இன்னும் பெப்ஸி, கோககோலா எல்லாம் எடுத்துனுவான்னு பேசினான்... இவுங்க நம்பள பைத்தியக்காரங்களாக்க பாக்கறாங்க மாதீ...

மாதேவி : அப்பிடியா...? அப்பிடீன்னா நாம்ப இங்க இருந்து தப்பிக்கணோண்ணா.. இவுங்குளுக்கு பைத்தியம் புடிக்கவச்சிட்டுதான் போவணும் போல இருக்குதே....

மாதேவா : ஆமா நாம்பளும் ஒரு ஐடியா செய்யிலாம்....!

- Dissolve

SC. No. 74. H **கிரண் மலைபங்களா (ஹால்)** Night / Int

(நாகேந்திரன் இரண்டு கைகளில் 2 கே(அ)ரி பே(அ)க்குடன் வந்து மாதேவா ஜோடி இருக்கும் அறையை பார்த்தவாறே கிரண் அறைக்கு செல்ல)

-Cut to

SC. No. 74. I **கிரண் மலைபங்களா (கிரண் அறை)** Night / Int

(அறைக்குள் வந்த நாகேந்திரன் 2 கே(அ)ரி பே(அ)க்கையும் டேபிள் மேல் வைத்ததும் கிரணிடம் வந்து)

நாகேந்திரன் : கிரண்... அந்த ட்ரே, தட்டு டம்ளர் எல்லாத்தையும் எடுத்து வை(என, கிரண் பக்கத்தில் இருந்த எல்லாவற்றையும் டேபிள் மேல் வைத்தபின் இருவரும் பிரியாணி, சிக்கன் பொட்டலங்களை எடுத்து பிரித்து தட்டில் போடும்போது கிரண் சிறிது பிரியாணியை கீழே இறைத்துவிட)

நாகேந்திரன் : ஆத்திரப்படாதே.. இந்த மாதிரி வேலைங்க செய்யும்போது ரொம்ப கூலா ஆபரேட் பண்ணணும்...! (என்று இரண்டு டம்ளரில் பெப்ஸியை ஊற்றி ஜேபியிலிருந்து இரண்டு சிறிய பொட்டலங்களை எடுத்து பிரித்து பச்சை நிறத்தில் இருந்த பொடியை இரண்டு டம்ளரிலும் கொட்டி மெதுவாக கலக்கி, டம்ளர்களை எடுத்துக் கொண்ட . நாகேந்திரன் கிரணிடம்)

நாகேந்திரன் : அந்த ட்ரேயை எடுத்துட்டு வா (என்று, வெளியேற)

-Cut to

SC. No. 74. J **கிரண் மலைபங்களா (ஹால்)** Night / Int

(ஹாலுக்கு வந்த நாகேந்திரனும் கிரணும் தங்கள் கையிலிருந்த வற்றை டீபாய்மேல் ஏற்கனவே இருந்த வஸ்துக்களை ஒரு பக்கமாக ஒதுக்கிவிட்டு கொண்டுவந்ததை வைத்து, இருவரும், மீனவ ஜோடி இருக்கும் அறையிடம் சென்று கதவைதட்ட மாதேவா - மாதேவி அயர்வுடன் வெளியே வந்து, மாதேவி கலைந்திருந்த தன் உடைகளை சரி செய்து கொள்ள, மாதேவாவும் தன் லுங்கியை சரிசெய்து கொள்ள)

நாகேந்திரன் : என்ன, ரொம்ப சுஸ்தா இருக்கிறாமாதிரி இருக்கு..?

மாதேவா : ரொம்ப வருஷங்களுக்கு அப்புறம் இப்பிடி ரெண்டுபேரும் தனிய்யா பங்களா ரூம்ல தங்கற சான்ஸ் கெடச்சிது.. அதான் கொஞ்சம் ஜாஸ்தி சந்தோஷமா இருந்துட்டோம் (என்று நடித்து வெட்கப்பட மாதேவியும் வெட்கத்தில் தலைகுனிய) (நாகேந்திரன், கிரணை புன்சிரிப்புடன் கிண்டலாக பார்க்க)

நாகேந்திரன் : மீன் சாப்பிடறவங்க ஆச்சே.. விட்டமின் கொஞ்சம் அதிகமாத்தான் இருக்கும்... ரொம்ப சந்தோஷம் வாங்க சாப்பிடுவீங்க... (மா-மா வந்து சோஃபாவில் உட்கார)

மாதேவி : பெப்ஸீன்னா, இவருக்கு ரொம்ப இஷ்டம். இன்னும் இருக்குதா..?

கிரண் : இருக்கு.. மொதல்ல இது குடிச்சு ஆகட்டும்...!

மாதேவி : இல்ல... இல்ல மொதல்ல அதை எடுத்துனு வந்து இங்க வச்சிடுங்க... இல்லன்னா இவுரு என் பெப்ஸியையும் எடுத்து குடிச்சிடுவாரு... (என, நாகேந்திரன் எச்சரிக்கையாகி)

நாகேந்திரன் : வேணா வேணா... அவுங்க அவுங்க பெப்ஸிய அவுங்க அவுங்க குடிங்க... கிரண்... மொதல்ல அந்த பெப்ஸி பாட்டிலை இவங்க முன்னால கொண்டு வந்து வச்சிடுப்பா.. (கிரண் அறைக்கு போய் 2 லிட்டர் பெப்ஸி பாட்டிலை கொண்டுவந்து எதிரில் டீபாய் மேல் வைக்க, மாதேவா, மாதேவி பரஸ்பரம் பார்த்துக் கொண்டதும், மாதேவா தன் சுண்டு விரலை காட்டி நாகேந்திரனிடம்)

மாதேவா : ஐயா இதுக்கு போயிட்டு வந்துடறேன்...

கிரண் : ரூம்லயே டாய்லெட் இருந்துச்சே... அங்க போகலியா?

மாதேவா : எங்க சார் நீங்க கூப்டதம் நாங்க அப்பிடியே ஏஞ்சி வந்துட்டோம்...!

நாகேந்திரன் : ரும்லயே இருக்கு போய்ட்டு வா.. போ...

மாதேவா : இல்லீங்க ஐயா.. எனுக்கு வெளியில போயிதான் பளக்கம்

கிரண் : அடப்பாவி. போ, போய்ட்டு சீக்கிரமா வந்துடு... (மிக தாழ்ந்த குரலில்) உன்னை நான் சீக்கிரமா அனுப்பி வைக்கலேன்னா இந்த பங்களாவே கப்படிச்சிடும். (என, மாதேவா மாதேவியை அர்த்தத்துடன் பார்த்துவிட்டு வெளியேற)

- Time lapse

நாகேந்திரன் : எங்கம்மா உன் புருஷன்.. இன்னும் ஆளையே காணோம்.

மாதேவி : இருட்டுல எங்கயாவது போயிடபோறாரு அவுருக்கு கண்ணுவேர சரியா தெரியாது... யாராவது போயி அவுர கூட்டுனு வாங்க சாமி...

நாகேந்திரன் : கிரண். நானே போய் பாத்துட்டு வரேன் இரு... (என்று எக்ஸிட்)

கிரண் : என்னம்மா இது.. சாப்பிட உட்காரும் போது இப்படியா...?

மாதேவி : அவுரு எப்பவுமே இப்பிடித்தாங்க ஐயா. ஒண்ணுக்கு என்னா.. ரெண்டுக்கு போனாலும் போவாறு. வயித்த காலி பண்ணிட்டுதான் சாப்புடறதுக்கு உக்காருவாரு...

கிரண் : நல்ல புருஷம்மா உனக்கு...!

மாதேவி : எப்பவும் இப்பிடி இல்லீங்க ஐயா... இப்பதான் ஆறுமாசமா. சுகரு வந்திடுச்சி இல்ல அதுக்குதான்...! ஐயா ஒரு முக்கியமான சமாசாரம். அவுரு மெயினு ரோடு பக்கம் போயி போலீசு கிட்ட எங்கயாவது மாட்டிக்க போறாரு.. மொதுலே அடிதடி கேசுல போலீசு இவுர தேடுது. அப்பறம் அவங்க புடிச்சி. இங்க ஏன் வந்தேன்னு கேட்டு இங்க வந்து, நீங்க குடுக்கிற பணத்தையும் புடுங்கிகினு... போயிட்டா.. திரும்ப ரெண்டு லச்சத்த பாக்க முடியாதுங்க ஐயா...

கிரண் : (திடுக்கிட்டு) ஐயோ அப்படியா...? இரும்மா அப்ப நானே போய் பார்த்துட்டு வந்துட்றேன் (என்று எக்ஸிட்) (உடனே மாதேவி பெப்ஸி ஊற்றியிருந்த 2 டம்பளரையும் எடுத்து போய் ஜன்னல் வழியே

வெளியே ஊற்றி விட்டு மறுபடியும் பெட்பாட்டிலி லிருந்து பெப்ஸியை ஊற்றி வைத்துவிட்டு ஒன்றும் தெரியாதவளாக உட்கார்ந்து கொள்ள சற்று நேரத்தில் மாதேவா, நாகேந்திரன், கிரண் உள்ளே வர)

மாதேவி : ஏன்யா....? எங்க போய் மாட்டிகின.....?

மாதேவா : மொதுலு ஒண்ணுக்குன்னு ஒக்காந்தேன், ரெண்டுக்கும் வர்றாமாதிரி இருந்துச்சி... சரீன்னு கல்லதேடினு அப்பிடியே தூரமா போயிட்டேன்..

நாகேந்திரன் : அடப்படுபாவி, நீ கல்லு கிராக்கியா...? டாய்லட் உள்ளே போய்டுவா போப்பா..

மாதேவா : அய்ய விடுங்கசாமி. நம்புளுக்கு சொதந்திரம் வரத்துக்கு முன்னால பிரிட்டிஷ்காரன் பேப்பர்லதான்...

கிரண் : (குறுக்கிட்டு) சரி நீ மொதல்ல உள்ளே போயிட்டு வாப்பா... (என்றதும், மாதேவா அறைக்குள் போக) (கிரணும் நாகேந்திரனும் பரஸ்பரம் பார்த்துக் கொள்கிறார்கள்) (இப்போது மாதேவா லுங்கியில் கையை துடைத்தவாறு வெளியே வந்து)

மாதேவா : அப்பா இப்ப எல்லாம் சரியாச்சி.. நிம்மதியா சாப்பிட ஒக்காரலாம். (என்று கூறியவாறு மாதேவியை கேள்விக்குறியுடன் பார்க்க, அவள் எல்லாம் ஆனது என்பதைப்போல தலையசைத்துவிட்டு நாகேந்திரனிடம்)

மாதேவி : நீங்க சாப்பிடாம நாங்க மாத்திரம் சாப்புடறது மனசுக்கு ரொம்ப கஷ்டமா இருக்குதுசாமி...

நாகேந்திரன் : சாப்பிடுங்க... சாப்பிடுங்க... உங்களை திருப்தி படுத்தவேண்டியதுதான் எங்களுக்கு முக்கியம்...! கொஞ்சம் இருங்க... உங்க புருஷன் பிரிட்டிஷ்காரன ஃபாலோ பண்ணா மாதிரி நானும் ஒரு விஷயத்தில அவங்கள ஃபாலோ பண்றேன் (என்று 2 லிட்டர் பெப்ஸி பெட்பாட்டிலை எடுத்து பார்த்து) என்ன இது இவ்வளோ கொறஞ்சி இருக்கே.....?

மாதேவி : (சட்டென்று) இவுரு வெளிய போயி ரொம்பநேரமா வராமஇருந்த பயத்துல தொண்ட காஞ்சிபோச்சி... அதனாலதான் பாட்டிலுல இருந்தே தூக்கி குடிச்சிட்டேன் சாமி. கண்டுபுடிச்சிட்டீங்களே.. மன்னிச்சிகோங்க சாமி...

நாகேந்திரன் : (கிரணிடம்) நல்லவேளை... நம்ம க்ளாசுல பெப்ஸிய ஊத்துப்பா... (என்று இரண்டு காலி டம்ளர்களை காட்ட, கிரண் அதில் பெப்ஸியை ஊற்றியபின் நாகேந்திரன் தான் ஒன்றை எடுத்துக் கொண்டு கிரணிடம் ஒன்றை கொடுத்து மாதேவா மாதேவிக்கு) நீங்களும் எடுத்துக்குங்க க்ளாசுங்களை (என, அவர்களும் டம்ளர்களை எடுத்துக் கொள்ள)

நாகேந்திரன் : சியர்ஸ் (என்று டம்ளரை உயர்த்த)

மாதேவி : சினிமால வர்றமாதிரி (என்று கூறி, மாதேவா, மாதேவி சேர்ந்து 'சியர்ஸ்' என்று சொல்லிவிட்டு இருவரும் 'கடகட' என்று முழுதும் குடித்துவிட்டு டம்ளரை டீப்பாய் மேல் வைக்க, நாகேந்திரன் மற்றும் கிரண் பரஸ்பரம் பார்த்து குஷிப்பட) (மாதேவா -மாதேவி சாப்பிட ஆரம்பித்து 5-10 செகண்டிலேயே மாதேவி பைத்தியம் பிடித்தவள்போல நடித்து ஒரு சிக்கன் துண்டை எடுத்து படகு ஓட்டும் துடுப்புபோல பிடித்து)

மாதேவி : மாலநேரம் ஆயிடுச்சு மாமன் இன்னும் திரும்பலயே (என்று பாட)

மாதேவா : ஐலசா........... ஓ....... ஐலசா (என்று அவனும் நடிக்க)

கிரண் : (தந்தையிடம்) மருந்து வேலை செய்ய ஆரம்பிச்சிடுச்சி டேட்... (என்று, இருவரும் சிரிக்க)

மாதேவா : அட சீ... என்னா இது.. படகு முன்னாலயே போவமாட்டேன்னுது... (என்று கூறியவாறு எதிரிலிருந்த டீபாயை எட்டி உதைக்க, அதன் மேல் இருந்த வஸ்துக்கள் கீழே சிதற)

கிரண் : டேடி.. இவங்களை இப்பவே வெளியே அனுப்பலேன்னா... வீட்டை ஒரு வழி பண்ணிடுவாங்க...!

நாகேந்திரன் : ஆமாண்டா... இந்த மீன்காரங்களுக்கு மருந்து ரொம்ப ஃபாஸ்டா வேலை செய்யுது... எதுக்கும் ஒரு கயிறு எடுத்து வை.. கலாட்டா ஜாஸ்தி ஆயிட்டா கை கால கட்டி எடுத்து போட்டுகிட்டு போலாம்...! (இதைக் கேட்டதும் மாதேவா மாதேவி உஷாராகி தங்கள் ஆர்ப்பாட்டத்தை மெதுவாக குறைத்துக்கொண்டு, மேலெழுந்து பக்கம்போய், ஒருவரை ஒருவர் பார்த்து, மாதேவா கீழே கவிழ்ந்து விழுந்து சிரிக்க)

மாதேவி : ஐயய்யோ... என் படகு கடல்ல கவுந்துடுச்சே (ஓ என்று அழ) (கிரண் மாதேவாவிடம் வந்து அவனை எழுப்பி)

கிரண் : மாதேவண்ணா.. வாங்க.. கார்ல ஊருக்கு போலாம் (என)

மாதேவி : ஹ.....ஹ......ஹ....... நாங்க கார்ல வரமாட்டோம், படகுலதான் வருவோம்... (என்று நாகேந்திரன் தோளில் கையை போட)

நாகேந்திரன் : ஓ..... இவளை இப்படியே விட்டா இன்னும் என்னையே கவுத்துடுவா... வாம்மா தாயே... (என்று வாசல் பக்கம் அவளை கூட்டிப்போக, கிரண் மாதேவாவை தாங்கியவாறு பின்தொடர)

-Cut to

SC. No. 74. K **கிரண் மலைபங்களா** Night / Ext

(கிரண், மாதேவா மாதேவியை காரில், பின்ஸீட்டில் உட்கார, வைத்து டோரை சாத்தி, முன் ஸீட்டில் வந்து உட்கார நாகேந்திரன் காரை ஸ்டார்ட் செய்து கிளம்ப, கார் கேமராவை நோக்கி வர)

-Cut to

SC. No. 75 **நெடுஞ்சாலை** Night / Ext

(கார் கேமராவிலிருந்து முன் சென்று சாலையின் ஓரமாக நிற்க நாகேந்திரன் கிரண் இறங்கி வந்து பின் ஸீட் கதவை திறந்து)

கிரண் : மாதேவண்ணா...! வாங்க உங்க ஊர் வந்திடுச்சு... (மாதேவா மாதேவி மீனவர் பாட்டை பாடியவாறே வெளியே வர, நாகேந்திரன் காரின் பின், சாலையை காட்டி)

நாகேந்திரன் : இப்பிடி ரோடுலயே போயிட்டிருங்க.. எதிர்ல ரெண்டு லைட்டுங்க வந்தா.. ரெண்டு பேரும் ஒண்ணா நிண்ணு அதை ஓடிப்போய் புடிக்க போங்க. உங்க ஊர் வந்துடும்...!

மாதேவா : சரிடா... நாகேந்திரா.. வரேண்டா... ஐலஸா... ஓ... ஐலஸா.. (என, கிரணும் நாகேந்திரனும் பரஸ்பரம் பார்த்ததும்)

நாகேந்திரன் : கிரண் இன்னும் நாம இங்க இருந்தா நம்ப மரியாதைய கப்பலேத்திடுவாங்க.. எடுப்பா வண்டிய... (என்று காரில் உட்கார, கார் புறப்பட்டு செல்ல கார் போன திசையை பார்த்து)

மாதேவி : ஏன்யா... பாளாப்போன திருட்டு பசங்க ரொம்ப தொலவுல வந்து உட்டுட்டாங்க போல இருக்குதேய்யா..

மாதேவா : இதுக்கெல்லாம் பயந்தா ஆவுதா.. ரமேஷ் தம்பிய பாக்காம போயிடுவோமா. என்னா...? இன்னிக்கி ராத்திரிக்கி கோட்ரு இல்லாம பண்ணிட்டானுங்க அவ்ளோதான்.. நட... (என்று முன் செல்ல)

-Cut to

SC. No. 76 **கவுண்டர் பங்களா** Night / Int

(பாருவும் கௌரியும் கட்டிலின் மேல் உட்கார்ந்திருக்க)

பாரு : கௌரி... ஸ்டெல்லாவை பார்த்தா என் மகள பார்த்தா மாதிரியே இருக்குதே.. எனக்கென்னமோ அவ நம்ம கஸ்தூரியாவே இருக்குமோன்னு தோணுது...

கௌரி : அப்படியா அண்ணி..? அவளை பார்த்தா அப்பட்டமான க்ரிஸ்தவங்க வீட்டு பொண்ணுமாதிரியில்ல தெரியுது... நம்மளோட கோயிலுக்கு கூட வரமாட்டேன்றா...

பாரு : அதெல்லாம் அவங்க அவங்க வளர்ற சூழ்நிலையை பொருத்ததுதானே கௌரி...

கௌரி : அப்படீன்னா அவளபத்தி எப்படி தெரிஞ்சிக்கிறது. அவங்க அப்பா அம்மாவை வரவழைச்சு விசாரிச்சிட லாமா?

பாரு : (சற்று யோசித்து) அப்படியும் செய்யலாம் ஆனா இப்ப வேணாம்.... ஆஸ்திக்கு ஆசைப்பட்டு ஜனங்கள் எதுவேணும்னாலும் சொல்லுவாங்க... செய்யி வாங்க...! மொதல்ல அவங்க யாரு எப்படிப்பட்ட வங்கன்றதை தெரிஞ்சிக்கலாம்... அதுக்கும் முன்னே.. ஸ்டெல்லா தொடையில இருக்கிற தழும்பையும் அவ மார்புல இருக்கிற மச்சத்தையும் பார்த்திடணும்.. மத்ததை அப்புறம் பார்கலாம்...

கௌரி : ஐயோ.. ஸ்டெல்லா ரொம்ப பிகுவான பொண்ணு...! எப்பவும் மூக்குமேலேயே கோவம் இருக்கு.. நமக்கு அவள் ஒத்துவருவளா அண்ணி...?

பாரு : சரி.. லட்சுமி நாராயணா இருந்தா கூட்பிடு...

கௌரி : (கட்டிலிலிருந்து இறங்கி வாசற் கதவிடம் சென்று) லட்சுமி நாராயணா (என, வந்தேம்மா.. என்றவாறு வந்து கௌரியுடன் உள்ளே வந்ததும்.)

பாரு : பாருப்பா.. நீ சரியானபடி ஒரு வேலய செஞ்சாகணும் அது என்னன்னா.. நாளைக்கு காலையில அங்க ஸ்டெல்லா குளிக்க தண்ணி இல்லாதமாதிரி செஞ்சி.. இங்க குளிக்க வரச்செய்யணும்...

ல.நா. : அவ்வளவுதானேம்மா.. தண்ணி மோட்டரை வச்சி ஒரு ஆட்டம் காட்டிடறேன்...!

-Cut to

SC. No. 77 **கெஸ்ட் ஹௌஸ்** Mor / Ext

(ல.நா. தண்ணீர் டேங்க்கிடம் உட்கார்ந்து தண்ணீர் மோட்டரை ரிப்பேர் செய்வதுபோல் நடித்து ஸ்டெல்லா அறை பக்கம் பார்த்து தனக்குள் 'ஏன் இன்னிக்கி அக்கா இன்னும் வெளியவராம இருக்காங்க' என்று சொல்லிக்கொண்டிருக்க ஸ்டெல்லா வெளியே வந்து ல.நா.வை பார்த்து)

ஸ்டெல்லா : ஏய் லட்சுமி.. ஏன் குழாயில தண்ணி வரலே?

ல.நா. : (எழுந்து ஸ்டெல்லாவிடம் வந்து) மோட்டர் கெட்டுபோச்சக்கா... இன்னிக்கி ரிபேர் ஆவாது போல தெரியிது...

ஸ்டெல்லா : நான் குளிக்காம வெளியே போகமாட்டேன்னு உனக்கு தெரியுமில்லே... மொதலே டே(அ)ன்க் தண்ணிய பிடிச்சி வச்சிருக்ககூடாதா...?

ல.நா. : மோட்டரு இப்பிடி கெட்டுபோவோண்ணு என்ன கனவுலயா வரும்....? போய் பெரிய வீட்டிலயே குளிச்சிட்டு வாங்கக்கா..

ஸ்டெல்லா : முடியாது.. நீயே போய் பக்கட்டில தண்ணி எடுத்துட்டுவா..

ல.நா. : எனக்கு கை சுளுக்குகிட்டு இருக்கு அக்கா..

(அப்போது ரமேஷ் அறையிலிருந்து வெளியே வந்து)

ரமேஷ் : இதென்ன காலைலயே உங்க கலாட்டா...?

ஸ்டெல்லா : பாருங்க ரமேஷ்... குளிக்க தண்ணி இல்ல, போய் தண்ணி எடுத்துட்டு வாண்ணு சொன்னா கை சுளுக்கிகிட்டு இருக்குன்னு சொல்லுது இது...

ல.நா. : சுளுக்கிட்டு இருக்கப்ப எப்படி தண்ணி எடுக்க முடியும்...?

ரமேஷ் : ஏன் இதுக்கு மின்ன ஒரு நாள் தண்ணி வராதப்ப அங்க போய் குளிச்சிட்டு வரலியா.. இப்ப என்ன ஆச்சு...?

ஸ்டெல்லா : இப்ப அவங்கெல்லாம் குளிச்சிட்டிருப்பாங்க... நான் போய் டிஸ்டர்ப் செய்றது நல்லா இல்லே...

ரமேஷ் : உங்கள மாதிரி இல்ல அவுங்க...! காலைல அஞ்சு மணிக்கெல்லாம் எழுந்து குளிச்சு பூஜைய கூட முடிச்சிட்டிருப்பாங்க...

ஸ்டெல்லா : என் வாயை கிளறாதீங்க ரமேஷ்...! நீங்க என்ன அஞ்சு மணிக்கெல்லாம் எழுந்து குளிச்சிடறீங்களா... லட்சுமி என் ரூம்லிருந்து டவல எடுத்துட்டு வா (என்று பங்களாவை நோக்கி போக)

-Cut to

SC. No. 78 **கவுண்டர்பங்களா (ஹால்)** Mor / Int

(பாருவும் கௌரியும் ஸ்டெல்லாவின் வருகைக்காக காத்திருக்க ஸ்டெல்லா ல.நாவுடன் அங்கு வர)

பாரு : ஏம்மா இவ்வளவு லேட்டு..?

ஸ்டெல்லா : (சட்டென்று) அப்படீன்னா நான் வருவேன்னு காத்துட்டிருந்தீங்களா..?

கௌரி : ஆமாம்மா (சமாளித்து) இல்லே இல்லே.. இவன் மோடர் ரிபேருன்னு சொன்னான்... அதால நீ குளிக்க இங்கதான் வருவேன்னு எதிர்பார்த்திருந்தோம்...

பாரு : போம்மா... போய் உடம்பு முழுக்க சோப்பு போட்டு நிதானமா நிம்மதியா குளிச்சிட்டு வா... உனக்கு டிபன் ரெடியா வக்கிறேன்...

ஸ்டெல்லா : அதெல்லாம் எதுவும் எனக்கு வேணா... இப்பவே லேட்டாயிடுச்சு... (என்று சொல்லியவாறு பாத்ரூம் பக்கம் போக)

பாரு : (ல.நாவிடம் மெல்லிய குரலில்) நல்ல படியா உன் வேலைய செஞ்சே.. இன்னும் நீ கிளம்புப்பா... (என ல.நா. எக்ஸிட் கௌரியும் பாருவும் பரஸ்பரம் பார்த்துக் கொண்டு, 'ம்'.... என்று பாத்ரூம் பக்கம் போக)

-Cut to

SC. No. 78.A **கவுண்டர்பங்களா (பாத்ரூம்)** Mor / Int

(ஸ்டெல்லா தன் உடைகளை கழட்டிவிட்டு டவலை கட்டிக் கொள்ள, அவள் தொடையில் உள்ள தழும்பு தெரிகிறது. ஆனால் மார்பில் உள்ள மச்சம் ஏதும் தெரியாதவாறு டவல் சுற்றப்பட்டுள்ளது)

-Cut to

SC. No. 78.B கவுண்டர்பங்களா (பாத்ரூம் வெளியே)Mor / Int

பாத்ரூம் வெளியே கௌரியும் பாருவும் மாறி மாறி சாவி துவாரத்துவழியாக உள்ளே பார்த்து.

கௌரி : (ஆச்சர்யத்துடன்) அண்ணி தொடையில தழும்பு இருக்கு அண்ணி (என்று தாழ்ந்த குரலில் சொல்ல)

பாரு : பாத்தேன்,... பாத்தேன்... (குஷியுடன்) இரு. டவலையும் கழட்டிடட்டும்.. மச்சத்தையும் பார்த்திடலாம். (என்று மெல்லிய குரலிலேயே சொல்லி மறுபடியும் சாவி துவாரத்து வழியாக பார்க்க)

-Cut to

SC. No. 78.C கவுண்டர்பங்களா (பாத்ரூம்) Mor / Int

(ஸ்டெல்லா பக்கெட்டிலிருக்கும் வெந்நீரை விரல்விட்டு சூடு பார்த்து டவலை அவிழ்க்க, பாரு பி.ஒ.வி.யில் அவள் பின் பக்க முதுகுமட்டும் தெரிகிறது).

-Cut to

SC. No. 78.D கவுண்டர்பங்களா (பாத்ரூம் வெளியே) Mor / Int

(கௌரியும் பாருவும் உள்ளே பார்க்கும் போட்டா போட்டியில் பாருவின் மோதிரம் பாத்ரூம் கதவுக்கு பட்டு 'டக்' என்ற சத்தம் உண்டாக)

-Cut to

SC. No. 78. E கவுண்டர்பங்களா (பாத்ரூம் உள்ளே) Mor / Int

('டக்' என்ற சத்தம் கேட்ட ஸ்டெல்லா அவிழ்த்த டவலை மறுபடியும் சுற்றிக் கொண்டு 'யாரது' என, பதில் ஏதும் வருவதில்லை. ஆனாலும் சந்தேகத்துடன் டவலை அவிழ்க்காமலே குளிக்க ஆரம்பிக்க)

-Cut to

SC. No. 78.F கவுண்டர்பங்களா (பாத்ரூம் வெளியே) Mor / Int

(சாவி துவராத்தில் பார்த்திருந்து திரும்பிய கௌரி)

கௌரி : என்ன அண்ணி டவல் கட்டிக்கிட்டே குளிக்கிறாளே மச்சத்தை எப்படி பார்க்கறது...?

பாரு : இரு கௌரி... குளிச்ச பின்ன துணிய மாத்தறப்ப எப்பிடியும் பார்த்திடலாம்...! (அப்போது அங்கு வந்த கவுண்டர்)

கவுண்டர் : இங்க என்ன செஞ்சுகிட்டு இருக்கீங்க..? பாத்ரூம் வெளிய நின்னுகிட்டு அப்படி என்ன ரகசியம்... கெளரி போம்மா போய் காஃபி எடுத்துட்டு வாம்மா.. (என, கெளரியும் பாருவும் மரியாதை, ஒழுக்கத்தின்காரணமாக அங்கிருந்து மனமில்லாமல் கிளம்ப)

-Cut to

SC. No. 78.G **கவுண்டர்பங்களா (ஹால்)** Mor / Int

(கவுண்டர் ஹாலில் பேப்பர் படித்தவாறு உட்கார்ந்திருக்க அவருக்கு கெளரி காஃபியை கொடுக்க, ஸ்டெல்லா தன் தலைமுடியை சரிசெய்தவாறு அந்த பக்கமாக வர)

கவுண்டர் : (ஸ்டெல்லாவை பார்த்து) ஓ... பாத்ருமுல நீ தான் குளிச்சிட்டு இருந்தியாம்மா? (ஸ்டெல்லா நிற்க,). உனக்குதான் இவங்க காவல் இருந்தாங்களா.. பாத்தியாம்மா.. உம்மேல அவங்களுக்கு எவ்வளவு ஆசை... பாரும்மா ஸ்டெல்லா.. உன்ன நாங்க வேத்து ஆளா நெனைக்கலே.. நம்ம வீட்டுலயே இருந்துடம்மா..

ஸ்டெல்லா : நீங்க தப்பா நெனைக்கலேன்னா ஒண்ணு சொல்லட்டா சார்...?

கவுண்டர் : சொல்லும்மா...!

ஸ்டெல்லா : ரொம்ப பணக்காரங்க சகவாசம் நிரந்தரமானது இல்லேன்னும் ஆபத்தானதுன்னும் சொல்லுவாங்க..!

கவுண்டர் : (குறுக்கிட்டு) என்னம்மா எங்களையும் அப்படி நெனச்சிட்டியா... நாங்க சாகறவரைக்கும் நீ எங்க கூடவே இருந்திடறதா ஒரு வார்த்தை சொல்லும்மா... ஆஸ்தி விஷயத்துல கூட உன் இஷ்டப்படியே நாங்க நடந்துக்கறோம்...!

ஸ்டெல்லா : அதெல்லாம் ஒண்ணும் வோணா... உங்க அன்பே எனக்கு போதும். நான் மலைக்கு போயாகணும்... நான் வரேன் சார் வரேம்மா.. (என்னு அவசரமாக வெளியேற)

-Cut to

SC. No. 79 **கெஸ்ட் ஹௌஸ்** Night / Ext - Int

(மாதேவா மாதேவி டார்ச் பிடித்தவாறு அதன் வெளிச்சத்தில் அடிமேல் அடிவைத்து கெஸ்ட்ஹௌஸ் படியிடம் வந்து நின்று, ஒரு கதவுக்கு வெளிச்ச மடித்து மேல வாசற்காலைப்பார்க்க 'ஸ்டெல்லா'

என்ற பெயரும் அடுத்த கதவுக்கு வெளிச்சமடிக்க வாசற்கால் மேல் 'ரமேஷ்' என்ற பெயரும் தெரிய, அதைகாட்டி)

மாதேவா : இதுதான் ரமேஷ் தம்பி ரூமு.. போய் கூப்புடலாமா...?

மாதேவி : ம்... போய் கூப்புடுய்யா... (என, இருவரும் அங்கு மிங்கும் பார்த்துவிட்டு மெதுவாக கதவிடம் சென்று மெல்லகதவை தட்ட)

ஸ்டெல்லா குரல் : யாரது.......?

மாதேவா : ஐயய்யோ பொம்பள கொரல் கேக்குதுடீ... ஓடு ஓடு (என்று இருவரும் ஓடி எதிரில் இருந்த ஒரு புதரில் மறைந்து கொள்ள)

ஸ்டெல்லா : (கதவை திறந்து) யார் இப்ப என் ரூம் கதவை தட்டினது.. ஏய் லட்சுமி... லட்சுமி நாராயணா.. (என்று கூப்பிட்டவாறு போய் ரமேஷ் கதவை தட்டி 'ரமேஷ்' என்று கூப்பிட ரமேஷ் வெளியே வர) (அவனை மாதேவா மாதேவி புதரிலிருந்து பார்க்க)

ரமேஷ் : ஏன் இப்படி கத்திக்கிறீங்க...? பேய் பிசாசு ஏதாவது வந்துடுச்சா...?

ஸ்டெல்லா : அப்ப நீங்கதான் பேய்..! எனக்கு நல்லா, என் கதவு தட்டின சத்தம் கேட்டுச்சே...

ரமேஷ் : ஏன் இந்த ராத்திரியிலே இப்படி பண்றீங்க... இந்த நேரத்தில இங்க யார் வருவாங்க...?

ஸ்டெல்லா : எனக்கென்னமோ பயமா இருக்கு ரமேஷ்...

ரமேஷ் : அப்படீன்னா சார் வீட்ல போய் படுத்துக்கோங்க...

ஸ்டெல்லா : ஆஹா என்ன அட்வைஸ்... நான் இங்கேயே படுத்துக்கறேன்... வர்றது வரட்டும் ஜீஸஸ் இருக்கார்... (என்று தன் அறையுள் போக, ரமேஷும் அவன் அறையுள் போக), (மாதேவா மாதேவி புதருக்கு பின்னாலிருந்து வந்து ரமேஷ் அறைக்கதவை மெல்ல தட்ட, ரமேஷ் சற்று கோபத்துடன் கதவை திறந்ததும், அவனைக்கண்டு மாதேவா தன் வாய் மீது விரலை வைத்து)

மாதேவா : (மெல்லியகுரலில்) ஷ்... எதுவும் பேசாதீங்க.. நாங்க உங்க கிட்ட பேசறது யார் மூலமாவது உங்க கிரணுக்கு தெரிஞ்சா உங்க உயிருக்கே ஆபத்து வரும்...! (என)

ரமேஷ் : (ஒன்றும் புரியாதவனாக) வாங்க உள்ளே. (என, மாதேவா மாதேவி உள்ளே போக, ரமேஷ் கதவைசாத்த)
-Cut to

SC. No. 79.A கெஸ்ட் ஹெளஸ் (ரமேஷ் 'இருக்கும்' அறை)Night/Int

(மூவரும் உள்ளே வர ரமேஷ் மாதேவாவிடம்)

ரமேஷ் : உட்காருங்க (என்று கட்டிலில் உட்கார அவர்கள் நாற்காலிகளில் உட்கார) மொதல்ல நீங்க யாருன்றதை சொல்லுங்க..

மாதேவி : எங்கள அடையாளம் தெரியலையா தம்பி.. நீ சின்ன புள்ளயா இருந்தப்ப இரண்டு வருஷம் எங்க ஊட்டுல இருந்தியேப்பா...

மாதேவா : எப்பிடி தெரியும். நம்ம ஊட்டுக்கு வந்தப்போ இந்த தம்பீ அவுரு பேரமட்டும்தானே சொன்னது.. வேற எதுவுமே பேசலியே (ரமேஷை பார்த்து) தம்பீ, அப்ப யாரோ உன்ன உங்க ஊட்டுல இருந்து திருடிக்கினு போயி இருட்டு ரூமுல போட்டு அடிச்சிருப்பாங்க.. ஏன்னா படுக்கிறபோது லைட்ட ஆப் பண்ணா 'ஐயோ என்ன அடிக்காதீங்க விட்டுடுங்கன்னு கத்தி அளுவ்வ தம்பீ...

ரமேஷ் : (சிரித்தவாறு) அப்படியா.. நல்லவேளை.. கை கால முறிச்சி பிச்சை எடுக்க வக்கிற ஏஜெண்டுங்க கிட்ட விடலியே..

மாதேவி : அவங்ககிட்ட குடுக்கதான் இருட்டு ரூம்ல போட்டு அடிச்சாங்களோ என்னமோ...? நீ உங்க அப்பா அம்மா செஞ்ச புண்ணியத்தால.. பல கையிமாறினாலும்.. உங்க வீட்டுக்கே வந்து சேந்திருக்க தம்பீ..

ரமேஷ் : என்ன... எங்க வீட்டுக்கே வந்து சேர்ந்திருக்கேனா..? (மாதேவா தன் ஜேபியிலிருந்து பேப்பர் கட்டிங்கை எடுத்து காட்டி)

மாதேவா : இந்த விளம்பரத்தில் இருக்கிற அட்ரஸ்சு உங்க முதலாளிதுதானே...?

ரமேஷ் : (அதை வாங்கி படித்து) ஆமா..!

மாதேவா : நீதான் தம்பீ சின்ன வயசுல காணாம போன இந்த ஊட்டு புள்ள...!

ரமேஷ் : ஆமாம்... கவுண்டர் மகளும் கௌரி அம்மாவோட மகனும் சின்ன வயசில காணாமபோயிட்டதா சொன்னாங்க... அது சரீ... நான்தான் இவங்க வீட்டு பையன்றதுக்கு என்ன ஆதாரம் இருக்கு...?

மாதேவா : அதுக்கு ஆதாரமா.. சின்ன வயசில உன் இடுப்புல இருந்த வெள்ளி அரணாகயிறு செயினை இங்க எடுத்துனு வந்தப்பதான்.. கிரணும் அவங்க அப்பனும் எங்கள ஏமாத்தி அதை எடுத்துக்குனதும் இல்லாம, எங்கள பைத்தியமாக்கிறதுக்கும் பாத்தாங்க.. நீ ரொம்ப உசாரா இருக்கணும் தம்பீ.. உன்ன கொல்ல கூட தயங்கமாட்டாங்க அவுங்க...

ரமேஷ் : அப்படீன்னா செயின் அவங்ககிட்டதான் இருக்குன்னு சொல்றீங்களா...?

மாதேவா : ஆமாம்... கிரண் அவன் ரூமுக்குதான் எடுத்துனு போனான். அது ஒண்ணுதான் நீ இந்த ஊட்டு புள்ளேன்றதுக்கு எங்கிட்ட இருந்த ஒரே ஆதாரம். அதை எப்படியாவது கொண்டாந்துடுங்க. மிச்சம் எல்லாத்தையும் உங்க ஊட்ல நாங்க சொல்றோம்...! இப்ப நாங்க யார் கண்ணுக்கும் படாம பக்கத்து ஊர்ல இவங்க சித்தி ஊட்ல தங்கிட்டு நாளைக்கு ராத்திரி வந்து பாக்குறோம்...

ரமேஷ் : ரொம்ப நன்றிங்க.. வாங்க போலாம் (என்று மூவரும் வெளியேற)

-Cut to

## SC. No. 79.B கெஸ்ட் ஹௌஸ் (ரமேஷ் 'இருக்கும்' அறை) Night/Ext

(ரமேஷ், மாதேவா, மாதேவி, அறையிலிருந்து வெளியே வர ஸ்டெல்லா 'தடார்' என்று தன் அறைக்கதவை திறந்து கொண்டு வெளியே வந்து)

ஸ்டெல்லா : நீங்கதான் இவங்க கிட்டசொல்லி என் ரூம் கதவை தட்டவச்சி என்ன பயமுறுத்தினீங்களா.. நானும் பயத்தில் ஓடி வந்து உங்க கையை பிடிச்சி நிப்பேன்னு பாத்தீங்களா...?

ரமேஷ் : ஷட் அப்... இவங்க என்ன பாக்கதான் வந்தது...!

மாதேவா : ஆமாம்மா.. வாசப்படி மேல இருந்த பேரை பாத்து கதவ தட்டினதுதான் தப்பா போச்சி...

ஸ்டெல்லா : அப்ப ஏங்க போய் மறஞ்சிகிட்டீங்க... ரமேஷ் எங்கேன்னு என்னையே கேட்டிருக்கலாமே...?

ரமேஷ் : (குறுக்கிட்டு) இவங்க என்னத்தவிர வேறு யார் கண்லயும் படக்கூடாது...!

ஸ்டெல்லா : அதென்ன அப்படிப்பட்ட டாப் ஸீக்ரெட்... ?

மாதேவி : (சிரித்தவாறு) நான் சொல்றேன்னு கோவிச்சிக்காதம்மா.. நீங்க இப்பிடி சண்டை புடிக்கிறத பாத்தா இது நெஜமான சண்டையா தெரியில... ஒருத்தர்மேல ஒருத்தர் ரொம்ப ஆசை வச்சிருக்கிறாமாதிரிதான் தெரியுது... (ரமேஷின் கை பிடித்து) ஏன் தம்பி இவங்ககிட்ட சமாசாரத்தை சொல்லிபுடலாம் இல்லியா...?

ரமேஷ் : வேணாம்மா இவங்களபத்தி உங்களுக்கு தெரியாது.. ஆதாரம் இல்லாம யாரு கிட்டயும் எதையும் சொல்லக்கூடாது... நீங்க ஊருக்கு கிளம்புங்க....

மாதேவா : எதுக்கும் நீ உசாரா இருக்கணும் தம்பீ.. (என்று ரமேஷ் தோளைதட்டி மாதேவியுடன் வெளியேற)

ஸ்டெல்லா : அதென்ன ஆதாரமில்லாம யார்கிட்டயும் எதையும் சொல்லக்கூடாது.? உங்கள அனாதைன்னு சொல்றீங்க.. எதுக்கு இந்த ஸீக்ரெட் மீடிங்.... ஏதாவது போகஸ் வேலயில எறங்கீட்டீங்களா என்ன?

ரமேஷ் : இப்பதான் நான் அனாதை இல்லேன்றதுக்கு ஒரு ஆதாரம் கெடைக்கிறாமாதிரி இருக்கு.... அதுக்குள்ளே நீங்களே என்ன நம்பாம போகஸ் அது இதுன்னு சொல்றதா இருந்தா.. உங்களால கெடச்சதா நீங்க நெனச்சிக்கிட்டிருக்கிற இந்த வேலையே வேணாம்... (என்று சொல்ல, ஸ்டெல்லா கோபமாக படியில் போய் உட்கார்ந்து கொள்ள. ரமேஷ் தன் அறையுள் போய் சிறிது நேரம் கழித்து மனம்கேளாது வெளியே வர, ஸ்டெல்லா கண் துடைத்தவாறு படியிலேயே உட்கார்ந்திருக்க அவளிடம் வந்த ரமேஷ்.)

ரமேஷ் : ஏங்க கண்ல தண்ணி..?

ஸ்டெல்லா : கண்லதான தண்ணி.. எனக்கு ஒண்ணும் ஆகலயே...

ரமேஷ் : சரி உள்ளே போய் படுங்க.. இப்பநெஜமா பேயே வந்தாலும் வரலாம்.. (என்று சொல்ல, ஸ்டெல்லா எழுந்து அவனை கோபமின்றி முறைத்துவிட்டு அவள் அறைபக்கம் போக ரமேஷ் அவன் அறைபக்கம் போக)

-Cut to

SC. No. 80 **கவுண்டர் பங்களா** Day / Ext

(ட்ரைவர் குமார் ஜீப்பை துடைத்துக் கொண்டிருக்க அப்போது 'டல்கலர்' ஆடையுடன் அங்கு வந்த ரமேஷ்)

ரமேஷ் : குமார் சின்ன மலைக்கு போயிட்டுவரணும்.. ஜீப் தேவைப்படுதே... சார் உள்ளே இருக்காரா....?

குமார் : இருக்கார் போங்க.....

ரமேஷ் : உள்ள போக சங்கோஜமா இருக்கு குமார்.. அதுக்குத்தான்... (என்று சொல்லிக் கொண்டிருக்கையில் கவுண்டர் அவசரமாக வெளியே வருகிறார். ரமேஷை கண்டவுடன்)

கவுண்டர் : வாப்பா ரமேஷ் என்ன விஷயம்..?

குமார் : (சட்டென்று) ரமேஷ் சாருக்கு சின்ன மலைக்கு போக ஜீப்தேவைப்படுதாம் எஜமான்..

கவுண்டர் : என்னப்பா ரமேஷ்.. நான் உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்... இதை உன் வீடுமாதிரி நெனச்சு வாப்பான்னு...

ரமேஷ் : அதுக்கு இல்லைங்க சார்..

கவுண்டர் : இனிமே எந்த சங்கோஜமும் இல்லாம நீ நம்ம வீட்டுக்கு வரணும்.. புரியுதா...? போ சாவி ஸ்டேன்ட்ல சாவி இருக்கு எடுத்துட்டு போ... வரட்டுமா.. (என்று கூறி காரில் உட்கார குமாரும் ட்ரைவிங் சீட்டில் உட்கார கவுண்டர் ''சீக்கிரம் எடுப்பா வண்டிய'' என வண்டி புறப்பட)

-Cut to

SC. No. 80.A **சின்னமலை பாதை** Day / Ext

(ஜீப்பை ரமேஷ் ஓட்டிச்செல்ல மேடு பள்ளங்களில் ஜீப் போய்க்கொண்டிருப்பதை, இரண்டு மூன்று முறை, தூர, கிட்ட என்று காண்கிறோம். பிறகு ஜீப்பை கிரணின் மலைப் பங்களாவிற்கு சற்று தூரத்தில், யார் கண்ணுக்கும் படாத மரங்கள் பாறைகள் சூழ்ந்த இடத்தில் நிறுத்திவிட்டு, பங்களாவிடம் ஓடி வர)

-Cut to

SC. No. 80.B **கிரண் மலைபங்களா** Day / Ext

(பங்களாவிடம் வந்த ரமேஷ் மெய்ன்டோரிடம் சென்று தன்னிடமிருந்த சாவிக்கொத்தை எடுத்து பூட்டை திறக்க முயற்சித்து மூன்றாவது சாவியில் பூட்டு திறந்துகொள்ள சாவிக்கொத்தை எடுத்துக்கொண்டு கதவைதிறந்து உள்ளே செல்ல)

-Cut to

SC. No. 80.C **கிரண் மலைபங்களா (உள்ளே)** Day / Int

(உள்ளே வந்த ரமேஷ் கதவை மூடி பீரோ இருக்கும் அறையை தேடுகிறான். கிரண் அறைக்கு வந்ததும் அங்கு பீரோ இருக்க, அதையும் பல சாவிகளில் முயற்சித்து பீரோ திறக்க அதில் முழுவதுமாக தேடி வெள்ளி இ. கயிறு கிடைக்காது,மற்ற அறைகளிலுள்ள டேபிள் ட்ராயர்களில் தேடும் பொழுது கார் சத்தம் கேட்டு வெளியே வந்து பார்க்க, கிரண் காரை தூரத்தில் கண்டதும், கதவை பூட்டி ஓடி செடிகளில் மறைந்து, கிரண் அவன் பங்களா உள்நுழையும் வரை காத்திருந்து, புதரில் விட்ட தன் ஜீப்பை நோக்கி ஓட)

-Cut to

SC. No. 80.D **கிரண் மலைபங்களா,**
**சின்ன மலைப்பாதை (திரும்புதல்)** Day / Ext

ஜீப்பில் உட்கார்ந்த ரமேஷ் வேகமாக ஜீப்பை ஓட்டிச் செல்ல இரண்டு மூன்றுமுறை ஜீப் வேகமாக கரடுமுரடான பாதையில் இறங்குவதை தூரம், கிட்ட என்று காண்கிறோம். கீழே வந்து, கவுண்டர் பங்களாவை நெருங்கும் சற்றுதூரத்தில், ரமேஷ் ஜீப்பை வேகமாக திருப்ப, அது எதிர்பாராதவிதமாக மரத்திற்கு இடித்து சாய்ந்துவிட ரமேஷுக்கு தலை கை கால்களில் அடிபட்டு மூர்ச்சையாகி வெளியே விழுகிறான். எதிர் திசையில் வந்து கொண்டிருந்த ஊர் ஆள் ஒருவர் இதை கண்டு)

ஊர் ஆள் : ஐயோ ரமேஷ் சாருக்கு அடிபட்டுபோச்சே..! (என்று அலறியபடி ஓடி வந்து ரமேஷை தூக்க)

-Cut to

SC. No. 81 **கிராமத்து ஹாஸ்பிடல் (வார்ட்)** Day / Int

(ரமேஷ் தலை, கை, கால்களில் கட்டுகள் போடப்பட்டு கட்டிலில் படுத்திருக்க, பக்கத்தில் ல.நா இருக்க கவுண்டர், பாரு, கௌரி, ரேகா, நாகபூஷண் எல்லோரும் பதற்றத்துடன் உள்ளே ரமேஷிடம் வந்து நிற்க) (ரமேஷ் அனைவரையும் கண்டு புன்சிரிக்க)

பாரு : உனக்கு ஒண்ணும் ஆகாது ரமேஷ்.. (என்று ரமேஷ் கட்டுபோட்ட காலை தொட ரமேஷ் சங்கோஜத்துடன் அக்காலை மெதுவாக சற்றே இழுத்துக் கொள்ள)

கவுண்டர் : (ல.நாவிடம்) சாப்பிட ஏதாவது கொடுத்தீங்களா இல்லையா...?

ல.நா. : இன்னும் எதுவும் கொடுக்கலீங்க எஜமான்...

கவுண்டர் : கௌரி... வீட்டிலிருந்தே சாப்பாடு அனுப்பிடுமா...

பாரு : கௌரி.. நீ இங்கேயே இரு. நான் வீட்டுக்கு போய் குடுத்து அனுப்பறேன்...

கவுண்டர் : (டாக்டரிடம்) பெரிய காயம் எதுவுமில்லையே டாக்டர்...?

டாக்டர் : இல்லீங்க ஐயா...! ரமேஷுக்கு நல்ல நேரமின்னுதான் சொல்லணும்...!

கவுண்டர் : ரமேஷ் நீ நல்லா ஓய்வெடுத்துக்க... அப்ப நாங்க வரோம் வாங்க போகலாம்...

பாரு : கௌரி.. நான் வரேன்.. லட்சுமி நாராயணா நீ என்கூட வா.. (என்றதும், கௌரி தவிர அனைவரும் வெளியேறுகிறார்கள்) (ரமேஷ் கௌரியை தன் தாயென்று அறிந்து அதை நம்பியிருக்கிறான். அதனால் கௌரியை பாசத்துடன் பார்க்க, கௌரி அவனிடம் உட்கார்ந்து.)

கௌரி : என்னப்பா ரமேஷ்...? என்ன வேணும்? (என்று ஆதரவுடன் அவன் தலையை தடவ அப்போது ரமேஷ் ஸ்லோமோஷனில் தன் கண்களை மூடி தாயின் ஸ்பரிசத்தை உணர்கிறான். சற்று நேரத்தில் அங்கு ஸ்டெல்லா பதைபதைக்க ஓடிவந்து, கௌரியிடம்)

ஸ்டெல்லா : என்னாச்சு... என்னாச்சுங்க மேடம்... (என்று கண்ணீர் ததும்பி கேட்டு நிற்க)

கௌரி : எப்பவும் ரமேஷ் கூட சண்டை பிடிப்பியே.. இப்ப இந்த அக்கறை எங்க இருந்து வந்துடுச்சு...? ரமேஷுக்கு ஒண்ணும் ஆகலே கவலைபடாதே...! (என்று அவள் தாவாங்கட்டையை பிடித்து ஆட்ட) (ரமேஷ் தன் கண்களை மெதுவாக திறந்து மறுபடியும் மூடிக்கொள்ள)

கௌரி : சரி நீ ரமேஷை பார்த்துக்க... நான் வீட்டுக்கு போய் உங்க ரெண்டு பேருக்கும் சாப்பிட குடுத்து அனுப்பறேன். (என்று வெளியேற, ஸ்டெல்லா மெதுவாக ரமேஷிடம் உட்கார்ந்து முதன்முறையாக காதலோடு, மென்மையாக அவன் கை மேல் கை வைக்க ரமேஷ் மெதுவாக தன் கண்களை திறந்து அவளை பார்க்க, இருவர் கண்களும் சந்திக்க காட்சி 'டிஸால்வ்' ஆகிறது)

-Dissolve

SC. No. 82

பாடல் - 6

குறிப்பு : கதையோடு ஒட்டி போக ரமேஷின் ஆட்டம் கொஞ்சம் மிதமாகவே இருத்தல் நல்லது.

SC. No. 83 **மேரி வீடு** Night / Int

(மேரி கட்டிலில் உட்கார்ந்திருக்க, ஜேம்ஸ் லட்சுமியுடன் அங்கு வருகிறான். ஹாஸ்பிடலிலிருந்து வந்த லட்சுமி சற்று தேறியிருக்கிறாள்.)

மேரி : வா லட்சுமி... உட்காரும்மா...

லட்சுமி : (உட்கார்ந்து) அக்கா.. ஜேம்ஸ் இப்ப முழுசா மாறிட்டாரு..

மேரி : எங்கேம்மா.. உன்ன ஆஸ்பதிரியில சேர்த்துட்டு அடுத்த நாள் போனவன். அப்புறம் இந்த பக்கம் வரவேயில்லயேம்மா.. (என்று அசதியாக அலுப்புடன் சொல்ல)

ஜேம்ஸ் : எங்கயும் போவல ஆண்டி. என்னை திருடனா ஆக்கணதும் இல்லாம.. என் லட்சுமியையே கெடுத்த அவங்களை அவங்களே நெருப்புல எரிஞ்சிபோறா-மாதிரி செஞ்சிட்டு வந்துட்டேன். இனிமே உனுக்காக லட்சுமிக்காக நல்ல வளியிலதான் வாளுவேன்.... இது ஜீஸஸ் மேல சத்தியம்...!

மேரி : அப்படீன்னா நெஜமா ஸ்டெல்லா ஆசைய விட்டுட்டியா...?

ஜேம்ஸ் : சத்தியமா உட்டுட்டேன்... உன் முன்னாலயும் ஸ்டெல்லா முன்னாலயுந்தான் எனக்கும் லட்சுமிக்கும் சர்ச்ல வெட்டிங்..

லட்சுமி : (சிரித்து) திரும்பி என்னை லட்சுமீன்றியே...? சர்ச்ல கல்யாணம் பண்ணுவாங்களா.?

ஜேம்ஸ் : டோன்ட் வொர்ரி.. மொதல்ல ஃபாதர் கிட்ட சொல்லி உன்ன லில்லியாமாத்தி அப்பறம் நம்ம வெட்டிங்.. ஓகேவா...?

லட்சுமி : எந்த கடவுளானா என்னா.. ஜனங்க ஒருத்தருக்கு ஒருத்தர் ஒத்தாசையா இருந்துகிட்டா.. போதும்...!

மேரி : (ஜேம்ஸிடம்) அப்படீன்னா நாளைக்கு புதன்கிழமை.. நல்லநாள்... நாளைக்கே ஊருக்கு போய் ஸ்டெல்லா அந்த வீட்டு பொண்ணுதான்னு சொல்லிட்டு வந்துடணும்.... நீ போய் சேட்டு கடையில அந்த வெள்ளி செயின மூட்டுணு வந்துடு ஜேம்ஸ்... பழைய மாதிரி எந்த சாக்கும் சொல்லாத...!

ஜேம்ஸ் : (சற்றே ஷாக் ஆகி சுதாரித்து) சரிங்க ஆண்டி.. பழசை எல்லாம் அந்த வீட்டுகாரங்களுக்கு நீங்க சொல்லுங்க அப்பறம் நடந்ததை நான் சொல்லிக்கிறேன்..

-Cut to

SC. No. 84 **கிராமத்து ஹாஸ்பிடல்** Night / Ext

(இரவு நேரம். மாதேவா மாதேவி ஹாஸ்பிடலிடம் வந்து வெளியார் யாரும் இல்லை என்பதை அறிந்து உள்ளே போக)

-Cut to

SC. No. 84. A **கிராமத்து ஹாஸ்பிடல்** Night / Int

(உள்ளே வந்த மாதேவா மாதேவி அங்கே உட்கார்ந்திருந்த டாக்டர் ராம்நாத்திடம் போய்)

மாதேவா : ஐயா.. கொஞ்சம் ரமேஷ் தம்பியை பாக்கணும்.. ரொம்ப முக்கியமான விஷயம்...!

டாக்டர் : ஒரு நிமிஷம் இருங்க விழிச்சிட்டிருக்காரா பார்ப்போம்.. ரமேஷ்..

ரமேஷ் குரல் : என்ன டாக்டர்...? (என்ற குரல் வர, ல.நா வெளியிலிருந்து தண்ணீர் பாட்டிலுடன் வந்து வார்டுக்குள் நுழைய.)

டாக்டர் : (மாதேவனுக்கு) ரொம்ப நேரம் கழிக்காதீங்க. ஆன அளவு சீக்கிரம் பேசிட்டு கிளம்பிடுங்க...!

மாதேவா : சரிங்கய்யா... (என்று வார்டு பக்கம் திரும்ப)

-Cut to

SC. No. 84.B **கிராமத்து ஹாஸ்பிடல் (வார்ட்)** Night / Int

(மாதேவா மாதேவி உள்ளே வந்ததும்)

மாதேவா : என்ன தம்பி இப்படி ஆயிடுச்சே...?

ரமேஷ் : வாங்க வாங்க... உங்களைத்தான் எதிர்ப்பார்திட்டிருந்தேன்.. (ல.நாவை பார்த்து) லட்சுமி.. ஒரு அஞ்சு நிமிஷம் வெளியே இருக்குவியா...?

ல.நா. : என்னையே வெளிய அனுப்புறீங்களா...? அப்படி என்ன பெரிய ரகசியம்...?

ரமேஷ் : உனக்கு சொல்லாமலா.. அப்புறம் சொல்றேன்...! இப்ப போப்பா.. (என, லட்சுமி எக்ஸிட் ஆக)

ரமேஷ் : கிரண் பங்களாவுக்கு போயி, பீரோல.. இன்னும் எல்லா இடத்திலேயும் தேடிப்பார்த்துட்டேன்... நீங்க சொன்ன அந்த வெள்ளி அரணா கயிறு கிடைக்கலே...

மாதேவா : தம்பீ... பணக்காரங்க வீட்டுல இருக்கிற பீரோங்கள்ள அங்கங்க ஸீக்ரேட் லாக்கருங்க இருக்கும்...! அது உங்க மாதிரி ஆளுங்க கண்ணுக்கு தெரியாது... எங்க மாதிரியானவங்க கண்ணுக்குதான் தெரியும்...! இன்னிக்கு செவ்வா கௌம.. எனுக்கு ராசியான நாளு. எப்பிடியும் கண்டுபிடிச்சி அதை உங்க கிட்ட கொண்டாந்து ஒப்படைக்கிறேன்...

மாதேவி : ஆமா தம்பி.. இந்த மாதிரி வேலையில எல்லாம் இவரு பெரிய சூரன். என்னை கட்டிக்கிறதுக்கு முன்ன இந்த வேலதான் செஞ்சிகுனு இருந்தாரு...!

ரமேஷ் : (சிரித்தவாறு) சரி சரி.. கிரண் கண்ணுல பட்டுடபோறீங்க.. மொதல்ல இங்கிருந்து கிளம்பிடுங்க.. (என்றதும், இருவரும் எக்ஸிட் ஆக)

-Cut to

SC. No. 85 **கவுண்டர் பங்களா (பாரு அறை) (H.W.O.)** Night / Int

பாரு : பாரும்மா ஜோதி... இந்த வேலைய ரொம்ப சரிய்யா செய்யணும்...! நான் சொன்னதெல்லாம் கவனம் இருக்குதானே..?

ஜோதி : இருக்குங்க அம்மா...!

கௌரி : சரி இன்ஜக்ஷனை ரெடி செஞ்சிக்க ஜோதி... (என, ஜோதி ஸிரின்ஜில் மருந்தை ஏற்ற)

பாரு : லட்சுமி நாராயணா... (என, வெளியே நின்றிருந்த ல.நா உள்ளே வர, அவனிடம்)

பாரு : ஸ்டெல்லாகிட்ட போய்.. அம்மாவுக்கு உடம்பு சரியில்லைன்னு சொல்லி.. கௌரி கூப்பிட்டதா கூட்டிட்டுவா. என்ன புரிஞ்சுதா..?

ல.நா : (புன்முறுவலுடன்) புரிஞ்சுதும்மா.. (என்று எக்ஸிட்)

கௌரி : சரி.. நீங்க படுங்க அண்ணி... (பாரு கட்டிலில் படுக்க, கௌரி போர்வையை போர்த்த)

-Cut to

SC. No. 85.A **கெஸ்ட் ஹௌஸ்** Night / Ext/Int

(ல.நா. ஸ்டெல்லா அறையின் கதவை தட்டி, திறந்து உள்ளே செல்ல

ஸ்டெல்லா : என்ன லட்சுமி...?

ல.நா. : அம்மாவுக்கு மறுபடியும் உடம்பு சரியில்லாம படுத்திருக்காங்க.. சின்னம்மா உங்களை உடனே கூட்டுனு வரச்சொன்னாங்க..

ஸ்டெல்லா : ஜீஸஸ்... ஏன் யாருக்காவது ஏதாவது ஒண்ணு நடந்து கிட்டே இருக்கு.. (என்று சொல்லி உள்ளே போய் சாவியோடு வெளியே வந்து கதவை பூட்டி)

ஸ்டெல்லா : வா லட்சுமி போலாம்.. (என்று கவுண்டர் பங்களா பக்கம் போக)

-Cut to

SC. No. 85.B **கவுண்டர் பங்களா (பாரு அறை)** Night / Int

(ஸ்டெல்லா பாரு அறைக்கு வர)

ஸ்டெல்லா : (கௌரியிடம்) என்னாச்சு மேடம்....?

கௌரி : கொஞ்ச நேரத்துக்கு முன்னதான் இப்படி ஆச்சும்மா.. எப்படி ஆச்சுன்னே தெரியலே.. ரெண்டு தடவை உன் பேரை சொன்னாங்க. அவ்வளவுதான். அப்புறம் பேச்சே நின்னு போச்சு...

ஸ்டெல்லா : (பாருவின் தலையை தடவி அவள் தோளை பிடித்து மெல்ல ஆட்டி அன்போடு) அம்மா.. அம்மா... (என்று அழைக்க, பாரு அதில் உருகிப்போக, திறவாத அவள் கண்ணில் நீர் வடிகிறது)

(கௌரி சைகையினால் ரெடியா என்று ஜோதியை கேட்க ஜோதியும் சைகையில் ரெடி என)

(பாரு கட்டிலுக்கு வலதுபுறம் ஸ்டெல்லாவும் ஜோதியும் நின்றிருக்க, இடது புறம் நின்றிருக்கும் கௌரி, ஒரு ஸிரப் பாட்டிலை எடுத்து ஸ்டெல்லாவுக்கு காட்டி, ஸ்டெல்லா அதை கொஞ்சம் எட்டி வாங்கும் தூரத்தில் நின்று)

கௌரி : காலையில இந்த சிறப்பதாம்மா குடிச்சாங்க.. என்ன ஆச்சோ தெரியலே.. (என, ஸ்டெல்லா சற்று எட்டி அதை வாங்க முயற்சிக்க , ஜோதி டேபிள் மீதிருந்த ஸிரின்ஜை எடுத்து ஸ்டெல்லாவின் புட்டத்தில் ஊசிபோட திரும்பும்போது மேட் தடுக்கி தடுமாற, அவள் இடதுகை சிறிய டேபிள்மேல் இருந்த தண்ணீர் சொம்பின் மீது பட்டு அது 'டொளங்' என்று சப்தத்துடன் சாய, அதை கேட்டு ஸ்டெல்லா, ஜோதி பக்கம் திரும்ப, ஜோதி ஸிரின்ஜோடு இரண்டு கைகளையும் தூக்கியவாறு ஸ்டெல்லா மீது விழ, ஸ்டெல்லா அவளை கட்டிப் பிடிக்க, கௌரியை விழித்தவாறு பார்த்த ஜோதிக்கு கௌரி, 'ஊசிய குத்து' என்று சைகை காட்ட, ஜோதி ஸிரின்ஜை பிச்சுவா பிடிப்பதுபோல் பிடித்து ஸ்டெல்லா புட்டத்தில் ஊசியை குத்த, ஸ்டெல்லா ஆ... என்று கத்த பாதி மருந்தை மட்டும் ஏற்ற முடிந்த ஜோதி ஸ்டெல்லாவை கெட்டியாக பிடித்துக்கொள்ள, சில நொடிகளில் ஸ்டெல்லா மயக்கமடைய. பாரு எழுந்து கொள்ள, மூவரும் மெல்ல ஸ்டெல்லாவை கட்டிலில் படுக்க வைக்க)

பாரு : கௌரி.. என்ன சும்மா பார்த்துக்கிட்டிருக்கே...? மச்சத்த பாக்க வேண்டியதுதானே.. (என, கௌரி சங்கோஜப் பட்டு நிற்க, பாருவே ஸ்டெல்லாவின் கமீஸை அவிழ்த்து பிரேஸியரை இடது பக்கம் தள்ளி பார்க்க இடது மார்பின்மேல் சற்றே பெரிய மச்சம் தெரிகிறது. மூவரும் சந்தோஷத்தில் சிரிக்க)

பாரு : அப்பாடா.. கௌரி...! இவ என் மகள் கஸ்தூரியேதான். (என்று கூறி மயங்கியிருக்கும் ஸ்டெல்லா கன்னத்தில் ஒரு முத்தமிட, ஸ்டெல்லாவை மூவரும் சரியாக படுக்க வைத்து. பின் கௌரி மற்றும் பாரு ஹாலுக்கு போக.)

-Cut to

SC. No. 85. C **கவுண்டர் பங்களா (ஹால்)** Night / Int

(ஹாலுக்கு கௌரியும் பாருவும் வர, எதிரில் வந்த கவுண்டரை பார்த்த கௌரி)

கௌரி : அண்ணா... நம்ம கஸ்தூரி கிடைச்சுட்டாண்ணா...! (என்று சந்தோஷித்து சொல்லிக்கொண்டிருக்க, வெளியே புறப்பட்ட ரேகா, மற்றும் அங்கேயே பேசிக்கொண்டிருந்த மேனேஜர், கிரண், ல.நா. கௌரியிடம் வர)

கவுண்டர் : அப்படியா. எங்கம்மா கஸ்தூரி...? (என்று சந்தோஷத்தில் அங்குமிங்கும் பார்க்க)

பாரு : ஸ்டெல்லாதாங்க நம்ம கஸ்தூரி... அவ உடம்பில மச்சம், சுட்டகாயத்தின் தழும்பு எல்லாம் அப்படியே இருக்குங்க...! அவளுக்கு ஊசி போட்டு மயக்கமா என் ரூம்லதான் இருக்காங்க. (என்று சொல்ல அனைவரும் சந்தோஷத்தில் இருக்கும் போது பாரு அறையிலிருந்து ஸ்டெல்லா மயக்கம் தெளிந்தவளாக சற்றே நிதானமாக வெளியே வர, ஜோதி அவளுக்கு ஆதரவாக தோளை பிடித்தவாறு வர அவள் கையை உதறியபடி ஸ்டெல்லா வருவதை கண்ட கவுண்டர்)

கவுண்டர் : ஸ்டெல்லா... அம்மா கஸ்தூரி...! மகளே (என்று சொல்லியவாறு அவளிடம் போக, அவர் கிட்டே வராதபடி, ஸ்டெல்லா தன் இரண்டு கைகளையும் தடுத்தார்போல் முன்வைத்து)

ஸ்டெல்லா : ஏன் எனக்கு மயக்கம் இன்ஜெக்ஷன் போடவச்சீங்க...? இப்ப என்னடான்னா கஸ்தூரின்னு ஓடி வர்றீங்க. மகளேன்றீங்க., ஏன் என்ன இப்படி கன்ஃப்யூஸ் பண்றீங்க..?

கவுண்டர் : கொஞ்சம் பொறுமையா இரும்மா.. உன்ன வளர்த்த அம்மா இங்க வந்துட்டா. எல்லா குழப்பமும் நீங்கிடும்...!

கிரண் : (குறுக்கிட்டு) மாமா.. நான் இப்பவே போய் அவங்களை கையோட கூட்டுட்டு வந்துடறேன்.

கவுண்டர் : நாகபூஷண். ஸ்டெல்லா வீட்டு அட்ரஸ்ஸை கொடுத்தனுப்புங்க. (நாகபூஷண், கிரண் வெளியேற)

பாரு : என்னங்க இது...?

கவுண்டர் : கவலைப்படாதே. ஸ்டெல்லா நம்ப பொண்ணுதான். நீதான் அவள் அம்மா... (என்று பாருவை சமாதானம் செய்துவிட்டு ஸ்டெல்லாவை பார்த்து)

கவுண்டர் : பாரும்மா இப்ப உனக்கு எல்லாம் குழப்பமாத்தான் இருக்கும். பெருமையா... உங்க அம்மான்னு சொல்றியே.. அவங்க வர்றவரைக்கும் நீ உன் ரூம்ல இரும்மா.. (ல.நாவை பார்த்து) நீயும் கூட போய் ஸ்டெல்லா மனசு கஷ்டப்படாம பாத்துக்க... (என்றதும் ஸ்டெல்லாவும் ல.நாவும் வெளியேற)

-Cut to

SC. No. 86 **நெடுஞ்சாலை** Night / Ext

(நெடுஞ்சாலையில் கிரண் காரில் போய்கொண்டிருப்பதை 2-3 முறை காண்கிறோம். கார் சற்று முன் செல்ல, சிறுநீர் கழிக்கும் உத்தேசத்தில், கிரண் காரை தைல மரங்கள் அடர்ந்து காணப்படும் ஒரு இடத்தில் ஓரமாக நிறுத்திவிட்டு சற்று முன்னே போய் நிற்க, சாலையில் கார்களும் லாரிகளும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து போய்க் கொண்டிருக்க, இன்னும் கொஞ்சம் உள்ளே தோப்பு ஓரமாக போய் சிறுநீர் கழிக்க, அவனுக்கு முன்னே செடிகளுக்கு பின்னே சற்றே தூரத்தில் மூன்று ரௌடிகள் ஒருவனை கத்தியால் மாறி மாறி குத்திக்கொண்டிருப்பதை காண்கிறான். அப்போது அந்த ரௌடிகளில் X ரௌடி கிரணை பார்த்து விட்டு)

X ரௌடி : டேய் அங்க பாருங்கடா.. எவனோ ஒருத்தன் நம்பள கவனிக்கிறான்... (என்றதும் மூன்று ரௌடிகளும் ஓடி வந்து கிரணை பிடித்துக்கொள்ள)

கிரண் : (ஃஜிப் போட்டு) தயவு செய்து என்னை ஒண்ணும் செய்யாதீங்க... நான் இப்ப ரொம்ப அவசரமான வேலையா போயிட்டு இருக்கேன்.... உங்களுக்கு எவ்வளவு பணம் வேணும்னாலும் தரேன்... என்ன விட்டுடுங்க...!

X ரௌடி : எவ்வளோ பணம் வேணும்னாலும் தர்ரீயா....? அவ்வளோ பெரிய பணக்காரனா நீ...?

Z ரௌடி : என்னடா உங்கப்பன் பேரு..?

கிரண் : சென்னையில ரியல் எஸ்டேட் நடத்துற நாகேந்திரனோட மகன் நான்..

X ரௌடி : ஓ... கிரண் ரியல் எஸ்டேட்டுன்னு பேரை வச்சி நடத்துறானே நாகா அவன் மகனா.. நீ...?

கிரண் : ஆமாம்...!

Y ரௌடி : சைத்தான் நம்பளுக்கு உதவிடுச்சி பாத்தீங்களாடா.. டேய் கிரண் பையா... ஒரு ஸ்மக்லிங் கேஸ்ல உங்க அப்பன் என்னா செஞ்சான் தெரியுமாடா...? எங்க ஆள் ஒருத்தனை மருந்து குடுத்து பைத்தியமாக்கிட்டாண்டா...

Z ரௌடி : உங்கப்பனுக்கு பாடம் கத்துக்குடுக்கணுண்ணு காத்துகினு இருந்தோம்.. இப்ப நீயா வந்து மாட்டிக்கினே..

கிரண் : தயவு செய்து என்ன விட்டுடுங்க.. நீங்க கேக்கிற பணத்தை தரேன்...!

Y ரௌடி : பணத்தை யார்வேணும்னாலும்.. எப்பிடினா.. கோல்மால் பண்ணி சம்பாதிச்சிடலாம்.. ஆனா எங்க ஆள் இன்னும் பைத்தியமாவே இருக்கானே.. வா.. போலாம்.

-Cut to

SC. No. 87 **கவுண்டர் பங்களா** Day / Int

'CLIMAX'

(கவுண்டர் பங்களா ஹால். ஹாலில் ஒருவரும் இல்லாததை காண்கிறோம். அப்போது கவுண்டர் ரேகாவுடன் தன் அறையிலிருந்து வெளியே ஹாலுக்கு வந்து தன் கை கடியாரத்தை பார்த்து)

கவுண்டர் : என்னம்மா ரேகா... இவ்வளவு நேரமாகியும் கிரணை காணோமே... ஒரு ஃபோன் கூட பண்ணலே... (என்று சொல்லிக்கொண்டிருக்க, அங்கு பாருவும் கௌரியும் வர, கௌரியை கண்ட கவுண்டர்)

கவுண்டர் : ஏம்மா கௌரி, கிரண் ஏதாவது ஃபோன் பண்ணியிருந்தானா...?

கௌரி : இல்லியேண்ணா...! (என்று சொல்லிக் கொண்டிருக்கையில், புரோகிதர் உள்ளே வந்தபடியே 'கவுண்டர் ஐயாவுக்கு வணக்கம்' என்று சொல்லியவாறு கவுண்டரை அடைந்ததும்.)

புரோகிதர் : சர்வம் சந்மங்களானி பவந்து (என்று சொல்லி ஒரு காவி நிறப்பையை நீட்டி) கவுண்டரய்யா இந்தாங்க கடவுள் பிரசாதம்...

கவுண்டர் : (அதை பெற்றுக் கொண்டு கண்ணுக்கு ஒற்றி, பிறகு கௌரியிடம்) இந்தாம்மா கௌரி.. (கௌரி அதை பெற்று கண்ணுக்கு ஒற்றி பிரசாதபையை பூஜை அறையில் வைக்க எக்ஸிட் ஆக)

புரோகிதர் : என்ன இன்னிக்கு எல்லார் முகத்திலயும் ஏதோ ஒரு எதிர்பார்ப்பு தெரியறது...?

கவுண்டர் : ஆமாங்க புரோகிதரே... ஒரு சந்தோஷமான விஷயத்துக்காகத் தான் எல்லாரும் காத்திருக்கிறோம்...! (என்று சொல்லிக் கொண்டிருக்கையில், வெளி வாசல் பக்கத்திலிருந்து 'பேச்சு சத்தம் வர எல்லோரும் அந்தப்பக்கம் பார்க்க, மாதேவா மாதேவியுடன் ரமேஷ் வந்து கொண்டிருப்பதை பார்த்து)

கவுண்டர் : யாரிவங்க.. ரமேஷ் கூட... (என்று கேள்விக்குறியோடு பார்த்து நிற்க, இவர்களை நெருங்கியதும்)

மாதேவா : வணக்கம் எஜமான்... என் பேரு மாதேவா... இது என் பொஞ்சாதி மாதேவி... (என்று சொல்லியவாறு தன் சட்டைப் பையிலிருந்து ரமேஷின் வெள்ளி இடுப்பு கயிற்றை எடுத்து கவுண்டரிடம் காட்டியதும் அனைவரும் அதை ஆச்சர்யத்துடன் பார்க்க.)

மாதேவா : இதுதானா காணாம போன உங்க புள்ளையோட அரணா கயிறு? (என்று கேட்க, கவுண்டர் அதை வாங்கி அதில் அரை மாவிலை வடிவிலுள்ள பில்லையை திரும்பி பார்த்து அவர்கள் குடும்ப இனிஷியலை கண்டதும் பூஜை அறையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த கௌரியை பார்த்து 'இதப்பாரும்மா கௌரி' என, கௌரி அதைப் பெற்று சோதித்த பின்)

கௌரி : இது நம்ம வீட்டுதுதான் அண்ணா.. நம்ம ரமேஷோட அரணா கயிறுதான் இது...!

கவுண்டர் : (மாதேவாவிடம்) அப்படீன்னா. எங்கப்பா எங்க ரமேஷ்...?

மாதேவி : அந்த ரமேஷ்தானுங்க அய்யா இந்த ரமேஷ். (என்று ரமேஷை காட்ட) (ரமேஷ் அமைதியாக நிற்க)

கௌரி : ரமேஷ் (என்று ஓடி ரமேஷை கட்டி அணைக்க இருவர் கண்களிலும் கண்ணீர் வெள்ளம் பெருக, இதைக்கண்டு ஆனந்தித்து நின்ற கவுண்டரும், பாருவும் அவர்கள் அருகில் போய்)

கவுண்டர் : ரமேஷ்.. (என்று அன்புடன் அவன் முதுகை தடவ, பாரு தன் இரு கைகளாலும் அவன் கன்னத்தை பாசத்துடன் பிடிக்க, ரமேஷ் அவள் இரு கைகளையும், சொந்தங்கள் எல்லாம் தன் கைக்கு கிடைத்துவிட்டவனாக பிடித்து ஆனந்தப்பட்டு நிற்க, அதே சமயம் ஃபாதர், மேரி, ஜேம்ஸ், லட்சுமி உள்ளே வர அவர்களுக்கு சற்று பின்னாலேயே ஸ்டெல்லா, ல.நா, வருகிறார்கள். இவர்களை கவுண்டர் குடும்பத்தார் பார்த்து நிற்க, ஸ்டெல்லா 'அம்மா' என்றவாறு மேரியை நெருங்க, மேரி திரும்ப, கவுண்டர் குடும்பத்தார் அவர்களை நெருங்க)

ஸ்டெல்லா : பாரும்மா... இவங்க என்னை அவுங்கமகள்னு சொல்றாங்க...!

மேரி : ஆமாம்மா.. அவங்க சொல்றதுதான் சரி.. நீ அவங்க மகள்தாம்மா...!

ஜேம்ஸ் : ஆமா ஸ்டெல்லா... நீ எனக்கு கெடைக்கணும்னு நான் அந்த வெள்ளி செயினை எடுத்துனு ஒரு கெட்ட எண்ணத்துல இங்க வந்தேன்... ஆனா அது எப்பிடியோ தொலைஞ்சி போயிடுச்சி... (கவுண்டரும் கௌரியும் பரஸ்பரம் பார்த்து)

கவுண்டர் : அப்படீன்னா.. இவர்தான் ரிச்சர்டா...?

ஃபாதர் : ஆமாங்க.. அன்னிக்கு நம்ம ஊர்ல பார்த்த அவரேதான்...! அந்த இடுப்பு செயின் நம்ம கைக்கே கெடச்சதயும் இவருகிட்ட சொல்லிட்டேன்...

ஜேம்ஸ் : (குறுக்கிட்டு) ஆமாங்க... நான்தான் ஃபாதர்கிட்ட என் பேரை ரிச்சர்டுன்னு சொல்லியிருந்தேன்... என்ன மன்னிச்சிடுங்க...

மேரி : அம்மா ஸ்டெல்லா. நான் உன்ன வளத்த அம்மாதாம்மா.. நீ இந்த வீட்டு பொண்ணுதாம்மா.. (என்று சொல்ல, பாரு, மேரியிடம் வந்து அவள் கைகளை பிடித்து)

பாரு : என் மகளை எல்லா விதத்திலும் நல்லவளா.. உங்க சொந்த மகளா வளர்த்த உங்கள.. நான் சாகர வரைக்கும் மறக்கமாட்டேம்மா.. (என்று ஸ்டெல்லா பக்கம் திரும்பி தன் இரு கைகளையும் முன் நீட்டி 'கஸ்தூரி' என்று கூப்பிட ஸ்டெல்லா வந்து தன் பெற்றதாயை அணைத்து கவுண்டரை பார்த்து 'அப்பா' என்று அவரை அணைக்க) (ரமேஷ் இதைக்கண்டு உள்ளுக்குள் ஆனந்திக்க)

கௌரி : (ஸ்டெல்லாவிடம்) அப்ப நீதாம்மா என் மருமகள்...! (என்றதும், ஸ்டெல்லா ஒன்றும் புரியாமல் கேள்விக் குறியுடன் பார்க்க)

கௌரி : உனக்கு சின்ன வயசிலயே நிச்சயம் செய்யப்பட்ட என் பையன் கெடச்சாச்சும்மா.. (என்றதும் ஸ்டெல்லா அதிர்ச்சியுடன் ரமேஷை பார்க்க) பயப்படாதே.. நீ இவ்வளவு நாளா சண்டைபோட்டுக்கிட்டே இஷ்டப் பட்டுட்டு வந்தியே அவரேதான் என் பையன் ரமேஷ். (என்றதும் ஸ்டெல்லா வெட்கத்தால் கவுண்டர் பக்கம் திரும்ப, அவளை கவுண்டர் சந்தோஷத்தில் அணைக்க.)

கவுண்டர் : இவ்வளவு நாளா நாம ஒருத்தரை ஒருத்தர் தெரியாமலேயே ஒண்ணா இருந்திருக்கோம்...

புரோகிதர் : அதுதானுங்கய்யா, நேரமுங்கறது. எதுக்கும் நேரம் கூடிவந்தான பெறகுதான் அது நடந்து முடியும்...

மேரி : ஸ்டெல்லா. அப்ப நாங்க வரோம்மா..

ஸ்டெல்லா : (கவுண்டரிடம்) இவங்க என்னை வளர்த்த அம்மாதானே இவங்களும் நம்ம கூடவே இருந்துடட்டும் அப்பா...

மேரி : (குறுக்கிட்டு) இல்லம்மா. இனிமேலயும் உன்கூட நான் இருக்கிறத கர்த்தர் அனுமதிக்கமாட்டார்... என்ன ஜேம்ஸ் பாத்துக்குவான்... அவன் நல்லவனா மாறிட்டாம்மா வர்றமாசம் லட்சுமிக்கும் அவனுக்கும் கல்யாணம்...!

ல.நா. : என்ன.. எனக்கும் ஜேம்சுக்கும் கல்யாணமா..?

பாரு : உனக்கில்லடா...! அவர் பக்கத்தில் வெக்கப்பட்டு நிக்கிற பொண்ணுக்கும் ஜேம்சுக்கும்.. (என, அனைவரும் சிரிக்க லட்சுமியும் வெட்கத்தோடு சிரிக்க)

ஸ்டெல்லா : சார் ஒரு விஷயம்.. ஐயோ சாரிப்பா..

கவுண்டர் : பராவயில்ல சொல்லும்மா..

ஸ்டெல்லா : எனக்கு ஜீஸஸ்ஸை தவிர வேற கடவுளை கும்பிட முடியாதேப்பா...

கவுண்டர் : அம்மா.. கடவுள் விஷயத்தில் நான் உன்ன வற்புறுத்தவே மாட்டேன்... மஹாத்மா காந்தியோடவே இருந்திட வந்த பிரிட்டிஷ் அதிகாரி மகளான மிஸ் மெடலியன் ஸ்லேடு கிட்ட, 'நீ இந்துவா மாறிடு'ன்னு அவர் சொல்லியிருக்கமாட்டாரு, அப்படி சொல்லி இருந்தா.. அந்த பொண்ணு.. 'நான் மதிச்சு வந்த மனுஷன் இவ்வளவுதானா'ன்னு அவரைவிட்டு அப்பவே விலகிபோயிட்டிருப்பாங்க... அவர் அப்படி சொல்லாம இருந்ததுதாம்மா அவர் கடைபிடிச்ச இந்து தர்மத்தோட உயர்ந்த அம்சம்...! நீ. உன் இஷ்டப்படி எந்த கடவுள வேணும்னாலும் கும்பிடு.. உண்மையான கடவுள நீ புரிஞ்சிக்கிட்டா அதுவே போதும்மா...

ஜேம்ஸ் : அப்ப நாங்க போயிட்டு வர்றோம் ஸ்டெல்லா. (என்று ஸ்டெல்லாவிடம் வந்து அவள் கைக்காக தன்கையை நீட்ட, ஸ்டெல்லா பின்வாங்க)

கவுண்டர் : பரவாயில்ல கையை குடும்மா உன் கைக்கு முத்தம் குடுக்கறதால அவர் மனசு லேசாகட்டும். இங்லீஷ்ல 'டச் தெரப்பி'ன்னு சொல்லுவாங்களே அதுல இதுவும் ஒரு முக்கியமான அம்சம்மா.. ஆனா இவங்க இன்னிக்கு சந்தோஷமா நம்ம கூட இருந்து நம்ம வீட்டுல வயிறு நிறைய சாப்பிட்டு நாளைக்குதான் போகணும்... (என்று சொல்லிக் கொண்டிருக்கையில், திபு திபு என்று மேனேஜர், டாக்டர் ராம்நாத், ட்ரைவர் சோமு மற்றும் ட்ரைவர் குமார் கிழிந்த சட்டையுடன் காணும் கிரணுடன் உள்ளே கவுண்டரிடம் வந்ததும்)

நாகபூஷண் : ஐயா, கிரண் ஐயாவுக்கு பைத்தியம் பிடிச்சி ஹைவே ஓட்டல்ல கலாட்டா பண்ணிக்கிட்டிருக்காருன்னு நம்ம தேங்கா லாரி ட்ரைவர் ஃபோன் பண்ணாரு... போய் கூட்டிட்டு வந்தோம் ஐயா...

பாரு : கிரண்... என்னாச்சுடா உனக்கு......? (என்று கேட்டவாறு அவனிடம் போக, அவன் ஓடிப்போய் சோஃபா மீது மண்டியிட்டு உட்கார்ந்து கொள்ள.)

புரோகிதர் : இந்த குடும்பத்து சித்தபிரமை தோஷம் இன்னும் தீரலியே எப்படீன்னு இருந்தேன்.... இப்ப கணக்கு சரியாபோச்சு. ஒண்ணும் கவலப்படாதீங்க.... அடுத்த வருஷமே கிரண் தம்பி குணமாயிடுவார்.... (என்று சொல்லி சிரிக்க, அனைவரும் சிரிக்க)

**'சுபம்'** என்ற எழுத்துக்களை காண்கிறோம்.

குறிப்பு : மாமூலாக, ரமேஷ் ஸ்டெல்லா கண்கள் சந்தித்து ஃப்ரீஸ் ஆவதிலும் முடிக்கலாம்.

## நீங்கள் படித்து முடித்த திரைக்கதையில் ரசிகர்களை ஈர்க்கும்படியானவை எத்தனை உள்ளன என்று பார்ப்போம்

1. 17 வருடங்களுக்கு முன் தாம்பூலத்தில் பிரிந்தவர்கள் தாம்பூலத்தில் சேர்கிறார்கள் (ஸெண்டிமெண்ட்)
2. 'சர்ச்'ல்'பாம்ப்லாஸ்ட்' (அதிர்ச்சி, வேதனை)
3. கிருஸ்தவ சர்ச்சில் இந்துவாகிய ரமேஷ் சேவை செய்தல் (ஸெண்டிமெண்ட்)
4. ரமேஷ் ரத்தம் கொடுத்தல், அது ஃபாதருக்கு பயன்படல். (ஸெண்டிமெண்ட்)
5. ஒரு கிருஸ்தவரின் நன்றி கூறும் நாகரிகம், அவர் ரமேஷை வீட்டிற்கு சாப்பிட அழைத்துசெல்வது. (நன்றி உணர்வு)
6. வீட்டு ஓனர் மூலம் விதி வலியது என்பதை வசனம் மூலம் தெரிவித்தல். (உலக அறிவு)
7. ஜேம்ஸ் மூலம், ரமேஷ் அவ்வளவு சீக்கிரம் ஸ்டெல்லாவை நெருங்க முடியாது என்பதை காட்டுவது. (எதிர்பார்ப்பு, அேக்ஷனை தூண்டல்)
8. 17 வருடங்களுக்கு முன் காணாமல்போன சிறுவர்கள் கிடைத்து விடுவார்கள் என்று ஐயர் மூலம் தெரிவிப்பது. (எதிர்பார்ப்பு, ஜோதிடம்)
9. கிராமங்களில் டாக்டர்கள் வேலைசெய்ய வர மறுப்பதை வசனத்தின் மூலம் சுட்டிக்காட்டுவது. (மக்கள் விழிப்புணர்ச்சி)
10. இந்து ஜமீன்தார், கிருஸ்தவ குழந்தைகளை உபசரிப்பது (ஸெண்டிமெண்ட்)
11. ரமேஷ் ஃபாதரிடம் பேசுவதன் மூலம் மனித உறவைப்பற்றி தெரிவிக்கிறோம். (உலக அறிவு)
12. மஹேஷ்வரி பட்டுப்புடவை கொண்டுவந்து கொடுக்க அதை மேரி, ஸ்டெல்லாவுக்காக வாங்குவது. (விதிவிளையாட்டின் ஆரம்பம். ஸெண்டிமெண்ட்)

13. கிருஸ்தவர்களாக மாறிய இந்துக்கள் தாக்கப்பட்டதை கவுண்டர் வன்மையாக கண்டித்தல். (அறிவு, விழிப்புணர்ச்சி)

14. பஸ் ஸ்ட்ரைக்கில் ஆட்டோகாரர்கள் (உண்மை, விழிப்புணர்ச்சி)

15. பாம்பை கண்டதும் நர்ஸ்கள் 'இது உங்களுக்கு தெய்வமாக இருக்கலாம் எங்களுக்கு இல்லை' என்று ஓடுவது. (உலகம், ஸெண்டிமெண்ட், காமெடி)

16. கவுண்டரின் வசனத்தின் மூலம் இந்து தர்மத்தின் உயர்வு. (ஆன்மீகம்)

17. ஸ்டெல்லா பியானோ வாசிக்க, இசை புத்திசுவாதீனம் அற்றவர்களையும் ஈர்க்கும் என்பது. (விஞ்ஞானம், ஸெண்டிமெண்ட்)

18. ஸ்டெல்லா தொடையில் உள்ள தழும்பை லட்சுமி பார்த்தல் (லேசான ஸெக்ஸ் காமெடி, ஸஸ்பென்ஸ்)

19. ரமேஷ், ஸ்டெல்லா பெயர்களை வாசற்படிமேல் எழுதுதல். (காமெடி ஸஸ்பென்ஸ்)

20. ஜேம்ஸ், லட்சுமி நெருக்கம். (ஸெக்ஸ் கிளுகிளுப்பு)

21. அரசமரத்தின் மகிமையை பேசுதல். (விஞ்ஞானம், ஸெண்டிமெண்ட்)

22. ஜேம்ஸ் கொண்டுவந்த இ.கயிறு கவுண்டர் வீட்டு கோவில் பிரசாதத்தட்டிற்கு வருதல். (அதிர்ச்சி, ஸெண்டிமெண்ட், ஸஸ்பென்ஸ்)

23. லட்சுமி வசனம் மூலம் பொலிஸ்காரர்கள் திருட்டுத்தனத்தை ஊக்குவிக்கிறார்கள் என்பதை காட்டுவது (விழிப்புணர்ச்சி)

24. அனாதைகள் கடிதங்களை பார்த்தால் எப்படி ஏங்குகிறார்கள் என்பதை ரமேஷ் மூலம் காட்டுதல். (ஏக்கம், ஸெண்டிமெண்ட்)

25. காரில், தாய் தந்தை மகள் என்ற உறவறியாத நிலையில் மகள் தாய் மடியில் தூங்குதல். (வைப்ரேஷன் (Vibration), ஸெண்டிமெண்ட்)

26. உண்மை தெரியாத நிலையில் டாக்டர், ஸ்டெல்லாவிடம், பார்வதியை அம்மா என்று அழைக்கச் சொல்லுதல். (ஸெண்டிமெண்ட்)

27. காட்டுவாசிப் பெண்ணின் நீர் வீழ்ச்சிகுளியல். (செக்ஸ் கிளுகிளுப்பு)

28. ஸ்டெல்லா, ல. நாராயண் சிக்கன் வறுப்பதில் ரமேஷின் கடாய்கலாட்டா (சீரியஸ் காமெடி)

29. சாமந்திப்பூ இதழ் ஸ்டெல்லா நெற்றியில் பொட்டாக உட்காருதல். (செண்டிமெண்ட், ஃக்ரே(அ)ஃபிக் ஒர்க்)

30. பம்பை, உடுக்கை சத்தத்தில் காளியின் பயங்கர அவதாரத்தை காட்டி ஸ்டெல்லாவை மயங்கி விழவைத்து இப்படி கடவுளை பயங்கரமான அவதாரத்துடன் வழிபடுதல் தேவைதானா என்பதை இன்டைரக்ட் ஆக கேட்டல். (வழிபாட்டு விழிப்புணர்ச்சி)

31. நாகவேணியை காட்டி ஒரு பழைய டைப் மிடில் ஏஜ் கிளுகிளுப்பு.

32. ஸ்டெல்லாவுக்கு சிறுவயதில் தீபாவளியன்று சுறுசுறுபத்தியால் ஏற்பட்ட தீ விபத்து அதே வீட்டில் நடப்பது. (செண்டிமெண்ட்)

33. ல. நாராயணன், ரமேஷ் பாம்பை பிடிக்கப்போய் அது அவர்களுக்கு தெரியாமல் ஜன்னல் வழியாக ஸ்டெல்லா அறையில் நுழைதல். (ஸஸ்பென்ஸ், த்ரில்)

34. ஸ்டெல்லா பிரியாணி சாப்பிடப்போக பாம்பு வருதல் (சீரியஸ் காமெடி)

35. ரமேஷ், ஸ்டெல்லா அறை மாறினாலும் பெயர் மாற்ற மறப்பது. (ஸஸ்பென்ஸ்)

36. ஒருவரை ஒருவர் அறியாமல் மகள் தன் தாயையே பைத்தியம் என்று திட்ட அதுவே விதியின் விளையாட்டாக தாய்க்கு தலையில் அடிபட்டு குணமடைதல். (செண்டிமெண்ட்)

37. லட்சுமி விஷம்குடிக்க ஜேம்ஸின் வசனம். (உண்மைக் காதல்)

38. கிரண் மற்றும் அவன் தந்தையை மீன்கார தம்பதியர் முட்டாளாக்குதல். (முழு நீள காமெடி ஸீக்வென்ஸ்)

39. பிறரை பைத்தியமாக்கும் தந்தையின் மகன் கிரண் பைத்தியமாகி வீடு திரும்பல். (நீதி)

40. ரமேஷ், ஸ்டெல்லா சேர்வது. (தெய்வீக காதல்)

+ 5 பாடல்கள்

+ 1 சண்டை

+ 4 கடைசி கட்ட கவுண்டர் வசனங்கள்

மொத்தம் 50 என்று வைத்துக் கொள்வோம்.

150 ÷ 50 = 3. குறைந்தது 3 நிமிடத்திற்கு ஒன்று என்று ரசிகர்கள் மனதை நாம் ஈர்த்திருக்கிறோம் அல்லது ஈர்க்க முயற்சித்திருக்கிறோம். பொதுவாக இது படத்தை அலுப்புத்தட்டாமல் ஓட்டிச்செல்ல போதுமானது என்று இயக்குனர்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒன்றுதான்.

ஒரு திரைக்கதையை இப்படி அக்குவேறு ஆணிவேறு என்று பிரித்து அலசி ஆராய்ந்து பின் டெவலப் செய்யவேண்டும்.

திரைக்கதையையும் அதன் ஈர்ப்பு பட்டியலையும் படித்து முடித்துள்ளீர்கள். இனி திரைக்கதையின் ஒவ்வொரு காட்சியும் எப்படி ஆரம்பித்து நடத்தி முடிக்கப்பட்டது என்பதை **காட்சி வாரியாக, விளக்கத்தோடு ஒப்பிட்டு படித்து முடிக்க,** வாருங்கள் அடுத்த அத்தியாயத்திற்கு போகலாம்...!

## 'நம்மவள்' திரைக்கதை விளக்கம்
(காட்சிகளை ஆரம்பித்து நடத்தி முடித்தல்)

SC. No. 1 **'சிடி ஔட்ஸ்கர்ட்'**

சிறுவயதில் பெரியவர்களால் தாம்பூலம் மாற்றி நிச்சயம் செய்யப்பட்டு பிரிந்து போன ஜோடி 17 வருடங்களுக்கு பிறகு ஒன்று சேர்கிறது. ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளாமல். படத்தை இளமையாக ஆரம்பிக்க வேண்டும் என்பதால் ரமேஷ், ஸ்டெல்லாவிடமிருந்தே ஆரம்பித்தால் அழகாக இருக்கும். ஆரம்பத்திலேயே ஒரு ஸென்டிமென்ட் இருந்தால் இன்னும் நன்றாக இருக்கும் என்பதால் முதல் சந்திப்பையும் தாம்பூலத்திலேயே ஆரம்பிக்கலாம். ஸ்டெல்லா ஒரு க்ரிஸ்டியன். ரமேஷ் வெற்றிலைபாக்கு இவைகளுக்கு சம்பந்தம் இல்லாதவன். சரி இப்பொழுது தாம்பூலம் வேண்டுமே. அதனால் ஸ்டெல்லா ஒரு இந்து கல்யாணத்திற்கு போய்விட்டு வந்தால் கண்டிப்பாக தாம்பூலம் கிடைக்கும். கிடைத்துவிட்டது. சரி, இதை இப்பொழுது ரமேஷ், ஸ்டெல்லாவுக்கு கொடுக்க வேண்டும். எப்படி ரமேஷ் கைக்கு போகவைப்பது? ஸ்டெல்லாவும் ரமேஷும் எதிரெதிரே வர எதேச்சையாக ஒருவரை ஒருவர் இடித்துக் கொள்ள தாம்பூலம் கீழே விழ ரமேஷ் அதை எடுத்து ஸ்டெல்லாவிடம் கொடுப்பதாக காட்டலாம் என்றால் ஒரு 'த்ரில்' இல்லாமல் இருக்கிறது. எனவே இன்னும் ட்ரமடைஸ் செய்ய வேண்டும் என்று எண்ண, அந்த வழியாக துரத்தப்பட்ட திருடன் ஒருவன் ஸ்டெல்லாவை இடித்துவிட்டு ஓட, கீழே விழுந்த தாம்பூலத்தை ரமேஷ் சேகரித்து ஸ்டெல்லாவிடம் கொடுக்கும்படியாக வைத்துக்கொள்ளலாம். (ரமேஷ் ஒரு அனாதை. அவன் திருமணத்திற்கு வந்து தாம்பூலம் கிடைத்ததாக காட்டினால் நன்றாக இருக்காது) இவ்வளவு நடக்கும்போது அவர்கள் கண்டிப்பாக பேசியாக வேண்டும் அல்லவா! அதில் இருவரின் குணாதியசங்களையும் காட்டிவிடலாம். அதற்கு இந்த இடத்தை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இங்கே ஸ்டெல்லாவின் துடுக்குத்தனத்தையும், ஆண்களை அவள் குறைவாக நினைப்பதையும், ரமேஷின் விவேகத்தையும், தமாஷாக பேசும் சுபாவத்தையும் காட்டலாம் என்று முடிவு செய்யப்பட்டது. சரி, படத்தை மங்களகரமாக ஆரம்பிக்கவேண்டுமே! அதனால், ஸ்டெல்லாவுக்கு முக்கியத்வம் அதிகம் இருக்கும் கதையாக இருப்பதாலும், அவள் ஒரு

க்ரிஸ்டியனாக இருப்பதாலும் சர்ச்சின் உச்சியில் இருக்கும் சிலுவையிலிருந்து ஆரம்பிக்கப்பட்டது.

பிறகு இதில் வேறு ஏதாவது 'மெஸ்ஸேஜ்' சொல்ல இடம் இருக்கிறதா என்று ஒரு நோட்டம் விட்டால் சட்டென்று ஒரு இடம் தெரிகிறது. அதாவது ரமேஷ் ஒரு விலாசம் தேடி வந்திருக்கிறான். நிறைய பேருக்கு எப்படி ஒரு விலாசத்தை கண்டுபிடிக்கவேண்டும் என்பதில் குழப்பம் அதிகம். அதற்கு நாயகனை பயன்படுத்தி அதே சமயத்தில் அவன் அறிவின் தெளிவை கொஞ்சம் காட்டலாம் அல்லவா!

இவற்றையெல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டு காட்சியை ஆரம்பித்து நடத்தி முடிக்கவேண்டும் என்பது வந்ததும், அடுத்த காட்சியை 'ஷாக்கிங்' ஆக ஆரம்பிக்க இந்த காட்சியின் முடிவில் ஒரு துவக்கம் கொடுக்கலாம் என்று யோசித்து ரமேஷ், ஸ்டெல்லாவிடம் அடித்த ஜோக்குக்காக, தாம்பூல தேங்காயை உடைக்க கையை உயர்த்த, தூரத்தில் 'சர்ச்'ல் 'டமார்' என்ற 'பாம்' வெடித்த சத்தம் கேட்க, அங்கு ஓடுகிறார்கள். தூரத்திலிருந்து ஸ்டெல்லா point of view (P.O.V) -ல் அதாவது ஸ்டெல்லா பார்வையில் சர்ச்சிலிருந்து புகை மற்றும் கண்ணாடித் துண்டுகள் சிதறுவதை காட்டி முடிக்கிறோம். சர்சில் 'பாம்' வெடித்திருப்பதை குறித்து ஸ்டெல்லாவின் மனம்தான் அதிகம் பாதிக்கப்பட்டிருப்பதால் அவள் P.O.V ல் சர்ச்சின் நிலையை பார்க்கிறோம்.

இந்த இடத்தில் தேங்காய் உடையக்கூடாது, ஏனென்றால் ரமேஷ் ஸ்டெல்லா பழைய நிச்சயதார்த்தத்துக்கு உயிரூட்டுவதாக இருக்க வேண்டுமே. இந்த காட்சியில் ரமேஷ் தாம்பூலத்தை ஸ்டெல்லாவிடம் கொடுப்பதைவிட அவள் வளர்ப்பு தாயாகிய மேரியிடம் கொடுப்பதாக இருந்தால் ஒரு ஃபேமிலி ஸெண்டிமெண்டுக்கு 'சான்ஸ்' கிடைக்கிறது.

மங்களகரமாக இருப்பதற்கும், ஸ்டெல்லா கிறிஸ்தவ தர்மத்தை சேர்ந்தவளாக இருப்பதாலும், சிலுவையில் ஆரம்பித்து, ரமேஷ் ஸ்டெல்லா வசனங்களின் மூலம் அவர்களின் குணாதிசயங்களை தெரியப்படுத்தி இவர்கள் இருவரின் பழைய மற்றும் புதிய பந்தத்தை ரசிகர்களின் மனதில் பதியவைத்து நடத்தி முதலில் காட்டிய அதே சர்ச்சில் 'பாம்' வெடிப்பதை காட்டி முன்னுக்கு என்ன நடக்கப்போகிறதோ என்ற 'ஷாக்'கில் முடித்து அடுத்த காட்சிக்கு போகிறோம்.

(வரும் காட்சிகளில் இவர்கள் தான் தாம்பூலம் மாற்றப்பட்ட தினம் பிரிந்த சின்னஞ் சிறு ஜோடி என்பது ஆடியன்சுக்கு தெரிந்ததும் இந்த முதல் காட்சியின் பதிவு, அவர்களை இன்னொரு முறை அந்த காட்சியை பார்க்கத் துண்டும். அப்பொழுது ரசிகர்கள் இரண்டாம் முறையாக படத்துக்கு வருவார்கள்.)

ரமேஷ் வீதியில் வருவது அேக்ஷன், அவனை ஒருவன் விலாசம் கேட்ட அேக்ஷனுக்கு ரமேஷ் தன் அறிவுரை மூலம் ரிஆேக்ட் செய்ய விலாசம் கேட்டவன் அறிவுரையை புரிந்துகொண்டவனாக ரிஆேக்ட் செய்கிறான்.

ஸ்டெல்லா சத்திரத்திலிருந்து தாம்பூலப் பையுடன் வருவதை மட்டும் காட்டலாம். கதையின் படி காட்சியில் தாம்பூலத்துக்கு முக்கிய பங்கு இருப்பதால் அது எப்படி வந்தது என்பதை காட்டினால்தான் காட்சியின் ட்ரீட்மென்ட் படி அதன் ஆரம்பம் சரியாக இருக்கும், அப்படியே ஸ்டெல்லா சிநேகிதிக்குள் வசனத்தில் ஒரு அேக்ஷன் ரிஆக்ஷன்.

பிறகு திருடன் ஓடிவருவது ஆேக்ஷன் அவன் ஸ்டெல்லாவை இடிக்க அவளுடைய ரியேக்ஷன் இப்படித்தான் ஒரு காட்சியை நடவடிக்கை, அசைவுகள் (movements) மற்றும் வசனத்தின் மூலமாக அேக்ஷன் ரிஆக்ஷனோடு சமன் (Balance) செய்து ஆரம்பித்து நடத்தி முடிக்க வேண்டும்.

கதையில் ரமேஷ் புத்திசாலி என்று எழுதினால் போதும். ஆனால் திரைக்கதையில் அதற்காக ஒரு காட்சியை உண்டாக்கியோ அல்லது ஒரு காட்சியை பயன்படுத்திக் கொண்டோ அவன் புத்திசாலித்தனத்தை காட்ட எழுத வேண்டும். இதுதான் கதைக்கும் திரைக்கதைக்கும் உள்ள வித்தியாசம்.

திரைக்கதையில், என, ரமேஷிடம், ரமேஷை பார்த்து என்று இப்படி எழுதவதெல்லாம் திரைக்கதை எழுதுபவர், அவர் தம் மனத்திரையில் பார்ப்பதின் வெளிப்பாடுகள், அதாவது 'என' என்று எழுதியிருந்தால் அங்கு ஷாட் கட் ஆகிறது 'ரமேஷிடம்' என்றிருந்தால் இருவரும். ஒரே ஃப்ரேமில் இருக்கிறார்கள், ரமேஷை பார்த்து' என்றிருந்தால் ஷாட் கட் செய்து ரமேஷை மட்டும் காண்கிறோம் என்பதாகும். இதை டைரக்டர் புரிந்து கொண்டு சிந்தித்து அதை இன்னும் அழகுபடுத்தி ஷாட் கட்

செய்வார். ஆனால் நாமே 'ஷாட்' களாக எழுதி கொடுத்தால் கோபித்துக் கொள்வார். ஏனெனில் அது அவருடைய கற்பனைக்கான வேலை.

ஒரு காட்சி எழுதி முடித்ததும் கடைசியில் தாளின் இடது மூலையில் கட் டு (Cut to) டிஸ்சால்வ் (Dissolve), ஃபேட்அவ்ட் (Fade-out), என்று எழுதுகிறோம். அவற்றின் அர்த்தங்கள் முன் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. இவற்றை நீங்கள் கண்டிப்பாக எழுத வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஏனெனில் இவற்றை டைரக்டர் தீர்மானித்துக் கொள்கிறார். உங்கள் மனத்திரையில் எப்படி முடிகிறதோ அப்படியே எழுதிவிடுங்கள்,' போதும்.

SC. No. 2

## நகர 'சர்ச்'

நகர சர்ச் என்று குறிப்பிடுவது எதனால் என்றால் பின்னால் கிராம சர்ச் வருகிறது. குழப்பம்வராமல் இருக்க இப்படி எழுதுகிறோம். இங்கு 'பாம்' வெடிப்பால் சர்ச்சுக்கு வெளியே ஏற்பட்டுள்ள பாதிப்பை காட்டுகிறோம். இங்கு கதாபாத்திரங்கள் இருக்கிறார்கள், வசனம் ஏதும் இல்லை. ஆனால் இந்த காட்சி கண்டிப்பாக பார்வையாளரின் மனதில் ஒரு பாதிப்பை ஏற்படுத்த வேண்டும். இதை அதிர்ச்சியுடன் பார்வையாளர் எவ்வளவு நேரம் கவனிக்கிறார் என்பதை மனதில் கொண்டு அவர் மனம், உள்ளே போய் பார்க்க நினைக்கும் பொழுது ஜனங்கள் மற்றும், ரமேஷ், ஸ்டெல்லா உள்ளே ஓடுவதை காட்டி 'கட்' செய்ய வேண்டும்.

இங்கே ஆரம்பித்து நடத்தி முடிக்க என்ன இருக்கிறது. நாம் எழுதுகிறோம் சர்ச் உள்ளிருந்து புகை வந்து கொண்டு இருக்கிறது, கண்ணாடிகள் உடைந்து விழுந்த வண்ணம் இருக்கின்றன என்று. ஆனால் டைரக்டர்தான் ஆரம்பித்து நடத்தி முடிக்கும் வேலையை கேமரா ஷாட் மூலம் செய்யவேண்டும். அதாவது சர்ச், புகை, கண்ணாடி ஜன்னல், கண்ணாடித்துண்டுகள் இவற்றை ஒரு லாங்ஷாட், 2 மிட் ஷாட், 2 க்லோஸ் ஷாட் என்று இன்னும் கூட்டி அவர் கணக்கின்படி காட்டி ஆடியன்ஸ் மனதில் ஒரு பாதிப்பை 'சௌன்ட் இஃபக்ட்' உதவியுடன் பதிய வைக்கலாம். ''அப்பா அந்த காட்சி இன்னும் என் கண்முன்னாலேயே இருக்கு'' என்று சில நிகழ்ச்சிகளை பார்த்துவிட்டு வந்து நாம் சொல்கிறோம் அல்லவா...? அப்படி...!

இப்பொழுது சர்ச் உள்ளே என்ன நடந்துள்ளது என்பதை காட்டுகிறோம். எப்படி சென்ற காட்சியில் 'சர்ச்'ஐ ஒட்டுமொத்தமாக காட்டி, பின் புகை கண்ணாடித்துண்டுகள் என்று காட்டினோமோ அப்படியே இங்கும் முதலில் ஒட்டு மொத்தமாக மாஸ்டர் ஷாட்டில் உள்ளே ஏற்பட்டிருக்கும் பாதிப்பை காட்டுகிறோம். அதற்கு 'டாப் ஆங்கல்' தான் சரியானது. பிறகு கீழே இறங்கி ஆட்களுக்கும், பொருட்களுக்கும் ஏற்பட்டிருக்கும் பாதிப்பை பார்க்கிறோம். இப்படி சர்ச் உள் ஒரு பாதிப்பை பார்த்துக் கொண்டிருக்கும்போது எங்கே அந்த கடவுள், 'இது ஏன்' என்று அவரிடம் ஞாயத்தை கேட்கவேண்டும் என்று ஆடியன்சுக்கு தோன்றும் அந்த நேரத்தில் நாம் சிலுவையை காட்டுகிறோம். அந்த சிலுவை எந்த பாதிப்பும் இல்லாமல் அப்படியே இருக்கிறது. அதை பார்த்து, ''இவ்வளவு நடந்தும் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கியே'' என்று ஆடியன்ஸ் மனம் கேட்கும் நேர அளவுக்கு நாம் அந்த சிலுவையை காட்டவேண்டும். பின் ரமேஷ் சிறுவர்கள் பெரியவர்கள் என்று எல்லோர்க்கும் உதவுவதை பார்க்கிறோம். ஆனால் ஸ்டெல்லா ஃபாதருக்கு மட்டும் உதவுகிறாள். கடவுளையும் கடவுளுக்கு சேவை செய்பவர்களை மட்டும் மதிக்கிறாள் ஸ்டெல்லா என்பதைகாட்டி ரமேஷை உயர்த்துகிறோம். (நாயகன் அல்லவா...?) அவனுக்கு வெளி உலக அனுபவம் குறைவு என்பதாகவும் ஆகவேண்டும். இந்த காட்சியில் ஆடியன்ஸ் மனதில் ஒரு சோகம் இருக்கிறது. பாதிக்கப்பட்டவர்களை காப்பாற்றும் மனோபாவம் உள்ளது.

இக் காட்சியை, ஒட்டுமொத்தமாக காட்டி சிலுவையில் ஆரம்பித்து, ரமேஷ், ஸ்டெல்லா பாதிக்கப்பட்டவர்களை காப்பாற்றுவதை நடத்தி ஃபாதரை வெளியே கொண்டு வருவதில் முடிக்கிறோம்.

கேமரா, சென்ற காட்சியில் வெளியில் இருந்தது. இப்பொழுது உள்ளே வந்துள்ளது. காட்சி என்பதின் விதிப்படி, இடம், நேரம் இவற்றில் எதுமாறினாலும் அது வேறு காட்சியாகிவிடுகிறது. அதன்படி நாம் இங்கு காட்சி : 3 என்று போடாமல் காட்சி :2A என்று போட்டிருக்கிறோம். ஏன் என்றால் சென்ற காட்சியின் தொடர்ச்சியாக, இந்த காட்சி இருப்பதால் இப்படி வேறு காட்சியாக்கி அதற்கு 2. A என்ற எண் கொடுத்திருக்கிறோம். இதையெல்லாம் இயக்குனர்கள் தங்கள் ஷூட்டிங் ஸ்க்ரிப்ட்ஐ எழுத ஆரம்பிக்கும்போது, அவர்களின் கணக்கின்படி வரிசைப் படுத்திக் கொள்வார்கள்.

SC. No. 2.B **நகர 'சர்ச்'**

ரமேஷின் முகம், ஃபாதரின் மனதில், அவரை அறியாமல் பதியவேண்டும் என்பதால் அவர் கண் திறந்ததும் ரமேஷை பார்க்கும்படியாக காட்டுகிறோம். இந்த இடத்தில் ரமேஷ் கடவுளைவிட மருத்துவமனையை நம்புகிறான் என்பதை ''தைரியமாக இருங்கள் ஃபாதர் ஃஹாஸ்பிடல் போனால் எல்லாம் சரியாகிவிடும்'' என்ற அவன் வசனத்தில் காட்டுகிறோம். சரி, ரமேஷ் வாயில் ஹாஸ்பிடல் என்ற வார்த்தை வந்துவிட்டது இதற்கு மேல் ஆடியன்ஸ் மனம் இங்கு ஈடுபடாது. எனவே 'ஆம்புலன்ஸ்'-ஐ காட்டுகிறோம். இதை காட்டியதும் என்னடா இவ்வளவு நடந்திருக்கிறது இன்னும் பொலிஸ்ஐ காணோமே என்று அவர்கள் மனம் நினைக்கும் பொழுது பொலிஸ் ஜீப் வருவதை காட்டவேண்டும். 'ஃபையர் என்ஜின்' வருவதை காட்டவேண்டிய தில்லை. இவர்களுக்கும் பின்னால்தான் அவர்கள் வருவார்கள் என்று ஜனங்களுக்கு இவை பழகிப்போனவை. அதற்குள் அடிபட்டவர்கள் ஹாஸ்பிடல் போய்விடுகிறார்கள். (உண்மையில், பட்ஜெட்டை பொறுத்தது)

இவ்வளவு நடந்த பின் ரமேஷுக்கும் ஸ்டெல்லாவுக்கும் பேச்சளவிலாவது ஒரு நெருக்கம் ஏற்பட்டிருக்க வேண்டுமே என ஆடியன்ஸ் மனத்தில் ஒரு எதிர்பார்ப்பு எழ வாய்ப்பிருக்கிறது. அது உள்ளே வளர ஆரம்பித்திருக்கிறது என்பதாக அவர்களின் சகஜமான நடவடிக்கையிலேயே விட்டிருக்கிறோம். ஆனாலும் ரமேஷ், ஸ்டெல்லாவை சுற்றி காதல் காந்த மண்டலம் (Magnetic Field) உருவாகிவிட்டது என்பதை ரசிகர்கள் ஊகித்திருப்பார்கள்.

ஃபாதர் கண்திறந்து யாரப்பா இந்த நல்லவன் என்று ரமேஷை பார்ப்பதில் ஆரம்பித்து 'அப்பா! வந்தது பொலிஸ் ஜீப்'' என்று அது வருவதில் முடிக்கிறோம். ரமேஷ் அயராது சேவை செய்வது, ஃபாதர் மற்றும் டேவிட் மனதில் ரமேஷைப்பற்றி ஒரு உயர்ந்த எண்ணத்தை உருவாக்குவதுதான் இக்காட்சியில் நடத்துதல்.

SC. No. 3 **நகர ஹாஸ்பிடல்**

இந்த காட்சியை பொலிஸ்ஸிலிருந்து ஆரம்பிக்க காரணம், பொதுவாக ஜனங்கள், 'காப்பாத்த வராட்டியும் 'என்க்வைரி' என்ற பேர்ல என்ன கெடைக்கும்னு வந்துருவாங்க இந்த போலீசுங்க'' என்று நினைப்பது சகஜம் அல்லவா அதனால்தான்.

உள்ளே க்ரிஸ்டியன் ஹாஸ்பிடல் என்பதை காட்டுவதும் பொதுவாக 'க்ரிஸ்டியன்'கள் 'க்ரிஸ்டியன்' ஹாஸ்பிடல் போவதைத் தான் விரும்புகிறார்கள். மேலும் சினிமாவில் அப்படிகாட்டினால் 'க்ரிஸ்டியன்' 'ஆடியன்ஸ்'க்கு ஒரு சந்தோஷம் என்பதுதான் உண்மை. முதல் காட்சியில் ரமேஷ், ஸ்டெல்லாவிடம் 'புதிதாக ஒரு ஊருக்கு வந்தால் அனாவசியமாக அதில் இதில் தலையிடக்கூடாது' என்பான். பின் ஏன் இங்கு இப்படி சேவை செய்கிறான் என்று கேட்கலாம். அது திருட்டு விஷயம் விவேகத்துடன் நடந்து கொண்டான். இது அவன் தர்மம். இங்கு அவனின் பரந்த குணத்தை காட்டுகிறோம். அவன்தான் நாயகன். சாதாரண மனிதனைவிட ஒரு படி மேல் இருக்கவேண்டும் அல்லவா! அதனால் அவனை ரத்தம் கொடுக்க வைத்து இன்னும் கொஞ்சம் உயர்த்தப்பார்க்கிறோம். அதிலும் அவன் பொது அறிவு. 'நான் ஹெல்தியாக இருக்கிறேன் என் 'ப்ளட்'டை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்பது. அந்த ஹெல்தி என்ற வார்த்தையை அவன் உபயோகப்படுத்தியதால்தான் டாக்டரும் 'ஜென்ட்ல்மேன்' என்ற வார்த்தையை பயன்படுத்துகிறார்.

பொதுவாக க்ரிஸ்டியன்கள் எந்த விஷயத்திற்கும் உனக்காக நான் 'ப்ரே' செய்கிறேன் என்கிறார்கள். அதனால்தான் ஸ்டெல்லாவை ஒரு நர்ஸ் மூலம் ஃபாதருக்காக 'ப்ரே' செய்ய வைக்கிறோம்.

சப் இன்ஸ்பெக்டர் அவளிடம் பேச அவள் பேசமுடியாது என்று கோபமாக போக அவள் குழந்தைத்தனத்தை காட்டுகிறோம். எஸ்.ஐயும் ''மூட் அவ்ட் கேஸ்' என்று போகிறார் என்றால் அவள் முகத்தில் இருக்கும் அந்த குழந்தைத்தனமான அழகு, எஸ்.ஐ. யை கூட கோபப்படாமல் போக வைக்கிறது. (உண்மையில் எங்கள் தேர்வுப்படி கன்னடத்தில் ரமேஷ் கதாபாத்திரத்திற்கு ரமேஷ் அரவிந்தையும் ஸ்டெல்லா கதா பாத்திரத்திற்கு மீனா என்று அறிந்து அதே கற்பனையுடன் இக்கதை எழுதப்பட்டது).

இக்காட்சி பொலிஸிலிருந்து' ஆரம்பிக்க இரண்டாம் காரணம், சென்ற காட்சியில் அவர்கள் ஜீப் மீது முடித்தது, மற்றொன்று, ஜனங்களின் மனம். நடத்துதலில், ரமேஷின் பரந்தகுணம், பொது அறிவு, ஸ்டெல்லாவின் குழந்தைத்தனம், க்ரிஸ்டியன்கள் மற்றவர்களுக்காக 'ப்ரே' செய்கிறேன் என்பனவற்றை கொண்டு ஸ்டெல்லாவின் குழந்தைத்தனத்தில் இளகிப்போகும் எஸ்.ஐ. மீது முடிக்கிறோம். அவரைப்போலவே ஆடியன்ஸ் மனதிலும் அவள் குழந்தைத்தனம் பதிந்து அவள் மீது ஒரு அன்பை பதிய வைக்கிறோம் .

SC. No. 3. A **ஹாஸ்பிடல் ஹால்**

இவ்வளவு நேரம் நாயகன் செயலை பார்த்து மகிழ்ந்த ஆடியன்ஸ் அவனை தட்டிக்கொடுக்க ஆசைப்படுவார்கள் அல்லவா? அதனால் இந்த காட்சியில் அவனை ஒருவர் பாராட்டுகிறார். அவர் ஒரு க்ரிஸ்டியனாக இருந்தால் நன்றாக இருக்கும் என்று Sc.2Bல். டேவிட் அறிமுகப்படுத்தப்பட்டார். டேவிட், சர்ச்சிலிருந்து ஹாஸ்பிடல் வரை உதவிகள் செய்து வந்த ரமேஷை, அவன் ஒரு க்ரிஸ்டியனாகத் தான் இருப்பான் என நினைத்து விசாரிக்க, பின் அவன் பெயரை ரமேஷ் என்றதும் வியக்கிறார். அவனை தன் நண்பனாக ஏற்றுக்கொள்ள ஆசைப்பட்டு அவன் செய்த சேவைக்காக உபசரிக்க தன் வீட்டிற்கு அழைத்து செல்கிறார். ரமேஷ் மனம் கொஞ்சம் லேசாக, அவன் தேடும் விலாசத்தில் கொண்டு விடுவதை டேவிட் தன் பொறுப்பாக ஏற்றுக்கொள்ளும் படி அமைக்கப்பட்டது.

இந்த காட்சியில், ''என்ன இருந்தாலும் க்ரிஸ்டியன்கள் க்ரிஸ்டியன்கள்தான். பார், வீட்டிற்கு அழைத்துச்சென்று உபசரிக்கும் நாகரிகம் டேவிட்டிடம் உள்ளது'' என்று க்ரிஸ்டியன் ஆடியன்ஸ் டேவிட் கதாபாத்திரத்தை பாராட்ட வேண்டும். ரமேஷை வாழ்த்தவிருக்கும் டேவிட் ல் ஆரம்பித்து, டேவிட்-ன் உபசரிப்பை நடத்தி, ரமேஷ் கையை பிடித்து டேவிட் அழைப்பதில் இருவர் மீதே அன்புடன் முடிக்கிறோம்.

SC. No. 4 **நரசிம்மன் வீட்டு வட்டாரம்**

காலையில் 'அட்ரஸ்' தேடிவந்த ரமேஷை பல நிகழ்ச்சிகளில் ஈடுபடவைத்துவிட்டதாலும், ரசிகர்கள் ரமேஷ் 'அட்ரஸ்'ஐ அடைவதைத்தான் எதிர்பார்ப்பார்கள் என்பதாலும், டேவிட் வீட்டு உபசரிப்பை காட்டாது நேராக 'அட்ரஸ்'சுக்கு வந்துவிட்டோம்.

காலையிலிருந்து பல இடங்களுக்கு சுற்றி கடைசியாக ரமேஷ் வரவேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்து விட்டான் என்பதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் வகையில் ஓடும் வண்டியை நிறுத்தி அதற்கு 'ஸ்டேன்ட்' போடுவதை காட்டு கிறோம் (க்லோஸ் ஷாட்டில்). இது போன்ற ஆடியன்ஸ் மனதை மறைமுகமாக நிறைவுபடுத்தக் கூடிய விஷயங்களை ட்ரீட்மென்ட் மூலம் சுருக்கமாக காட்ட முயற்சிக்கலாம்.

டேவிட், ரமேஷை கூட்டி வந்து விட்டு எல்லார்முன் பாராட்டி விட்டு போகிறார். ஆரம்பத்திலேயே வட்டாரத்தில் ரமேஷ் மீது ஒரு

நல்ல அபிப்ராயத்தை ஏற்படுத்திவிடத்தான் இப்படி அமைக்கப் பட்டது. இல்லையென்றால் இவர்களிடம் நல்ல பெயர் வாங்குவதை காட்ட இன்னொரு காட்சி தேவைப்படும்.

சாதாரணமாக அறிமுகத்தை காட்டினால் சுவாரஸ்யமாக இருக்காது என்பதால் கொஞ்சம் 'ட்ரமடைஸ்' செய்ய ரமேஷ் உள்ளே வர அங்குள்ளவர்கள் அவனை சுற்றிக் கொள்ள, சர்ச் 'பாம் ப்லே(அ)ஸ்ட்'ஐ பற்றி பேசவைத்து, அங்கே கொஞ்சம் 'டெர்ரரிஸ்ட்'ஐப் பற்றி பேச வைத்து 'டெர்ரரிஸம்' பற்றி ஒரு கெட்ட அபிப்பிராயம் ஏற்கனவே இருந்ததை தெரிவிக்கிறோம்.

மேலும் இந்த சீனில் ஸ்டெல்லாவின் வளர்ப்பு தாயான மேரி வாயால் முதன் முதலாக ''அந்த கர்த்தரின் ஆசீர்வாதம் உனக்கு என்றென்றும் இருக்குமப்பா'' என்று வாழ்த்த வைக்கிறோம். இதுவும் ஒரு செண்டிமெண்டுக்காகத்தான்.

இந்த வீடு, படத்தில் பல முறை வருவதால் அதன் முழுத்தோற்றத்தையும் காட்டிவிட்டு பின் நெருங்குகிறோம். கதையில் அடிக்கடி வரும் எந்த இடமாக இருந்தாலும் அதை முதன்முதலில் காட்டும்போது 'லாங் ஷாட்'ல் முழுவதுமாக காட்டுவது நல்லது. சிலவற்றை ரோட்டிலிருந்து, சிலவற்றை இன்னும் தூரத்திலிருந்து இன்னும் சிலவற்றை மேலிருந்தும் காட்டுகிறோம். ஏனென்றால் ரசிகர்கள் மனதில் இவை நன்றாக பதிந்தால்தான் பின்னால் அந்த வீட்டினுள் நடக்கும், எதை காட்டினாலும் அவர்கள் அந்த இடத்தை அறிந்தவர்களாக குழப்பம் இல்லாமல் காட்சியை ரசிப்பார்கள். முடிந்தவரை ரசிகர்கள் மனதிற்கு எந்த குழப்பமும் வராமல் எல்லா விஷயங்களையும் தெளிவாக காட்டிக் கொண்டே போகவேண்டும்.

ரமேஷ் வந்து சேரவேண்டிய இடத்தில் ஆரம்பித்து, டேவிட் தன் சொல்படி ரமேஷை அங்கு விட்டு செல்வதில் முடித்தோம். வட்டாரத்தில் உள்ளவர்களுக்கு ரமேஷ் பாராட்டப்பட்டு அறிமுகமாவது மற்றும் மேரி, ரமேஷை ஆசீர்வதிப்பது இங்கு நடத்துதலாக உள்ளது.

## SC. No. 4.A நரசிம்மன் வீட்டு வட்டாரம் (ரமேஷ் அறை)

'காலையில் வந்த ஆள் படாதபாடுபட்டு இப்பதான் அறையில் 'செட்டில்' ஆகியிருக்கான், ஏன் இப்படி ஆனது, எதனால் இது ஆனது என்று கேட்க, எல்லாம் விதிதான் என்கிறோம். அந்த விதியைப்பற்றி

சொல்லி ஸீக்வன்சுக்கு முடிவு கொடுக்க, இங்கு நரசிம்மனை பயன்படுத்துகிறோம்.

இங்கு அவர் மூலமாகவே ஸ்டெல்லாவின் சில குணங்களை வசனத்தின் மூலம் தெரியபடுத்துகிறோம் (அங்கு காட்சி1ல் நடவடிக்கைகளோடு சில குணங்களை தெரிவித்துள்ளோம்).

சினிமாவில் சாமியார்கள், தத்துவங்களை சொல்ல ஆரம்பித்தால் ரசிகர்கள் எழுந்து வெளியே போய்விடுகிறார்கள். அதனால்தான் நரசிம்மனை நொந்தவராக காட்டி, தண்ணி அடிக்க வைத்து தத்துவம் பேச வைக்கப்பட்டுள்ளது.

சரி, தாம்பூலம் இன்னும் ரமேஷிடமே உள்ளதே, அது மேரி கைக்கு போகவேண்டுமே, அதற்கு ஒரு 'செட் அப்' தான். ரமேஷ் தீப்பெட்டி கேட்க, ரமேஷை, நரசிம்மன் எதிரே மேரி வீட்டிற்கு போகச் சொல்வது. இந்த தீப்பெட்டி அடுத்த காட்சிக்கான வித்து.

அப்பாடா ஒரு வழியாக ரூமுக்கு வந்து சேர்ந்தான் என்றபடி ரமேஷ், நரசிம்மன் அறையில் நுழைவதில் ஆரம்பித்து, ரமேஷின் உண்மைநிலை, விதியை பற்றி ரெண்டு வார்த்தை, ஸ்டெல்லாவை பற்றிய நரசிம்மனின் உயர்ந்த அபிப்பராயம் என்று நடத்தி அடுத்த காட்சியை ஆரம்பிக்கும் தீப்பெட்டி வாங்கிவரும் விஷயத்தில், இருவரும் இருப்பதாக இருவர்மீதே முடிக்கிறோம்.

## SC. No. 4.B நரசிம்மன் வீட்டு வட்டாரம் (மேரி வீட்டு முன்)

ரமேஷ் கதவை தட்ட ஸ்டெல்லா அங்கு வந்ததும் இருவருக்கும் ஒரு அதிர்ச்சி. படத்தின் கடைசிபாகம் நெருங்கும் வரை இவர்களை சேர விடக்கூடாதே, அதனால் ஒரு பிணக்கு வரவேண்டும். வந்துவிட்டது இவளை பார்த்ததும் ரமேஷுக்கு தாம்பூலப்பைதானே ஞாபகத்திற்கு வரவேண்டும். வந்துவிட்டது.

இருவருக்கும் ஒரு அதிர்ச்சியை ஏற்படுத்த ரமேஷ் கதவை தட்டுவதில் ஆரம்பித்து, ஸ்டெல்லா அங்கு வர ரமேஷுக்கு தாம்பூலப் பை ஞாபகத்திற்கு வந்து அறைக்கு திரும்புவதில் முடிக்கிறோம். இங்கு ஸ்டெல்லா, ரமேஷ் இடையேயான பிணக்கு, தாம்பூலப் பை நினைவு, நடத்துதலாக உள்ளது.

## SC. No. 4.C மேரி வீடு

இந்த காட்சியில் முக்கியமாக ரமேஷ் தாம்பூலப் பையை மேரியிடம் கொடுக்கவேண்டும். இதை பயன்படுத்தி

ஸ்டெல்லாவை சுற்றியுள்ள கதாபாத்திரங்களையும் ரமேஷுக்கு அறிமுகம் செய்துவிடலாம் என்று அப்படியே செய்யப்பட்டது. ரமேஷைப்பற்றியும் தெரியப்படுத்தி விடுகிறோம்.

மேரியிடம் ரமேஷ் தாம்பூலப்பையை கொடுக்கும் ஷாட் மிக அழகாகவும் மனத்தை தொடும்படியாகவும், இசை அருமையாக இருக்கும்படியும் பார்த்துக் கொள்வார், இயக்குனர்.

சென்ற காட்சியில் ரமேஷ் அறைக்கு திரும்பினான் என்பதில் முடிந்ததே அது இதற்காகத்தான் என்பதாக ரமேஷ் தாம்பூலப்பையுடன் வருவதில் ஆரம்பித்து, அறிமுகம் மற்றும் தாம்பூலம் பழைய உறவுக்கு புத்துயிர் ஊட்டுகிறது என்பனவற்றை நடத்தி மேரி மனதில் ரமேஷ் பதிந்துவிட்டான் என்பதாக அவன் போவதை மேரி பார்த்துக் கொண்டிருப்பதில் முடிக்கிறோம்.

## SC. No. 5 நரசிம்மன் வீட்டுவட்டாரம் முன்

இவ்வளவு நேரம் ரமேஷ், ஸ்டெல்லாவை பார்த்த ரசிகர்களுக்கு அவர்களுக்குள் காதல் மலர்ந்திருக்கும் என்று எதிர்பார்க்கும் கடைசி நேரமிது. அதனால் ஒரு சிறிய திருப்பமாக இந்த காட்சியில் அது அவ்வளவு சுலபம் அல்ல என்பதை காட்ட, ஜேம்ஸ் அதற்கு வில்லன் என்பதை காட்டுகிறோம்.

இருவரும் ஸ்டெல்லாவுக்காக என்பதாக, ஸ்டெல்லாவில் ஆரம்பித்து அந்த இருவர்மீதே முடிக்கிறோம். ரமேஷின் இயல்பு, ரமேஷ் விஷயத்தில் ஸ்டெல்லாவின் மன நிலை, ஜேம்சுக்கு ஸ்டெல்லா மீதிருக்கும் உரிமை இவை நடத்துதலாக உள்ளது.

## SC. No.6 ஹாஸ்பிடல் வார்ட்

இந்த காட்சியில் ரமேஷின் ரத்தம் ஃபாதருக்கு கொடுக்கப்பட்டது என்பதால் அவரால் அவனுக்கு பின்னால் நல்லது நடக்கும் என்பதற்கான அஸ்திவாரம் இது. ஒன்றை கொடுத்தாதான் மற்றொன்று கிடைக்கும் என்ற பொதுவிதியை சூசகமாக காட்டுகிறோம். ஸ்டெல்லா, ரமேஷை ஏளனமாக பேசப்போய் அவன் விஷயத்தையெல்லாம் அவளே சொல்வதைப்போல் வசனம் அமைக்கப்பட்டுள்ளது. இது அவள் உள் மனதில் ரமேஷ் பதிந்திருக்கிறான் என்பதை காட்ட, மேலும் ஃபாதரே ரமேஷை புகழ்வதால் ஸ்டெல்லாவின் உள் மனதில் அது இன்னும் அழுத்தமாக பதியும்.

ஃபாதரின், நன்றி கூற ஆசைப்படும் நல்ல குணம், அங்கு ஸ்டெல்லா இருப்பதால் 'க்ரிஸ்டியன் டாமினேடட்' காட்சியாக இருப்பது, க்ரிஸ்டியன் ஆடியன்சுக்கு ஒரு நிறைவு . மற்றவர்களும் நல்லவற்றை ரசிப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஏன் க்ரிஸ்டியன்கள் ரசித்துபார்ப்பார்கள் என்று எழுதப்படுகிறது என்றால், க்ரிஸ்டியன்களை சம்பந்தப்படுத்தி நிறைய படங்கள் வருவதில்லை. அப்படியே வந்தாலும் மிகக்குறைவான காட்சிகளுடன் வருகின்றன. அவர்கள் முழுமனதுடன் முழுமையான ஒரு க்ரிஸ்டியன் சம்பந்தப்பட்ட நல்ல படத்தை பார்க்க முடிவதில்லை என்பதால்.

இதுவரை கதையின் ஒரு பகுதியினரின் பின்னணி மற்றும் குணாதிசயங்கள் பற்றி காட்டிவிட்டோம். இனி அடுத்த பகுதியினரைப்பற்றி காட்டவேண்டும் அல்லவா! பொதுவாக ஒரு படம் ஆரம்பித்து 12-15 நிமிடத்திற்குள் முக்கிய க.பா. களை பற்றிய விவரங்களை காட்டிவிட்டு கதை எதை நோக்கி போய்க் கொண்டிருக்கிறது என்பதை காட்டிவிடவேண்டும். இல்லையேல் ஆடியன்சுக்கு வெறுப்பு ஏற்பட ஆரம்பிக்கும். நாமும் கதையை சமன் செய்து எடுத்துக்கொண்டு போகமுடியாது.

சென்ற காட்சி கொஞ்சம் தீவிரமாக இருந்ததாலும், ஃபாதர் பேண்டேஜுடன் இருப்பதாலும் சமன் ஆக அவர்மீதே ஆரம்பித்து ஃபாதரின் நற்குணம், ஸ்டெல்லாவின் உள்மனம் இவற்றை நடத்துதலாக வைத்து ஃபாதருக்கு அனுசரணையாக இருக்கும் ஸ்டெல்லா மீதே முடிக்கிறோம்.

## SC. No. 7 கவுண்டர் பங்களா, கெஸ்ட் ஹௌஸ்

படத்தில் இந்த பங்களாவும் எதிரில் சற்று தூரத்திலேயே இருக்கும் கெஸ்ட்ஹௌசும் அடிக்கடி வருவதால் லாங் ஷாட்ல் காட்டுகிறோம். ஏனெனில் இங்குதான் படத்தின் பெரும்பகுதி நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

பங்களாவையும் கெஸ்ட்ஹௌஸையும் காட்டி ஆரம்பித்து அது ரசிகர்கள் மனதில் பதியும் படியாக காட்டுவதை நடத்துதலாக வைத்து, இங்கு என்ன நடக்கப்போகிறது என்பதை பார்க்கும் ஆவலில், அதனை நெருங்குவதில் லாங் ஷாட்டில் முடிக்கிறோம்.

## SC. No. 7.A கவுண்டர் பங்களா - (ஹால்)

ஒரு இந்து ஜமீன்தார் வீடு எப்படி கலையழகுடன், தெய்வீக களையுடன் சுத்தமாக இருக்கிறது என்பதை காட்டுகிறோம். அப்படியே ஒரு 'பியானோ' வை காட்டுகிறோம். இதை காட்ட மூன்று காரணங்கள் உண்டு. 1. ஒரு 'இங்ளிஷ்' 'டச்'ஐ காட்டுகிறோம். 2. ஸ்டெல்லா சிறுவயதில் இதில் வாசித்திருப்பது 3. பின்னால் ஒரு காட்சியில் இதில் ஸ்டெல்லா 'C' கார்ட் ஐ வாசிப்பது. பாரு, கிரணை தவிர இங்கு அனைவரையும் காட்டுகிறோம், கிரண் வில்லன் என்பதால் அவனை தனியாக வேறுவிதமாக காட்டலாம் என்று விடப்பட்டான். இங்கு அனைவரையும் ஒருவர் அறிமுகம் செய்வதின் மூலம் ரசிகர்களுக்கு தெரியப்படுத்தவில்லை. அவர்கள் பேசிக்கொள்வதிலேயே அவர்கள் பெயர்கள் தெரியும்படியாக அமைக்கப்பட்டுள்ளது.

எல்லாவற்றுக்கும் நேரம் வரவேண்டும் என்கிறோம் அல்லவா! அதுபோல் சிலர் வீட்டுக்கு ஜாதகப்படி எல்லாம் சரியாக நடக்கும் சிலருக்கு நடக்காது. ஆனால் ஜமீன்தார் வீட்டிற்கு அதன்படி நடக்கிறது என்பதாக அமைத்துள்ளோம். அதனால் புரோஹிதர் வந்து ஜாதகப்படி உங்கள் காணாமல்போன சிறுவர்கள இந்த வருடம் கிடைத்துவிடுவார்கள் என்று சொன்னதும் கவுண்டர் பத்திரிகையில் விளம்பரம் கொடுக்கச் சொல்கிறார். புரோஹிதர் இனி கடைசி காட்சியில் வருவதாலும் அது 2 மாதங்களுக்கு மேலும் ஆகலாம், அந்த இடைவேளையில் இக்கதை நடக்கிறது என்பதாகவும் புரோஹிதருக்கு அப்படி வசனம் கொடுக்கப்பட்டுள்ளது. (இப்படிப்பட்ட விஷயங்களை இயக்குனரிடம் கலந்தாலோசித்து மாற்றிக்கொள்ளலாம், திரைக் கதைப்படி ஊர் போய்சேர்ந்ததும் ஸ்டெல்லாவுக்கு ரமேஷ் மீது காதல் உண்டாக 60 நாட்கள் போதுமானதாக உள்ளதா என்பதுதான் கவனிக்கவேண்டிய விஷயம்) இன்னும் 3,4 நாட்கள் கழித்துத்தான் பத்திரிகையில் வரவேண்டும் என்பதற்காக, ''ஞாயிற்றுகிழமை வரும்படியாக செய்கிறேன்'' என்று மேனேஜரை சொல்லவைத்தோம். (இந்த 3,4 நாட்களில் சென்னையில் நடக்கும் வேறு விஷயங்களை காட்ட வேண்டும் அல்லவா). கவுண்டரின் கிராமத்து ஹாஸ்பிடலை காட்ட வேண்டுமே அதனால்தான் ரேகா வை கவுண்டர் ''ஒரு ரவுண்ட் நம்ம ஆஸ்பத்திரி பக்கம் போயிட்டு அப்பறமா காலேஜுக்கு போம்மா'' என்று சொல்லும் வசனம் போடப்பட்டது.

புதிய தம்பதியரை காட்டுவது ஆரம்பத்திலேயே கவுண்டரின் குடும்பம் பல குடும்பங்களை வாழவைத்த குடும்பம், ஊரில் ஒரு

மரியாதையும் மதிப்பும் இருக்கிறது என்பதை 'எஸ்டேப்ளிஷ்' செய்யத்தான். இந்த காட்சியில் பாருவை காட்டாததன் காரணம் பின்னால் ஸ்டெல்லா வரும் காட்சியில் காட்டினால் நன்றாக இருக்கும் என்பதால். (இதுபோன்ற விஷயங்களை டைரக்டர்கள் இஷ்டப்படி 'டிஸ்கஷனி'ல் மாற்றிக்கொள்ளலாம்.)

ஒரு இந்து ஜமீன்தார் வீடு எப்படி எல்லா அம்சங்களுடன் காணப்படுகிறது என்பதை ஒட்டுமொத்தமாக காட்டி ஆரம்பித்து கவுண்டரின் கம்பீரம், வீட்டாரின் அறிமுகம், காணாமல் போன சிறுவர்கள் கிடைத்துவிடுவார்கள் என்ற நம்பிக்கை, விளம்பரம், பாரு நிலைமை மற்றும் வீட்டின் பெருமை என்பனவற்றை நடத்துதலாக கொண்டு, இப்படிப்பட்ட நல்ல குடும்பத்தை நன்றியோடு உண்மையாக வாழ்த்தும் தம்பதியர் மீது முடிக்கிறோம்.

இங்கு விளம்பரம் கொடுப்பதில் ரமேஷ், ஸ்டெல்லாதான் காணாமல்போன சிறுவர்கள் என்ற 'கெஸ்' ரசிகர் மனதில் எழுந்துவிடும்.

## SC. No. 8 கிராமத்து ஹாஸ்பிடல்

கதையின் அடுத்த பகுதி என்று சொன்னோமல்லவா அதில் இந்த ஹாஸ்பிடலும் வருகிறது. அதனால் அதையும் இப்பொழுதே காட்டிவிட்டால் நல்லதல்லவா! சென்ற காட்சியிலேயே கவுண்டர் மூலம் இந்த காட்சிக்கான 'டச்' கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த ஹாஸ்பிடலும் படத்தில் பல முறை வருவதால் இதையும் லாங் ஷாட் - ல் காட்டுகிறோம். பின் இதன் மீது எழுதப்பட்டிருக்கும் பெயரை காட்டுவதன் மூலம் இது கவுண்டரின் முன்னோர்கள் கட்டியது என்று பழம் பெருமையை தெரியப்படுத்துகிறோம்.

சென்ற காட்சியில் ஹாஸ்பிடலை வசனம் மூலம் கொண்டு வந்ததால் இதை காட்டி ஆரம்பித்து, கவுண்டரின் பழம் பெருமையை நடத்துதலாக வைத்து ரேகா ஸ்கூட்டியில் வந்து நிற்பதில் முடிக்கிறோம்.

## SC. No. 8.A கிராமத்து ஹாஸ்பிடல்

உள்ளே ஹாஸ்பிடல் எப்படி இருக்கிறது என்று காட்டினால் போதுமா. கொஞ்சம் 'ட்ரமடைஸ்' செய்து 'ட்ரீட்' செய்யவேண்டுமே. அதனால் அங்கு வேலை செய்து கொண்டு இருந்த நர்சும் டாக்டரும் நகரத்து ஹாஸ்பிடலுக்கு போய் விட்டிருப்பதாகவும் டாக்டருக்கு

வயதாகிவிட்டதால் அவர் ஒருவரால் 'மெய்ன்டெய்ன்' செய்ய முடியவில்லை என்றும், புதிதாக 'அப்பாய்ன்ட்' செய்ய விளம்பரம் கொடுக்கச் சொல்வதாகவும் அமைக்கப்பட்டது.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக முக்கிய விஷயம், இங்கு இரண்டு வேலை காலி இருக்கு என்பதை தெரிவிப்பது ஏனெனில் பின்னால் ரமேஷ், ஸ்டெல்லாவை இங்கு வேலை செய்யவைக்கிறோம்.

டாக்டரை அறிமுகப்படுத்துவதாக அவர் மீதே ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்தி நோயாளிகள் சரியாக கவனிக்கப் படுகிறார்கள் என்பதாக டாக்டர், ரேகா நோயாளியின் மீது முடிக்கிறோம்.

SC. No. 9

## கிராமத்து 'சர்ச்'

இந்த கிராமத்து 'சர்ச்' ம் படத்தில் 2-3 முறை வருவதால் இதையும் லான்ங் ஷாட் ல் காட்ட வேண்டும். கவுண்டரின் காரிலிருந்து அவருடைய P.O.V. ல் சர்ச் ஐ காட்டிவிட்டு பின் அவர் காரிலிருந்து இறங்குவதை காட்டுகிறோம்.

இங்கு 'சர்ச்', ஃபாதரை கொண்டுவர காரணம், ஸ்டெல்லா இனி இங்கு வர அவள் 'சர்ச்' வழியாக ஒரு தொடர்பு மேலும் கவுண்டரின் மத நல்லிணக்கம்.

ஃபாதரை வேறு எவற்றுக்கெல்லாம் பயன்படுத்தலாம் என்று பார்க்க

1) 17 வருடங்களுக்கு முன் கவுண்டர் குடும்பத்து சிறுவர்கள் காணாமல் போனார்கள் என்பதை இவர் மூலமும் தெரியப்படுத்தி காணாமல்போன அதே நாளில் வருடா வருடம் சிறுவர்களுக்கு மதபேதமின்றி கவுண்டர் தானதர்மம் செய்துவருகிறார் என்பது.

2) ஃபாதரையும் புரோஹிதருக்கு சமமாக்கி இவர் வாயாலும் கவுண்டர் பிள்ளைகள் இந்த வருடம் கிடைத்துவிடுவார்கள் என்று சொல்லி, இந்த சக்தியும் கவுண்டருக்கு உதவுகிறது என்பது.

3) கவுண்டர் ஊரில் கோயில்கள், ஹாஸ்பிடல்கள் கட்டி ஜனங்களுக்கு சேவை செய்து வருகிறார், என்பன கிடைத்தன.

கவுண்டர் பக்தியோடு 'சர்ச்'ஐ பார்ப்பதாக காட்டி ஆரம்பித்து மேற்கண்ட விஷயங்களை நடத்துதலாக வைத்து நல்லுறவை காட்ட இருவரும் கைகுலுக்குவதில் முடிக்கிறோம்.

SC. No. 10 **ஜேம்ஸ் வீடு**

இதுவரை கதையின் இருபிரிவின் முக்கிய பாத்திரங்களைப் பற்றி ஓரளவுக்கு தெரிவித்துவிட்டோம். ஜேம்ஸ், லட்சுமியும் முக்கிய மானவர்கள்தான். எனவே அவர்களைப்பற்றி இங்கு காண்பிக்க வேண்டும். இதுவரை சீரியஸ்ஸாகவும் காமெடியாகவும் 'நார்மலா'கவும் விஷயங்களை காட்டினோம். பலர் எதிர்பார்க்கும் விஷயமான 'செக்ஸ்' வரவில்லையே. அதனால் லட்சுமி, ஜேம்ஸ் விஷயத்தை கொஞ்சம் கிளுகிளுப்பாக காட்டவேண்டும்.

லட்சுமி, ஜேம்சுடன் எவ்வளவு தூரத்துக்கு, எப்படிப்பட்ட உறவோடுபழகுகிறாள் என்பதையும், ஸ்டெல்லாவைபற்றிய, ஜேம்ஸ், மற்றும் லட்சுமியின் எண்ணங்களை வசனம் மூலமாகவும் தெரியபடுத்துகிறோம்.

ஒரு கிளுகிளுப்புக்காக இருவரின் நெருக்கத்தில் ஆரம்பித்து, மேற்கண்டவற்றை நடத்தி நெருக்கம் ஸ்திரமாக இருக்கிறது என்பதாக அப்படியே முடிக்கிறோம்.

SC. No. 11 **நரசிம்மன்வீட்டு வட்டாரம்**

இப்பொழுது கதையின் மத்தியப்பகுதியின் ஆரம்பப்பகுதிக்கு வந்திருக்கிறோம். இனி கதாபாத்திரங்கள் என்னென்ன விஷயங்களை எதிர் நோக்குகிறார்கள் என்பதை காட்டவேண்டும்.

இந்த காட்சியில் ஸ்டெல்லா, ரமேஷிடம் ''ஃபாதர் உங்களை இந்த அட்ரஸ்சுக்கு வந்து பார்க்கச்சொன்னார்'' என்று சொல்லி ஒரு விஸிடிங் கார்டை கொடுக்கவேண்டும். இதை எப்படி ஆரம்பித்தால் நன்றாக இருக்கும். இதுவரை எரிந்து விழுந்தவள் அவளாக ரமேஷை அழைப்பதுபோல் ஆரம்பித்தால் ஆடியன்சுக்கு சந்தோஷம், ஆச்சர்யம் ஏற்படும். பிறகு அவள் பழையபடியே ஆனதும், 'அதுதான பார்த்தேன்' என்று அவர்கள் சொல்ல வேண்டும்.

இங்கு அவளுடைய 'மேனர்ஸ்'ஐ காட்ட ஜேம்ஸ் அன்று ரமேஷை மிரட்டியவாறு நடந்துகொண்டதற்காக மன்னிப்பு கேட்கும்படியாக செய்யப்பட்டது.

இந்த காட்சியில் ரமேஷுக்கு அதிக முக்யத்துவம் இருப்பதால் ரமேஷ் மீது ஆரம்பித்து விவேகத்தோடு சிரிக்கும் ரமேஷ் மீதே முடிக்கிறோம்.

ரமேஷுக்கு ஒரு நல்லது நடக்கும் என்ற எதிர்பார்ப்பு, ரமேஷின் இயல்பு, ஸ்டெல்லாவின் 'மேனர்ஸ்' இவை நடத்துதலாக உள்ளது.

SC. No. 12

## ஃபாதர் வீடு

இந்த காட்சியில்,

- ரமேஷ் திறந்திருக்கும் கதவை தட்டி, பிறகு உள்ளே செல்வதன்மூலம் அவன் 'மேனர்ஸ்' ஐ காட்டுகிறோம்.
- ரமேஷின் விவரங்கள் ஃபாதருக்கு தெரியப்படுத்தப்படுகிறது.
- ஃபாதர் நன்றிக்கடனாக ரமேஷுக்கு ட்ரைவர் வேலை கொடுப்பது.
- வேலை கொடுத்ததை வைத்து ஸ்டெல்லா, ரமேஷை கிருஸ்தவமதத்தில் சேர்க்க பார்ப்பது.
- ரமேஷ் மனிதர்களின் தொடர்பின் விரிவை விளக்க ரமேஷின் அறிவின் நிலையை காட்டுவது, என்பன வருகின்றன.

சென்ற காட்சியின் விஷயத்தை சும்மா வளர்க்காமல் தொடர ரமேஷ், ஃபாதர் வீட்டிற்கு உடனே வந்துவிட்டான். இந்த 'டைம்' 'லே(அ)ப்ஸ்' ஐ சரி செய்யத்தான் ரமேஷ் முதுகுபாகம் கேமராவிடமிருந்து முன்னுக்கு போய் கதவை தட்டுவதாக எழுதுகிறோம். இந்த 'டைம் லே(அ)ப்ஸ்' க்கு பல தொழில் நுட்பங்களை டைரக்டர்கள் பயன்படுத்துகிறார்கள்.

இந்த காட்சி, ரமேஷுக்கு ஃபாதர் ட்ரைவர் வேலை கொடுப்பதற்காக உருவாக்கப்பட்டது. அதை நாம் முக்கியமாக ஸ்டெல்லா, ரமேஷை க்ரிஸ்டியனாக மாற்ற முயற்சிப்பதற்கும், ரமேஷ் மூலம் சாதாரண வர்க்கத்திலிருந்து படித்தவர்கள் வரை உண்மையில் சமூக தொடர்புகளை எப்படி வளர்த்துக்கொள்கிறார்கள் என்பதை சொல்வதற்கும் பயன்படுத்திக்கொண்டோம்.

இந்த காட்சியிலும் ரமேஷுக்கு முக்யத்துவம் அதிகம் இருப்பதாலும் சென்ற காட்சியின் விஷயத்தை தொடர்வதாலும் ரமேஷ் மீதே ஆரம்பித்து, அவன் பேச்சில் கவரப்பட்டவராக ஃபாதரும், என் முயற்சியில் மாட்டவில்லையே என்று ஸ்டெல்லாவும், ரமேஷையே பார்த்துக் கொண்டிருப்பதுபோல் முடிக்கிறோம்.

SC. No. 13 **மேரி வீடு**

7.A. காட்சியில் கவுண்டர் வீட்டில் விளம்பரம் கொடுக்கிறார்கள். அதை ஞாயிற்றுக் கிழமை வரும்படியாக கொடுக்க அமைக்கப்பட்டது. அதாவது 3-4 நாட்கள் கழித்து. இப்பொழுது அந்த விளம்பரத்திற்கான விஷயங்களை ஆரம்பிக்கும் நேரம் வந்துவிட்டது.

இந்த காட்சியில், ஸ்டெல்லாவின் வெள்ளி இ. கயிற்றை ஜேம்ஸ் பார்க்க வேண்டும். பிறகு அது அவன் கைக்கு சுலபமாக கிடைக்கும்படி இருக்கவேண்டும் என்பதால், ஸ்டெல்லா, மேரிக்கு மருந்து வாங்க வைத்திருந்த பணத்தை மேரி வேறு எதற்கோ பயன்படுத்திவிட்டதால் இ.கயிற்றை ஜேம்ஸ் மூலம் அடமானம் வைக்கும்படி அமைக்கப்பட்டது. சரி, மேரி ஏதோ காரணத்திற்காக ஸ்டெல்லா பணத்தை பயன் படுத்தினாள் என்றால் அது எதற்காக என்பது நம்பும்படியாக இருக்கவேண்டும். அவள் செலவு செய்த அந்த காரியம் பின்னால் கதைக்கு உதவவேண்டும் என்று யோசிக்க, ஸ்டெல்லாவை பிறந்த வீட்டில் சேர்க்க ஒரு சக்தி வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது என்ற வகையில் மேரி வீட்டிற்கு மஹேஷ்வரி என்ற கடவுளின் பெயர் கொண்ட பெண்மணி ஒரு பட்டு புடவையை மேரிக்கு விற்றதாகவும் அந்த பணம் அதற்கு செலவிடப்பட்டதாகவும் அமைக்கப்பட்டது.

அந்த இ.கயிற்றை எடுக்கக்கூடாது என்று மேரி வாதாடுவதில் ஒரு ஸஸ்பென்ஸை உருவாக்குகிறோம்.

இ.கயிற்றை அடகு வைக்கும் வாதத்தில் ஸ்டெல்லாவை மிகவும் மனம் நோகச்செய்து, பாடலுக்கு 'சான்ஸ்' கொடுத்து, ஜீஸஸ் ஐ நோக்கி பாடும்படியாக செய்யப்பட்டது.

ஜேம்சுக்கு படிக்க தெரியும், மேரிக்கும் ஸ்டெல்லாவுக்கும் நடுவில் இ.கயிற்றால் ஏற்படும் வாதத்தில் ஜேம்சுக்கு முக்கிய பங்கு இருக்கிறது என்பதாக ஜேம்ஸ் மற்றும் மேரி மீது ஆரம்பித்து மேற்கண்டவைகளை நடத்துதலில் வைத்து, வாக்குவாதம் ஸ்டெல்லாவை சோகத்தில் ஆழ்த்தியது என்பதற்காக ஸ்டெல்லா, ஜீஸஸ் ஃபோட்டோவில் முடித்து பாடலை ஆரம்பிக்கிறோம்.

(ஒவ்வொரு காட்சிக்கும் முழுமையான விளக்கம் அளித்தால் புத்தகம் பெரியதாகிவிடும் என்ற காரணத்தால் இனிவரும் காட்சிகளை சுருக்கமாக விளக்கி, 'ஆரம்பித்து, நடத்தி, முடித்தல்' எழுதப் பட்டுள்ளது).

SC. No. 14 **நகர 'சர்ச்'** (H.W.O)

இந்த காட்சியை உருவாக்க காரணம், ஸ்டெல்லாவையும் ரமேஷையும் அவர்கள் பிறந்த ஊருக்கு அனுப்பி அவர்கள் குடும்பத்தாருடன் தொடர்பு ஏற்படுத்த. அதற்காக ஒரு 'செட் அப்' ஸ்டெல்லா மற்றும் ரமேஷ் பிறந்த ஊருக்கு பக்கத்து மலைபிரதேசத்தில் 'சர்ச்' கட்டுவதற்கும், கிருஸ்தவ மதத்தில் சேர்ந்த மலைஜாதியினர் இந்துக்களால் தாக்கப்பட்டனர், அவர்களுக்கு உதவ ரமேஷ் மற்றும் ஸ்டெல்லா பார்ட்டி போகிறது, என்பது.

இங்கு, கிருஸ்தவர்களாக மாறியவர்கள் கொடுமைபடுத்துவதை பத்திரிகைகள் அதிக முக்யத்வம் கொடுத்து எழுதுவதில்லை என்பதையும், இதனால் ஸ்டெல்லா கோபமடைய, அவள் மூலம் நாம் இன்னும் ஆங்கிலேயர்கள் வகுத்துகொடுத்த முறைகளைத்தான் பலதுறைகளிலும் கடைபிடித்து வருகிறோம் என்பதையும், இந்துக்களை பார்த்து அவள் நாலு நியாயமான வார்த்தைகளை சொல்லி கேட்கவேண்டும் என்பதையும், ஸ்டெல்லா 'பியானோ க்ளாஸ்' எடுக்கிறாள் என்பதையும், ரமேஷ் காரில் நாளை காலை, முதலில் ஸ்டெல்லா பிறகு மதரை அழைத்துக்கொண்டு மலைப் பிரதேசத்திற்கு செல்லவிருக்கிறான் என்பதையும் தெரிவிக்கிறோம்.

காரிலேயே போய் ஸ்டெல்லா, மதரை 'பிக்அப்' செய்து கொள்ளுமாறு ஃபாதரை ரமேஷிடம் சொல்லவைத்ததின் காரணம், - ரமேஷ் அவன் ரூமிற்கு காரில் வரவேண்டும் என்பதற்காக. ஏனென்றால் அவன் அடுத்த காட்சியில் ஸ்டெல்லாவை காப்பாற்றி வில்லன்களிடம் சண்டைபோடவேண்டும்.

காட்சியை சற்று அதிக 'டெம்போ'வில் ஆரம்பிக்க சீரியஸ் மூடில் இருக்கும் மதருடன் ஃபாதரை சேர்த்து அவர்கள் மீது ஆரம்பித்து மேற்கண்டவைகளை நடத்துதலாக இருத்தி சீரியஸ்ஸான விஷயத்திற்கு ஃபாதரால் ஒரு முடிவு கொண்டு வரப்பட்டது என்பதாகவும் மற்றும் அவர் சொன்ன விஷயங்கள் ஆடியன்ஸ் மனதில் பதியவேண்டும் என்பதாகவும் அவர் மீதே முடிக்கிறோம்.

SC. No. 15 **நகர பஸ் நிறுத்தம்**

அடுத்து, ரமேஷ், ஸ்டெல்லாவை வில்லன்களிடமிருந்து காப்பாற்றும் முக்கிய காட்சிக்கு முந்திய காட்சி இது. எந்த ஒரு முக்கிய காட்சிக்காக ஒரு சிறிய காட்சியை உருவாக்கினாலும் அந்த சிறிய

காட்சியில் சீரியஸ்ஸாகவோ காமெடியாகவோ அல்லது சீரியஸ்கலந்த காமெடியாகவோ ஒரு மெஸ்ஸேஜை கொடுத்தால் சுவாரஸ்யமாக ஆரம்பமாகும் அல்லவா!

இங்கு பஸ் ஸ்ட்ரைக்கினால் ஜனங்களில் பலருக்கு எப்படிப்பட்ட நிகழ்ச்சிகளெல்லாம் நடந்துவிடுகிறது என்பதை ஸ்டெல்லா, பெண்மணி பேச்சின் மூலம் ஆரம்பிக்கிறோம். அதில் ஆட்டோகாரர்களின் கெடுபிடிகளை காட்டுகிறோம். ஆட்டோக்கள் அதிகமாகிவிட்டதால் வருமானத்தில், அவர்களின் மன நிலையையும் தெரிவிக்கிறோம். அப்படியே ஸ்டெல்லாவின் கறார் தன்மையையும் காட்டுகிறோம்.

(நாளும் உள்ள இந்த ஆட்டோ பிரச்சனையை புதுப்புது உத்திகளில் காட்டித்தான் ஆகவேண்டும். மாற்றங்கள் ஏற்படும் என நம்புவோமாக.)

பொதுவாக வீட்டிற்கு வெளியே ஏதாவது தொந்தரவு வரும்படியாக காட்டுவதாக இருந்தால் அதை காட்டும் இடங்களில் பஸ் நிறுத்தமும் ஒன்று. அதனால் பஸ் நிறுத்தத்தில் ஆரம்பிக்கப் பட்டு ஸ்டெல்லா தொந்தரவில் மாட்டிக்கொள்வதற்கான ஆரம்பத்துடன் மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து, ஸ்டெல்லாவுக்கு ஆட்டோவினால் இன்னும் தொந்தரவு வர இருக்கிறது என்பதாக ஆட்டோ கிளம்புவதில் முடிக்கிறோம்.

## SC. No. 16 ஸ்டெல்லா வீட்டு எக்ஸ்டென்ஷன் (முக்யவீதி)

இந்த காட்சியின் முக்ய அம்சம், ரமேஷ் தன் சாதுர்யத்தால் எப்படி வில்லன்களிடம் சண்டையிட்டு ஸ்டெல்லாவை காப்பாற்றுகிறான், அவர்கள் இவனை மறுபடியும் தேடக்கூடாது என்பதற்காக எப்படிப்பட்ட 'டயலாக்' அடிக்கிறான், என்பன.

சென்ற காட்சியில் தொந்தரவில் ஆரம்பமாகி முடிந்த ஆட்டோவை மறுபடியும் தொந்தரவின் ஆரம்பமாக காட்டி ஆரம்பித்து ஸ்டெல்லாவின் வசனம், அவஸ்தை மற்றும் ரமேஷ் காரில் வருதல், அவன் சண்டையிடுதல் என்பதை நடத்துதலாக வைத்து வில்லன்களை முட்டாள்களாக்கிய ஹீரோ ரமேஷ் மீது முடிக்கிறோம். காட்சியை முடிக்கும்போது ரமேஷை நாசுக்கான கம்பீரத்துடன் காட்டவேண்டும். அதை இயக்குனர் ட்ரீட் செய்து கொள்ளும் வகையில் எழுதியிருக்க வேண்டும்.

## SC. No. 17 நரசிம்மன் வீட்டு வட்டாரம் (மேரிவீட்டுமுன்)

இந்த காட்சியில் ரமேஷ் ஸ்டெல்லாவை காரில் மலைபிரதேசம் அழைத்துச் செல்லவேண்டும். நேற்று இரவு ரமேஷ், ஸ்டெல்லாவை வில்லன்களிடமிருந்து காப்பாற்றி இருக்கிறான். இன்று ஸ்டெல்லாவை சந்திக்கும் போது ஆடியன்ஸ் மனதில் ஒரு எதிர்பார்ப்பு இருக்கும். நம் கதை விதிப்படி ஸ்டெல்லாவும் ரமேஷும் கதையின் முடிவு நெருங்கும் வரை சேரக்கூடாது. அதனால் ரமேஷை சும்மா அனுப்பாமல் கையில் ஒரு கட்டுடன் அனுப்பி சுவாரஸ்யமான மோதலை காட்டலாம் என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படி, ரமேஷை கட்டுடன் வரவழைத்து ஸ்டெல்லாவுக்கு ஆண்களின் மீதுள்ள கெட்ட அபிப்ராயத்தை இங்கு அவள் வசனம் மூலம் காட்டுகிறோம். அப்படியே ரமேஷின் சுபாவத்தையும் காட்டுகிறோம்.

ஆடியன்ஸ் கேட்கலாம் இவ்வளவு நடந்தும் ஸ்டெல்லா ஏன் ரமேஷை வெறுக்கிறாள் என்று. அவளுக்கு ரமேஷை விட அவன் இந்துவாக இருப்பதன்மேல் கோபமாக இருக்கும். (இதை சற்று அழுத்தமாக எஸ்டே(அ)ப்ளிஷ் செய்ய வேண்டும். அப்படி செய்யப்போய் அது தவறான அர்த்தத்தை ஏற்படுத்திவிடுமோ.. பிறகு யோசிக்கலாம் என்று விடப்பட்டது) நீங்கள் வேறு விதமாக எஸ்டே(அ)ப்ளிஷ் செய்து பாருங்கள்.

சென்ற காட்சியில் சண்டை போட்டதாலும், ஸ்டெல்லாவின் வம்புக்கு ஆரம்பமாகவும் இருக்க ரமேஷை கையில் கட்டுடன்காட்டி ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து ஸ்டெல்லாவின் முறுக்கலில் முடிக்கிறோம்.

## SC. No. 18 நெடுஞ்சாலை

ஒரு ஊர் விட்டு ஒரு ஊர் போகிறார்கள் என்றால் இப்படி கார் போவதை காட்டினால்தான் ஆடியன்ஸ் மனதில் ஒரு 'ட்ராவல்" அனுபவம் கிடைக்கும்.

இந்த 'பாஸிங்ஷாட்' ல் நேற்றைய ஸ்டெல்லாவின் பேச்சு ரமேஷை பாதித்திருக்கிறது, அதை பேசவைக்காமலே, ரமேஷின் மன மாற்றத்தை காட்டலாமே என்று எண்ணி அவன் கையில் பே(அ)ண்டேஜ் இல்லாமல் 2-3 'பே(அ)ன்ட்எய்ட்' ஐ ஒட்டிக்கொண்டு கார் ஓட்டுவதாக காட்டியிருக்கிறோம். (இதை வைத்து இன்னும் சுவாரஸ்யமாக அவர்களை மோதவிடலாம்)

ஒரு 'ஸ்பீட்' க்காக கார் போய்க்கொண்டிருப்பதில் ஆரம்பித்து ரமேஷ் 'பே(அ)ன்ட்எய்ட்' ஐயும், ட்ரே(அ)வல் அனுபவத்தையும் கார் உள்ளே இருப்பவர்கள் யார் யார் என்பதையும் காட்டி நடத்தி ஸ்பீட் உடன் கார் மீது முடிக்கிறோம்.

## SC. No. 19 ஜேம்ஸ் வீடு

கதையின் முக்கிய திருப்பம் இங்கு ஆரம்பமாகிறது.

எதையும் ஃப்லே(அ)ட் ஆக காட்டக்கூடாது என்ற சினிமா விதிப்படி ஜேம்ஸ் ஜமீன் வீட்டு விளம்பரத்தை சாதாரணமாக பத்திரிகையில் படிப்பதை காட்டுவதை விட ஒரு பொருளை பேப்பரில் மடிக்கப்போய் தற்செயலாக விளம்பரத்தை பார்ப்பதாக அமைக்கலாம். அந்த தற்செயலான செய்கை அவன் செய்துவரும் தொழிலை காட்டுவதாக, ஒரு திருட்டு சிலையை பேப்பரில் மடிக்கப்போய் தற்செயலாக விளம்பரத்தை பார்ப்பதாக அமைக்கப்பட்டது.

விளம்பரத்தில் இ.கயிற்றை பார்த்ததுமே ஸ்டெல்லாவின் இ.கயிறு ஞாபகத்துக்கு வந்துவிட்டது என்பதற்காக அவன் முகபாவங்களையோ, யோசிப்பதையோ, தனக்குள் பேசிக் கொள்வதையோ காட்டாமல் அடுத்த காட்சியில் அவனை அடகுக்கடையில் காட்டுகிறோம்.

சிலைக்கு முக்யத்வம் கொடுத்து அதை ஜேம்ஸ் பேப்பரில் மடிப்பதில் ஆரம்பித்து, விளம்பரத்தை படித்தல், இ.கயிறு ஈர்த்தல் என்பதை நடத்தி, அவன் கூர்ந்து கவனிக்கும் இ.கயிறு படத்தின் மீது முடிக்கிறோம்.

விளம்பரத்தை ஆடியன்சும் படிக்கும்படியாக இருக்கத்தான் அதன் முழு விவரமும் எழுதப்பட்டுள்ளது. இதை இயக்குனர் புரிந்து கொண்டு செயல்படுவார்.

## SC. No. 20 அடகுக்கடை

இங்கு வெறும் இ. கயிற்றை மீட்டுக்கொண்டு போவதோடு முடிக்காமல் வேறு மெஸ்ஸேஜ் ஏதாவது கொடுக்கலாமா என்றால் முடியாது. ஏனெனில் ஜேம்ஸ் இதை எடுத்துபோய் ஒப்பிட்டு பார்க்கும் அவசரத்தில் இருக்கிறான். ஆனாலும் சேட்டை பற்றி ஒரு சின்ன விஷயம், அவர் பேசுவதில் அவரின் வியாபார புத்தியை காட்டுகிறோம்.

ஒரு பெண்மணியை குடத்துடன் வரவழைத்து இவர்களின் நடவடிக்கையை சீக்கிரமாக முடித்துவிடுகிறோம்.

சேட் முக்கிய பங்கு வகிப்பதால் சேட்டின் மீது ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து சேட்டின் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 21 ஜேம்ஸ் வீடு

இந்த காட்சியில் ஜேம்ஸ் இ.கயிற்றை படத்தில் ஒப்பிட்டு ஊர்ஜிதம் செய்வதும், ஸ்டெல்லாவின் தொடையில் உள்ள தழும்பை பார்த்துவர லட்சுமியிடம் சொல்வதும்தான் முக்கிய அம்சங்கள்.

காட்சியை கொஞ்சம் ட்ரமடைஸ் செய்ய வசனம் சற்று செக்ஸ் கலந்து தமாஷாக வளர்க்கப்பட்டது. அதை அதிகம் வளர்க்காமல் இருக்க பையனை புகுத்தி அத்தோடு நிறுத்தப்பட்டது.

இந்த காட்சியில் ஸ்டெல்லா கவுண்டரின் மகள்தான் என்பதற்கு மூன்றில் ஒரு பங்கு ஆதாரத்தை வெளிப்படுத்தி ஆடியன்ஸ் மனதில் ஒரு எதிர்பார்ப்பை ஆரம்பித்துவைக்கிறோம்.

இ.கயிறு முக்கிய பங்கு வகிக்கிறது என்பதால் ஜேம்ஸ் அதை ஒப்பிட்டு பார்ப்பதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து, தழும்பை பார்க்கவிருக்கும் லட்சுமி மீது முடிக்கிறோம். அதாவது 'நீ போய்வா நான் பார்த்து வைக்கிறேன்' என்பதாக.

## SC. No. 22 கிராமத்து 'சர்ச்'

சென்ற காட்சியை ஒரு சீரியஸ் ஸஸ்பென்ஸ் விஷயத்துடன், உள்ளே நடந்ததாக காட்டியதால், ஆடியன்ஸ் 'ரிலே(அ)க்ஸ்' ஆவதற்காக இங்கு கிராமத்து 'சர்ச்' ஐ வெளியே காட்டி மதர், ஸ்டெல்லா, ரமேஷ் வந்து இறங்குவதுபோல் காட்டப்படுகிறது. குறிப்பிட்டு சொல்லும்படி ஏதாவது விஷயம் இருந்தாலொழிய அறிமுகங்களை விவரிக்க வேண்டிய அவசியம் இருப்பதில்லை. சில இயக்குனர்கள் அதையும் எழுதச் சொல்வதும் உண்டு.

ரமேஷ், மதர், ஸ்டெல்லா முதன் முறையாக கிராமத்து சர்ச்சுக்கு வருவதால் சர்ச், ரமேஷ், மதர், ஸ்டெல்லா இவர்களை ஒட்டுமொத்தமாக காட்டி ஆரம்பித்து இவர்கள் உள்ளே போய் யாரைப் பார்க்கப் போகிறார்கள் என்பதில் முடிக்கிறோம். ஊர் வந்து சேர்ந்தார்கள் என்பதை இங்கு நடத்தியிருக்கிறோம்.

SC. No. 22. A **கிராமத்து 'சர்ச்'**

இங்கு, முக்கியமாக, மலைப்பிரதேசம் இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது என்பதை தெரிவித்து, கவுண்டரை பற்றி இவர்கள் மனதில் ஒரு உயர்ந்த அபிப்ராயம் ஏற்படும்படி ஃபாதர் மூலமாக செய்யப்படுகிறது.

வரவேற்பதில் ஆரம்பித்து பேசப்பட்டவர் வந்து விட்டார் என்பதை நடத்தி வெளியேறும் ஆர்வத்தில் முடிக்கிறோம்.

SC. No. 22. B **கிராமத்து 'சர்ச்'**

கவுண்டர் வீட்டினுள் இவர்கள் இப்பொழுதே போகக்கூடாது. (நாம் சொல்வது வீட்டின் உள் தான். வீட்டு பக்கத்திலிருக்கும் கெஸ்ட் ஹௌஸ் அல்ல) அதனால்தான் கவுண்டர் 'சர்ச்'க்கு வருவதைப் போல் செய்யப்பட்டது. ஏனெனில் இவர்கள் மலைப்பிரதேசம் போய் வந்ததும் கவுண்டர் வீட்டில் விருந்து நடக்கிறது. அதைவிட முக்கியமாக சிறுவர்கள் காணாமல்போன 'ஃப்லே(அ)ஷ்பேக்' வருகிறது.

இந்த காட்சியில், மறைமுகமாக தந்தை, மகள் முதல் சந்திப்பு, அறிமுகம் நடக்கிறது, மலைப்பிரதேசத்தில் நடந்த சம்பவத்திற்கு கவுண்டர் வருத்தப்படுவது, திரும்பிவந்ததும் இவர்கள் கெஸ்ட் ஹௌஸ்ல் தங்கப்போகிறார்கள் என்பன முக்கிய விஷயங்கள்.

சென்ற காட்சியில் கார் சத்தம் கேட்டு வெளியே அவர்கள் வந்ததால் யார் அது என்ற அவர்களின் ஆர்வத்திற்கு, காரிலிருந்து கவுண்டர் இறங்குவதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்தி வரவேற்ற ஃபாதரிடம் விடைபெறுவதாக முடிக்கிறோம்.

SC. No. 23 **கெஸ்ட் ஹௌஸ்**

இங்கு கதையின் முக்கிய கதாபாத்திரங்களில் இருவர்சேர்ந்த ஒருவரான லட்சுமி நாராயணன் (ல.நா) என்ற 'அலி' (Eunuch) யை முதன் முறையாக அறிமுகம் செய்கிறோம்.

கதையில் முக்கிய இடமான கெஸ்ட் ஹௌஸ் முன்னால் கார் வந்து நிற்பதில் ஆரம்பித்து அனைவரும் வெராண்டா உள் நுழைவதில் முடிக்கிறோம். ல நா. அறிமுகம், மலைப்பிரதேசம் போகப்போவது கவுண்டரின் உபசாரம், நடத்துதலாக உள்ளது.

கதையில் லட்சுமி நாராயணனை முடிந்தவரை வெளிப்படை யாக எங்கும் தரக்குறைவாக பயன்படுத்தக்கூடாது என்பது நம் நோக்கம் மேலும், அப்படி பயன்படுத்தினால் உயர்வாக 'எஸ்டேப்ளிஷ்' செய்யப்பட்டிருக்கும் கவுண்டர் குடும்பத்திற்கு பங்கம் ஏற்படும். வியாபார ரீதியாகவும் பார்க்கவேண்டுமே, பார்ப்போம்.

## SC. No. 23A கெஸ்ட் ஹௌஸ் (வெராண்டா)

இங்கு லட்சுமி நாராயணன், ரமேஷ் மற்றும் ஸ்டெல்லாவிடம் சகஜமாக பழகுவதை காட்டுகிறோம். அவன் குணம் மற்றும் சுபாவத்தை காட்டுகிறோம். ஸ்டெல்லா மாமிசப் பிரியள் என்பதை காட்டி, ல. நா. மூலம் கவுண்டர் வீட்டில், மாமிச உணவு சாப்பிடுவதில்லை என்பதை தெரியப்படுத்துகிறோம். இது பின்னால் ஸ்டெல்லாவுக்கு சற்று தொந்தரவு கொடுக்கும் விஷயம் என்பதற்காக.

ல.நா. முகம் ஆடியன்ஸ் மனதில் 'மேக்ஸிமம்' பதிய அவனிடம் ஆரம்பித்து அவன் வெளியேற அவனை கவனித்த இவர்களிடம் முடிக்கிறோம். மேற்கண்டவை நடத்துதலாக உள்ளது.

## SC. No. 24 மலைப்பிரதேச பாதை

இவர்கள் மலைப்பிரதேசம் போய்விட்டால் அங்கு மே(அ)ட்டர் சீரியஸ்ஸாக இருக்கும், வேறு விஷயங்கள் பேச முடியாது என்பதாலும் காரில் நெருக்கமாக உட்கார்ந்திருக்கும் போது சில நல்ல விஷயங்களுக்ககாக ஒருவரிடம் ஒன்றை கேட்டால் அவர்களால், முடியாது என்று சொல்ல முடியாமல் இருக்கும் என்பதை மனதில் வைத்துக்கொண்டும், காரினுள் அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதின் மூலம் விஷயங்கள் பரிமாறப்பட்டு, கவுண்டர் ஹாஸ்பிடலில், முக்கியமாக ஸ்டெல்லா 2 மணிநேரம் வேலை செய்வதற்கும், ரமேஷ், மதரின் ஊக்கத்தால் முழு நேர வேலை செய்வதற்கும் ஒப்புக்கொள்வதாக அமைக்கப்பட்டது.

கார் மலைப்பிரதேசத்தை நோக்கி போய்க்கொண்டிருப்பதை அக்கம்பக்க மலை, மர, செடிகளுடன் காட்டி ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து. ஸ்டெல்லா மனம் திருப்தி அடையவில்லை என்பதாக அவளிடம் முடிக்கிறோம்.

(கார் மலைப்பதையில் போகும்போது ஜாலியான பின்னணி இசை இருக்கக்கூடாது. ஏனெனில் அவர்கள் நெருங்கிக்

கொண்டிருப்பது ஒரு சோகமான காட்சியை) இப்படி ஒரு குறிப்பை இயக்குனருக்கு கொடுத்துவிடுவது நல்லது.

## SC. No. 25 மலைப்பிரதேசம்

இந்த காட்சியில் கவுண்டரின் சமதர்மத்தை, கிருஸ்தவர்களாக மாறியவர்களை தாக்கிய இந்துக்களை ஏசுவ்தின் மூலம் காட்டுகிறோம். இவர் மூலம் இந்து தர்மத்தின் சிறப்பையும் அவர்கள் எப்படிநடந்துக் கொள்ளவேண்டும் என்பதையும் தெரிவிக்கிறோம் ஸ்டெல்லா க்ரிஸ்டியேனிடியை விரும்பி போற்ற அவள் கேட்கும் கேள்விகளில் உள்ள விஷயங்கள்தான் முக்கிய காரணம். (ஆடியன்ஸ் இதை பொதுப்படையாக யோசித்து பார்ப்பார்கள் என நம்பலாம்.)

உதவிக்காக ஏங்கி நிற்கும் தாக்கப்பட்டவர்களின் P.O.V. ல் கார் வந்து நிற்பதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து ஸ்டெல்லா இன்னும் பேசட்டும் நாம் அடுத்ததை கவனிப்போம் என்று பேசிக்கொண்டிருக்கும் அவளை மெதுவாக கரைக்கிறோம் or மறைக்கிறோம்.

## SC. No. 25. A மலைப்பிரதேசம் (வேறு இடம்) (H.W.O)

சென்ற காட்சியில் கவுண்டர், ஸ்டெல்லா மூலம் அறிவுரைகளை சொல்லிவிட்டோம். 'ப்ரே(அ)க்டிகல்' ஆக 'செர்வீஸ் செய்ய வேண்டாமா'! அதைத்தான் மதர் மற்றும் ரமேஷ் மூலமாக செய்ய வைக்கிறோம். காட்சி நம்பும்படியாக இருக்க இவர்கள் வருவதற்கு முன்பே முதலுதவி நடந்திருக்க வேண்டும் என்பதால் அதை கவுண்டர் ஹாஸ்பிடல் டாக்டர் செய்திருப்பதாக சொல்லவைத்து கவுண்டரையும், டாக்டரையும் உயர்த்துகிறோம்.

சேவை செய்யும் மதர், ரமேஷ் மீது ஆரம்பித்து அவர்கள் மீதே முடிக்கிறோம். தாக்கப்பட்டவர்கள் நிம்மதி அடைந்தார்கள் மற்றும் கவுண்டர், டாக்டர் உயர்த்தப்பட்டார்கள் என்பது நடத்துதலாக உள்ளது.

## SC. No.26 கவுண்டர் பங்களா

கதையின் முக்கிய பகுதி இது. கிட்டத்தட்ட கதையின் மூன்றின் ஒரு பகுதியில் இதை காட்டுகிறோம். ஸ்டெல்லா தன் பெற்ற தாயை சந்திக்கும் காட்சி இது. ஆடியன்சுக்கு ஓரளவுக்கு தெரியும் இவர்கள் தாயும் மகளும் என்று ஆனால் இவர்களுக்கு தெரியாது. இங்கு ஏதாவது ஒரு ஈர்ப்பை இவர்களுக்குள் காட்ட, மகளே பாருவை (தன்

தாயை) ஏன் அறிமுகம் செய்து வைக்கவில்லை என்று கேட்கும்படி எழுதப்பட்டது. (இங்கு இன்னும் டச்சிங்கான வசனம் வரவேண்டும்) இப்படி இவளை கேட்க வைத்து அடுத்த காட்சியில் ஃப்லே(அ)ஷ பே(அ)க்ஐ ஆரம்பிக்கிறோம் இங்கு ஃப்லே(அ)ஷ பே(அ)க் விஷயத்தை கவுண்டர் எடுத்துகொடுக்க, கௌரி ஆரம்பிக்கிறாள். ஏனென்றால் ஃப்லே(அ)ஷ பே(அ)க் ல் வரும் எல்லா காட்சிகளிலும் கௌரி வருகிறாள். பொதுவாக ஃப்லே(அ)ஷ பே(அ)க் சொல்லும்போது சொல்பவர் எல்லா காட்சிகளிலும் இருந்தால்தான் இயற்கையாக இருக்கும். ஒன்றிரண்டு அவர்கள் கேட்டதை சொல்வார்கள் ஆனால் அது மிக மிகக் குறைவாக இருக்கவேண்டும்.

இந்த பங்களாவை ஃப்லே(அ)ஷ பே(அ)க்கில் காட்டப் போகிறோம் என்பதால், 'ஹால்'ஐ 'மாஸ்டர் ஷாட்'ல் காட்டி ஆரம்பித்து, அறிமுகத்தையும் தாய் மகள் சந்திப்பையும் நடத்தி பிறகு ஸ்டெல்லாவின் கேள்வியால் ஃப்லே(அ)ஷபே(அ)க் அடுத்த காட்சியில் ஆரம்பமாக, இக்காட்சியை முடிக்கிறோம். மேற்கண்ட விஷயங்கள் உள்ளடங்கி நடத்துதலாக உள்ளது.

SC. No. 26. A கவுண்டர் பங்களா (ஃப்லே(அ)ஷபே (அ)க் ஆரம்பம்)

17 வருடங்களுக்கு முன்

படத்தின் முக்கியப் பகுதி இது. இதுவும் ஒரு குட்டி கதை (Sequence) போன்றது.

இங்கு பார்வதியை புத்திசுவாதீனத்துடன் காட்டும்பொழுது ஆடியன்சுக்கு ஓ.. அப்படி சுறுசுறுப்பாக இருந்தவள் இப்படி ஆகிவிட்டாளே என்று அவள்மேல் ஒரு அனுதாபம் ஏற்படும். மேலும் சுவாதீனம் அடைந்தால் இப்படித்தான் சுறுசுறுப்பாக, கலகலப்பாக இருப்பாள் என்பதை எஸ்டே(அ)ப்ளிஷ் செய்கிறோம்.

பார்வதி புத்திசுவாதீனத்துடன் இளமையாக சுறுசுறுப்பாக இருப்பதில் ஆரம்பித்து செல்வச்செழிப்பை காட்டி (ஆடியன்ஸ் எப்போதும் செல்வச்செழிப்பை விரும்பி பார்க்கிறார்கள்) நடத்தி அடுத்து என்ன என்பதாக அவர்கள் வேறு அறையில் நுழைவதில் முடிக்கிறோம்.

SC. No. 26. B கவுண்டர் பங்களா (பெரிய அறை)

பொதுவாக ஒரு பெரிய அசம்பாவிதம் நடப்பதற்கு முன் ஒரு சிறிய அபசகுணமான நிகழ்ச்சி நடக்கும் என்பதை ஜனங்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். அதற்கான ஒரு செட் அப் ஆக கண்திருஷ்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. அதன்படி

பாரு, கௌரி ஒற்றுமையில் ஒருத்தி கண் வைக்க, 'வச்சியா கண்ணு' என்பாள் இன்னொருத்தி.

சிறுவர்களின் நிச்சயதார்த்தத்துக்கு ஒரு 'செட் அப்' ஆக இரு பெண்மணிகளை பேசவிட்டு அதை நடத்தினோம்.

பாருவும் கௌரியும் முதலில் வெற்றிலை பாக்குதான் மாற்றிக் கொள்கிறார்கள், வேறு ஒரு பெண்மணி 'என்ன இவ்வளவு சிம்பிளாக..' என்று கேட்ட பின்புதான் தங்கள் நகைகளை சிறுவர்களுக்கு அணிவிக்கிறார்கள். இவர்களைப் போன்ற நற்குணம் படைத்த நாத்தனார்கள் வெறும் வெற்றிலை பாக்கு மாற்றிக்கொண்டாலே போதும், அது இவர்களுக்காக தன் மகிமையை காட்டும் என்பதற்காக இப்படி அமைக்கப்பட்டது.

ஒரு ஸஸ்பென்சுக்காக கவுண்டர் அங்கு வர, அவரை கலந்தாலோசிக்காமல் இப்படி நடந்ததற்கு அவர் கோபப்படுவார் என்ற எதிர்பார்ப்பை ஏற்படுத்தி, அவர் அவர்கள் மீது வைத்திருக்கும் அன்பு, மதிப்பை காட்டி அப்படியே நிச்சயத்தில் கலந்தவராகவும் ஆக்கப்படுகிறார்.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாதலால் பாரு, கௌரி மீதே ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து 'போய் வா உனக்கு இங்கு ஒரு அதிர்ச்சி காத்திருக்கிறது' என்பதாக வெளியேறும் கவுண்டர் மீதுமுடிக்கிறோம்.

## SC. No. 26.C கவுண்டர் பங்களா ஹால் (H.W.O)

சந்தோஷமான சூழ்நிலையில் அதிர்ச்சியை கொடுக்க H.W.O. வில் ஒட்டுமொத்தமாக எல்லோரையும் காட்டி ஆரம்பிக்கப்பட்டது. வண்டிக்காரன் சொல்வதை கேட்டு பாரு மூர்ச்சையாகி விழுவதுதான் இந்த காட்சியின் முக்யஅம்சம். நடத்துதலும் இதுதான். ஃப்லே(அ)ஷ பே(அ)க்ஐ முடிக்க அன்றைய பாருவின் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 26.D கவுண்டர் பங்களா (ஹால்) (ஃப்லேஷ்பே(அ)க் முடிந்ததும்)

இக்காட்சியில் ஃப்லே(அ)ஷ பே(அ)க் முடிந்து அந்த விஷயத்தின் தொடர்ச்சியாக, பார்வதி அன்றிலிருந்து சித்தபிரமை பிடித்தவளாக இருக்கிறாள் என்பதையும் பல டாக்டர்களை பார்த்தும் இன்றுவரை குணம் அடையவில்லை என்பதையும் தெரிவிக்கிறோம்.

இவ்வளவு ஸீரியஸ்ஸாக பழைய விஷயங்கள் வந்துகொண்டு இருக்கும்போது ஸ்டெல்லா ஜீஸஸ் ஐ நம்புங்கள் என்று சொல்வது ஆடியன்ஸ் மனதை ப்ரெஸெண்ட் கண்டிஷனுக்கு கொண்டு வருகிறது. அதில் ஸ்டெல்லாவின் வெகுளித்தனத்தையும் காட்டுகிறோம்.

நம் கர்நாடக இசையில் முதல் பாடத்தை 'ஸ'வில் ஆரம்பிக் கிறோம். வெஸ்டர்ன் இசையில் ஆரம்ப பாடத்தை 'பியானோ'வின் 'C' 'நோட்'ல் 'Doh' (தோ) 'ஸ'வை ஆரம்பிக்கிறார்கள்.

1960 களில், தஞ்சையில், 'ஸ' வுக்கும் 'ப' வுக்கும் கருப்பு கட்டை இல்லை என்று ஹார்மோனியம் வாசிப்பவர்கள் சொல்வார்கள் அதனால் கர்நாடக சங்கீதத்தின் 'ஸ' 'E' 'நோட்'ல் ஆரம்பமாகிறதாக தெரிகிறது. 'வெஸ்டர்ன்' 'ம்யூஸிக்'ல் 'C'ல் 'ஸ' ஆரம்ப மாகிறதாக தெரிகிறது. எனவேதான் கஸ்தூரி (ஸ்டெல்லா) சிறுவயதில் இந்த 'C' க்கு சம்பந்தப்பட்ட 'C' 'ஸ்கேல்'ல் பயிற்சித்து வந்ததாகவும் அதை பார்வதி ரசித்து கேட்டிருக்கிறாள் என்பதாகவும் கருத இங்கு ஸ்டெல்லா 'C' 'கார்ட்' ஐ வாசிக்க பார்வதியின் மூளையில் எங்கோ ஓர் நரம்பில் இந்த ஒலி பாதிப்பை ஏற்படுத்தியிருக்கிறது. அதனால்தான் பாரு எழுந்து ஸ்டெல்லாவிடம் வந்தாள் என்பதாக காட்டுகிறோம். ஸ்டெல்லா வாசித்ததால்தான் இந்த மாற்றம் பாருவில் ஏற்பட்டிருக்கிறது என்பதை ரெஜிஸ்டர் செய்கிறோம். இதனால் கவுண்டருக்கு ஸ்டெல்லா மேல் இன்னும் அன்பு, பாசம் வளரும்.

ஸ்டெல்லா இன்னும் வேற்றவளாகத்தான் இருக்கிறாள் என்பதை காட்டி திசை திருப்ப மறுபடியும் அவளை ஜீஸஸ் ஐ பற்றி பேசவைத்து, இது ரொம்ப ஓவர் என்னும்படியாக ரமேஷை பேச வைத்து ஒரு சின்ன க்ளே(அ)ஷை வைக்கிறோம். இதை வளர்த்து, பாட்டுக்கான போட்டியில் முடித்து, அதற்கு வழி செய்கிறோம்.

ஃப்லே(அ)ஷ் பே(அ)க் ஐ கேட்டுக் கொண்டிருந்த அனைவர் மீதும் ஆரம்பித்து, மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து, இதற்கு மேலும் வளர்க்காமல் போய் சாப்பிடுகிறார்கள் என்பதாக காலக்கழிப் போடு காட்சியை கரைக்கிறோம் (விருந்தை காட்டினாலும் திருப்தியாகத்தான் இருக்கும்)

SC. No. 27

## கிராமத்து ஹாஸ்பிடல்

பழைய கதையும் பாட்டும் முடிந்ததும் 'ப்ரெஸெண்ட்' க்கு வரவேண்டும் அல்லவா? இங்கு மதர், ஸ்டெல்லா ஒரேயடியாக தங்கி சேவை செய்யவராமல் நிலவரத்தை அறிந்து போகத்தான்

வந்திருக்கிறார்கள் என்று அமைக்கப்பட்டதன் காரணம், ஸ்டெல்லா சென்னை சென்றால்தான் அங்கு லட்சுமி, ஜேம்ஸ் சொல்படி, அவள் தொடையில் உள்ள தழும்பை பார்க்க முடியும்.

இக்காட்சியில், டாக்டருக்கு ஸ்டெல்லா, ரமேஷ் அறிமுகம், டாக்டருக்கு படிப்பவர்கள் முழுவதுமாக படித்து முடித்து பின்புதான் தொழிலுக்கு வரவேண்டும் என்பது, ரேகா படித்து முடித்ததும் இந்த ஹாஸ்பிடலுக்குதான் வரவேண்டும் என்றும், இங்கு பேஷண்டுகள் குறைவு என்று ஸ்டெல்லா சொல்ல, பின் சமாளிப்பது என்பன முக்ய விஷயங்கள்.

டாக்டரை 'அேக்ஷன்'-ல் காட்ட, அவர் மற்றும் ரேகாவின் மீது ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்தி விடை கொடுக்கும் விடைபெறும் எல்லோர் மீதும் முடிக்கிறோம்.

## SC. No. 28 மேரி வீடு (H.W.O.)

இக்காட்சியில், கீரை உடம்புக்கு நல்லது என்பதை ஒரு க்ரிஸ்டியன் வாயால் வரவழைத்தால் நல்லது என்பதற்காக மேரி மூலம் அது சொல்லப்படுகிறது.

ஸ்டெல்லா கூச்ச சுபாவமுள்ள சூட்டியானவள். அதனால் லட்சுமி ஸ்டெல்லாவின் தொடையில் தழும்பு இருக்கிறதா என்பதை பார்க்க, எப்படியெல்லாம் நடக்க வேண்டுமோ அப்படி நடந்து, ஒருவழியாக ஸ்டெல்லாவை குளிப்பாட்ட ஒப்பவைக்கிறாள். ஸ்டெல்லா வீட்டில் நுழைவதை வெளியிலிருந்து காட்டுவதைவிட வீட்டின் உள் வருவதாக காட்ட (கேமரா 'ஷிஃப்டிங்'கை மிச்சப்படுத்த). மற்றும் மேரி, லட்சுமி பாதி பேசி முடித்த நிலையில் சற்றே காட்சியை சுறுசுறுப்பாக ஆரம்பிக்க H.W.O. வில் அவர்கள் மீது ஆரம்பித்து, மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து, ஸ்டெல்லாவை லட்சுமி பாத்ரூம் அழைத்துபோவது ஒரு தமாஷான விஷயம் என்பதால், மேரி புன்சிரிப்பில் முடிக்கிறோம்.

## SC. No. 28. A மேரிவீடு (பாத்ரூம் - H.W.O.)

இளமையாக பெண்வடிவில் கடவுளே வந்தாலும், தெரியக்கூடாத இடம் தெரிந்தால் பெரும்பாலான ஆண்களின் கண் ஒரு க்ஷணமாவது அந்த இடத்தில் நிலைக்கும். அப்படி இருக்க பல ஆடியன்ஸுக்கு இந்த காட்சி நீளமாக இருக்கும் வரை சந்தோஷம்தான். ஆனாலும் ஆபாசமாக இருந்தால் பிடிக்காமலும் போகலாம். ஏனென்றால் இதுவரை கதையை நல்ல முறையில் நடத்தி வந்திருக்கிறோம்.

இங்கே லட்சுமி எந்தவிதமான 'டெக்னிக்'ல், மிகவும் கூச்ச சுபாவமுள்ள ஸ்டெல்லாவின் தொடையை பார்க்கிறாள் என்பதைத் தான் ஆடியன்ஸ் எதிர்பார்த்திருப்பார்கள்.

மார்புவரை டவல் கட்டி தளதள என்றிருக்கும் ஸ்டெல்லாவிடம், அதிகமாக வளர்க்காமல் இருக்க H.W.O. ல் ஆரம்பித்து மேற்கண்ட வற்றை நடத்தி காரியத்தில் வெற்றிபெற்ற லட்சுமி மீது முடிக்கிறோம்.

SC. No. 29 **நகர 'சர்ச்'**

இவர்கள் ட்ரே(அ)வல் செய்வதை காட்டப் போவதில்லை என்பதால் இந்த கிளம்பும் காட்சி (மனதளவில் ரசிகர்களுக்கு ஒரு ட்ரே(அ)வல் அனுபவம்)

ஊருக்கு கிளம்ப ஆயத்தம் ஆகுபவர்களின் மீது ஆரம்பித்து ஃபாதர்பேசும் விஷயத்தை நடத்துதலில் உள்ளடக்கி வழியனுப்புதலில் முடிக்கிறோம்.

SC. No. 30 **கெஸ்ட் ஹௌஸ்**

இந்த காட்சியில் முக்கிய வேலை, மதர் மற்றும் 2 ஸிஸ்டர்களை இங்கிருந்து ஓட்ட வேண்டும்.

வேறு முக்கிய அம்சங்கள் - லட்சுமி நாராயணனும் ரமேஷும் ஃப்ரென்ட்லியாக இருப்பதை பார்த்து ஸ்டெல்லா கமென்ட் அடிப்பது (இதை வித்தியாசமான ஆடியன்ஸ் வித்தியாசமாக எடுத்துக் கொண்டும் ரசிப்பார்கள்), ஸ்டெல்லா, ரமேஷை அதிகாரம் செய்தல் (இவர்கள் சந்திக்கும் போதெல்லாம் ஏதாவதொரு 'க்ளே(அ)ஷ்' இருக்க வேண்டும். ஆனால் அது இயற்கையாக இருக்க வேண்டும்), ஸிஸ்டர்கள் பாம்பை கண்டு இங்கு தங்க முடியாது எனல், இதில் முக்கியமாக க்ரிஸ்டியன்களான ஸிஸ்டர்கள் ''அது உங்களுக்கு வேண்டுமானால் தெய்வமாக இருக்கலாம்'' என்று சொல்வதன் மூலம் அந்த விஷயத்தில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்பது, இந்துக்கள் பாம்பை தெய்வமாக வணங்குவதை வித்யாசமாக பார்க்கிறார்கள் என்பது, ஸ்டெல்லா இங்கேயே தங்குவேன் என்பது (இதில் அவளின் அடம் மற்றும் ஈர்ப்பு), ஸ்டெல்லா மற்றும் ரமேஷ் வேறு வேறு அறைகளில் தங்க, அவரவர்களின் பெயரை அறை வாசற்படியின் மேல்பாகத்தில் எழுத ல.நா விடம் ரமேஷ் சொல்லுதல்

(இதன் காரணம், பின்னால் இந்த பெயர்களால் ஒரு குழப்பத்தை உண்டாக்கி ஒரு ஸீரியஸ்ஸான தமாஷ் நடத்த வேண்டியுள்ளது, அதற்கான வித்துதான் இது, அதாவது ப்ரீ எஸ்டே(அ)ப்ளிஷ்மென்ட் (pre-establishment) என்பன.

மதர் குழுவினர் ஊர் வந்து சேர்ந்தார்கள் என்பதாக கார் வந்து நிற்பதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து பின்னால் வரப்போகும் காட்சியில் முக்யத்துவம் பெறும் ல.நா. எழுதும் பெயர்களில் முடிக்கிறோம்.

## SC. No. 31 ஜேம்ஸ் வீடு (H.W.O.)

இந்த காட்சியை ஜேம்ஸ் ஏதோ திருட்டு வேலையில் அதிகம் சம்பாதிக்கிறான் என்பதாக அவன்மீது ஆரம்பித்து ஜேம்ஸ் நேர்மையாக வாழ்வதைத்தான் லட்சுமி விரும்புகிறாள் என்பதை தெரிவித்து லட்சுமி, ஸ்டெல்லா தொடையில் தழும்பை பார்த்ததை சொல்லவைத்தும் பின் லட்சுமிமேல் ஜேம்ஸ் வைத்திருக்கும் நம்பிக்கையை காட்ட, ஸ்டெல்லா, மேரியின் சொந்த மகள் அல்ல என்ற ரகசியத்தை சொல்லவைத்தும், நடத்தி, காட்சியை கிளுகிளுப்புடன் முடிக்கிறோம்.

பொதுவாக, காட்சிகளை இழுவை இல்லாமல், சுறுசுறுப்பாக, சுவாரஸ்யமாக ஆரம்பிக்க ஹாஃப் வே ஓபனிங் (Half-way-opening) பயன்படுத்தப்படுகிறது. நம் மனத்திரையில் பார்த்து ஜட்ஜ் செய்து இதை பயன்படுத்தவேண்டும்.

## SC. No. 31. A ஜேம்ஸ் வீடு

இங்கு ஜேம்ஸ் சூட்கேஸை பயன்படுத்தும்படியாக செய்ததின் முக்கிய காரணம், பலர் பல விஷயங்களுக்கு அனாவசியமாக செலவு செய்தாலும் இந்த சூட்கேஸ் விஷயத்தில் மட்டும் கஞ்சத்தனமாக இருக்கிறார்கள் என்பதற்காகவும் கதைக்கு இது பயன்படுத்தப்பட்டது.

சூட்கேஸ் திறந்து கொள்வதை இந்த காட்சியில் காட்டுவது எதனால் என்றால் பின்னொரு காட்சியில் அதனுள் வைக்கும் ஸ்டெல்லாவின் இ.கயிறு பொட்டலம் வெளியே விழுந்து விடவேண்டும். லட்சுமியின் வருகை அவள் இரவு அங்கு தங்கவில்லை என்பதற்கும் இவளுடைய நல்ல 'வைப்ரேஷன்' ஜேம்ஸின் கெட்ட எண்ணங்களை நிறைவேறவிடாமல் இருக்க என்பதாகவும் எடுத்துக்கொள்ளலாம்

இந்த காட்சியை ஜேம்ஸ் 'டுவர்ட்ஸ் கேமரா' (towards camera) வில் முடித்து அடுத்த காட்சியை அவே ஃப்ரம் கேமரா (away from camera) வில் ஆரம்பிக்கலாம். சாதாரணமாகவும் ஆரம்பிக்கலாம். மொத்தத்தில் 'ஜம்ப்' இல்லாமல் ஃப்லோ கெடாமல் இருக்க வேண்டும்.

முக்கியப் பொருள்களான இ.கயிறு பொட்டலம் மற்றும் சூட்கேஸில் ஆரம்பித்து, மேற்கண்டவற்றை நடத்துதலாக வைத்து சந்தோஷமாக கிளம்புகிறான் என்பதாக முத்தம் கொடுத்து 'விலக' முடிக்கிறோம். முத்தத்தில் முடிக்கலாமே என்று ஆசை பட்டால் அது அவன் ஊருக்கு கிளம்பிவிட்டான் என்பதை மறைத்து குறைப்பதாக ஆகிவிடும்.

## SC. No. 32 கிராமத்து 'சர்ச்'

கொஞ்சம் க்ரிஸ்டியன் 'டச்'ஐ காட்டவேண்டும் என்பதால் ஜேம்ஸ் சர்ச் ஃபாதரை அணுகுவதைப்போலவும் அவரும் அவனுக்கு மனமுவந்து உதவுவதாகவும் காட்டுகிறோம்.

ஜேம்ஸ் இங்கு வந்திருப்பது தவறான எண்ணத்துடன் என்பதால் அவன் பெயரை ரிசர்ட் என்று ஃபாதரிடம் சொல்கிறான். இந்த பெயர் மாற்றத்தால் இவனை பின்னால் ஜமீன் வீட்டார் கண்டுபிடிக்க முடியாமல் போகிறது. இதுவும் ஒரு செட்அப் தான்.

கெட்டவனை எதிர்கொள்ளும் ஃபாதரில் ஆரம்பித்து இ.கயிற்றை சுமக்கும் காரில் ஏறுவதில் முடிக்கிறோம். (இவர்கள் காரிடம் வரும்பொழுது கார், ஜேம்ஸை 'வாடா நைனா' என்று பார்க்கும் கோணத்தில் (angle ல்) காட்டினால் நன்றாக இருக்கும்.

(''மேற்கண்டவை நடத்துதலாக உள்ளது'' என்று குறிப்பிட்டு வந்ததை, இதுவரை படித்ததில் அறிந்திருப்பீர்கள் என்பதால் இனி அதை நான் எழுதவேண்டிய அவசியம் இருக்காது. தேவையான காட்சிகளில் மட்டும் அவை இனி எழுதப்படும்.)

## SC. No. 32. A கிராமத்து பாதை

பொதுவாக ஒரு ஊரில் க்ரிஸ்டியன்கள் இந்துக்கள் என்று யாராக இருந்தாலும் அவர்கள் நல்லவர்களாக இருந்தால் அங்கு ஒரு நல்ல வைப்ரேஷன் இருக்கும், தீய சக்திகளால் ஒன்றும் செய்யமுடியாமல் போய்விடும் என்பது நம்பிக்கை. மேலும் ஸ்டெல்லா விஷயத்தில்

பட்டுப்புடவையின் மூலம் சக்தியின் வேலை ஆரம்பமாகிவிட்டதாக அமைத்திருக்கிறோம். அதனால் ஜேம்ஸ் கொண்டு வந்த இ.கயிறு பொட்டலம் சூட்கேஸ் திறக்கப்பட்டு பக்கத்தில் விழுந்துவிடுகிறது.

இங்கு அவன் தெரிவிப்பது எல்லாமே தவறானதாக இருக்குமாறு அமைத்தது அவன் இவர்கள் கைக்கு கிடைக்கமாட்டான் என்பதாக இருக்கத்தான்.

காரில் விழுந்திருக்கும் இ.கயிறு கவுண்டர் வீட்டை அடைய பின்வரும் காட்சிகள் செயல்படுகின்றன.

விவரங்களை சேகரிக்கும் ஃபாதர் மீது ஆரம்பித்து கார் ஜேம்சுக்கு டாடா காட்டி போவதாகவும் ஜேம்ஸ் கோட்டை விட்டான் என்பதாகவும் ஒட்டு மொத்தமாக முடிக்கிறோம்.

SC. No. 32. B **கவுண்டர் பங்களா**

ஜேம்ஸ் இ.கயிற்றை, கையில் தயாராக வைத்துக் கொண்டு, கவுண்டரிடம் பேச அதைத் தேடுகிறான். எப்படியும் அவன் தோற்று இருக்கிறான் என்பதற்காக ஸீரியஸ்ஸில் ஒரு காமெடி என்று ஒரு 'ஜோக்' சேர்க்கப்பட்டது. ஆடியன்சுக்கு ஒரு சின்ன 'ப்ரேக்' காகவும் உள்ளது.

கதையின் போக்குப்படி ஜேம்ஸ் அங்கு அதிக நேரம் இருக்கக்கூடாது என்பதால், எப்படியும் ஸ்டெல்லா 'சேப்டர் க்ளோஸ்' என்ற நிம்மதி வந்தாலும் இ.கயிற்றை அவன் ஃபாதர் காரில் தேடப்போவதாக அமைத்து அங்கிருந்து அவனை கிளப்புகிறோம். ஃபாதர் வேறுவழியில் திரும்பலாம் என்ற வசனமும் அதற்கு உதவுகிறது.

சூட்கேசுடன் செல்லும் ஜேம்ஸை காட்டி அது திறந்துகொள்ளும் எரிச்சலில் ஆரம்பித்து விதியால் or சக்தியால் தோற்கடிக்கப்பட்ட ஜேம்ஸ் மீதே முடிக்கிறோம்.

SC. No. 33 **கோயிலுக்கு போகும் பாதை (இடம் I)**

இக்காட்சியில் கவுண்டர், இ.கயிறு இருக்கும் ஃபாதர் காரில் ஏறவேண்டும் என்பதற்காக, கவுண்டர் காரை ரிப்பேர் ஆகியிருக்கும்படி செய்யப்பட்டது.

இ.கயிறு இருக்கும் கார் போவதை காட்டி இதன் மூலம் என்ன நடக்கப்போகிறது என்று காரின் மீது ஆரம்பித்து, ஒரு ஈர்ப்பாக கவுண்டர் அந்த காரில் ஏறுவதில் முடிக்கிறோம்.

## SC. No. 33.A கோயிலுக்கு போகும் பாதை (இடம் II)

கவுண்டரையும் ஃபாதரையும் உபயோகமானதை பேசவைக்க நினைக்க, அரசமரத்தின் பெருமையை க்ரிஸ்டியன் ஆன ஃபாதருக்கு கவுண்டர் சொல்ல, இந்துக்கள் 'ப்ரே(அ)க்டிகலாக' தேவையானதை முதலில் செய்வதில்லை என்பதையும் காட்ட, ஃபாதர் மூலம் 'அப்படியே இந்த ரோட்டையும் சரிசெய்துட்டா நல்லா இருக்கும்' என்று சொல்லவைக்கப்பட்டது. இந்த வழி மிகவும் கரடு முரடாக இருக்கிறது என்பதையும் தெரிவித்திருப்பது பின் வரும் காட்சிக்காக.

இக்காட்சியில் ஃபாதரின் பேச்சுக்கு முக்யத்வம் கொடுத்து அவர் மீதே ஆரம்பித்து, இ.கயிறு இருக்கும் கார் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 34 கோயில் முன்

இதுவரை ஊர் ஜனங்கள் கவுண்டருக்கு மரியாதை செலுத்தியதை காட்டவேயில்லையே. அதை கோயில் முன் காட்டினால் நன்றாக இருக்கும் என்று இங்கு வைக்கப்பட்டது.

இ.கயிறு உள்ள கார் கோயில் முன் வந்து நிற்க கவுண்டர் இறங்குவதில் ஆரம்பித்து இன்னும் செய்ய வேண்டிய காரியங்கள் இருக்கின்றன என்பதாக, வரவேற்பதில் 'ஃபேட் அவ்ட்' செய்கிறோம்.

## SC. No. 34.A கோயில்

ஃபாதர் வரும்வரை நேரம் கழிய வேண்டுமே அதனால் கல்வியின் அவசியத்தை கவுண்டர் மூலம் தெரிவித்து அவரையும் உயர்த்துகிறோம். அப்படியே, புத்தருக்கு ஞானக்காற்றை அளித்த, அரசமரத்தை நடவேண்டும் என்பதையும் தெரியப்படுத்துகிறோம்.

கோயிலில் கவுண்டர் சாமிகும்பிட்டார் என்பதாக, ஃபேட் அவ்ட்ல் காட்சியை முடித்து ஃபேட் இன் ல் இந்த காட்சியை ஆரம்பிப்பதின் மூலம், அது நடந்துவிட்டதாக காட்டுவதின் காரணம், கோயிலின் உள்ளே கடவுளை, ஸ்டெல்லா வரும்போது காட்டுவதற்காக.

சென்ற காட்சியில் ஃபேட் அவ்ட் ஆனதில் சாமிகும்பிடும் காரியம் முடிந்துவிட்டது என்பதாக ஃபேட் இன் ல் ஆரம்பித்து, அதிகமாக இழுக்காமல் கவுண்டர் வெளியேறுவதில் முடிக்கிறோம்.

## SC. No. 34. B கோயிலுக்கு முன் (பாதை)

இக்காட்சியில் கவுண்டர் பின் சீட்டில் உட்கார்ந்து, பூஜை பிரசாத தட்டை பின் சீட் 'ரியர் விண்டோ' பக்கத்தில் அதாவது இ.கயிறு பொட்டலம் விழுந்திருக்கும் இடத்தில் வைக்கும்படியாக செய்ய, ஃபாதர் வேறு இடத்துக்கு சென்றுவிட்டு பால் பவுடர் பெட்டியை தன் பக்கம் வைத்துக்கொண்டு வருவதாக அமைக்கப்பட்டது.

பூஜாரி மந்திரித்த கயிறுபொட்டலம் தருவதர்க செய்யப்பட்டது எதனெனில் பின்வரும் காட்சியில் ஃபாதர் பூஜை தட்டிலிருந்து கீழே விழுந்திருக்கும் பிரசாதங்களை எடுத்து தட்டில் போடும்போது பொட்டலங்களாக தெரிந்தால்தான் எந்த தயக்கமுமின்றி எல்லா பொட்டலங்களையும் தட்டில் எடுத்து போடுவது இயற்கையாக இருக்கும் என்பதற்காக.

(இங்கு பூஜாரி கொடுக்கும் மந்திரித்த கயிறு பொட்டலம் கிட்டத்தட்ட இ.கயிறு பொட்டலத்துக்கு ஒத்து போவதாக இருக்க வேண்டும்.)

சென்ற காட்சியில் வெளியேறிய கவுண்டர் வருவதில் ஆரம்பித்து, பிரசாத தட்டுக்கு பின்வரும் காட்சியில் முக்யத்வம் இருப்பதால் 'ரியர் விண்டோ' விடம் அதை வைப்பதில் முடிக்கிறோம்.

## SC. No. 35 கோயிலுக்கு போகும் பாதை (திரும்பிவருதல்)

இக்காட்சியில் கார் பள்ளத்தில் தூக்கிப்போடும்போது பூஜை பிரசாதங்கள் பக்கத்தில் விழுந்து இ.கயிறு பொட்டலத்துடன் கலந்துவிடுகிறது. (தெய்வசக்தியை நம்புபவர்கள் கண்டிப்பாக இதை அதிகமாக ரசிப்பார்கள்).

ரமேஷ் அங்கு மேரியிடம் தாம்பூலம் தருகிறான். ஃபாதர் இங்கு ஸ்டெல்லாவை ஒப்படைப்பதுபோல் கோவில் பிரசாதத்துடன் அவள் இ.கயிற்றை கொடுப்பதும் ஒரு ஸெண்டிமெண்ட்.

காரினுள் நடக்கப்போகும் விஷயம் கார் தூக்கிக்போடுவதால் என்பதற்காக, கார் கரடு முரடான பாதையில் போவதில் ஆரம்பித்து பிரசாதத்தட்டு இ.கயிறு பொட்டலத்துடன் கணபதி விக்ரஹத்திடம் வந்தமர்வதில் ஸெண்டிமென்டோடு முடிக்கிறோம்.

(ஃபாதர் ஏன் பிரசாத தட்டை கவுண்டரிடம் கொடுக்கவில்லை என்று கேட்டால் ஓவர் ஸெண்டிமென்ட் தேவையில்லை என்பதற்காக)

## SC. No. 36 கவுண்டர் பங்களா

இங்கு கவுண்டருக்காக தோப்பில் வியாபாரிகள் காத்திருக் கிறார்கள் என்று அவரை அங்கு அனுப்புவது மற்றும் அவர் வீட்டிற்கு சாப்பிடபோகாமல் இருக்க ஒருபொழுது என்பதெல்லாம் ஜேம்ஸ் இந்த ஊரை விட்டு போகும் நேரக் கழிவுக்காகத்தான்.

இந்த 'ஒரு பொழுது வசனம் மூலம் 'ஒருபொழுது' உடலை ஆரோக்யத்துடன் வைத்துக்கொள்ளும் என்ற சங்கதியை இங்கு தெரிவிக்கிறோம். அப்படியே வெள்ளிக்கிழமையதுவும் ஸ்டெல்லா இ.கயிறு வீட்டிற்கு வந்திருப்பதாகவும் இருக்க இப்படி அமைக்கப்பட்டது.

ஒரு ஸஸ்பென்சுக்காக பூஜாரி கொடுத்த மந்திரித்த கயிறு பற்றி பேசி பின் கௌரி மூலம் அதை கவுண்டர் கையாலேயே பாருவுக்கு கட்டும்படி சொல்லப்பட்டது. இதுவும் நேரக்கழிவுக்கு பயன்படுகிறது.

பிரசாத தட்டை வாங்கும் கௌரி மங்களகரமாக இருக்கட்டும் என்று பூக்கூடையுடன் உள்ள கௌரியிடம் ஆரம்பித்து கவுண்டர் இப்படி வெளியே போனதால்தான் ஜேம்ஸ் கிடைக்கும் விஷயம் தாமதமானது என்பதாக அவர் மீது முடிக்கிறோம்.

## SC. No. 37 கிராமத்து 'சர்ச்'

ஆடியன்சுக்கு தெரியும் அங்கு பொட்டலம் இல்லையென்று 'தேடு-தேடு, நீ என்ன தேடினாலும் உனக்கு அது கிடைக்காது' என்று அவனை வெறுப்புடன் கிண்டலாக ரசிக்கும்படியாக இருக்கிறது இக்காட்சி.

ஆத்திரத்துடன் காத்திருக்கும் ஜேம்ஸின் மீது ஆரம்பித்து முழுதும் ஏமாந்த ஜேம்ஸ், ஃபாதரின் 'காட் ப்லெஸ் யூ' கிடைக்காமல் விலகுவதில் முடிக்கிறோம்.

## SC. No. 38 கவுண்டர் பங்களா (பாரு அறை)

இக்காட்சியில் ஸ்டெல்லாவின் இ.கயிற்றை பார்த்து அவர்கள் அதிர்ச்சியுடன் அதிசயிக்கவேண்டும். அதே நேரத்தில் அது வந்த நேரம் பாருவுக்கு நெற்றியில் அடிபட்டு சற்று பழைய நினைவு பெறுகிறாள் என்று நம்பவேண்டும். எல்லாம் கடவுள் செயல் என்பவர்களுக்கு இது ரசிக்கும்படியாக இருக்க அமைக்கப்பட்டது.

இங்கு பாருவுக்கு நெற்றியில் அடிபடப் போவதால் பாருவில் ஆரம்பித்து கடவுள் காப்பாற்றுவார் என்பதாக அவளுக்கு கவுண்டர், மந்திரித்த கயிறு கட்டுவதில் முடிக்கிறோம்.

## SC. No. 38.A கவுண்டர் பங்களா (ஹால்)

இதை சென்ற காட்சியிலேயே சேர்த்திருக்கலாம். வீடு பெரிது என்பதாலும், பாருவின் மனநிலை பாதிக்காமல் இருக்கவும், பக்திமார்க்கத்தில் இருக்கும் பெரிய வீட்டு பெண்கள் அதிகம் சத்தம் போட்டு பேசகூடாது என்பதாலும், அந்த வீட்டின் தன்மையை 'மெய்ன்டெய்ன்' செய்ய கௌரி வெளியே வந்து ல.நா. வை அழைத்து பூஜாரியிடம் அனுப்புவதாக அமைக்கப்பட்டது.

(இங்கு முக்கியமாக ல.நா. வை அனுப்ப காரணம் அடுத்த காட்சியில் ஸ்டெல்லா இவனிடம் பேச. வேறு ஆளாக இருந்தால் ஸ்டெல்லா அவரிடம் பேசும் வாய்ப்பு குறைவு. உள்ளேபோகும் வாய்ப்பு அதிகம். அப்படி போனால் கதையின் போக்கே மாறிவிடும்.)

கட்டளை என்பதால் சொல்பவர்மேல் ஆரம்பித்து நிறைவேற்று பவர் மேல் முடிக்கிறோம்.

## SC. No. 38.B கவுண்டர் பங்களா

இங்கு ல.நா வெளியே வர ஸ்டெல்லா அங்கு வருவதை காட்டியிருப்பது ஒரு ஸஸ்பென்சுக்காக. அவள் உள்ளே வந்து தன் இ.கயிற்றை பார்த்திருந்தால் கதையின் திருப்பமே வேறு மாதிரியாக ஆகியிருக்கும். அதனால் அவள் 'மேனர்ஸ்'ஐ பயன்படுத்தி வீட்டாரை 'டிஸ்டாப்' செய்யக்கூடாது என்று திரும்பும்படி செய்யப்பட்டது.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக ல.நா வெளியில் வருவதில் ஆரம்பித்து அங்கு ஏற்படுத்தப்பட்ட ஸஸ்பென்ஸ் முடிந்ததாக ஸ்டெல்லா மீதே முடிக்கிறோம்.

## SC. No. 38.C கவுண்டர் பங்களா (பூஜை அறை)

பக்தியுள்ள இந்துக்கள் வீடுகளில் ஏதாவது எதிர்பாராதது நடந்துவிட்டால் பூஜை அறைக்கு போய் கடவுளை வேண்டுவது வழக்கம் என்பதால் இந்த காட்சி.

எனவே, கௌரியின் பக்திபூர்வமான பூஜையில் ஆரம்பித்து கடவுளின் சக்தி வேலை செய்யும் என்பதாக கற்பூர ஒளியிடம் நெருங்கி முடிக்கிறோம்.

## SC. No. 38. D கவுண்டர் பங்களா (ஹால்)

ஆடியன்சுக்கு தெரிந்திருக்கும் ஸ்டெல்லா இவர்கள் பெண்தான் என்று. ஆனால் ஜமீன் வீட்டார் என்னென்ன பாடுபடுகிறார்கள் என்பது சுவாரஸ்யமாகவும் ஆடியன்ஸ் அதை பார்த்து ஐயோ பாவம் என்னும்படியாக இங்கு நடப்பவை இருக்கவேண்டும்.

பூஜாரியிடம் விவரம் கிடைக்காததால் அடுத்து, கார் ஞாபகத்திற்கு வர, ஃபாதரிடம் பேசி ரிச்சர்ட் விவரம் அறியும்படி செய்து ரிச்சர்டை தேடிப்பிடிக்க கவுண்டர் போவதை நிறுத்தி கிரணை அனுப்புகிறோம். கவுண்டர் போனாலும் நடக்காது என்பது ஆடியன்சுக்கு தெரியும். ஏனெனில் ஜேம்ஸ் அவனைப்பற்றி சொன்னதெல்லாம் பொய். மேலும் கிரண் இங்கு முந்திக்கொள்கிறான் உண்மையை அழிக்க, என்பதாக அமைக்கப்பட்டது.

பூஜாரி வந்து விட்டார் என்பதாக அவர் கேமராவிலிருந்து முன்னோக்கி நகரும்படியாக ஆரம்பித்து, கவுண்டர் மனம் நொந்திருக்கிறார் என்பதாக அவர்மீதே முடிக்கிறோம்.

## SC. No. 39 கிரண் மலைபங்களா

கிரணின் தந்தை எங்கோ ஓர் இடத்தில் இருக்கிறார் என்பதை இக்காட்சியில்தான் முதன் முறையாக தெரியப்படுத்துகிறோம்.

தந்தை மகன் இரண்டுபேருமே நல்லவர்கள் அல்ல என்பதை அவர்களின் வசனம் மூலம் தெரியப்படுத்துவது, கிரணுடன் போகும் ஃபாதர் ஒரு வேளை ரிசர்ட் ஐ (ஜேம்ஸ்) கண்டுபிடித்தாலும் அதை கிரண் தந்தை முறியடித்துவிடுவான் என்பது, தந்தை - மகன் பேசுவது மூலம் இவர்களிருவரும் கவுண்டர் சொத்துக்கு அதிபதி ஆகப்பார்க்கிறார்கள் என்பன இக்காட்சியின் முக்ய அம்சங்கள்.

இக்காட்சியோடு ஸ்டெல்லா இ.கயிறு விஷயத்தை நிறுத்தி வைக்கிறோம். ஏனெனில் இனி ரமேஷ் இ.கயிறு விஷயத்தை ஆரம்பிக்கவேண்டுமே. கிரண் அவன் தந்தையிடம் விஷயத்தை சொல்லவேண்டும் என்ற அவசரத்தில் இருப்பதால் அவன் மீதே ஆரம்பித்து தந்தையுடன் தொடர்புகொண்ட ஃபோனோடு அவனிடமே முடிக்கிறோம்.

## SC. No. 40 ஜேம்ஸ் வீடு

ஜேம்ஸ் ஊரிலிருந்து வந்திராத இந்தநேரத்தில் போலீஸ் அவனை தேடி வரவேண்டும், அப்பொழுது லட்சுமி அவர்களை

''நீங்கள் லஞ்சம் வாங்கிக்கொண்டு ஜேம்ஸை ஊக்குவிப்பதால்தான் அவன் திருடனாக இருக்கிறான்'' என்று திட்டவேண்டும். இதன் மூலம், இந்த காரணத்தால்தான் 'ஜேம்ஸ் மீது தவறில்லை' என்பதாக, அவனை லட்சுமி காதலிக்கிறாள் என்பதை தெரிவிக்கிறோம்.

இக்காட்சியில் லட்சுமி ஜேம்சுக்காக ஜெயிலுக்கு போகவும் தயங்கமாட்டாள் என்பதும் அவர்களுக்குள் பிணைப்பு அதிகமாகி வருகிறது என்பதையும் தெரிவிக்கிறோம்.

ஜேம்ஸ் சிஷ்யனிடம் விசாரணை என்று அவன் மீது ஆரம்பித்து பின்வரும் காட்சிக்கான ஒரு நல்ல கதாபாத்திரத்தை அழைத்துவர போகிறான் என்பதாக அவன் மீதே முடிக்கிறோம்.

SC. No. 41

## மேரி வீடு

மேரியிடமிருந்து ஸ்டெல்லா விலக விதி விளையாட ஆரம்பித்து விட்டது என்பதாக இக்காட்சி சற்று சோகமானதாக அமைக்கப் பட்டுள்ளது.

இங்கு, ஸ்டெல்லா தன் சொந்த மகள் இல்லை என்பது ஜேம்சுக்கு தெரிந்துவிட்டதை அறிந்து மேரி, வேதனை அடையவேண்டும், மேரி ஜேம்ஸிடம் கெஞ்சவேண்டும், ஸ்டெல்லாவை அடைய ஜேம்ஸ், மேரியை மிரட்டவேண்டும், ஜேம்ஸ் மிரட்டியதால் மேரி, ஸ்டெல்லாவுக்கு ஒரு கடிதம் எழுதவேண்டும் என்பன முக்ய அம்சங்கள்.

ஆடியன்சுக்கு தெரிந்திருக்கும் ஸ்டெல்லா இவள் சொந்த மகள் இல்லை என்று, ஆனாலும் சொந்த மகளாக வளர்த்த மேரிக்கு ஏற்படும் இந்த வருத்தத்தில் இவர்களும் பங்குகொள்ளும்படி இருக்கவேண்டும்.

கெட்ட, மிரட்டும் எண்ணத்துடன் வரும் ஜேம்ஸ் மீது ஆரம்பித்து மிரட்டப்பட்ட மேரி கடிதம் எழுத தொடங்குவதில் முடிக்கிறோம்.

SC. No. 42

## ஜேம்ஸ் வீடு

இக்காட்சியில், லட்சுமி, ஜேம்ஸின் மீது வைத்திருக்கும் அன்பை பற்றி அவனிடம் ஒரு நல்லவர் சொல்லவேண்டும். பொதுவாக சில பேருக்கு பிறர் சொன்னால்தான் ஒன்றின் பெருமை தெரிகிறது என்பதாக, பிறகு, ஜேம்சுக்கு ரொம்ப தொல்லை கொடுத்த அந்த

சூட்கேசுக்கு ஜேம்ஸால் ஏதாவது நடக்கவேண்டும். அவன் அதை உதைத்தால்தான் ஆடியன்சுக்கும் சந்தோஷம் ஏற்படும் என்று அப்படியே செய்யப்பட்டது. (சூட்கேஸ் நல்லதே செய்துள்ளது)

அதிர்ச்சியான விஷயத்தை வைத்திருக்கும் வில்லியம்ஸ் மீது ஆரம்பித்து தொல்லை கொடுத்த சூட்கேசுக்கு ஒரு முடிவு கொடுப்பதாக, இது இப்படியாக முடிந்தது என்று ஃபேட்அவ்ட் செய்கிறோம்.

## SC. No. 43 கெஸ்ட் ஹௌஸ்

இந்த காட்சியில் ஸ்டெல்லா, ரமேஷுக்குள் ஒரு சின்ன மோதலை ஏற்படுத்தி, ''அதற்குள், ஃப்ரம் அட்ரஸ்ஸை படிச்சிட்டீங்களா'' என்று ஸ்டெல்லா கேட்பதில், அப்படி பார்ப்பது 'மேனர்ஸ்' இல்லை என்பதை தெரிவித்து அதே நேரத்தில் ரமேஷ் ஒரு அனாதை அவனுக்கு கடிதம் போட யாரும் இல்லை என்ற சூழ்நிலையில் ரமேஷ் டீஸென்ஸி, மேனர்ஸ் ஐ மறந்து ஒரு ஆவலில் ஃப்ரம் அட்ரஸ் ஐ படித்துவிடுகிறான் என்பதை இங்கு காட்ட முயலுகிறோம். (இந்த காட்சியை அனாதைக்கு கடிதம் என்ற பாய்ண்டை வைத்து, இன்னும் சோகமாக்க, வளர்க்கலாம்).

இங்கு கடிதம் தான் முக்கியம் என்பதால் அவர்களுக்குள் வரப்போகும் மோதலுக்கு ஒரு மூன்றாவது ஆள் இருந்து போக போஸ்ட்மே(அ)ன் ல் ஆரம்பித்து ரமேஷின் நிலை அறியாத ஸ்டெல்லா கடிதத்தை பிடுங்கிபோவதில் முடிக்கிறோம்.

## SC. No. 43. A கெஸ்ட்ஹௌஸ் (ஸ்டெல்லா அறை)

ஸ்டெல்லாவின் மனத்தில் இவ்வளவு நாள் மேரிதான் தன் தாய் என்றிருந்த விஷயத்தில் ஒரு சின்ன குழப்பத்தை ரெஜிஸ்டர் செய்கிறோம். ஸ்டெல்லாவை பொருத்தவரையில் பின்வரும் காட்சிகளுக்கு இது ஒரு ஆரம்பம்.

இங்கும் இவர்களுக்குள் ஒரு சின்ன ஸீரியஸ் கம் காமெடி மோதலை ஏற்படுத்தி அதில் சிக்கன் ஐ கொண்டுவந்து, பின்னால் வரும் சிக்கன் கலாட்டாவுக்கு ஒரு ஆரம்பம் கொடுக்கிறோம்.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக ஸ்டெல்லா கடிதத்தை படிக்க ஆரம்பிப்பதில் ஆரம்பித்து விஷயத்தை காமெடியாக முடிக்க ரமேஷ் ஃப்ரேம் அவ்ட் ஆவதில் முடிக்கிறோம்.

## SC. No. 44 கெஸ்ட் ஹௌஸ்

இந்த காட்சியில் ஸ்டெல்லா மேரியை (வளர்த்த தாயை) நினைத்து வருந்திக்கொண்டிருக்கும்போது அவளின் பெற்ற தாயை சம்பந்தப்படுத்துகிறோம்.

தன் பேச்சுக்கு விரோதமாகத்தான் ஸ்டெல்லா செயல்படுவாள் என்ற அர்த்தத்தில் ரமேஷின் உஷாரான வசனம், ஸ்டெல்லா, கவுண்டர் இடையேயான வசனங்கள், ஸ்டெல்லாவை சென்னை போக கவுண்டர் ஒப்ப வைத்தல், என்பன இக்காட்சியின் முக்ய அம்சங்கள். மேலும் ஸ்டெல்லாவை கவுண்டர் கெஞ்சி அழைத்ததிலிருந்து அவளுக்கு 'ப்ரொமோஷன்' கிடைத்ததாக காட்டிக் கொள்ள 'எதற்கும் ஒரு களை வேண்டும்' என்று ரமேஷை பார்த்து சொல்ல வைக்கிறோம். இப்படி சொல்லவைத்து ரமேஷுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்து, இதே வார்த்தையை திருப்பியடிக்கும்படி செய்தால் 'அடிக்கு அடி' என்று ஆடியன்ஸ் வெகுவாக ரசிப்பார்கள் என்று அதை பின்னால் செய்திருக்கிறோம்.

ஸ்டெல்லாவை, அன்பு கலந்த பயத்துடன் கவுண்டர் கதவைத் தட்டி அழைக்கிறார், என்று அவர் முகபாவத்தோடு ஆரம்பித்து, தமாஷாக, கவுண்டர் ஸ்டெல்லாவுடன் சேர்ந்து ரமேஷுக்கே குண்டு போட்டதாக அவரிடமே முடிக்கிறோம்.

## SC. No. 45 கவுண்டர் பங்களா

இக்காட்சியில், 1. ஸ்டெல்லா தன் பெற்ற தாயின் பக்கத்தில் உட்காருவது. 2. கிரண், ரிசர்ட்டை தேடி போய் வந்த விஷயம் 'ஃபெய்ல்யூர்' என்பதில் 'எல்லாம் கடவுள் செயல்' என்று கவுண்டர் விட்டு விடுவது ஏனென்றால், சிறுவர்களை கண்டுபிடிக்க அவர்கள் இந்த 17 வருடங்களில் எத்தனையோ முயற்சிகள் எடுத்திருக்கலாம் என்பது. 3. ஸ்டெல்லா தன் வேலையில் 'பெர்ஃபெக்ட்' என்று சொல்வதின் மூலம் அவள் தாயை சரியாக்கிவிடுவாள் என்ற உள் அர்த்தம் வரும்படியாக அமைக்கப்பட்டுள்ள வசனம், முக்கிய அம்சங்கள்.

கிரணும் கவுண்டரும் பேசி முடித்தபின் ஸ்டெல்லா வருவதாக காட்டுவது ஏனென்றால் அவள் அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது வந்து, ரிசர்ட் விஷயத்தை அவர்கள் பேச, அதிலிருந்து இ.கயிறு விஷயம் வர, கதை வேறு திசையில போய்விடும்.

இவர்களின் புறப்பாட்டை 'கூல்' ஆக ஆரம்பிக்க 'ஐஸ்க்ரீம்' வசனம் போடப்பட்டது.

ஜேம்ஸ் தவறான 'அட்ரஸ்' கொடுத்ததால் அவன் கிடைக்க மாட்டான் என்பது ஆடியன்சுக்கு தெரியும். அதனால்தான் அவனை இவர்கள் தேடுவதை காட்டவேண்டிய அவசியம் இல்லை என்று விடப்பட்டது. (கதையை வேறு திசையில் கொண்டுபோக அதை செய்யலாம்).

ஊருக்கு அழைத்து செல்லும் கவுண்டரிடம் ஆரம்பித்து ஒட்டுமொத்தமாக, 'மாஸ்டர் ஷாட்'ல் கிளம்பி போகும் கார் மற்றும் கௌரியோடு முடிக்கிறோம்.

## SC. No. 46 நெடுஞ்சாலை

இக்காட்சியில் பந்தங்கள் தெரியாமல் தாயின் மடியில் ஸ்டெல்லா படுத்திருப்பதை தந்தை ரசித்து ட்ரைவரிடம் சொல்வது ஒரு 'இமோஷனல்' ஆன காட்சி. இதை கவுண்டரை விட ஆடியன்ஸ்தான் நன்றாக ரசிப்பார்கள். காரணம், இவர்களுக்கு அந்த பந்தம் தெரிந்திருக்கிறது.

இப்படி ஆடியன்சுக்கு தெரியப்படுத்திவிட்டு கதாபாத்திரங்கள் விஷயங்களை எதிர்கொள்வதை மையமாக கொண்ட படங்கள் சுவாரஸ்யமாக இருந்துவிட்டால், ஆடியன்ஸ், 'ஸஸ்பென்ஸ்' வெளியானதற்கு முன்வந்த காட்சிகளை பார்க்க மறுபடியும் தியேட்டருக்கு வருவார்கள்.

ஆடியன்ஸை கவர இதுவும் ஒரு டெக்னிக்.

கார் ஒரு ஸஸ்பென்ஸான பந்தத்தை சுமந்து செல்கிறது என்பதாக அதை ஒரு கனத்துடன் காட்டி ஆரம்பித்து கவுண்டர் நெகிழ்ந்து சொல்வதை ஆடியன்சும் ஆமோதிக்கும்படியாக, அங்கு ஆமோதிக்கும் ட்ரைவரிடம் முடிக்கிறோம்.

## SC. No. 47 சிடி ஹாஸ்பிடல்

இக்காட்சியில் பார்வதி சற்று தேர்ச்சி அடைந்துவருகிறாள் என்பதையும், கவுண்டருக்கு ஸ்டெல்லா மீது அன்பு அதிகரித்திருக்கிறது என்பதையும் காட்டி ஸ்டெல்லா பார்வதி நெருக்கத்தை அதிகப்படுத்த டாக்டரின் வசனத்தை உள் அர்த்தத்தோடு ஆடியன்ஸ் ரசிக்கும்படியாக அமைக்கப்பட்டுள்ளது.

காட்சி சுறுசுறுப்பாக இருக்க டாக்டர் பாருவை ட்ரீட் செய்வதில் ஆரம்பித்து சங்கடத்தில் சிரிக்கும் ஸ்டெல்லா மீது முடிக்கிறோம்.

## SC. No. 48 மலைப்பிரதேச பாதை

அங்கு சென்னை ஹாஸ்பிடலில் ஸ்டெல்லாவுக்கு அப்படி யென்றால் இங்கு ரமேஷுக்கு எப்படி என்பதை காட்டவேண்டும். அங்கு இமோஷனல் & ஸெண்டிமெண்ட் என்றால் இங்கு ஒரு காமெடி, பாட்டு என்று தீர்மானிக்கப்பட்டது. பாட்டு வந்து வெகு நேரமாகி விட்டதே.

ஜீப்பின் ரேடியேடர் ஹீட் ஆகி தண்ணீருக்கு போகும் ரமேஷிடம் ஆரம்பித்து இனிமையான பாட்டை கேட்டதும் யார் அவள் என்று ஆடியன்சும் பார்க்க, அப்பக்கம் போகும் ரமேஷ் மீது முடிக்கிறோம்.

## SC. No. 48.A மலைப்பிரதேசம் (நீர்வீழ்ச்சி)

பாட்டை கேட்டுக்கொண்டே தண்ணீர் எடுக்க வந்தவன், குளிக்கும் பெண்ணை பார்த்து ரசித்தான் என்பதாக கருதி காட்டுவாசிகள் சூழ்ந்தவாறு தாக்க ட்ரைவரின் குறுக்கீட்டால் நிறுத்தப்படுகிறது. காட்டுவாசிகளிடம் இப்படிப்பட்ட விஷயங்களில், நம் விவேகத்தை காட்டுவதற்கு முன் அடி விழுந்துவிடும் என்பதை தெரியப்படுத்துகிறோம். (இப்படி தாக்குவதை தவிர்த்து வேறுமாதிரியும் காட்சியை அமைக்கலாம். நீங்களே எழுதி பொருத்திப் பாருங்கள்).

மேலும், இந்த காட்சியால் பின்வரும் காட்சியில் ரேகா, ரமேஷிடம் நெருங்கி பழகவும், ஸ்டெல்லா இவனை கிண்டல் செய்யவும் வழிவகுக்கப்படுகிறது.

சென்ற காட்சி முடிவின் எதிர்பார்ப்பின்படி ஆஹா எனும்படி நீர் வீழ்ச்சியில் குளிக்கும் பெண்ணிடம் ஆரம்பித்து, காட்டுவாசிகளைப் பற்றி சற்றே சிந்தித்து, புறப்படும் ஜீப் மீது முடிக்கிறோம்.

## SC. No. 49 கிராமத்து ஹாஸ்பிடல்

இங்கு ரமேஷிடம் ரேகா நெருங்கி பழகுவதை காட்டுகிறோம். ஆடியன்ஸ் மனதில் ரேகா ஒருவேளை ரமேஷை காதலிக்க ஆரம்பிப்பாளோ என்ற சந்தேகத்தை உருவாக்குகிறோம். ''சும்மா ஒரு கல்யாணம் பண்ணிக்கிறதுதானே'' என்று ரேகா எம்.பி.பி.எஸ். மாணவியாக இருந்து ரமேஷிடம் கேட்பது அந்த இடத்துக்கு பொருத்தமான வசனம்தான் என தெரிகிறது.

ரேகா சீண்டுவதற்காக, தன்பாட்டுக்கு வேலையில் இருக்கும் ரமேஷ் மீது ஆரம்பித்து ரேகாவுக்கு ரமேஷ் மீது காதல் வந்துவிடுமோ என்றவாறு ரமேஷ் கையை பிடித்து அழைப்பதில் முடிக்கிறேரம்.

SC. No. 50 **கவுண்டர் பங்களா**

இந்த காட்சியில் ஸ்டெல்லாவிடம் ஒரு அவசரத்தை காட்டுகிறோம். (அது சிக்கன் சாப்பிடும் அவசரம் என்பதை அடுத்த காட்சியில் தெரியபடுத்துகிறோம்)

ஊர் வந்து சேர்ந்ததாக கார் வந்து நிற்பதில் ஆரம்பித்து அவசரத்தில் இருக்கும் ஸ்டெல்லா மீது முடிக்கிறோம். ஸ்டெல்லாவின் அவசரத்தின் நடிப்புதான் நடத்துதல்.

SC. No. 51 **கெஸ்ட் ஹௌஸ்**

இங்கு ஸ்டெல்லாவுக்கு மாமிச உணவு மேல் இருக்கும் ஆசையை காட்டுகிறோம். இந்த ஊருக்கு வந்ததிலிருந்து மாமிசம் சாப்பிடாததால் நாக்கு செத்துவிட்டிருக்கிறது என்பதால் ல.நா.விடம் சிக்கன் வாங்கிவரச் சொல்கிறாள்.

இந்த காட்சிக்காகத்தான் இதற்கு முன்பே ஒரு காட்சியில் ஸ்டெல்லா, ரமேஷ் மோதலில் சிக்கன் என்ற வார்த்தையை கொண்டு வந்துள்ளோம். இதுவும் ஒரு 'ப்ரி எஸ்டே(அ)ப்ளிஷ்மென்ட்'.

சிக்கன் சாப்பிடும் அவசரத்தில் இருக்கும் ஸ்டெல்லாவிடம் ஆரம்பித்து அதை வாங்கிவரும் ல.நா. விடம் முடிக்கிறோம்.

ல.நா. போய் சிக்கன் வாங்கி வந்து சமையலுக்கு தயார் என்பது வரைக்கும் காலக்கழிவுக்கான 'டெக்னிக்'கை டைரக்டர் தீர்மானித்துக்கொள்வார்.

SC. No. 51. A **கெஸ்ட் ஹௌஸ் (கிச்சன்)**

இங்கு மாமிசத்தை மையமாக வைத்து ஸ்டெல்லா, ரமேஷ் மோதல். இக்காட்சி மூலம், சில பேர் மாமிசம் சாப்பிடுவதில்லை என்ற ஒரே காரணத்துக்காக தங்களை மிக உயர்ந்தவர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள். அவர்களுக்கு ஸ்டெல்லா மூலம் ஒரு 'இன்ஃபர்மேஷன்'.

மனிதன், அவன் அறிவு வளர்ச்சியை காட்ட மாமிசம் சாப்பிடக்கூடாது. அப்படியே பல காரணங்களுக்காக சாப்பிட்டாலும்

அதன் மீது அதிக ஆசை வைக்கக் கூடாது என்பதை ரமேஷ் மூலம் தெரியபடுத்துகிறோம்.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக தகராறுக்கு முக்கியமான கடாயின் மீது ஆரம்பித்து இவர்கள் மத்தியில் மாட்டிக்கொண்டு முழிக்கும் ல.நா மீது முடிக்கிறோம்.

## SC. No. 52 கெஸ்ட் ஹௌஸ்

இங்கு, ஸ்டெல்லாவுக்கு ரமேஷ் மீது நேற்றைய கோபம் இருக்கவேண்டியிருந்தாலும் அவன் மீது ஈர்ப்பு இருக்கிறது என்பதை காட்டுகிறோம்.

ரமேஷ் நினைவில் இருக்கும் ஸ்டெல்லா மீது ஆரம்பித்து, ஈர்ப்பை நடத்தி, ஸ்டெல்லா ரமேஷை ஹாஸ்பிடலில் எதிர்பார்த்து போவதாக ஜீப் போவதில் முடிக்கிறோம்.

## SC. No. 53 கிராமத்து ஹாஸ்பிடல் (H.W.O.)

இக்காட்சியின் முக்ய அம்சங்கள் :

ஸ்டெல்லாவுக்கு ரமேஷ் மீது உள்ளூர இருக்கும் காதல், இவர்களுக்குள் இருக்கும்' காதலை ரேகா புரிந்திருக்கிறாள் என்ற விதத்தில் ரேகா, ஸ்டெல்லாவை சீண்டுவதுபோல் பேசி ரமேஷை புகழ்வது (பொதுவாக ஒரு பெண்ணுக்கு, தனக்கு பிடித்தவனை இன்னொரு பெண் புகழ்ந்தால்தான் அன்பு அதிகமாகிறது). ரேகாவை வைத்து பணத்தின் அடிப்படையில் ஸ்டெல்லாவுக்கும் ரமேஷுக்கும் ஒரு மோதல், ''எல்லாத்துக்கும் ஒரு களை வேண்டும்'' என்று ஸ்டெல்லா முன்பு சொன்ன 'டயலாக்' ஐ இப்பொழுது ரமேஷ் திருப்பியடிப்பது என்பன.

ஸ்டெல்லாவுக்கு கோபம் வரவழைக்கும் காட்சி என்பதால் அதற்கான ரமேஷ் மற்றும் ரேகா வெகுநேரம் பேசியிருக்கிறார்கள் என்பதாக H.W.O. ல் ஆரம்பித்து இவர்கள் சண்டையை ரசித்து முடிவுக்கு கொண்டு வரும் டாக்டர் மீது முடிக்கிறோம்.

## SC. No. 54 கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சியில், கவுண்டர் தன் குடும்பத்தாருடன் கோயிலுக்கு போக ஸ்டெல்லா மற்றும் ரமேஷை அழைக்கவேண்டும், அதை பயன்படுத்தி, ரமேஷ் மனதில் ஸ்டெல்லாவைப்பற்றிய அபிப்ராயம்,

ஸ்டெல்லா அவ்வளவு சுலபமாக கவுண்டருக்கு மசியவில்லை என்பது, இந்து கோயில்களுக்கு போவது ஸ்டெல்லாவுக்கு பிடிக்கவில்லை என்பது (இது பின் வரும் காட்சியில் தெரியும்), கவுண்டர் மூலம் எந்த மதத்தையும் வெறுக்கக்கூடாது என்பதை தெரிவித்து அவரை உயர்த்துவது, என்பன காட்டப்பட்டுள்ளன.

இக்காட்சியிலிருந்து ரமேஷை, ஸ்டெல்லா விஷயத்தில் கொஞ்சம் உள்ளன்போடு பேசவிட்டிருக்கிறோம். கதையின் முடிவை நோக்கி போய்க்கொண்டிருக்கிறோம் அல்லவா...?

கவுண்டர், ஸ்டெல்லாவை கோயிலுக்கு அழைக்க வருவதால் அவர் மேல் ஆரம்பித்து, ஸ்டெல்லா கோயிலுக்குபோக ஒப்புக் கொண்டதால் ஒட்டு மொத்தமாக அவர்கள் மீதே நேரக்கழிவுக்காக 'ஃபேட் அவுட்'ல் முடிக்கிறோம்.

SC. No. 54.A **கெஸ்ட் ஹௌஸ்**

இங்கு சக்தியானவள், மஹேஸ்வரி என்ற பெண்மணி மூலம் பட்டுப்புடவையை மேரியிடம் கொடுக்க அந்த புடவையை மேரி ஸ்டெல்லாவுக்கு கொடுத்தனுப்ப, அதை ஸ்டெல்லா இங்கு கட்டிக்கொண்டிருக்கிறாள். (கதையில் நேரடியாக எந்த இடத்திலும் கடவுளின் செயல்களை காட்டுவதில்லை. ஆடியன்ஸ் அந்த அர்த்தத்தில் எடுத்துக் கொள்ளும்படியாகத்தான் படம் முழுதும் 'மெய்ன்டெய்ன்' செய்யவேண்டும் என்று திரைக்கதை எழுதும் முன்பே தீர்மானிக்கப்பட்டது).

புடவை இருந்ததால்தான் 'மேனர்ஸ்' என்ற அடிப்படையில் இதை கட்டியிருக்கிறாள் ஸ்டெல்லா...!

இந்த இடத்தில் குங்குமம் வைத்துக் கொள்வதைப்பற்றி வாதாடும்படியாக செய்துள்ளதன் காரணம் அடுத்துவரும் காட்சியில் தெரிவிக்கப்படுகிறது.

சென்ற காட்சி நேரக்கழிவில் முடிந்து ஸ்டெல்லா புடவை கட்டி தயாராகிவிட்டாள் என்று, மங்களகரமாக இருக்கும் ஸ்டெல்லா மீது ஆரம்பித்து அவள் அலங்காரத்தை கோயிலுக்கு கிளம்ப வெளியேறுவதில் காட்டி முடிக்கிறோம்.

## SC. No. 55 கிராமத்து கோயில்

இங்கு, ஸ்டெல்லா, ரமேஷ், கவுண்டர், பாரு, கௌரி மற்றும் ரேகா ஆகியவர்களை பூஜாரி மலர் தூவி வரவேற்கிறார். அப்பொழுது சாமந்திப்பூவின் ஒரு இதழ், ஸ்டெல்லா தலையிலிருந்து சரிந்துவந்து அவள் நெற்றியில் பொட்டுவைக்கும் இடத்தில் மிகச்சரியாக உட்கார்ந்து விடுகிறது! எதேச்சையாக இதை பார்த்த கவுண்டர் சக்தியின் செயல்தான் இது என்று பக்தியோடு 'தாயே எல்லாம் உன் மாயை' என்று மெய்சிலிர்த்து சொல்ல, க்ரிஸ்டியனாக இருக்கும் ஸ்டெல்லா அது புரியாமல் ஜோக் அடிக்கிறாள். நம்முடைய கணக்கும், இங்கு ஸ்டெல்லாவின் குலதெய்வம் அவளை பொட்டிட்டு வரவேற்கிறது என்பதுதான். இப்படி 'க்ரேஃபிக்' வேலைக்கு இன்னும் சுவாரஸ்யமான இடங்களை இன்றைய காலகட்டத்திற்கு தகுந்தவாறு ஏற்படுத்தி கொடுக்கவேண்டும் என்று டைரக்டர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

கோயில் விஷயம் என்பதால் சக்தியை ஈர்க்கும் கலசத்திலிருந்து ஆரம்பித்து உள்ளே நடக்கப்போவது என்ன என்ற எதிர்பார்ப்புடன் எல்லோரும் கோயில் உள் நுழைவதில் முடிக்கிறோம்.

## SC. No. 55.A கோயில் (உள்ளே)

இந்துக்கள் உக்கிரமான தெய்வங்களை வழிபடும் போது அநேகமாக சின்னதாகவே இருக்கும் கோயில்களில் உள்ளுணர்ச்சிகளை தூண்டும் வாத்தியங்களால் ஒலி எழுப்பி, வழிபடுகிறார்கள். சக்திகளாக மாறி மனத்தளவில் அந்த தெய்வ சக்தியுடன் சேர்ந்து தீயவைகளை அழிப்பதாக உணர்ச்சிபூர்வமாக வழிபடுகிறார்கள் என்பவர் பலர்.

க்ரிஸ்டியன்களுக்கு அநேகமாக மென்மையான வழிபாடுதான். தெய்வங்களின் தோற்றமும் மென்மைதான். அதன் காரணமாகத்தான் ஸ்டெல்லா காளி சிலையை கண்டதும் மயங்கிவிழுந்து விடுகிறாள். அவளை ரமேஷ்தான் வெளியில் கொண்டு வருகிறான். ஏனென்றால் முதற்காரணமாக அவன் தீவிர பக்தியில் இல்லை என்பது, இரண்டாவது தெய்வ சந்நிதியில் ரமேஷின் கை முதன்முதலாக ஸ்டெல்லாவின் மீது படவேண்டும் என்பது.

ஸ்டெல்லாவிற்கு அதிர்ச்சி, பயம் ஏற்படுத்தப்போகும் கடவுளை காட்ட மூடியிருக்கும் திரையில் ஆரம்பித்து பின் அந்த கடவுளை பார்த்து மயக்கமடைந்த ஸ்டெல்லாவை ரமேஷ் (நிச்சயம் செய்யப்பட்ட மாப்பிள்ளை) தூக்கிக்கொண்டு வெளியேறுவதில் முடிக்கிறோம்.

SC. No. 55.B

## கோயில் (வெளியே)

இங்கு, ரமேஷ்தான் ஸ்டெல்லாவை தொட்டு தூக்கிவந்தவன் என்பது ஸ்டெல்லாவுக்கு தெரியவேண்டும். இயற்கையின் ஈர்ப்பால் காதல் வசப்படவேண்டுமே!

கடவுளை இந்த மாதிரி பயங்கர ரூபத்தில் வணங்ககூடாது என்று ஸ்டெல்லா மூலமும், அப்படி வணங்குவதை நியாயப்படுத்த கவுண்டர் மூலம் ஒரு குட்டி கதையை சொல்லவும் வைத்து விட்டோம்.

இதை 'பேலன்ஸ்' செய்ய ஸ்டெல்லாவுக்கும் ரமேஷுக்கும் ஒரு மோதலை ஏற்படுத்தி தமாஷாக காட்சியை முடித்துவிடலாம் என்று, கவுண்டர் சொன்ன கதைக்கு ஸ்டெல்லாவை கிண்டலாக 'கமென்ட்' அடிக்க வைத்து அதற்கு பதிலடியாக ரமேஷ் மூலம் ஒரு கிண்டலான விளக்கம் கொடுக்கப்பட்டது. ('அப்ஜெக்ஷன்' என்றால் மாற்றி எழுதலாம்.)

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக ஸ்டெல்லாவுடன் வெளிவரும், ரமேஷ் - ஸ்டெல்லாவிடம் ஆரம்பித்து எல்லாம் ஒருவழியாக நல்லபடி முடிந்தது என்று அனைவரின் மீதும் முடிக்கிறோம்.

SC. No. 56

## மேரி வீடு

கதையில் எந்தெந்த இடத்தில் என்னென்ன நடக்கிறது என்பதை 'பேலன்ஸ்' செய்து காட்டவேண்டும் அல்லவா...? அதனால் இப்பொழுது மேரி வீட்டில் நடப்பதை பார்க்கிறோம்.

இங்கு ஜேம்ஸ், ஸ்டெல்லாவிடமிருந்து வந்த கடிதத்தின் 'ஃப்ரம் அட்ரஸ்' ஐ படித்து மேரியை மிரட்டும்போதுதான் ஸ்டெல்லா தன் பெற்றோர் வீடு போய் சேர்ந்திருக்கிறாள் என்பது மேரிக்கு தெரிய வருகிறது. உடனே அவள் நல்ல உள்ளம் அதை நினைத்து சந்தோஷப்படவேண்டும். அவள் அவர்களின் பெண்தான் என்பதை சொல்லாவிட்டால் கர்த்தர் தன்னை மன்னிக்கமாட்டார் என்று சொல்லவேண்டும். இவர்களிடம் இப்படிப்பட்ட உன்னதமான எண்ணங்கள் இல்லை என்று நினைப்பவர்களுக்கு இது ஒரு 'சேம்ப்ல்'.

கதை வளரவேண்டுமல்லவா...? அதனால் ஜேம்ஸ், மேரியிடம் இந்த விஷயம் யாருக்காவது தெரிந்தால் ஸ்டெல்லாவை கொன்றுவிடுவேன் என்று சொல்லும்படியாக அமைக்கப்பட்டது.

இங்கு மேரி ஜீஸஸ் ஐ பார்த்து ஒரு பாட்டு பாடுவதாக காட்டலாம் ஆனால் இந்த காலத்து ஆடியன்ஸ் 'பாட்டியம்மா பாட்டு' என்று பாடிக்கொண்டே வெளியே போய்விடுவார்கள்.

கதையின் ஆரம்பத்தில் வேதாந்தம் பேசிவிட்டு போய்விட்டார் என்றில்லாமல் மேரிக்கு கடிதம் கொண்டு வந்து கொடுக்கும் நரசிம்மன் மீது ஆரம்பித்து சோகத்தில் மேரி ஜீஸஸ் படத்தை பார்ப்பதில், நேரக்கழிவுக்கான 'ஃபேட் அவ்ட்'ல் முடிக்கிறோம்.

## SC. No. 57 காவல் நிலையம் (H.W.O.)

இங்கு ஜேம்சுக்கும் லட்சுமிக்கும் இன்னும் நெருக்கத்தை கொண்டுவரவேண்டும். அதற்கான ஒரு செட்அப் -

ஜேம்சுக்கு போலீஸ் சப்போர்ட் இருந்தாலும் வெளியே வரமுடியாத அளவுக்கு பஞ்சலோக சிலை கேஸில் உள்ளே தள்ளப்படுகிறான். ஜேம்ஸ் அந்த சிலையை எந்த திருட்டு கூட்டத்திற்கு விற்றானோ அவர்களிடமிருந்து மீட்டுவர லட்சுமி, வில்லியம்சுடன் போகிறாள்.

காட்சி சுறுசுறுப்பாக இருக்க, 'அரெஸ்ட்' செய்யப்பட்டு பலவிதமான கேள்விகள் கேட்கப்பட்டுள்ளது என்பதாக H.W.O. ல் ஒட்டு மொத்தமாக ஆரம்பித்து லட்சுமியை வழியனுப்பும் ஜேம்ஸ் மீது முடிக்கிறோம். முடிக்கும் போது ஜேம்ஸ் முகத்தில் ஒரு ஆபத்து நிழலாடுகிறது அதை அந்த நடிகர் நடிப்பில் காட்டவேண்டும் (அந்த ஆபத்து லட்சுமி கற்பழிக்கப்பட்டு திரும்புவது).

## SC. No. 58 குந்தாபுரம், மீனவன் வீடு

கதை 2 மாதத்துக்குள் முடிந்து விடுவதாக அமைக்கப்பட்டு இருப்பதால் இவ்வளவு நேரம் ஸ்டெல்லாவின் விஷயங்களை ரசித்துக் கொண்டிருந்த ஆடியன்சுக்கு இப்பொழுதுதான், இதுவரை அனாதை என்றே காண்பித்து வந்த ரமேஷ், யார் என்பதைப்பற்றிய விஷயத்தை ஆரம்பிக்கிறோம்.

இக்காட்சியிலேயே,

1. ரமேஷ் சிறுவயதில் யார்மூலமாக இவர்களிடம் வந்தான்,
2. அவனை இவர்கள் யாருக்கு கொடுத்தார்கள்,
3. அவன் வெள்ளி இ.கயிறை அடகுவைத்துதான் 17 வருடங்களுக்கு முன் சொற்ப பணத்தில் வியாபாரம் செய்து, முன்னுக்கு வந்து பின் அதை விடுவித்து வைத்திருக்கிறார்கள் இவர்கள்,

4. படிப்படியாக விசாரித்து எப்படியும் ரமேஷை கண்டுபிடித்து அவன் பெற்றோரிடம் ஒப்படைத்து விடவேண்டும் என்று கிளம்புகிறார்கள், என்பனவற்றை வசனத்தின் மூலமே தெரிய படுத்திவிடுகிறோம்.

அதிசயமும் ஆச்சர்யமுமான விஷயமாக அவர்களுக்கு இருப்பதால் அதை கொண்டுவரும் மாதேவா வருவதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்தி மாதேவாவுக்கு ஒத்துபோகும் மாதேவி மேல் முடிக்கிறோம்.

## SC. No. 59 கவுண்டர் பங்களா

**இக்காட்சி உருவாக்கப்பட்டதின் காரணம் -**

1. நாளைய தீபாவளி கொண்டாட்டத்திற்கு ஒரு பாட்டு தேவை
2. அதற்கு ஒரு பாடகியை இன்றே அறிமுகம் செய்ய
3. ஒரு 'மிடில் ஏஜ்' கிளுகிளுப்பை ஏற்படுத்த
4. ஜமீன்தார் வீட்டார்கள் பெரும்பாலும் இந்த பாடகிகள், நாட்டியக்காரிகள் தொடர்பு (கலைத் தொடர்பு) வைத்திருப்பார்கள் என்பதை 'லைட்' ஆக காட்டுவது என்பனவற்றுக்காக.

தீபாவளி களை கட்டியிருப்பதில் ஆரம்பித்து நாகவேணி, அடுத்து எப்படி வருவாள் என்ற எதிர்பார்ப்பில் அவள் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 60 கிராமத்து ஹாஸ்பிடல்

இக்காட்சியில் ரேகா நாளை தீபாவளியை கொண்டாட ரமேஷ் மற்றும் ஸ்டெல்லாவை அழைக்க வரவேண்டும். சும்மா அழைத்துவிட்டு போகும் காட்சியாக இருக்க கூடாதே அதனால் அவள் வருவதற்கு முன் ஸ்டெல்லா, ரமேஷுக்கும் இடையே அமெரிக்காவிலிருந்து 'ஃபண்ட்' வருவதை மையமாக வைத்து ஒரு மோதலை ஏற்படுத்தி அதை விஷயம் தெரிந்தவர்கள் ரசிக்கும்படியாக இருக்க, டாக்டர் ரசிப்பதாக, அமைக்கப்பட்டது.

(கதைமுடிவின் ஆரம்பம் துவங்கிவிட்டது என்பதால், ரமேஷ், ஸ்டெல்லா மற்றும் கவுண்டர் குடும்பத்துக்குள் அன்பு, பிணைப்பு வேகமாக வளரவேண்டும் அல்லவா....?).

இங்கு ரேகா, ஸ்டெல்லாவின் அழகை ரசித்து இன்னும் கொஞ்சம் நெருங்கி பழகி தன் உண்மையான அன்பை காட்டுகிறாள்.

இதன்மூலம் ரேகாவை சற்று உயர்த்துகிறோம். அதாவது ஆடியன்சுக்கு பிடித்தவளாக்குகிறோம்.

கதாபாத்திரங்கள் ஆடியன்சுக்கு பிடித்தவராகவோ அல்லது பிடிக்காதவராகவோ அல்லது மர்மானவராகவோ அதாவது புரிந்து கொள்ள முடியாதவராகவோ இருக்கவேண்டும். 'டம்மி' ஆக அதாவது ஜடமாகமட்டும் இருக்ககூடாது.

ரமேஷுக்கும் ஸ்டெல்லாவுக்கும் சற்று தீவிரமான 'பாய்ன்ட்'ல் மோதல் ஆரம்பமாக இருப்பதால், டாக்டருடன் தன்பாட்டுக்கு தன்வேலையில் இருக்கும் ரமேஷ் மீது ஆரம்பித்து ரேகாவின் அன்பில் இளகிய ஸ்டெல்லா மீது முடிக்கிறோம்.

SC. No. 61 **கவுண்டர் பங்களா**

பொதுவாக பலருக்கு தங்கள் வீட்டிலேயே ஒரு இசை நிகழ்ச்சி நடத்தி அதை ஜாலியாக உட்கார்ந்து பார்க்க ஆசை. மேலும் பழைய 'ட்யூன்'ல் ஒரு 'மெலடி'யை கேட்க ஆசை. அவர்களுக்காக இந்த காட்சி.

இக்காட்சிக்கு முக்கியமான, வாத்திய கோஷ்டி மேல் ஆரம்பித்து ஆபத்தை எதிர்நோக்கவிருக்கும் ஸ்டெல்லா, எல்லோருடன் பட்டாசு கொளுத்த செல்வதில் முடிக்கிறோம்.

SC. No. 61. A **கவுண்டர் பங்களா (வெராண்டா)**

இந்த காட்சியின் முக்ய அம்சம் - ஸ்டெல்லாவின் தொடையில் உள்ள தழும்பு, இதுபோன்ற தீபாவளிதினத்தன்று இதே இடத்தில் நடந்ததாக ஆடியன்ஸ் நினைத்துபார்ப்பது.

இங்கு ஸ்டெல்லா உடையில் தீப்பிடித்துக் கொள்ள அதை ரமேஷ் தண்ணீர் ஊற்றி அணைப்பது மற்றும் ''உனக்கு தண்ணி அடிப்பதே என் வேலையாயிடுச்சி'' என்று கிண்டலாக சொல்லி அவளை அன்பால் அழ வைப்பது சோகத்தில் நெருக்கத்தை பலப்படுத்த. முன்பு கோயிலிலும் ரமேஷைத்தான் அவள் முகத்திற்கு தண்ணீர் தெளிக்கவைத்தோம். இங்கு ஸ்டெல்லாவை எதுவும் பேசவிடாமல் அழவைத்து, கவுண்டரும் ரேகாவும் அவளை அன்போடு, பாசத்தோடு சமாதானப்படுத்துவதாக, ஒரு உருக்கமான காட்சியாக அமைக்கப்பட்டது.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக எல்லோரும் பட்டாசு கொளுத்துவதில் ஒட்டுமொத்தமாக ஆரம்பித்து, தந்தையின்றி

வளர்ந்த ஸ்டெல்லா தந்தை பாசத்தை உணர்ந்தனுபவித்து கவுண்டரை (தொடாமல்) பார்ப்பதில் முடிக்க, 'ஸெண்டிமெண்ட்'ஐ வெகுவாக ரசித்துக்கொண்டிருக்கும் ஆடியன்ஸ் மனதில், கொஞ்சம் அப்படியே இருக்க வைக்க அதை 'டிஸ்டர்ப்' செய்யாமல் மெதுவாக காட்சியை கரைக்கிறோம்.

(ஃபேட் அவ்ட், டிஸால்வ், கட் என்று இன்னும் பல டெக்னிக்குகளை காட்சியின் முடிவில் பயன்படுத்துவது, இப்படி காட்சியின் தன்மையை பொருத்துத்தான்).

## SC. No. 62 நரசிம்மன் வீட்டு வட்டாரம் (வெளியே)

இக்காட்சியில் ரமேஷ் கவுண்டர் வீட்டு பிள்ளைதான் என்பது முழுமையாக ஆடியன்சுக்கு தெரிவிக்கப்படுகிறது.

ரமேஷ் தங்கள் வீட்டில் வளர்ந்தவன் என்று மீன்காரன் சொன்ன பின்புதான் நரசிம்மன், ரமேஷ் போயிருக்கும் அட்ரஸை கொடுக்கிறான். விளம்பர அட்ரஸ்சும் ரமேஷ் போயிருக்கும் அட்ரஸ்சும் ஒன்றாக இருப்பதில் இவர்களுக்குள் ஒரு குழப்பத்தை உண்டாக்கி, ரமேஷை போய் பார்த்து, இ.கயிறை கொடுத்து விட நினைக்கும்படி அமைக்கப்பட்டது. மொத்தத்தில் மீனவ தம்பதியரை அந்த ஊருக்கு அனுப்பவேண்டும் என்பதுதான் முக்கிய விஷயம்.

விலாசத்தை தேடிவரும் அவர்கள் மீது ஆரம்பித்து, இவர்கள் அடுத்த நடவடிக்கைக்கு தயாராகிவிட்டார்கள் என்பதாக அவர்களை முக்கியப்படுத்தி முடிக்கிறோம். அதாவது நரசிம்மன் அங்கு இருந்தாலும் கேமரா இவர்களை மையப்படுத்தியபின் முடிக்கிறோம்.

## SC. No. 63 கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சி ஸ்டெல்லா சென்னை போகும் அவசரத்தில் அறையின் ஜன்னல் கதவை மூடாமல் போவதற்காக அமைக்கப்பட்டது.

காட்சியை குறைந்தது 2 நிமிஷத்திற்கு வளர்க்கவும் அப்படியே சுவாரஸ்யமாக இருக்கச் செய்யவும் ஸ்டெல்லாவை ரமேஷிடம் 'பாய்ன்ட்' டோடு சீண்ட விடுகிறோம்.

ஸ்டெல்லாவை அவசரத்தில் ஆழ்த்தும்படியாக, கார் வந்து, ட்ரைவர் அறை கதவை தட்டும்படியாக ஆரம்பித்து, ரமேஷ், ''ரொம்ப கொழுப்புதான்...... இரு உனக்கு'' என்று மனத்துள் நினைத்தான் என்பதாக அவன் இடுப்பில் கைவைக்க முடிக்கிறோம்.

இப்படி அவன் நினைக்குமாறு இடுப்பில் கைவைத்து நிற்கவைத்ததின் காரணம், பின் வரும் காட்சியில் இவன் மனம் அப்படி நினைத்ததால் ஸ்டெல்லா அறையில் பாம்பு நுழைகிறது என்பதாக இருக்கட்டும் என்று.

## SC. No. 64 நகர ஹாஸ்பிடல் (H.W.O.)

இக்காட்சியில் – பார்வதி தேரிவருகிறாள், அவளுக்கு ஒரு சின்ன 'ஷாக் ட்ரீட்மென்ட்' கொடுக்க வேண்டும் என்று டாக்டர் சொல்வது, (அப்படியென்றால் இன்னொரு 'ஷாக்'ல் பார்வதி சுய அறிவு பெற்று விடுவாள் என்பது. புரிந்து கொள்ளுங்கள், பின்னால் ஒரு ஷாக் வரும் என்று),

டாக்டர், கிராமத்து ஹாஸ்பிடலில் வேலை செய்யவும் பார்வதியை பார்த்துக்கொள்ளவும் என்று ஒரு நர்ஸை கவுண்டர் வீட்டிற்கு அனுப்பிவைப்பது இந்த நர்சும் பின்னால் ஒரு முக்கிய வேலைக்கு தேவை என்பதற்காகத்தான்.

ஸ்டெல்லாவிடம் கவுண்டரின் பாசம் அதிகரித்திருப்பது முடிவு நெருங்க, உறவுகளும் வேகமாக வளரவேண்டுமல்லவா...?,

எதேச்சையாக டாக்டர் 'எல்லாம் மேலிருப்பவன் செயல்' என்பதில் பந்தம் அறியாத, பாருவுக்கு மகள் ஸ்டெல்லாவின் சேவை உள்ளது என்பன தெரிவிக்கப்பட்டுள்ளன.

H.W.O. ல் பரிசோதனை முடிந்துவிட்டதாக வெளியே வரும் டாக்டரில் ஆரம்பித்து கடவுளிடம் முடிக்கும் டாக்டரிடமே ஆடியன்சும் அதை ஏற்றுக்கொண்டதாக முடிக்கிறோம்.

## SC. No. 65 கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சியில், கெஸ்ட் ஹௌஸிடம் பாம்பு வந்து அது ஸ்டெல்லா அறை ஜன்னல் வழியாக உள்ளே போகவேண்டும். காட்சியை எப்படி ஆரம்பிப்பது என்று யோசிக்க, பின்னால் ஒரு காட்சிக்காக ரமேஷுக்கு சாவி கொத்து தேவைப்படுகிறது. அந்த விஷயத்தை இங்கு ஆரம்பத்துக்கு வைத்துக் கொள்ளலாம் என்று எழுதப்போய் அது இரட்டை அர்த்தத்தில் முடிந்து விட்டது. பலருக்கு இப்படி நடக்கிறது. ஜனங்கள் இதை ரசிக்கும்படியாகவும் இருந்துவிடுவதால் கொஞ்சம் வியாபார நோக்கில் அப்படியே விட்டுவிடுகிறோம்.

ல.நா வை அதிக நேரம் காட்டவும், இங்கு அவன் பங்கு அதிகம் என்பதாலும் அவன் மீதே ஆரம்பித்து பின்னால் வரும் காட்சிக்கு முக்கியமான இடமான ஜன்னலிடம் அவன் கல் வைத்து பந்தோபஸ்த் செய்வதில் முடிக்கிறோம்.

நேரம் கழிந்ததாக 'ஃபேட் அவ்ட்' செய்கிறோம்.

## SC. No. 66 கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சியில் ஸ்டெல்லா பிரியாணி பொட்டலத்துடன் பேசிக் கொண்டிருக்கும் போதே ஆடியன்ஸ் சிரிக்கத்துவங்கிவிடுவார்கள். அவர்களுக்குத் தெரியும் அறையில் பாம்பு இருக்கிறது என்று.

இம்முறை ஸ்டெல்லா கவுண்டர் வீட்டிடம் இறங்குவதை காட்டாமல் (பிரியாணி இருப்பதால்), நேரம் கழிந்ததாக, 'ஃபேட்இன்'ல் கெஸ்ட் ஹௌஸிடமே ல.நா வரவேற்பதில் ஆரம்பித்து, 'விட்டால் போதும்' என்று ஜம்பமாக உள்ளே போகும் ஸ்டெல்லா மீதே முடிக்கிறோம்.

## SC. No. 66. A கெஸ்ட் ஹௌஸ் (ஸ்டெல்லா அறை)

இக்காட்சியில் ஸ்டெல்லா பாம்பை கண்டு கத்த, ரமேஷ் மற்றும் ல. நா வந்து பாம்பை வெளியேற்ற வேண்டும்.

காட்சியை சுவாரஸ்யப்படுத்த, ல.நா சும்மா இருக்காமல் 'காலைல பார்த்த அதே பாம்புதான் இது' என்று ரமேஷிடம் சொல்ல ஸ்டெல்லா பழையனவற்றையெல்லாம் பிடித்துக்கொள்ளுமாறு எழுதப்பட்டது.

இரவாகிவிட்ட காரணத்தாலும், அவள் அறையில் இருக்க பயமாக இருக்கிறது என்ற காரணத்தாலும், ரமேஷ் 'அட்வைஸ்' செய்ததாலும் ரமேஷ் அறையில் தங்குகிறாள் ஸ்டெல்லா. ஒப்புக்கொள்ளும்படி இருக்கிறதல்லவா.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக ஸ்டெல்லா உள்ளே வருவதில் ஆரம்பித்து அவஸ்தையில் உள்ள அவள் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 67 கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சியில் ரமேஷின் வசனங்கள் ஸ்டெல்லாவை சிந்திக்க வைக்கிறது.

இரவெல்லாம் அவர்கள் மனம் எப்படி வேலை செய்திருக்கும் என்பதாக காலை விடியலோடு ரமேஷிடம் ஆரம்பித்து, உறவை வலுப்படுத்த, சற்றே மனம் அமைதியடைந்திருக்கும் ஸ்டெல்லா விடம் நியாயம் கேட்கும் பாவனையில் பேசிவிட்டு வெளியேறும் ரமேஷ் மீதே முடிக்கிறோம்.

அடுத்த காட்சி இங்கேயே ஸ்டெல்லா மீது ஆரம்பிப்பதால் சிறிய காலக்கழிவுக்காக 'ஃபாஸ்ட் ஃபேட்அவ்ட்' ல் முடிக்கிறோம்.

SC. No. 67. A

## கெஸ்ட் ஹௌஸ்

இக்காட்சியில் ஸ்டெல்லா அறை மாறிக்கொள்வதால் அறை மேல் எழுதியிருக்கும் பெயர்களையும் மாற்றவேண்டும். இங்கு நீங்கள் நினைக்கலாம் இந்த காட்சிக்காகத்தான் முன்பு ல.நா மூலம் பெயர்கள் எழுதவைக்கப்பட்டது என்று. உண்மையில் (தமிழ்/ஆங்கிலம்) என்ற அடிப்படையில் எந்த மொழியில் எழுதுவது என்ற மோதலை உண்டுபண்ணத்தான் அப்படி செய்யப்பட்டது. இதில் வேறொன்று முளைத்தது.

பெயரை மாற்றாமல்விட்டு யாராவது பார்க்கவந்தால் குழப்பம் ஆகுமே என்பதை நினைத்ததும் இந்த குழப்பத்தை பயன்படுத்த ஒரு ஐடியா வர பெயர்களை மாற்றாமலே விடப்பட்டது.

இங்கு பெயர் மாற்றாமல் விடுவது நம்பும்படியாக இருக்கவேண்டுமே என்றால், பெயர்கள் கண்ணுக்கு நேராக இல்லாமல் வாசற்காலின் மேல் இருப்பதாலும், பாம்பு கலாட்டாவாலும், ஸ்டெல்லா அறையில் பொருட்களை மாற்றும் வேலையில் இருப்பதாலும் மறக்கப்பட்டது என்பது ஒப்புக்கொள்ளக்கூடியதுதான்.

ஸ்டெல்லா, பொருட்களை மாற்றும் வேலையில் ஏற்பட்ட எரிச்சலில் இருக்க, ல.நா கூப்பிட, பாருவை பைத்தியம் என்று சொல்லிவிடுகிறாள். இதுவும் நம்பும்படியாகத்தான் இருக்கிறதல்லவா.

ஸ்டெல்லாவின் இந்த கோபத்தின் பேச்சால் ஏற்பட்ட விளைவை அடுத்த காட்சியில் காட்டுகிறோம்.

கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஸ்டெல்லாவிடமிருந்து ஆரம்பித்து பெயர்கள் இன்னும் மாற்றப்படவில்லை என்பதாக அதன் மீதே முடிக்கிறோம்.

SC. No. 68 **கவுண்டர் பங்களா**

முன்பு சென்னையில் டாக்டர் சொன்னார் அல்லவா, ஒரு சின்ன 'ஷாக் ட்ரீட்மெண்ட்' கொடுத்து பார்க்கலாம் என்று, அதை நாமே ஸ்டெல்லாவின் பேச்சு மூலம் இங்கு கொடுத்துவிட்டோம். அப்பொழுதுதானே கதையில் திருப்பம் வரும். அதுவுமல்லாமல் ஸ்டெல்லாவினால் நடந்த இது, அவள் மனத்துள் ஏதுமின்றி கெட்டதாக சொன்னாலும் விதியின் விளையாட்டால் நல்லதில் முடிந்தது என்ற ஒரு சென்டிமென்டும் கிடைக்கிறது.

விஷயத்தை சொல்ல வந்தவன் ல.நா என்பதால் அவனிடம் ஆரம்பித்து இங்கு டாக்டருக்கு கவுண்டர்தான் ஃபோன் செய்ய வேண்டும் என்பதால் அவரிடமே முடித்தோம்.

காலம் கழிந்தது என்பதாக 'ஃபேட்அவுட்' செய்கிறோம்.

SC. No. 68. A to G **கவுண்டர் பங்களா**

தொடரும் இந்த ஸீக்வென்ஸின் மொத்த விஷயம் - தலையில் அடிபட்டிருக்கும் பாரு புத்திசுவாதீனம் அடைந்து எல்லோரும் சந்தோஷத்தில் ஆழ்தல்.

எந்த விஷயங்களை வைத்து எப்படி நடத்திபோகிறோம் என்பதை பார்க்க -

A. கிராமத்து டாக்டர் வந்து சிகிச்சை செய்தல், பாரு சித்த சுவாதீனம் அடைந்து பேசுதல், பாரு, கௌரியின் பழைய 'ஃப்ரெண்ட்லி' உறவு 'ரென்யூவல்' ஆவது, பாருவின் மனம் நிலைகெடாமல் இருக்க டாக்டர் பேசுவது.

B. சென்னை டாக்டரை வரவழைக்க பேசுதல்.

C. சென்னை டாக்டர் வர, அவரிடம் ஸ்டெல்லாவால்தான் இது நடந்தது என்று கௌரி சொல்ல கவுண்டர் அன்போடு ஸ்டெல்லா தலையை தடவுதல்.

D. டாக்டர் பாருவை பரிசோதிக்கிறார் என்று ஆரம்பித்து, (பரிசோதனை முறையை அதற்கான டாக்டரிடம் விசாரித்து பின் எழுதலாம் என்று) பரிசோதித்துவிட்டார் என்பதை காலக்கழிவில் 'ஃபேட் அவுட்' செய்வது

E. சிகிச்சை முடிந்ததாக பாரு அறைக்கு அனைவரையும் அழைத்தல்.

F. பாருவின் நினைவிருத்தவை சோதித்தல் மற்றும் அறிமுகத்தை விதியின் விளையாட்டாக ஆடியன்ஸ் ரசித்தல்.

G. நாளை (பார்ட்டி என்று சொல்லாமல்) கோயில்களுக்கு போக தீர்மானித்தல்.

அடிபட்டு படுத்திருக்கும் பாருவை சோகமாக நிற்கும் குடும்பத்தாருடன் காட்டி ஆரம்பித்து புத்தி சுவாதீனம் அடைந்த பாருவை சுற்றி சந்தோஷத்தில் நிற்கும் குடும்பத்தாரோடு ஒட்டுமொத்தமாக முடிக்கிறோம்.

SC. No. 69 **மலைக்கோயில்**

எல்லோரும், அதாவது ஆடியன்சும் சேர்ந்து கோயில் முன் நடனத்தையும் பாட்டையும் பார்த்து கேட்டு ரசிக்கிறார்கள்.

SC. No. 70 **பாடல் : 5**

**காவல் நிலையம்**

இக்காட்சியில், லட்சுமி, ஜேம்ஸ் உறவை கல்யாணத்திற்காக வலுப்படுத்த ஆரம்பித்திருக்கிறோம்.

லட்சுமி, சிலையை எஸ்.ஐ. டேபிள் மேல் வைத்துவிட்டு வெளியேறுவதற்கு முன் பேசிய வசனங்கள், அவள் போன இடத்தில் ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது என்றும், தான் திருடனாக இருப்பதை லட்சுமி வெறுக்கிறாள் என்றும், இவ்வளவு நாள் இல்லாமல் இப்பொழுது ஏன் இப்படி பேசினாள் என்றும் பலவிதமான எண்ணங்களை ஜேம்ஸ் மனதில் எழுப்புவதாக அமைக்கப்பட்டது.

வில்யம்ஸிடம் பேசுவதிலிருந்தும் ஏதோ அசம்பாவிதம் நடந்திருக்கிறது என்பதை ஜேம்ஸால் யூகிக்கமுடிகிறது.

வெறியோடும், ஏதோ ஒரு முடிவோடும் சோகமான முகத்துடன் வரும் லட்சுமி மேல் ஆரம்பித்து ஜேம்ஸ் மனம் குழம்பியிருக்கிறான் என்பதால் அவனிடம் முடிக்கிறோம்.

SC. No. 71 & 71.A **லட்சுமி வீடு**

இக்காட்சி மிகவும் உருக்கமானதாக இருக்கவேண்டும்.

ஜேம்ஸ் கதவை தட்ட திறக்காததால் அவன் சந்தேகத்தை அதிகப்படுத்தி கதவை உடைத்துக் கொண்டு உள்ளே போக வைக்கிறோம். எல்லாம் ஒரு 'அேக்ஷன்'க்காகத்தான்.

லட்சுமி வாயில் நுரையை கண்டதும் அவள் விஷம் குடித்திருக்கிறாள் என்பதையும் அவள் போன இடத்தில் கற்பழிக்கப்பட்டிருக்கிறாள் என்பதையும் நிச்சயித்து விடுகிறான் ஜேம்ஸ். தனக்காக இப்படி ஒரு தியாகம் செய்து உயிரையே மாய்த்துக்கொள்ள துணிந்துவிட்ட லட்சுமிமேல் பெரும் மதிப்பும் அன்பும் ஏற்பட்டு மனம் மாறி அவளுக்கே தாலிகட்டுவதாக வாக்களித்து, அவளை கொடுமைப்படுத்தியவர்களை அழிப்பதாகவும் சபதம் ஏற்கிறான்.

முரட்டுத்தனம் உள்ளவர்களுக்கு இப்படி ஏதாவது ஸீரியஸ்ஸாக செய்தால்தான் காதலை கல்யாணத்தில் முடிப்பார்கள் என்பது இவர்களுக்காக நாம் போட்ட கணக்கு.

லட்சுமிக்கு ஏதோ ஆகிவிட்டது என்ற வேதனையிலும் பதற்றத்திலும் உள்ள ஜேம்ஸ் ஐ அவன் சிஷ்யனுடன் காட்டி லட்சுமி பிழைத்துக் கொள்ளவேண்டும் என்ற எதிர்பார்ப்பில் அவளை ஹாஸ்பிடலுக்கு கொண்டுபோக தூக்குவதில், அவர்கள் மீதே முடிக்கிறோம்.

## SC. No. 72 கவுண்டர்பங்களா போகும் பாதை

இங்கிருந்து ரமேஷ் இ.கயிறு விஷயத்தை எதிர்பார்ப்போடு ஆரம்பிக்கிறோம். இது ஒரு பெரிய ஸீக்வென்ஸ்.

ரமேஷ் அவன் குடும்பத்து ஹாஸ்பிடலிலேயே வேலை செய்வதை விதியின் விளையாட்டு என்று சொல்லவைத்து அது தெரிந்திருக்கும் ஆடியன்சுக்கு இந்த மீனவ தம்பதியால் ரமேஷின் இ.கயிறு விஷயம் எப்படி வெளிவருகிறது, என்னென்ன ஆக இருக்கிறது என்ற எதிர்பார்ப்பை ஏற்படுத்துகிறோம்.

ஸ்டெல்லாவின் இ.கயிறு விஷயம் கடவுள்சக்தியால் அல்லது விதியின் விளையாட்டால் தடுக்கப்பட்டது என்பதை காட்டி ஒரு இடத்தில் நிறுத்திவைத்தோம். ரமேஷ் விஷயத்தில் வித்யாசமாக இருக்கவேண்டுமல்லவா. இதை மனிதனின் விளையாட்டோடு காட்டலாம் என்றும் அதை காமெடியுடன் கலந்து காட்டினால் ஆடியன்ஸ் ரொம்பவும் ரசிப்பார்கள் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

மாதேவா, மாதேவி தேவபுரம் வந்து விட்டார்கள் என்பதாக அவர்களிடம் ஆரம்பித்து பண விஷயத்தில் கணவனுக்கு அறிவுரை கூறும் மாதேவியோடு மாதேவாவை சேர்த்து முடிக்கிறோம்.

SC. No. 73 **கெஸ்ட் ஹௌஸ்**

மீனவ தம்பதிகளை (மா - மா) இங்கு 'கெஸ்ட்ஹௌஸ்"ஸிடம் வரும்படி செய்தது, பின்னால் இங்கு வர அவர்களுக்கு தெரியும் என்பதை காட்டுவதற்கும் ஆகும். அவர்களுக்கு ரமேஷ் எப்படி இருப்பான் என்ற அவன் உருவத்தின் மீது கவனம் இருப்பதால் கதவுக்கு மேல் இருக்கும் பெயர்களை படிப்பதில்லை. வெறும் பூட்டைமட்டும் பார்த்துவிட்டு யாரும் இல்லையே என்று விழித்து நிற்க கிரண் வருகிறான். விஷயத்தை கேட்டதும் உஷார் ஆகிறான் கிரண்.

சென்ற காட்சியின் தொடர்ச்சியாக ஐயோ பாவம் என்று வரும் மா-மா கெஸ்ட் ஹௌஸ் வருவதில் ஆரம்பித்து, மாட்டினார்கள் எனும்படியாக, யாரும் இவர்களை பார்த்து விடக்கூடாது என்ற அவசரத்தில் மா - மா வை கிரண் அழைத்துக் கொண்டு, உடனே, காரில் போவதில் முடிக்கிறோம்.

SC. No. 74 to 74.K **கிரண் மலைபங்களா**

இக்காட்சியில், கிரண் மற்றும் அவன் தந்தையிடம் மா - மா சிக்கிக் கொண்டு, உஷாராக தமாஷ் செய்தும் ரமேஷ் இ.கயிறை அவர்களிடம் கோட்டைவிட்டு, பைத்தியங்களாக்கப்படும் முயற்சியிலிருந்து எப்படி தப்பினார்கள் என்பதுதான் முக்ய அம்சம்.

இதை சற்று நீளமான காமெடியாக எடுத்து செல்ல கன்னடத்தில் சில விஷயங்களில் சற்று ஓவராக நடிக்கவும் (காமெடி நன்றாக இருந்தால்) ஒப்புக் கொள்ளும் நடிப்பில் புலிகளான இருவரை, பார்ட்னர்கள் இஷ்டப்படி, மனதில் வைத்து எழுதியதால் சில இடங்களில் சில விஷயங்கள் சற்று ஓவராகவும் இருக்கலாம். என்ன செய்வது ரசிகர்களுக்கும் இது தேவை, தயாரிப்பாளர்களும் இது தேவை என்கிறார்கள். முடிந்தவரை ரொம்ப ஓவராக போகாமல் எழுதப்பட்டுள்ளது.

SC. No. 75 **நெடுஞ்சாலை**

கிரண் - நாகேந்திரனால் எங்கோ தூரத்தில் நெடுஞ்சாலையில் விடப்பட்ட மா - மா, இதற்கெல்லாம் நாங்கள் பயப்படமாட்டோம். கண்டிப்பாக ரமேஷை சந்தித்து உண்மையை தெரிந்து கொள்ளும் வரை விடமாட்டோம் என்று சொல்ல வேண்டும். சொல்லிவிட்டார்கள்.

இவர்களை இங்கு விட்டு சென்று விட்டதாக, டுவர்ட்ஸ் அன்ட் அவே ஃப்ரம் தி கேமரா (Towards & away from the camera) என்ற விஷுஅல் கேமரா (Visual camera) டெக்னிக் கோடு மா - மா முன் செல்வதில் முடிக்கிறோம்.

SC. No. 76 **கவுண்டர் பங்களா**

இங்கிருந்து கதை க்லைமே(அ)க்ஸ் (Climax) -ஐ நோக்கி நகர்கிறது.

பாருவுக்கு ஸ்டெல்லா தன் சொந்த மகளாகத்தான் இருக்க வேண்டும் என்ற எண்ணம் வருகிறது. இவ்வளவு நாள் பழகியதில் ஏற்பட்ட தாய் - மகள் 'வைப்ரேஷன்' வேலை செய்திருக்கலாம், விதியின் விளையாட்டாகவும் இருக்கலாம்.

ஸ்டெல்லாவை பற்றி அறிந்து கொள்ள மேரியை அழைத்து விசாரித்துவிடலாமே என்றால், பணத்திற்காக ஜனங்கள் என்னவேண்டுமானாலும் செய்வார்கள். அதனால் அவர்களைப்பற்றி நன்றாக தெரிந்து கொண்டு பிறகு பேசவேண்டும். அதற்கு முன் பக்கத்திலேயே இருப்பதால் ஸ்டெல்லா தொடைத் தழும்பையும் தாய் வெளியிடாத மார்பில் உள்ள மச்சத்தையும் பார்த்துவிட வேண்டும் என்ற ஞாயமான சங்கதியை போட்டு இவர்கள் தழும்பையும் மச்சத்தையும் பார்த்துவிட ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கு ல.நா உதவியாக இருப்பதுதான் பொருத்தமானது.

திட்டத்தை வகுக்கும் பார்வதியிடமே ஆரம்பித்து அந்த திட்டத்திற்கு உதவியாக இருக்கும் ல.நா மீது முடிக்கிறோம்.

SC. No. 77 **கெஸ்ட் ஹௌஸ்**

ல.நா மூலம் தண்ணீர் மோடாரை ரிபேர் ஆகிவிடும்படியாக செய்து, அவனுக்கு கை சுளுக்கு என்று சொல்லவைத்து, ரமேஷை பேசவைத்து ஒருவழியாக ஸ்டெல்லாவை கவுண்டர் வீட்டுக்கு, குளிக்க அனுப்பி வைக்கிறோம்.

இதற்கு மூலகர்த்தாவான ல.நா விடம் ஆரம்பித்து ஸ்டெல்லா குளிக்கப்போகிறாள் என்பதாக ஆடியன்ஸ் மனதில் ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தி அவள் மீதே முடிக்கிறோம். ஈர்ப்பில்தான் உலகம் உள்ளது.

SC. No. 78 to 78 G **கவுண்டர் பங்களா**

இந்த ஸீக்வென்சும் காமெடியாக இருக்கத்தான் யோசித்து எழுதப்பட்டது.

ஸ்டொல்லாவின் தழும்பையும் மச்சத்தையும் பார்க்க பாரு மற்றும் கௌரி நடத்திய நாடகத்தின் கடைசியில் அவர்களால் தழும்பை மட்டும்தான் பார்க்க முடிந்தது.

ஒரே நேரத்தில் இரண்டையும் பார்த்துவிட்டால் 'ஸஸ்பென்ஸ்' இருக்காது. மேலும் மச்சத்தை பார்க்க இதைவிட இன்னும் சற்று நல்ல காமெடியை யோசித்து வைத்திருக்கிறோம் அல்லவா...?

## SC. No. 79 கெஸ்ட் ஹௌஸ்

கிரண் மற்றும் நாகேந்திரனின் பயத்தால் யார் கண்ணுக்கும் படாமல் மா - மா, ரமேஷை சந்தித்து கிரண் பங்களாவில் நடந்ததை சொல்ல வேண்டும்.

முன்பொரு காட்சியில், ''கதவின் மேல் இவர்கள் பெயர்களை மாற்றி எழுதாமல், அந்த விஷயத்தை ''பின்வரும் காட்சியில் குழப்பத்திற்காக பயன்படுத்தலாமென்று விடப்பட்டது'', என்று சொன்னோம் அல்லவா. அக்காட்சிதான் இது. இங்கு குழப்பத்தை காட்டிவிட்டோம். ஸ்டெல்லாவுக்கு சந்தேகம் கலந்த பயத்தையும் ஏற்படுத்திவிட்டோம். இதை வைத்து அடுத்து வரும் 79.B காட்சியில் ஸ்டெல்லாவுக்கும் ரமேஷுக்கும் ஒரு கடைசிமோதலை வைத்துள்ளோம்.

ரமேஷின் உண்மையை வெளிப்படுத்தப்போகிறார்கள் என்பதாக இரவில் பயந்து ஒளிந்து வரும் மா - மா வருவதில் ஆரம்பித்து ரமேஷ் அவர்களை உள்ளே அழைப்பதில் முடிக்கிறோம்.

## SC. No. 79.A கெஸ்ட் ஹௌஸ் (ரமேஷ் 'இருக்கும்' அறை)

இக்காட்சியின் முக்ய அம்சங்கள் :

ரமேஷ், மா - மா விற்கு விற்கப்பட்ட பொழுது அவனுக்கிருந்த மன நிலை (அதாவது பழையனவற்றை அவன் மறக்கும்படியாக நடந்தவை), பிள்ளைகளை கடத்தி பிச்சையெடுக்க வைப்பவர்களைப் பற்றி, ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என்ற கருத்தில் பெற்றோரிடமே அவன் வந்து சேர்ந்திருக்கிறான் என்பது, அவன் கவுண்டர் குடும்பத்து பிள்ளை என்பதற்கு ஆதாரமான இ. கயிற்றை கிரண் வாங்கி வைத்துக் கொண்டதை தெரிவித்து அவர்கள் மிகவும் பயங்கரமானவர்கள் என்பதை மா - மா சொல்வது, என்பன.

சென்ற காட்சியின் தொடர்ச்சி என்பதால் உள்ளே அழைத்து கேள்வி கேட்பவன் ரமேஷாகத்தான் இருக்கவேண்டும் என்று ரமேஷிடம் ஆரம்பித்து அனைவரும் வெளியேறுவதில் அங்கு ஒரு மோதல் காத்திருக்கிறது என்பதாக முடிக்கிறோம்.

## SC. No. 79. B கெஸ்ட் ஹௌஸ்

இங்கு ஸ்டெல்லாவுக்கும் ரமேஷுக்கும் கடைசியாக 'ஸீரியஸ்' மற்றும் 'இமோஷனல்' கலந்த மோதல்.

இவ்வளவு காலமாக ஒரு பந்தம் இல்லாமல் இருந்த ரமேஷுக்கு இப்பொழுது அது தெரிந்ததும், அதற்கான ஆதாரம், கிடைக்கும் தூரத்தில் இருக்க, கொஞ்சம் 'அப்ஸெட்' ஆகி ஸ்டெல்லாவிடம் சற்று கோபமாக பேசிவிடுகிறான். கடைசியில் கூல் ஆகிவிடுகிறான்.

இங்கு மாதேவியின் பெண்ணறிவை காட்டி அவளை உயர்த்துகிறோம். (எல்லா ஏழை கதாபாத்திரங்களும் ஏதாவது ஒரு வகையில் குணத்தால் உயர்ந்திருந்தால்தான் ரசிகர்கள் அவர்களை கவனிப்பார்கள், பொதுவாக)

இங்கு ஸ்டெல்லாவிடமிருந்துதான் ஆரம்பிக்கவேண்டும். ஏனெனில், அவள் உடனே ரமேஷை 'அட்டே. செய்யவேண்டும். மோதல் முடிந்து கடைசியாக ஸ்டெல்லா கண்களில் கண்ணீர்வர இனி மோதலுக்கு இடமில்லை (காட்சிகள் இல்லை) என்பதாக அவர்கள் அறைக்கு பிரிவதில் முடிக்கிறோம்.

## SC. No. 80 to 80.D கவுண்டர் பங்களா, மலைப்பாதை, கிரண்பங்களா

ரமேஷுக்கு இது அவன் வீடு, கவுண்டர் அவன் மாமா என்பது பாதி தெரிந்திருந்தும் எந்தவித சலனமும் இல்லாமல் நடந்து கொள்கிறான்.

ரமேஷ் ஜீப் எடுத்துக்கொண்டு போய் கிரண் பங்களா அடைந்து உள்ளே இ.கயிற்றை தேடி அது கிடைக்காமல்போக கார் சப்தம் கேட்டு வெளியேறி, ஜீப்பில் வேகமாக வந்து விபத்துநடக்கும் வரை வெறும் 'அேக்ஷன்'தான் இருக்கிறது. அதனால் இங்கு பேச்சுக்கு இடமில்லை. இதை எப்படி 'த்ரில்லிங்'காக காட்டவேண்டும் என்பது டைரக்டரின் ஷூட்டிங் ஸ்க்ரிப்டில் தான் உள்ளது.

அடிபட்டுகிடக்கும் ரமேஷை பார்த்து கிராமத்து ஆள் கத்திக்கொண்டே வந்து அவனை எடுப்பதில் முடிப்பதால் அடுத்தகாட்சி ஹாஸ்பிடல்தான்.

## SC. No. 81 கிராமத்து ஹாஸ்பிடல் (வார்ட்)

இது ஒரு 'இமோஷனல்' ஆன காட்சி.

க்ளைமேக்ஸ் நெருங்கிவிட்டதால் கௌரி, ரமேஷ் பாசத்தால் சேர ஒரு காட்சி தேவை, ஸ்டெல்லா ரமேஷுக்கு 'சர்ரெண்டர்' ஆக ஒரு காட்சி தேவை.

பொதுவாக எல்லோர் மனதும் ஹாஸ்பிடல் சென்றுவிட்டால் மென்மையாகிவிடுகிறது. பார்க்கப்போகிறவர் கண்முன் படுத்திருப்பவர் சூன்ய நிலையில் தெரிவார் (Zero condition) படுத்திருப்பவர் மேல் பாவம், பரிதாபம், பச்சாதாபம், காதல், அன்பு எல்லாமே எளிதில் அதிகரிக்க ஆரம்பிக்கிறது. அதனால்தான் ரமேஷை அடிபட வைத்து ஹாஸ்பிடலுக்கு கொண்டுவந்தோம்.

ரமேஷுக்கு தெரிந்திருக்கிறது கௌரிதான் தன் தாய் என்று ஆனால் அவளுக்கு தெரியாது ரமேஷ் தன் மகன் என்பது. இப்படியிருக்க கௌரி 'என்னப்பா ரமேஷ்,... என்ன வேணும்பா' என்று கேட்டுவிட்டு அவன் தலையை தடவுவது, ரமேஷ் கண்களை மூடி தன் தாயின் ஸ்பரிஸத்தை அனுபவிப்பது இமோஷனல் ஆன இடமாக ஆக்கப்பட்டது. பின் ஸ்டெல்லா வந்து அவன் கையை தொட அந்த காதல் ஸ்பரிஸம் வேறு உலகுக்கு அவனை அழைத்து செல்கிறது (பாட்டுக்காக). இவ்வளவு காலமாக அனாதையாக இருந்தவனுக்கு ஒரே நேரத்தில் இரண்டு போனஸ்.

ரமேஷ் அடிபட்டு கிடக்கும் பரிதாப நிலையில் ஆரம்பித்து அன்பு, பாசம், காதல் உணர்வுகளை காட்டி நடத்தி கடைசியில் காதல் உணர்வில் முடியும்படியாக ஸ்டெல்லா, ரமேஷ் பார்வைகள் ஒன்று சேர்வதாக முடித்து அடுத்து பாடியாட அனுப்புகிறோம்.

## SC. No. 82 பாடல் - 6

இங்கு ஸ்டெல்லாவின் ஆட்டத்திற்கு ஒப்பிட ரமேஷின் ஆட்டம் மிதமாகத்தான் இருக்கவேண்டும். கதையோடு ஒட்டிப்போக, என்பதை டைரக்டருக்குத் தெரிவித்துவிட்டோம்.

## SC. No. 83 மேரி வீடு

இக்காட்சி, நாளை மேரி, ஜேம்ஸ் மற்றும் லட்சுமி, கவுண்டர் வீட்டுக்கு சென்று ஸ்டெல்லா அவர்கள் பெண்தான் என்பதை தெரிவிப்பதைப்பற்றி, இங்கு பேசவேண்டும், என்பதற்காக.

இக்காட்சியின் வேறு முக்ய அம்சங்கள் :

ஜேம்ஸ், லட்சுமியை கெடுத்தவர்களை பழிதீர்த்துவிட்டு வர போனதால் இவ்வளவு நாள் இங்கு இல்லை என்பது, ஸ்டெல்லா மீதான ஆசை போய்விட்டதை மேரியிடம் சொல்வது. லட்சுமியை கிரிஸ்டியனாக ஆக்கி அவளை மணமுடிப்பேன் என்பது, லட்சுமி ஒரு இந்து பெண்ணாக, இயல்பாக, வாழ்க்கையை புரிந்து கொண்டவளாக பேசுவது, என்பன.

கவலையோடு படுத்திருந்து ஒரு நல்ல விஷயத்தை கேட்கப்போகும் மேரியிடம் ஆரம்பித்து மேற்கண்டவைகளை நடத்துதலில் வைத்து பழைய தப்பின் ஒரு ஷாக்கை ஜேம்சுக்கு கொடுத்து அவனிடமே முடிக்கிறோம்.

## SC. No. 84 to 84.B கிராமத்து ஹாஸ்பிடல்

ரமேஷை இங்கு படுக்கவைத்து மா & மா வை இங்கு வரவழைத்து, இவர்கள்போய், ரமேஷின் இ.கயிற்றை கிரண் பங்களாவிலிருந்து கொண்டுவரத்தான். ரமேஷுக்கு கிடைத்திருந்தால் க்ளைமேக்சுக்கு அடிபடும். மேலும் தாய்ப்பாச உணர்வு, காதல் ஸ்பரிசம், பாட்டு இவையெல்லாம் காட்டியிருக்கமுடியாதே.

## SC. No. 85 to 85. B கவுண்டர் பங்களா, கெஸ்ட்ஹௌஸ்

இதுவும் க்ளைமேக்சுக்கு கொண்டுபோகும் காமெடியான காட்சியின் தொடர்ச்சிதான்.

ஸ்டெல்லாவின் மார்பில் உள்ள மச்சத்தை பார்த்துவிட பார்வதியும் கௌரியும், நர்ஸ் ஜோதி மற்றும் ல.நா உதவியுடன் ஆடும் நாடகம். இது ஃபுல் காமெடியாக இருக்க அமைக்கப்பட்டது. ஒருவழியாக ஸ்டெல்லா மார்பில் உள்ள மச்சத்தை பார்த்து சந்தோஷித்து, ஸ்டெல்லா பாருவின் மகள்தான் என்பதை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டு நகர்கிறார்கள் என்பதாக முடிக்கிறோம்.

## SC. No. 85. C கவுண்டர் பங்களா (ஹால்)

இதுவும் க்லைமே(அ)க்சுக்கு கொண்டுபோகும் ஒரு 'இமோஷனல்' காட்சி.

இங்கு ஸ்டெல்லா தன் மகள்தான் என்பது பாருவுக்கு ஊர்ஜிதம் ஆனதை எல்லோர்க்கும் சொல்லி சந்தோஷமடைய, ஸ்டெல்லா அதை ஒப்புக்கொள்ளாதபடியாக அமைத்து கடைசி நேரத்தில் அவர்களுக்குள் ஒரு மனக்கஷ்டத்தை வைக்கிறோம். கிரணுக்கு ஒரு வழி செய்ய அவனை மேரியை அழைத்துவர அனுப்புகிறோம்.

பாரு, கௌரி சந்தோஷத்தில் வருவதில் ஆரம்பித்து மேற்கண்டவற்றை நடத்தி கிரண் என்ன செய்யப்போகிறான் என்பதாக அவன் மீதே முடிக்கிறோம.

## SC. No. 86 நெடுஞ்சாலை

இதுவும் க்லைமே(அ)க்சுக்கான காட்சிதான்.

தன்வினை தன்னை சுடும், அப்பன் செய்வது பிள்ளைக்கு என்று சொல்வதுபோல, கிரண், அவன் தந்தையை பழிவாங்க துடிக்கும் ஆட்களிடமே சிக்கிக்கொள்கிறான்.

கெட்ட எண்ணங்களுடன் போகும் கிரணிடம் ஆரம்பித்து என்ன நடக்கும் என்பதாக அவனை அழைத்துச்செல்லும் ரௌடிகளோடு முடிக்கிறோம்.

## SC. NO. 87 கவுண்டர் பங்களா க்லைமே(அ)க்ஸ் - Climax

மேரியின் மூலம் ஸ்டெல்லா, பாருவின் மகள்தான் என்பதை தெரியபடுத்தி ஸ்டெல்லாவை ஒப்பவைக்கிறோம்.

மாதேவா மாதேவியின் மூலம் ரமேஷ், கௌரியின் மகன் என்பதை நிரூபிக்கிறோம்.

ஜேம்ஸ், லட்சுமியை மணமுடிக்கப்போகிறான் என்பதை சொல்லி ஸ்டெல்லா மனதில் ஒரு மூலையில் ஒட்டிக்கொண்டிருந்த கஷ்டத்தை இறக்கி வைக்கிறோம்.

ஜேம்ஸ் ஸ்டெல்லாவின் கையை முத்தமிட கேட்க, டச் தெரபி, (Touch Therapy) ன் மகிமையை மட்டும் கவுண்டர்மூலம் தெரிவிக்கிறோம். ஸ்டெல்லா, தான் ஜீஸஸ் ஐ கும்பிட தந்தையிடம் அனுமதி கேட்க, இந்து தர்மத்தை பின்பற்றுபவர்கள் மஹாத்மா காந்தியைப் போல் வாழவேண்டும் என்பதை கவுண்டர் மூலம்

தெரிவித்து கடவுளை அவள் அறியும்படிச்செய்து, எம்மதமும் சம்மதம் என்பதாக நிறைவு செய்கிறோம்.

மங்களகரமாக முடிக்க, ப்ரோஹிதரை ஒரு ஜோக் அடிக்கவைத்து கடைசியில் பைத்தியமாக வரும் கிரணை கூட 'அடுத்த வருடம் குணமாகிவிடுவான்' என்று அவர் சொல்ல, அனைவரின் மீது 'அப்எண்டிங்' (up ending) ல் முடிக்கிறோம்.

விளக்கத்தை படித்துவிட்டீர்கள் அல்லவா? இப்பொழுது 'சார்ட்'ஐ உங்கள் முன்னால் வைத்துக்கொண்டு, திரைக்கதையில் உள்ள 'ஃப்ளோ' (Flow) சரியாக உள்ளதா, என்னென்ன விஷயங்கள் விடப்பட்டுள்ளன, காட்சி, சீக்வென்ஸ்களை இடம் மாற்றி அமைத்தால் எப்படி இருக்கும், வேறு கோணத்தில் கொண்டுபோனால் எப்படி இருக்கும் என்பதையெல்லாம் ஒரு பயிற்சியாக செய்து பாருங்கள்.

இத்திரைக்கதையில் ஒரு சிறிய மாற்றம் ஏற்படுத்த ஒரு உதாரணம்:

சிறுவர்கள் காணாமல்போன துக்கத்தில் அந்த மாளிகையை அப்படியே விட்டு கவுண்டர் குடும்பம் பக்கத்து ஊரில் தங்கள் நிலபுலன்கள் இருக்கும் இடத்திலேயே ஒரு மனை கட்டி வாழ்வதாகவும், ரமேஷ் ஸ்டெல்லா, அன்ட் பார்டி அதே கவுண்டர் மாளிகையின் 'கெஸ்ட் ஹௌஸ்'ல் தங்க, ஸ்டெல்லாவுக்கும் அந்த மாளிகைக்கும் இடையே ஒரு ஈர்ப்பை காட்டி, அவள், பூட்டிக்கிடக்கும் அந்த மாளிகையில் நுழைந்துவிட, அன்றே டாக்டரின் அறிவுரைப்படி கவுண்டர் பாருவை அழைத்துக் கொண்டு மாளிகைக்கு வர, அவர்களையே ஸ்டெல்லா யார் நீங்கள் என்று தபாய்க்க, கவுண்டர் அவளின் முகத்தோற்றம், பேச்சால் ஈர்க்கப்பட்டு, அவளை தன் மகளாகவே பாவித்து, எதையும் காட்டிக்கொள்ளாமல் இருக்க, பின் ஸ்டெல்லாவுக்கு கவுண்டர்தான் அந்தமாளிகையின் சொந்தக்காரர் என்ற விஷயம் தெரிந்து வருந்த, இவர்களுக்குள் ஒரு இனம் புரியாத நெருக்கத்தை ஏற்படுத்தி, ஸ்டெல்லாவை அதே குணாதிசயங்களோடு வைத்து, தொழில் ரீதியாக எந்த சம்பந்தமும் இல்லாதவாறு கதையை நகர்த்தல்.

இப்படி செய்து திரைக்கதையை இன்றைய காலகட்டத்துக்கு தகுந்தவாறு அமைத்துப்பாருங்கள். இன்னும் ஒரு புதிய வடிவம் கிடைக்கும்.

நாம் திரைக்கதைக்கு, முதலில் முக்கிய திருப்பங்கள் நிகழ்ச்சிகளையே மனத்தில் வைத்து எழுதுவதால் முதல் 'ஸ்க்ரிப்ட்'ல் வேறுபல விஷயங்களை நழுவ விட்டுவிடுவோம். 'நம்மவள்'ல் அப்படி விட்டுப்போன எமக்கு கிடைத்த சிலவற்றை அடுத்த பகுதியில் பார்ப்போம்.

## 'ஸ்க்ரிப்ட்'ல் கிடைத்த விட்டுப்போனவை

1. ரமேஷ் கடவுள் நம்பிக்கை இல்லாதவன். உழைத்தால்தான் சாப்பாடு என்பவன். இந்த குணாதிசயத்தை காட்ட ஒரு காட்சியை உருவாக்கியிருக்கலாம்.

2. கவுண்டர் ஊர் பாஷை பேசினாலும் உலகம் அறிந்தவர் என்பதை இன்னும் நன்றாக எஸ்டேப்ளிஷ் செய்திருக்கவேண்டும்.

3. கிரணுடைய தந்தை நாகேந்திராவை முதலில் ஃபோன் பேசும்போதே காட்டி இருக்கலாம்.

4. மலைப்பிரதேசத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் தாக்கப்பட்டதற்கு காரணம் அங்கு 'சர்ச்' கட்ட ஆரம்பித்ததும் ஒரு காரணம் என்பதை இன்றும் நன்றாக எஸ்டே(அ)ப்ளிஷ் செய்திருக்க வேண்டும் அப்பொழுதுதான் இவர்கள் அங்கு அதிக நாட்கள் தங்கி 'சர்ச்'ஐ கட்டி முடிக்க உதவினார்கள் என்று நம்பும்படியாக இருக்கும்.

5. மலைப்பிரதேசத்தில் ஸ்டெல்லா, மதருடன் சர்வீஸ் செய்யும் காட்சி பின்னால் வரவே இல்லை.

6. ஜேம்ஸ் கிராமத்துக்கு வரும்போது ஸ்டெல்லா கிராமத்தில் இருக்கிறாள் என்றிருந்தும், இருவரும் சந்திக்கும் வாய்ப்பு நிறைய இருக்கிறது என்றிருந்தும் அவர்கள் சந்திக்க முடியாமல் போனதற்கான காரணத்தை சரியாக காட்டவில்லை.

7. ரமேஷுக்கும், ஸ்டெல்லாவுக்கும் 'சிக்கன்' கடாயில் சமைக்கும் சண்டையில், ல. நாராயணா அந்த இரவு நேரத்தில் கிராமத்தில் சிக்கன் எங்கிருந்து வாங்கிவரமுடியும். அதற்கு, முந்திய ஏதாவதொரு காட்சியில் ஸ்டெல்லாவிடம் கோழி வேண்டுமா என்று அதே கிராமத்தவன் யாராவது கேட்கும்படி செய்திருக்கவேண்டும்.

8. மேரியின் குடும்ப நிலையை காட்ட அவள் மிலிடரி கணவனின் பென்ஷன் பணம் எவ்வளவு வருகிறது என்பதை தெரிவித்திருக்கவேண்டும்.

9. ஸ்டெல்லா தன், தாயிடம் 'நான் எப்பொழுது புடவை கட்டியிருக்கிறேன் என்று ஆரம்பத்தில் கேட்டவள் கவுண்டருடன் கோயிலுக்கு போனபோது மேரி வாங்கி கொடுத்த புடவையை

கட்டிக் கொண்டாள், பின் கவுண்டர் வீட்டு தீபாவளி கொண்டாட்டத்தின் போது அதே புடவை கட்டியிருந்தாளா? வேறு புடவை என்றால் அது எப்படி வந்தது?

10. ரமேஷுக்கு ஏன் உடல் மீதான எந்தவித அடையாளமும் வைக்கவில்லை. (அந்த 'ட்ரேக்'கில் கதை இன்னும் வளரும். அதனால்தான் அப்படி செய்யப்பட்டது. தேவைப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம் என்று விடப்பட்டது).

11. காட்சி 63-ல் ரமேஷ் மேல் ஒரு நல்ல விதமான 'ஓபனிங்' இருந்திருக்கவேண்டும். ஏன் எனில் அவன் கவுண்டர் வீட்டு பிள்ளைதான் என்பது ரசிகர்களுக்கு இதற்கு முந்திய காட்சியில் தெரிந்துவிட்டது.

12. லட்சுமி விஷம் குடித்து அவளை ஜேம்ஸ் காப்பாற்ற ஹாஸ்பிடலுக்கு எடுத்துச்செல்லும்போது அந்த வீட்டு வட்டாரத்தை சேர்ந்தவர்கள் யாருமே வரவில்லை. குறைந்தது யாராவது ஒருவராவது வந்திருக்கலாம், ஜேம்ஸ் கதவை உதைக்கும் சத்தம்கேட்டு.

13. கிரண் காரில் வரும் சப்தத்தை அவன் பங்களாவினுள் இருக்கும் ரமேஷால் எப்படி கேட்கமுடிந்தது. ஒரு மாடு குறுக்கே வர கிரண் ஹாரன் அடிக்க அந்த சத்தம் கேட்ட ரமேஷ் வெளியேறுவதாக இருக்கவேண்டும். அதுவும் சாத்தியமா?

14. கிரண் தந்தை நாகேந்திரனுக்கு ஒரு முடிவை காட்டாமல் விட்டிருக்கிறோம். (மாதேவா மட்டும் ரமேஷ் இ.கயிறை திருடிவர கிரண் பங்களாவுள்போய் நாகேந்திரனிடம் மாட்டிக்கொள்ள, மாதேவி 'பொலிஸ்'ஐ கூட்டிவந்து நாகேந்திரனை கைது செய்யவைத்து இ. கயிறை கவுண்டர் குடும்பத்திடம் ஒப்படைத்திருக்கலாம். இன்னும் இதை இன்றைய காலகட்டத்திற்கு எப்படி அமைக்கலாம் என்று யோசித்து பாருங்கள். நாம் மிக முக்கியமாக தெரிந்து கொள்ள வேண்டியது. காலம் மிகவேகமாக வளர்ந்து கொண்டு இருக்கிறது. ஒரு திரைக்கதை எழுதிவைத்து ஒருவருடம் ஆகிவிட்டால் அது பழைய திரைக்கதை ஆகிவிடுகிறது. ட்ரீட்மென்ட் மாறிக்கொண்டே இருக்க வேண்டும். இது 'செல் ஃபோன்' காலம்.

15. கவுண்டர் வீட்டு விளம்பரத்தில் அவர்கள் வீட்டு ஃபோன் நம்பரை கொடுத்தார்களா என்பதை குறிப்பிடவில்லை. சரி, அப்படி

கொடுத்திருந்தால், ஜேம்ஸ் ஃபோன் பேசவேண்டிய அவசியமில்லை ஏன் எனில் அவன் ஸ்டெல்லாவின் இ. கயிற்றை கொடுத்துவிட்டு ஸ்டெல்லா சிறு வயதிலேயே இறந்துவிட்டாள் என்று அவள் 'சேப்டரை' முடிக்கும் எண்ணத்தில் வருகிறான். அவனுக்கு ஸ்டெல்லா வேண்டும்.

மாதேவா ஃபோன்பேச அதை கிரண் எடுக்கும்படி செய்து அவர்களை கிரண் பங்களாவுக்கு வரச்சொல்லி மற்றவற்றை அப்படியே வைத்திருக்கலாம்.

16. ரமேஷ் கிடைத்துவிட்ட விஷயத்தை கௌரி வெளிநாட்டில் இருக்கும் தன் கணவனுக்கு தெரிவித்திருக்கவேண்டும்.

17. 11-வது காட்சியில் ஒரு தொய்வு (Lag) இருப்பதாக தெரிகிறது. ஃபாதர் ரமேஷை வரச் சொன்னதை, ஸ்டெல்லா ரொம்ப 'லேட்' ஆக சொல்வதாக தெரிகிறது. இங்கு காட்சியை எப்படி மாற்றி அமைக்கலாம் அல்லது இன்னொரு காட்சி தேவையா அல்லது ஸ்டெல்லாவின் வசனத்தில் adjust செய்யலாமா என்பதை கவனிக்கவேண்டும். (இப்படிப்பட்ட குறைகளை தாளில் எழுதியதை படிக்கும்போது கண்டுபிடிப்பதைவிட 'சார்ட்'ல் 'ஃப்ளோ'வை பார்க்கும் போது எளிதில் கண்டுபிடிக்கலாம்.)

இப்படி இன்னும் பல கவனிக்கவேண்டியவைகள் இருக்கும். அவற்றை நீங்களே கண்டுபிடித்து எப்படி எங்கே சேர்க்கவேண்டும் என்று ஒரு பயிற்சியாக செய்து பாருங்கள்.

இந்த விட்டுப்போன 17ல் 10 பாயிண்ட்கள், திரைக்கதையை படித்தபின்பு உங்கள் கவனத்திற்கு வந்திருந்தால். திரைக்கதை எழுதும் பயிற்சியில் நீங்கள் 'பாஸ்' ஆனவர்களாக எடுத்துக் கொள்ளலாம்.

என்னுடைய 'பார்ட்னர்' இறக்காமல் இருந்திருந்து படத்தயாரிப்பில் இறங்கியிருந்தால் 'டிஸ்கஷன்' சமயம் இந்த குறைபாடுகள் சரிசெய்யப்பட்டு ஸ்க்ரிப்ட் (Script) IV கிடைத்திருக்கும். ஆனால் இப்படி ஒரு திரைக்கதையை அலசிப் பார்க்கும் ஒரு புத்தகம் எழுதும் வாய்ப்பில்லாமல் போயிருக்கும். வாசகர்களுக்கு இப்புத்தகத்தால் பயன் ஏதும்ஏற்படுமானால் அந்த பயன் என் பார்ட்னருக்கே (அவர் ஆன்மாவுக்கே) போய் சேரட்டும்.



# ‘ஷூடிங் ஸ்க்ரிப்ட்’ (SHOOTING SCRIPT)

''ஒரு படத்தின் திரைக்கதை ‘ஜீவன்’ என்றால்

‘ஷூடிங்ஸ்க்ரிப்ட்’ அதன் ‘நாடி’ ஆகும்.''

திரைக்கதை என்பது, கதையை வெள்ளித்திரையின் மேல் எப்படி படம்பிடித்து, காட்ட வேண்டும் என்ற கண்ணோட்டத்தின் அடிப்படையில் திரைக்கதாசிரியரால் எழுதப்படுவது. ஆனால் ‘ஷூடிங்ஸ்க்ரிப்ட்’ திரைக்கதையின் ஒவ்வொரு காட்சியிலும் வரும் கதாபாத்திரங்களின் (உயிர் உள்ளவை, உயிரற்றவை) நடவடிக்கைகள் (Movements) முகபாவங்கள், வசனங்கள் என்று இன்னும் பல விஷயங்களை, எப்படிப்பட்ட வெளிச்சத்தில், எவ்வளவு தாளகதியுடனான கால அவகாசத்தில் (Time Timing), கலை ரசனையுடனான கோணங்களில் எப்படி படம்பிடிக்க வேண்டும் என்பனவற்றை இயக்குனரால் எழுதிக்கொள்ளப்படுவது.

அதாவது, இயக்குனர், ஷூடிங் ஸ்க்ரிப்ட்’ எழுதிக் கொள்ளும் போது ‘ஸிச்சுவேஷன்’க்கு ஏற்ப, க.பா களை மேலிருந்து பார்ப்பது கீழிருந்து பார்ப்பது, நெருங்கிப்பார்ப்பது, சற்றுதூரத்திலிரந்து பார்ப்பது, இன்னும் தூரத்திலிருந்து பார்ப்பது, க.பா க்கள், கேமராவுக்கு இடமிருந்து வலமாக (L to R), வலமிருந்து இடமாக (R to L) கடப்பது, க.பாகள் கேமராவை நோக்கி வருவது, கேமராவிடமிருந்து போவது அல்லது கேமராவையே க.பா களிடம் நகர்த்துவது அப்படியே பின்னால் நகர்த்துவது என்று பலவிதமான ஈர்ப்புடன் கூடிய கோணங்களில் கேமராவின் செயல்பாடுகளை குறித்துக் கொள்வார்.

இப்படி அமைத்துக்கொண்ட ‘ஷாட்’களே ரசிகர்களின் மனதில் ரசிப்புத்தன்மையை உசுப்பிவிடுகிறது. இந்த ‘ஷாட்’கள் பெருவாரியான ரசிகர்களின் ரசிப்புத்தன்மைக்கு ஒத்துப்போக வேண்டும். உ.ம் – ஒரு காட்சியில் 90% ரசிகர்களின் ‘இயல்பு அடிப்படையில்’, திரையில் இடமிருந்து வலம் செல்லும் க.பா களை அவர்கள் ரசிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இயக்குனரும் அப்படியே செய்திருந்தால், அவர் ‘ஜட்ஜ்மென்ட்’ ஜெயித்துவிட்டதாக ஆகும். அதற்கு எதிராக இருந்து விட்டால், அங்கு அவருடைய ‘ஜட்ஜ்மென்ட்’ தோற்றுவிட்டதாகிறது.

90% இயக்குனர்கள் அவர்களின் அறிவுக்கு ஏற்றவாறு ‘ஸின்ஸியர்’ ராகத்தான் செயல்படுகிறார்கள். ஆனால் அவர்களின் ‘ஷாட்ஸ்’ ‘ஜட்ஜ்மென்ட்’ ரசிகர்களின் ரசனைகளோடு ஒத்துப்போக வேண்டுமே. இதைத்தான் ‘கடவுள் கொடுத்த வரம்’ என்கிறார்களோ என்னவோ...

பொதுவாக இயக்குனர்கள் ஷூடிங் தினத்திற்கு முதல் நாள் இரவே நாளைய ஷூடிங்கிற்கான தன் ஷாட்ஸ் அமைப்புகளையும் மற்ற விஷயங்களைப் பற்றியும் கேமராமே(அ)ன், அஸோஸியேட் மற்றும் அஸிஸ்டென்ட் இயக்குனர்களுடன் 'டிஸ்கஸ்' செய்வார்கள். அஸிஸ்டென்ட்கள் அங்கு முடிவெடுத்ததின்படி அனைத்தையும் குறித்துக்கொண்டு அடுத்த நாள், 'ஷூடிங் ஸ்பாட்'ல் அதன்படி செயல்படுவர். ஷூடிங் ஸ்பாட்டிலும் கேமராமே(அ)னிடம் கலந்தாலோசித்த பின்புதான் ஃபைனலாக ஷாட் ஃபிக்ஸ் செய்யப்படும்.

இப்படி காட்சி எண் மற்றும் 'ஷாட்' எண்களை ஒவ்வொரு 'ஷாட்' படமாக்கும்போதும் 'க்லே(அ)ப் போர்டில்' பதிவுசெய்து படம் பிடிப்பதின் மூலம் 'கன்டின்யுடி' செயல்படுத்தப்படுகிறது.

பின்வரும் 'ஷூடிங் ஸ்க்ரிப்ட்'ஐ படிக்கும் போது கேமராவை இங்குமங்கும் 'ஷிஃப்ட்' செய்யவேண்டியிருப்பது தெரியவரும். இந்த கேமரா 'ஷிஃப்டிங்' நேரத்தை மிச்சப்படுத்த இயக்குனர் தம் சொந்த திறமைக்கு ஏற்றவாறு திட்டமிட்டுக்கொள்வார். உதாரணத்திற்கு - பின்வரும் 'ஷூடிங் ஸ்க்ரிப்ட்'ல் ஷாட் 1/19 மற்றும் 1/21 இரண்டும் க்லோஸ் ஷாட் என்பதால் 1/19 ஐ படமாக்கும் போதே 1/21 ஐயும் படமாக்கிவிடலாம். இப்படித்தான் நடக்கிறது. ஆனால் இந்த மாதிரியான சமயங்களில்தான் 'கன்டின்யுடி'ஐ பார்த்துக் கொள்ளும் உதவி இயக்குனர்கள் வெகு ஜாக்கிரதையாக அவற்றை கவனித்து கொள்ள வேண்டும்.

பொதுவாக 'கன்டின்யுடி' என்று வரும் போது 'ஷாட் பை ஷாட்' எல்லாம் (வசனம், பாவம், 'மூவ்மென்ட்ஸ்', 'சௌண்ட்', 'காஸ்ட்யூம்ஸ்', 'ப்ராபர்டீஸ்', ஒளி, ஒலி, இ.பிற) தொடர்ச்சியாக வருகிறதா என்ற கன்டின்யுடி ஐ உதவி இயக்குனர்கள் கவனித்துக்கொள்வர். முன்பெல்லாம் ஒரு உதவி இயக்குனரே இவை அனைத்தையும் கவனிப்பார். ஆனால் இப்பொழுது 4-5 'அஸிஸ்டென்ட்'களை வைத்துக்கொள்கின்றனர். நல்லதுதான்.

இனி 'நம்மவள்' திரைக்கதைக்கான முதல் காட்சியின் ஒரு எளிய (simple) 'ஷூடிங் ஸ்க்ரிப்ட்'ஐ உதாரணத்திற்காக காண்போம்.

உங்களுக்காக அங்கங்கு சிறு சிறு விளக்கங்களும் கொடுக்கப் பட்டுள்ளன.

## ‘நம்மவள்’

## காட்சி .1

### ‘சிடி அவ்ட்ஸ்கர்ட்’
### ‘சர்ச் முன், தெருவில்

**1 / 1** ‘ஃஜூம் ஷாட்’, ‘டாப் ஆன்ங்ல்’

(1/1 என்று குறிப்பிட்டிருப்பதில், முதலில் இருக்கும் 1, காட்சி எண் 1 என்பதையும் அடுத்து இருக்கும் 1 என்பது, ஷாட் எண் 1 என்பதையும் குறிப்பிடுகிறது. அதாவது இத்தனாவது ‘காட்சியின்’ இத்தனாவது ‘ஷாட்’ என்பதாகும். ‘ஷுடிங்ஸ்க்ரிப்ட்’ல் இப்படி காட்சி எண், ‘ஷாட்’ எண் மட்டும் எழுதுகிறோம். ஆனால் அதை ‘ஷூட்’ செய்யும்போது க்லே(அ)ப் போர்டில் ‘ஸீண்’ 1 / ‘ஷாட்’ 1 / ‘டேக்’ 1 என்று எழுதி அந்த ‘ஷாட்’ல் ‘க்லே(அ)ப்’ அடித்து பதிவு செய்வர். படப்பிடிப்பில் தவறுகள் நடப்பது சகஜம். சரி வரும் வரை அந்த ‘ஷாட்’ஐ பல ‘டேக்’குகள் எடுத்து, சரிவந்த ‘டேக்’ ‘எடிடிங்’ல் தேர்வாகி ‘கன்டினியுடி’ முறைப்படும்.

(‘சர்ச்’ன் உச்சியில் இருக்கும் சிலுவையை மட்டும் ‘டைட்க்லோஸ்’ல் 3-4 வினாடி காட்டி ஃஜூம்பே(அ)க் செய்து, ‘டில்ட்டௌன்’ செய்ததும் ‘சர்ச்’ முன் தெருவில் 4-5 நபர்கள் நடமாட்டத்தின் மத்தியில் நடந்து கொண்டிருக்கும் ரமேஷை சென்டர் செய்து ‘மிட் ஷாட்’ வரை ஃஜூம் செய்ததும் அவன் 4-5 அடி நடக்க)

- cut to

(‘ஷாட்’க்கானவற்றை இப்படி எழுதிக்கொள்ளும்போது இயக்குனர்கள், காட்டுகிறோம், ஷுட் செய்கிறோம், பார்க்கிறோம் என்று அவரவர்களின் வசதிக்கேற்ப எழுதிக்கொள்வர்)

**1 /2** மிட் லான்ங் ஷாட்

பின்னணியில் சர்ச் தெரிய, ரமேஷ் டுவர்ட்ஸ் தி கேமரா வந்துகொண்டிருக்க (3-4 வழிப்போக்கர்கள் வர போக) தோளில் பெரிய பையுடன் ஒரு கிராமத்தான் ‘இன்க்லூட்’ ஆகி ரமேஷிடம் வந்து நிற்க, ரமேஷும் அவனை கேள்விக்குறியுடன் பார்த்தவாறு நிற்க

- cut to

(இந்த 2வது ஷாட்டில் ‘கன்டின்யுடி’ விஷயத்தில் கவனிக்க வேண்டியவை, முதல் ஷாட்டில் உள்ள ரமேஷின் அதே உடை, அதே

லக்கேஜ் இ.பிற, மற்றும் கேமரா 'சர்ச்'க்கு இடப்புறம் வைத்த ஷூட் செய்ய வேண்டும் என்பன. ஏனெனில் ஷாட் 1ல் மேலிருந்து ரமேஷை பார்க்கும் போது அவன் கேமராவுக்கு L To R செல்வதாக (அதாவது சர்ச்சுக்கு இடப்புறம்) ஷூட் செய்யப்பட்டது. எனவே கேமரா இந்த 2வது ஷாட்டில் சர்ச்சுக்கு இடப்புறமாக வைக்கப் பட்டது. இப்படி ஒவ்வொரு ஷாட்டிலும் உதவி இயக்குனர்கள் அவரவர்களுக்கான 'கன்டின்யுடி'ஐ மிக எச்சரிக்கையுடன் கவனிக்க வேண்டியுள்ளது)

(கேமராவை நோக்கி, வருவது, போவது போன்று 'ட்ரீட்' செய்வது ரசிகர்கள் அவர்களை அறியாமலே அந்த நடவடிக்கைகளில் மறைமுகமாக ஈடுபட்டவர்களாக இருக்கும்படிச் செய்யவே.)

**1/3**

**மிட் ஷாட்**
**ஃப்ரேமில் ரமேஷ் மற்றும் கிராமத்தான்.**
**(இருவரும் எதிரெதிரே நின்றிருக்க)**

கிராமத்தான் : (கிராமிய பாணியில்) ஏங்க... இந்த அட்ரஸ்சு எங்க வருதுன்னு சொல்றீங்களா

- cut to

**1/4**

**க்லோஸ் ஷாட்**
**ஃப்ரேமில் ரமேஷ்**

ரமேஷ் : (சிரித்தவாறு) நானும் உங்கள மாதிரி இந்த சென்னையில ஒரு அட்ரஸ்ஸ தேடி வந்திருக்கிற வந்தான் - cut to

(ரசிகர்கள் ஹீரோ முகத்தை தெளிவாக பார்த்துவிட ஆசைப்படுவார்கள் அல்லவா, அதனால்தான் இந்த க்லோஸ் ஷாட், அப்படியே ஷாட் இலக்கணத்துக்கும் ஒத்துப்போகிறது)

**1/5**

**மிட் ஷாட்**
**ஃப்ரேமில் ரமேஷ் - கிராமத்தான்**

ரமேஷ் : (புன்சிரிப்புடன்) ஒரு அட்ரஸ்ஸ சுலபமா கண்டு பிடிக்கணும்னா அந்த ஏரியால இருக்கிற பழைய சில்லறை கடைக்கோ, பழைய ஸ்டோருக்கோ போய் விசாரிக்கணும். ஏன்னா அவங்களுக்குதானே அந்த ஏரியாவை பத்தியும் அங்க இருக்கிறவங்கள பத்தியும் கொஞ்சமாவது தெரிஞ்சிருக்கும்.

- cut to

**1/6** க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் கிராமத்தான்

கிராமத்தான் : (இளித்தவாறு) ஓ இப்ப தெரிஞ்சிக்கிணங்க ரொம்ப டேங்ஸ் வரங்க சாமி (என்று சொல்லிதிரும்ப)

- cut to

**1/7** லான்ங் ஷாட்

(பின்னணியில் சர்ச் தெரிய தூரத்தில் ரமேஷ் கேமராவை நோக்கி வருவதை 2-3 வினாடி காட்டி அப்படியே கேமராவை வலப்புறம் பேே(அ)ன் (pan) செய்து (ரமேஷ் ஃப்ரேம் அவுட்) சத்திரத்தை காட்ட ஸ்டெல்லா (கையில் தாம்பூல பையுடன்), சுபா சத்திரத்தின் உள்ளிருந்து வெளியே வரவேற்பு ஹாலுக்கு சிரித்த முகத்துடன் வருகிறார்கள். பெரியவர்கள் முதல் சிறுவர்கள் வரை குதூகலத்துடன் நடமாடுகிறார்கள்)

- cut to

(இந்த ஷாட்டில் ஏன் இப்படி கேமரா பே(அ)ன் செய்யப்பட்து என்றால், ''ஹீரோ அப்படி வந்து கொண்டிருக்க ஹீரோயின் இப்படி பேசிக்கொண்டிருக்கிறாள்'' என்ற உணர்வை ரசிகர்களின் மனதில் ஏற்படுத்தவே, கேமராவில் கதை சொல்வது என்பதற்கு இது ஒரு சின்ன உதாரணம்)

**1/8** மிட் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா - சுபா

சுபா : (குதூகலத்துடன்) மறக்காம என் தங்கை கல்யாணத்துக்கு வந்ததுக்கு ரொம்ப தேங்க்ஸ் டீ

- cut to

**1/9** க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா

ஸ்டெல்லா : உன் தங்கை கல்யாணமாச்சே. வராம இருந்தா சும்மா விடுவியா

- cut to

**1/10** மிட் க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா – சுபா

| | | |
|---|---|---|
| ஸ்டெல்லா | : | அப்ப நான் வரட்டா... |
| சுபா | : | சரி ஸ்டெல்லா |
| ஸ்டெல்லா | : | வரேன் பை |

- cut to

**1/11** லான்ங் ஷாட்

(ஸ்டெல்லா படி இறங்கி நடந்து கேட்டை தாண்டி தெருவுக்கு வந்து தன் வலப்புறம் திரும்பி நடக்க)

- cut to

(வலப்புறம் திரும்பி நடப்பது கன்டின்யுடிக்காக கவனித்து பாருங்கள்)

**1/12** மிட் லான்ங் ஷாட்

(கேமரா ரமேஷின் முதுகுக்கு பின்னால் இருக்க, ரமேஷ் முன் செல்ல ஸ்டெல்லா தாம்பூல பையுடன் கேமராவை (ரமேஷையும்) நோக்கி வந்து கொண்டிருக்க, கையில் வே(அ)னிடி பையுடன் ஒரு திருடன் மற்றும் அவனை துரத்தும் ஒரு கும்பல் இன்க்லூட் ஆகி, திருடன் ஸ்டெல்லாவை முழுவதுமாக நெருங்கி விட்ட சமயம்)

- cut to

**1/13** க்லோஸ் ஷாட்

(திருடனின் வலது தோள் ஸ்டெல்லாவின் வலது தோளுக்கு இடிக்கிறது) (இதை ஸ்லோ மோஷனில் காட்டுகிறோம்)

- cut to

(இந்த 'ஷாட்' ஐ 1/12 லேயே சேர்த்திருக்கலாம். ஆனால் ஸ்லோ மோஷனில் இடிப்பதை காட்டுவது ரசிகர்களின் மனதில் ஒரு அதிர்ச்சி உணர்வை ஏற்படுத்தத்தான். அதாவது 'அவன் இடிச்சிட்டு போனதை நான் கண்ணால பார்த்தேன்', என்பதாக (கேமராவில் கதை சார்?)

**1/14** மிட் லான்ங் ஷாட்

(திருடன் ஸ்டெல்லாவை தாண்டி ஓடிக்கொண்டிருக்க, ஸ்டெல்லா நிலை தடுமாற, அவள் கையிலிருந்து தாம்பூல பை கை நழுவி அதனுள் இருந்த தேங்காய், வெற்றிலை, பாக்கு வெளியே சிதறுகிறது)

- cut to

**1/15** மிட் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா

(ஸ்டெல்லா திருடன் ஓடிக்கொண்டிருக்கும் திசையில் திரும்பி)

ஸ்டெல்லா : யூ ஸ்டுப்பிட் ஃபெல்லோ

(என்று திட்டி முடித்து 2 விநாடி ஆனதும் கட் செய்கிறோம்)

- cut to

(இந்த 1 விநாடி 2 விநாடிகள்தான் உணர்வுகளுக்கு மதிப்பளிக்கும் வகையில், டைம் அன்ட் டைமிங்கோடு அமைகிறது)

(தோளில் இடிபட்ட ஸ்டெல்லாவை இங்கு க்லோஸ் ஷாட்ல் படம் பிடித்திருக்கலாம். ஆனால் உடலாலும் பாதிக்கப்பட்டு, கோபத்தில் இருக்கும் அவளுடைய பாடி லேங்வேஜ் (Body language)ம் தெரிந்தால்தான், காட்சி ரசிகர்கள் மனதில் பாதிப்போடு பதியும். என்ற காரணத்தால் இந்த மிட் ஷாட் வைக்கப்பட்டது)

**1/16** மிட் க்லோஸ் ஷாட்
(கேமரா டில்ட் டௌன் ஆகியிருக்கிறது)

(தெருவில் சிதறிக்கிடந்த தாம்பூல பை தேங்காய் வெற்றிலை பாக்கு இவற்றை காட்டிக்கொண்டிருக்க, ரமேஷின் கால் பாதங்கள் 'இன்க்லலூட்' ஆகி ரமேஷ் குனிந்து தன் சூட்கேஸை பக்கம் வைத்து, சிதறிக்கிடந்த தாம்பூல பொருட்களை அக்கறையுடன் எடுத்து தாம்பூல பையில் போட்டு சூட்கேஸை எடுத்து நிமிர, கூடவே கேமராவும் 'டில்ட் அப்' ஆகிறது)

- cut to

(கேமரா 'டில்டடௌன்', 'டில்ட் அப்' ஆவதெல்லாம் ஸ்டெல்லா அவனை கவனிக்கிறாள் என்ற 'பில்ட் அப்' காகத்தான்)

**1/17** மிட் ஷாட்
ஃப்ரேமில் ரமேஷ் - ஸ்டெல்லா

(ரமேஷ் (சாதாரணமாக) தாம்பூல பையை கோபமாக காணப்படும் ஸ்டெல்லாவிடம் கொடுக்க)

ஸ்டெல்லா : (வெறுப்புடன் கலந்த ஏளனத்துடன்) ஏன் மிஸ்டர் எல்லாரும் திருடனை பிடிக்க ஓடிகிட்டு இருக்கப்ப அவனை போய் பிடிக்கறத விட்டுட்டு, பொண்ண பார்த்த உடனே 'ஹெல்ப்' செய்ய வந்துட்டீங்களா

ரமேஷ் : (பக்குவப்பட்டவனாக) அத்தனை பேர் அவனை பிடிக்க ஓடறப்ப இன்னும் நான் வேற எதுக்குங்க. இந்த காலத்துல யாரு நல்லவங்க யாரு கெட்டவங்கன்னு கண்டுபிடிக்கிறதே கஷ்டங்க.

- cut to

**1/18** க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் ரமேஷ்

ரமேஷ் : (பக்குவப்பட்டவனாக) அதுவுமில்லாம புதுசா ஒரு ஊருக்குன்னு வந்துட்டா அனாவசியமா அதுல இதுலன்னு தலையிடக்கூடாதுங்க மேடம்

- cut to

**1/19** க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா

ஸ்டெல்லா : (அலட்சியமாக) நீங்கள்ளாம் ஒரு ஆம்பளைங்க

- cut to

**1/20** மிட் ஷாட்
ஃப்ரேமில் ரமேஷ் - ஸ்டெல்லா

ரமேஷ் : (கிண்டல் கலந்த ஸீரியஸ்சுடன்) என்னங்க அப்பிடி சொல்லிட்டீங்க. அந்த தாம்பூல பையை குடுங்க (என்று ஸ்டெல்லா விடமிருந்த தாம்பூல பையை வாங்கி தன் சூட்கேஸை கீழே வைத்துவிட்டு தாம்பூல பையிலிருந்த தேங்காயை எடுத்து தன் வலது கையில் பிடித்தவாறு)

இந்த தேங்காயை ஒரே கையில் உடச்சி காட்டுறேன் பார்க்குறீங்களா.

- cut to

**1/21** க்லோஸ் ஷாட்
ஃப்ரேமில் ஸ்டெல்லா

ஸ்டெல்லா : (அலட்சியமாக) நீங்க என்ன பெரிய கராட்டே ஃபைட்டரா....? எங்க ஒடைங்க பார்ப்போம்

- cut to

**1/22** மிட் லான்ங் ஷாட்

(ரமேஷின் சூட்கேஸ் கீழே இருக்க, இடது கையில் தா. பையும் வலது கையில் தேங்காயுடன், அதை தரையில் அடித்து உடைக்கும் தோரணையில் கையை உயர்த்த (ரிஆக்ஷன் சரியாக வர 'டமார்'

என்ற வெடி சத்தத்தை கொடுக்க வைக்கிறோம்) ஸ்டெல்லா - ரமேஷ் அதிர்ச்சியுடன் சர்ச் இருக்கும் திசையை நோக்கி திரும்புகிறார்கள்)

- cut to

## 1/23 ஃஜூம் ஷாட்

(ரமேஷ் - ஸ்டெல்லா பி.ஓ.வி ல் சர்ச்க்கு ஃஜூம் செய்து பாம் வெடித்த இஃபக்ட்ல், அதன் கதவு ஜன்னல்கள் வழியாக தடித்த, கருத்த புகை மூட்டம் வெளியே வந்து கெண்டிருக்கிறது)

(அப்படியே மிட் ஷாட்டுக்கு ஃஜூம்பே(அ)க் செய்ய, ரமேஷ் - ஸ்டெல்லா அதிர்ச்சியில் ஒருவரை ஒருவர் ஒரு நொடி பார்த்துக் கொண்டதும்

ஸ்டெல்லா : (அதிர்ச்சியுடன் கலக்கத்துடனும்) ஐயோ சர்ச்ல யாரோ பாம் வச்சிட்டிருக்காங்களே

(என்று சொல்லியவாறே சர்ச் ஐ நோக்கி ஓட 'ஃப்ரேம் அவ்ட்' ஆக, ரமேஷ் தன் கையிலிருந்த தாம்பூல பையில் தேங்காயை போட்டு அதை தன் முதுகுப்பையில் போட்டு சூட்கேஸை எடுத்து சர்ச் பக்கம் திரும்பி ஓட)

டிஸ்ஸால்வ்

இப்படியாக ஒவ்வொரு காட்சிக்கும் 'ஷாட்' வாரியாக 'ஷூடிங் ஸ்க்ரிப்ட்' எழுதப்பட்டு படமாக்கப்படுகிறது. இயக்குனர் தன் வசதிக்கேற்ப வழக்கில் இருக்கும் முறையோடு இன்னும்கூட குறிப்புகளை சேர்த்தோ குறைத்தோ எழுதிக்கொள்ளலாம். யாரும் அவரை இப்படி ஏன் எழுதினாய் என்று கேட்கப்போவதில்லை. அவரிடமிருந்து எதிர்பார்ப்பதெல்லாம் ஒன்றுதான் அது 'நல்ல படம்' மட்டுமே.

## கடைசியாக

'திரைக்கதை நன்றாக இருந்துவிட்டால் படம் கண்டிப்பாக வெற்றி அடையும்' என்று சினிமாவை பற்றி அதிகம் 'பேசுபவர்கள்' சொல்வதுண்டு. ஆனால் அது 50% தான் உண்மை. உண்மையில் எத்தனையோ நல்ல திரைக்கதை இருந்த படங்கள் தோல்வி அடைந்துள்ளன. காரணம், 'ஷூடிங் ஸ்க்ரிப்ட்' தான்.

இயக்குனர் திரைக்கதையை நன்றாக 'ஸ்டடி' செய்து, ரசிகர்களுக்கு அதை எந்த வகையில் சமர்ப்பித்தால் ரசிப்பார்கள் என்பதை சிந்தித்து 'ஷாட்'களை அமைக்கவில்லையென்றால் அந்த படம் தோல்வியைத் தான் தழுவும்.

'நாடி நின்றுவிட்டால் ஜீவன் போய்விடுகிறதல்லவா, அப்படி...!

# மனம் திறந்து (Personal Note)

திறமை உள்ளவர்கள் திரைப்படத்துறையில் கண்டிப்பாக ஒளிர முடியும். இங்கு அதிர்ஷடம், செண்டிமெண்ட், பூஜை புனஸ்காரத்துக்கு அதிகமாகவே முக்யத்துவம் உண்டு. போட்டிகள் அதிகம் என்பதால் முன்னுக்கு வர பலர் பலயுக்திகளை கையாள்கிறார்கள். அதனால் வெறும் தொழில் திறமை இருந்து விட்டால் மட்டும் போதாது.

யாரை, எதை, எப்படி, எப்பொழுது அணுகவேண்டும் என்ற விஷயஞானம் உள்ளவராகவும் இருக்கவேண்டும். பொறுமை மிக அவசியம். சினிமா உலகில் நுழைவதே மிக கடினமான விஷயம். இதில் உள்ளே நுழைந்து வேலை கற்றுக்கொள்வது இன்னும் கடினம். ஒவ்வொருவரும் 10-15 வருடங்கள் இந்த திரையுலகில் வேலை செய்தும், முதன்மை வரிசைக்கு வரமுடிவதில்லை. இப்படி இருக்க புதிய ஆட்களை அவ்வளவு எளிதாக நுழையவிடுவது, யோசிக்க வேண்டிய விஷயம்தான்.

எனக்கு தெரிந்தவரையில் சகல விஷயங்களும் அடங்கிய 100% திறமையை எதிர்பார்க்கும் தொழில் எது என்று கேட்டால் அது சினிமா தொழில் என்றுதான் சொல்வேன். இதில் நாம் கற்பது கண்ணளவு கற்கவேண்டியது விண்ணளவு.

ஒரு காலத்தில் நல்ல படங்களை கொடுத்து வந்த இயக்குனர்கள் 5-10 வருடங்கள் ஆனதும் அவர்கள் கொடுக்கும் படங்கள் தோல்வியை தழுவிக்கொள்ளும் காரணம், காலத்தோடு வளராமல் அறிந்து வைத்திருந்ததை வைத்துக்கொண்டு படத்தயாரிப்பிலேயே மூழ்கி விடுவதுதான். சிலர் பணம், புகழ் பாராட்டிலும் மூழ்கிவிடுகிறார்கள். எனவே தெளிவுடன் நிறைய தெரிந்து கொண்டே இருக்கவேண்டும்.

உங்களிடம் ஒரு 'சப்ஜெக்ட்'ஐ கொடுத்தவுடன், 60 நிமிடத்தில் 10-15 சிறப்பான அம்சங்களுடன், ஒரு சிறுகதை எழுதிக்கொடுக்கும் திறமை வளரும் வரை, நிறைய படங்களை ஆய்ந்தும், தொழில் நுட்ப புத்தகங்களை படித்தும் எழுதிக்கொண்டும்தான் இருக்கவேண்டும். ஹாலிவுட் (Hollywood)–ன் தலைசிறந்த திரைக்கதை எழுத்தாளர் ஸிட் ஃபீல்ட் (Syd field) சொல்கிறார்-

A film director can take a great script and make a great film, or he can take a great script and make a terrible film. But he can't take a terrible script and make a great film. No way. என்றும்,

There are no "over night success stories" in Hollywood. Like the saying goes "The overnight success took 15 years to happen". Believe it. It's true. அதாவது,

ஒரு திரைப்பட இயக்குனர் மிகச்சிறந்த ஒரு திரைக்கதையை வைத்து ஒரு மிகச்சிறந்த படத்தை உருவாக்கலாம் அல்லது ஒரு மிகச்சிறந்த திரைக்கதையை வைத்து ஒரு படுமோசமான படத்தை உருவாக்கலாம் ஆனால் ஒரு மிக மோசமான திரைக்கதையை வைத்து ஒரு மிகச்சிறந்த படத்தை உருவாக்க முடியாது. அதற்கு வழியே இல்லை.

ஒரே ராத்திரியில் வந்த வெற்றி என்ற கதைகள் ஹாலிவுட்டில் கிடையாது. சொல்வார்கள் ''அந்த ஒரே ராத்திரி வெற்றி நிகழ 15 வருடங்கள் பிடித்தது.'' என்று. நம்புங்கள், அது உண்மை.

எனவே திரைப்படத்துறையில் வெற்றிக்கு, திறமை, பொறுமை, அதிர்ஷ்டம் (கடவுள் அருள்) இவை மூன்றும் வேண்டும்.

சிறந்த தமிழ்படத்தயாரிப்பாளர்கள் தங்கள் படங்களின் திரைக்கதைகளை வெளியிட்டால் தமிழில் பல சிறந்த திரைக்கதை எழுத்தாளர்களை உருவாக்கிய பெருமை கண்டிப்பாக அவர்களைப் போய்ச்சேரும்.

---

## நீங்கள் படிக்க

By **Syd Field**
"Screenplay The Foundations of Screen Writing"
Published by
**Dell Publishing Co., Inc**
1, Dag hammarsk Jold plaza
Newyork, New york 10017. (ISBN : 0-440-57647-4)

BY **John Briley** "Gandhi the Screenplay"

Published by
Grove Press, Inc
196, West Houston Street
New York N.Y. 10014
(ISBN : 0-394-62471-8